# இந்தியாவும் விடுதலையும்

ஆக்கியோர் :

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனார்

இரண்டாம் பதிப்பு

சாது அச்சுக்கூடம்
இராயப்பேட்டை, சென்னை

1947



விலை ரூ. 5

# முன்னுரை

இந்தியா பழம்பெரும் நாடு; பலதிறக் கலைகளை ஈன்ற நாடு; நாகரிகத்தின் எல்லை கண்ட நாடு. இத்தகைய நாடு உரிமை இழந்தது. அதன் விடுதலை குறித்துப் பலதிற முயற்சிகள் செய்யப்பட்டன. முயற்சிகளின் பயனாக ஒருவித விடுதலை கிடைத்தது. இவ்வேளையில் இந்தியா உரிமை இழந்ததற்குரிய காரணங்கள் எவை என்பதையும், இழந்த உரிமையை மீண்டும் பெறுதற்குச் செய்யப்பட்ட முயற்சிகளுள் பொருந்தியன எவை என்பதையும் ஆராய்ந்து தெளியவேண்டுவது இந்திய மக்களின் கடமை.

யான் பல துறைகளில் இறங்கிச் சிறு சிறு தொண்டு ஆற்றி வருவோன்; அரசியல் உலகிலும் தொழிலாளர் உலகிலும் பல ஆண்டு உழைத்தவன். எனது அநுபவம், இந்திய விடுதலைக்குரிய வழி இஃது என்று ஒருவாறு தெளிவுபடுத்தியது. அதை நாட்டுக்கும் பயன்படுத்தல் வேண்டுமென்று என்மாட்டுக் கிளர்ந்தெழுந்த வேட்கை, ‘இந்தியாவும் விடுதலையும்’ என்னும் இந்நூலை எழுதுமாறு என்னை உந்தியது.

இந்நூல் முதற்பதிப்பு 1940-ம் ஆண்டு வெளிவந்தது. காகித நெருக்கடியால் இரண்டாம் பதிப்புத் தயங்கி இதுபோழ்து வெளிவரலாயிற்று. இவ்வாண்டு (1947) ஒருவித விடுதலையை நாடு அடைந்தது. முதற்பதிப்பு வெளிவந்த பின்னை நாடு ஒருவித விடுதலை எய்தியது. இவ்விரண்டாம் பதிப்புக்குப் பின்னை நாடு முழு விடுதலை எய்தும் என்று நம்புகிறேன். இவ்விரண்டாம் பதிப்பில் காலத்துக்கேற்ற மாறுதல்கள் ஆங்காங்கே செய்யப்பட்டன.

இந்நூற்கண் இருவகை இந்தியாவும் விடுதலை வழியும் காட்சியளிக்கும். மூவகை இந்திய வரலாற்றுக் குறிப்புக்களும், விடுதலை வரலாற்றுக் குறிப்புக்களும், இவற்றையொட்டிய பிறவும் நூலில் சுருங்கிய முறையில் ஆங்காங்கே பொறிக்கப்பட்டுள்ளன. நாட்டு வரலாற்றை அடிப்படையாகக் கொண்டெழுந்த ஒரு விடுதலை நூல் என்று இந்நூலைக் கூறலாம். விடுதலை காண்டற்குச் சரித்திர உணர்ச்சி இன்றியமையாதது என்பதை விளக்க வேண்டுவதில்லை.

சரித்திர உலகில் வதிவோரும் உளர்; வதியாதாரும் உளர். பின்னவர்க்குப் பெரிதும் துணைசெய்யும் முறையில் இந்நூல் வரையப்பட்டது.

யான் நூல் எழுதப் புகும்போதெல்லாம் ஏதேனும் இடுக்கண் உறுவது வழக்கமாகிவிட்டது. இதுபற்றித் திருக்குறள் விரிவுரையின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளேன். இந்நூல் முதல் முதல் எழுதும் முயற்சியில் தலைப்பட்டபோதே, மரக்காணம் வேங்கடாசல முதலியார்க்கும் கனகம்மாளுக்கும் இரண்டாவது புதல்வியாராகத் தோன்றி, திருவாரூர் வே. விருத்தாசல முதலியாரை மணந்து, இயற்கையோடியைந்த எளிய வாழ்க்கையை நடாத்தி, என்னுடன் எண்மரை ஈன்று, என்னைக் கனிந்த அன்பால் வளர்த்துத் தொண்டுக்குப் பண்படுத்தி விடுத்த எனது அருமை அன்னையார் **சின்னம்மாள்** தமது தொண்ணூறாவது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தல் நேர்ந்தது. தாயிழந்த சேயனைய வேளையில் இந்நூலை யான் யாக்கலானேன்.

இந்நூல் இந்தியாவைப்பற்றி எழுதப்பெற்றமையான், இதில் இந்தியாவைப்பற்றிய செய்திகளும் பொருள்களுமே பெரிதும் நிரம்பியிருக்கின்றன. தமிழ் நாட்டைப்பற்றி ஒரு தனிநூல் எழுத யான் எண்ணியிருக்கின்றேனாதலின், இந்நூலில் தமிழ்நாட்டு வரலாறுகளும் பிறவும் பெரிதும் விடப்பட்டன.

நூலுக்கேற்ற நடைபற்றி எழுதுவதும், இடத்துக்கேற்ற நடைபற்றிப் பேசுவதும் எனது வழக்கமென்பது நேயர்கட்குத் தெரியும். இந்நூல் எளிய நடையில் இயற்றப்பட்டுள்ளது. இதில் திசைச்சொற்கள் சிலவும், வடநாட்டுப் பெயர்கள் சிலவும், இன்ன பிறவும் உலகிடை மருவி வழங்கும் முறையிலேயே பெய்யப்பட்டுள்ளன. அவற்றை மற்ற நூல்களில் அவ்வாறு யான் பெய்ததில்லை

யான் மனிதன்; குறையுடையவன். என்பால் இளமை கடந்த முதுமை படிந்து வருகிறது. இந்நிலையில் எழுதப்பெற்றது இந்நூல். குற்றங் குறைகளை அறிஞர் பொறுத்தருள்வாராக.

இராயப்பேட்டை<br>20-11-1947 } திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்

# அரும்பொருட் குறிப்பு

# உள்ளுறை

# இந்தியாவும் விடுதலையும்

## I. இந்தியா

நூலின் பெயர் 'இந்தியாவும் விடுதலையும்' என்பது. இந்தியாவின் விடுதலைக்குரிய வழி காண்பது நூலின் நோக்கம். இந்நோக்கமுடைய நூலில் இந்தியாவைப்பற்றிய சரித்திரக் குறிப்புக்களையெல்லாம் நிரலே கிளந்து கூறவேண்டுவதில்லை. நூலின் நோக்கத்துக்கு அரண் செய்யவல்ல சரித்திரக் குறிப்புக்கள் சிலவற்றை ஆங்காங்கே பொறித்தல் சாலும்.

உலகிற்கு நாகரிகம் வழங்கிய நாடுகள் சிலவே. அவற்றுள் குறிக்கத்தக்கன இந்தியா, எகிப்து, கிரீஸ், பாபிலோன், சீனம், பாரசீகம் முதலியன.

### இந்தியாவின் பழம்பெயர்

இந்தியாவின் பழைய பெயர்கள் இரண்டு. அவை *நாவலந் தீவு, பரதகண்டம் என்பன.

நாவலந் தீவு இந்தியா மட்டும் அன்று என்றும், அஃது ஆசியா என்றும் கூறுவோருளர். வேறுவிதமாகச் சொல்வோருமுளர்.

---

* ஜம்புத்தீபம், (ஜம்பு - நாவல்).

நாவலந் தீவைப்பற்றிய சரித்திரக் குறிப்புக்கள் பலபடக் கிடைக்கவில்லை; புராணங்களில் சில உண்டு; நிலநூல் வல்லார் சில செப்புகின்றனர். சித்தர் காலத்தில் நாவலந் தீவு பேர்பெற்று விளங்கியதென்று சொல்லப்படுகிறது. அத்தீவைப்பற்றிக் கிடைத்துள்ள சில குறிப்புக்களை நோக்குழி அதன் எல்லைப்புறம் ஒவ்வொரு போது ஒவ்வொருவித மாறுதலை உற்றிருக்கும் என்று தோன்றுகிறது.

மாறுதல், இயற்கை அன்னையின் திருவிளையாடலால் நிகழ்வது. அவ்வன்னையின் திருவிளையாடலால் இன்று நிலமாயிருப்பது நாளை நீராகும்; இன்று நீராயிருப்பது நாளை நிலமாகும். பூகம்பங்களின் குறும்புகளைக் கூற வேண்டுவதில்லை. அவற்றால் நேரும் மாறுதல்கள் பற்பல. கடல்கள் நாடுகளினூடும் கண்டங்களினூடும் நுழைந்து எல்லைகளில் மாறுதல் செய்வது இயல்பு. நாவலந்தீவு, இயற்கை அன்னையின் திருவிளையாடலால் பல மாறுதல் உற்றிருக்கும். அம்மாறுதல்களிற் சில நில நூல் வல்லார்க்குப் புலனாகியும் பல புலனாகாமலும் இருக்கும்.

*நாவலந்தீவு என்ற பெயர் ஒருபோது ஆசியாவுக்கும், மற்றொருபோது இந்தியாவுக்கும், இன்னொருபோது மற்ற மற்ற இடங்கட்கும் வழங்கப்பட்டிருக்கலாம். அவ்வக்காலங்களை அறுதியிட்டுக் கூறுதற்குரிய சான்றுகள் கிடைக்கவில்லை.

---

* '............எழு பெருந்தீவின் நடுத்தீவாவது நூறாயிரம் யோசனைப் பரப்புடையதாய் வட்டமாய் நிலமகட்கு உந்தித்தானமாயுள்ள நாவலந்தீவு............இது மிருகேந்திரத்திற் கண்டது' —சிவஞானபாடியம்.

மணிமேகலை என்னுஞ் சீரிய தீந்தமிழ் நூலில் பல இடங்களில் நாவலந்தீவு பேசப்பட்டுள்ளது. ஓரிடத்தில் *'சம்புத் தீவினுட் தமிழக மருங்கில்' என்றொரு குறிப்புப் பிறங்குகிறது. அதனால் சம்புத்தீபம் இந்தியா என்று விளங்குதல் காண்க. (இக்காலத்) தமிழகம் இந்தியாவின் தெற்கே இருப்பதன்றோ?

இந்தியா, பரதகண்டம் என்ற பெயர் பெறுதற்கு முன்னர் அஃது எப்பெயர் பெற்றிருந்தது என்பது சிந்திக்கத்தக்கது. சிந்தித்தால் இந்தியா ஒரு போதாதல் நாவலந்தீவு என்ற பெயர் பெற்றிருத்தல் வேண்டும் என்று ஊகித்தற்கு இடனுண்டாகும்.

நாவலந்தீவு என்ற பெயருக்குப் பின்னே இந்தியா பரதகண்டம் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. பரதகண்டம் - பரதனால் ஆளப்பட்ட கண்டம். அப் பரதன் எவன்? சகுந்தலாவுக்கும் துஷ்யந்தனுக்கும் பிறந்த பரதன் என்று சில நூல்கள் செப்புகின்றன; ஜைனத்தின் தொல்லாசிரியராகிய விருஷபதேவர் மைந்தன் பரதன் என்று சில நூல்கள் சொல்கின்றன. பரதன் அவனாயினுமாக; இவனாயினுமாக; வேறு எவனாயினுமாக. பரதனால் ஆளப்பட்ட காரணத்தால் நாவலந்தீவு பின்னே பரதகண்டம் என்ற பெயர் பெற்றதென்க.

பரதகண்டம் பல நூல்களில் பேசப்படுவது; சரித்திர சம்பந்தமுடையது. கண்டம் என்பது நாட்டின் ஒருமைப்பாட்டை உணர்த்துவது.

## சிந்து - ஹிந்து - இந்து - இந்தியா

இந்நாளில் பரதகண்டம் இந்தியா என்று அழைக்கப்படுகிறது. இந்தியா என்னும் பெயர் அயலவர்

---

* கஎ : கூஉ

அழைப்பினின்றும் பிறந்தது. பாரசீகர், சிந்துநதிக் கரையிலிருந்தவரைச் சிந்துக்களென்றழைக்க முயன்றனர். அவர்தம் நா 'சிந்துக்கள்' என்று உச்சரிக்க இயலாது, 'ஹிந்துக்கள்' என்று உச்சரித்தது. அப் பெயரையே பாரதகண்டம் போந்த கிரேக்கர் முதலியவரும் ஆண்டனர். நாளடைவில் ஹிந்துக்கள் என்பது இந்துக்கள் என்று மருவலாயிற்று. இந்து வாழும் நாடு இந்தியா என்று அழைக்கப்பட்டது. ஹிந்து என்னும் ஆட்சி துவங்கிய காலம் ஏழாம் நூற்றாண்டு என்று சிலரால் கருதப்படுகிறது. இஃது இன்னுஞ் சரித்திர உலகில் உறுதி பெறவில்லை.

இப்பொழுது ஹிந்துக்கள் என்னும் பெயரும், இந்தியர் என்னும் பெயரும் ஒரு பொருளைக் குறிக் கொண்டு நிற்கவில்லை. ஹிந்துக்கள் என்பது இந்தியாவில் வாழும் ஒரு சமயத்தவரை உணர்த்தி நிற்கிறது; இந்தியர் என்பது பொதுவாக நாட்டவரைக் குறித்து நிற்கிறது.

## அரணும் மாண்பும்

இந்தியாவின் வட எல்லை இமயம்; மற்ற மூன்று புறமும் கடல். வட எல்லையும் மற்ற எல்லைகளும் முறையே இந்தியாவின் மலையரணாகவும் கடலரணாகவும் அமைந்துள்ளன.

இந்தியா தொன்மையிற் சிறந்தது; வளப்பமுடையது; வாழ்வுக்குரியது; அற வளர்ச்சிக்குத் தகுதி வாய்ந்தது. பின்னையது இந்தியாவின் சிறப்பியல்களுள் ஒன்று.

## தொன்மை

ஒரு நாட்டின் தொன்மையை அளந்து கூறுதற்குப் பல சான்றுகள் தேவை. விரிவு ஈண்டைக்கு வேண்டுவ தில்லை. மலை, கடல், மொழி ஆகிய மூன்றையும், தொன்மையை நிறுவிக் காட்டுதற்குரிய சிறப்புக் கருவிளாகக் கொள்வது மரபு.

இந்தியாவில் பழைய மலைகள் சில நிற்கின்றன. அவற்றுள் சிறந்தன இமயம், விந்தியம், பொதிகை. இமயம் பழையது ; அதனினும் பழையது விந்தியம் ; இரண்டினும் பழையது பொதிகை. இமயம் கடலிடை மூழ்கிக் கிடந்ததை விந்தியமும் பொதிகையுங் கண்ட காலமுண்டு. அவ்வம்மலைப் பாறைகளின் வயதை ஆராய்ந்தால் அதனதன் தொன்மை நனி விளங்கும். விளக்கம் நிலநூல்களிற் காண்க.

இக்கால நிலநூல்களை முறைப்படி ஆராய்வோர்க்கு இந்தியக் கடலிலுள்ள மணல்களின் தொன்மை புலப் படும். தென்றற் காலங்களில் இந்தியக் கடலின் நடுவ ணுள்ள செம்மணல்கள் அலைகளால் கரைகளில் ஒதுக்கப் படும். அம்மணல்கள் மற்றக்கடல் மணல்களினும் தொன்மையனவாம். இந்தியக் கடலிலுள்ள பிராணி கள் சிலவற்றின் எலும்புகளின் பழமை, பல பழமை களைக் கடந்து நிற்பதாம்.

இந்திய மொழிகளில் பழையது திராவிடம். அஃது இந்நாளில் இந்தியாவில் ஒரு பகுதியில் மட்டும் வளம் பெற்று நிற்கிறது. அதனிடத்தில் (நாடு முழுவதும்) பழமை பெற்று விளங்குவது சமஸ்கிருதம். இரண்டும் பிராகிருதத்தினின்றும் பிறந்தவை என்று கூறும்

ஆராய்ச்சியாளருமுளர். அங்ஙனமாயின், பிராகிருதம் இந்தியாவின் தொன்மை மொழியாய்ப் பொலிந்திருத்தல் வேண்டும்.

இப்போது இந்தியாவின் தொன்மை மொழிகளாக விளங்குவன இரண்டு. ஒன்று தென்மொழி (திராவிடம்); மற்றொன்று வடமொழி (சமஸ்கிருதம்).

உபய வேதாந்தம் என்றொரு வழக்குண்டு. அதை உன்னுக. 'உபயம்' என்பது, தென்மொழியையும் வட மொழியையும் உணர்த்துவது. தென்மொழியல்லாத பிற இந்திய மொழிகளில் எதையேனும் வடமொழியுடன் தொடர்புபடுத்தி, இரண்டையும் 'உபயம்' என்று நவிலும் வழக்காறு உண்டோ? அவ்வழக்காறு இன்னும் பிறக்கவில்லை.

தென்மொழியில் நல்ல இலக்கணஞ் செய்தவர் தொல்காப்பியர்; வடமொழியில் செவ்விய இலக்கணஞ் செய்தவர் பாணினி.

தொல்காப்பியம் அகத்தியத்தின் வழிநூல் என்று சொல்லப்படுகிறது. இதற்கு அகச்சான்றில்லை. 'என்ப ஞர்' என்று சிலவிடங்களில் தொல்கப்பியனார் அருளி யுள்ளதைக்கொண்டு, தொல்காப்பியத்துக்கு முன்னே நல்ல இலக்கண நூல்கள் நாட்டில் நிலவியிருத்தல் வேண்டுமென்றும், அவற்றுள் ஒன்று அகத்தியமா யிருக் கலாமென்றுஞ் சிலர் கருதுகின்றனர்.

தொல்காப்பியனார் காலம் பலவாறு கூறப்படுகிறது. அக்காலம் இற்றைக்குச் சுமார் பதினாயிரம் ஆண் டுக்கு முன்னர் என்றும், ஐயாயிரம் ஆண்டுக்கு முன் னர் என்றும், மூவாயிரம் ஆண்டுக்கு முன்னர் என்றும்

கூறப்படுகின்றன. மூவாயிரம் ஆண்டே பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது.

பாணினி கிறிஸ்துவுக்கு எழுநூறு ஆண்டுக்கு முன்னர் இருந்தவரென்று சிலர் கூறுப ; சிலர் நானூறு ஆண்டுக்கு முன்னர் என்று கூறுப. இரண்டையும் மறுத்துக் கூறுவோருமுளர். தொல்காப்பியப் பாயிரத்தில் 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்று குறிக்கப்பட்டுள்ளது. ஐந்திரம் என்பது இந்திரனால் செய்யப்பட்ட ஒரு வியாகரணம். அது தொல்காப்பியனார் காலத்தில் வழக்கிலிருந்தது. பாணினியக் குறிப்புத் தொல்காப்பியத்தில் யாண்டுமில்லை.

தொல்காப்பியம் வளம்பட்ட இலக்கண நூல். பாணினியமும் வளம்பட்ட வியாகரணம். இரண்டும் வளம்பட்ட இலக்கியங்கள் மலிந்த காலத்திலேயே பிறந்திருத்தல் வேண்டும்.

இலக்கியமின்றி இலக்கணந் தோன்றாது. இலக்கியம் தாய் ; இலக்கணம் சேய். வளம்பட்ட இலக்கண நூல், வளம்பட்ட இலக்கியங்களினின்றுமே தோன்றும். வளம்பட்ட இலக்கியங்கள், மொழி பண்பட்ட நிலையிலேயே பிறக்கும். ஒரு மொழி தோன்றிப் பண்பட்டு வளம்பட்ட இலக்கியங்களை ஈனுதற்கு எத்துணை ஆண்டுகளாகும் ? உன்னிப் பார்க்க.

நந் தென்மொழியும் வடமொழியும் இற்றைக்குச் சுமார் மூவாயிரம் ஆண்டுக்கு முன்னரே நல்ல இலக்கண நூல்களைப் பெற்றன. அவ்விலக்கண நூல்கள் தோன்றுதற்கு நிலைக்களன்களாக நின்று வளம்பட்ட இலக்கியங்கள் எந்நாளில் தோன்றியிருக்கும் ? வளம்படாத

இலக்கியங்கள் எப்பொழுது தோன்றி யிருக்கும் ? வளம் பட்ட இலக்கியங்களை ஈனுதற்குரிய பண்பை நம் மொழி கள் எந்நாளில் பெற்றிருக்கும் ? அவை பண்படாத நிலை என்ஞான்றோ ? இன்னோரன்னவற்றை உளங்கொண்டு இருமொழியின் தோற்றக் காலத்தை மதியால் அளந்து பாருங்கள். நம் மொழிகள் தோன்றிய காலம் எப் பொழுதோ ? அதைச் சொல்லுதல் இயலுமோ ? இத் தொன்மை வாய்ந்த நாட்டின் வாழ்க்கைமீது சிறிது கருத் துச் செலுத்துவோம்.

## இயற்கை வளம்

தொன்மை சிலவிடங்களில் ஆக்கம் பெறுவதுண்டு ; சிலவிடங்களில் ஆக்கம் பெறுவதில்லை. இயற்கை வளம் நன்முறையில் அமைந்துள்ள இடங்களில் தொன்மை ஆக்கமுறும் ; மற்றவிடங்களில் அஃது ஆக்கமுறாது. சில நாடுகள் தொன்மை இழந்தமைக்குக் காரணம் அவ் விடங்களில் இயற்கைவளம் செவ்விய முறையில் அமை யாமையேயாகும். நமது இந்தியாவில் தொன்மை இன் னும் நிலவுகிறது. இந்தியாவின் செவ்விய இயற்கை வளம் அதன் தொன்மையை ஓம்பி வருகிறது.

இந்தியா இயற்கைவளங் கொழிக்குஞ் செழிய நாடு. இந்தியாவில் இயற்கைக் கூறுகள் மலைகளாகவும், காடுக ளாகவும், வயல்களாகவும், கடல்களாகவும், ஆறுகளாக வும், பிரிந்தும் தொடர்ந்தும் வளஞ் செய்கின்றன. இந்தியாவில் ஆங்கொரு மலை - ஈங்கொரு மலையோ, ஆங்கொரு காடு - ஈங்கொரு காடோ, ஆண்டோர் ஆறு - ஈண்டோர் ஆறோ, ஈண்டொரு வயல் - ஆண்டொரு வயலோ இருக்கின்றன ? மலையும் காடும்

ஆறும் வயலும் குலங்குலமாக - கூட்டங் கூட்டமாக - அணி அணியாக - பரவல் பரவலாக - அல்லவோ ஆங்காங்கே காட்சியளிக்கின்றன? நீலக்கடலோ மூன்று புறமும் ஒரே காட்சி வழங்குகிறது.

இத்தனை வளங்கள் செழுமியுள்ள ஒரு நாட்டில் மலை வளம் சுருங்குமோ? நீர்வளம் அருகுமோ? நிலவளம் குன்றுமோ? குடிவளம் குலையுமோ? இந்தியாவில் நவதானியங்கள் விளைகின்றன; நவமணிகள் கொழிக்கின்றன; பொன்னும் பிறவும் வழங்குஞ் சுரங்கங்களு மிருக்கின்றன. வாழ்வுக்குரிய பொருளெல்லாம் இந்தியத் தாயின் கருவிலுண்டு என்று சுருங்கச்சொல்லலாம். இதுபற்றியே நமது அருமை இந்தியாவைக் காமதேனு என்று சான்றோர் அழைத்தனர் போலும்! உணவுக்கும் உடைக்கும் பிறவற்றிற்கும் மற்ற நாடுகளை எதிர்நோக்கி வாட்ட முறும் நிலைமையில் இந்தியாவின் இயற்கை வளம் அமைந்து நிற்கவில்லை.

## இயற்கையும் வாழ்வும்

இந்தியாவின் இயற்கைவளம் தட்பவெப்ப நிலையை அளவுபடுத்தி யிருக்கிறது. இந்தியா தண்மையால் நடுக்குற்றுக் கிடப்பதுமில்லை; வெம்மையால் வெந்தொழிவது மில்லை. இரண்டும் ஒத்து நடக்கும் பெருமை வாய்ந்தது நமது நாடு.

தண்மை மிகுந்துள்ள நாட்டில் வாழ்வோர் பெரிதும் பேராசைக்கு இரையாகிப் பிறரைத் துன்புறுத்தித் தமது வாழ்வை நடாத்தும் நாட்டம் உடையவராவர். வெம்மை எரிக்கும் நாடு, வாழ்க்கைக்குப் பெரிதும் உரியதாகாது. அது பரல்நிறைந்த பாலையாகும்.

இந்தியாவில் தட்பமும் வெப்பமும் ஒத்து நடத்தலான், அஃது இயற்கை வாழ்வுக்கு உரியதாய்ப் பயன்பட்டு வருகிறது. இயற்கை வாழ்வினர்க்குப் புற நோக்கு மட்டும் மலராது; அகநோக்கும் மலரும். அகநோக்கற்ற-தனிப்பட்ட புறநோக்கு, பேராசை உணர்வைப் பெருக்குவதாகும். அறவுணர்வுக்குப் புறநோக்குடன் அகநோக்குந் தேவை. இந்தியாவின் இயற்கை இரு நோக்கு வழியே அறத்தை வளர்க்குந் தன்மையது. அறவளர்ச்சிக்கு இந்தியா தகுதி வாய்ந்த தென்க.

## அஹிம்ஸை

அறத்திற் சிறந்தது எது? அஹிம்ஸை. இஃது தோன்றுள்ள இடத்தில் மற்ற அறக் கூறுகளெல்லாம் தாமே விளங்கும். அஹிம்ஸைக்கு அடிப்படை தயா-தயை. 'அஹிம்சா பரமோ தர்மா' என்னும் பெருமொழியும், 'தயா மூல தர்மம்' என்னுந் திருமொழியும் முன்னெளில் எந்நாட்டில் பிறந்தன? வளர்ந்தன? சரித்திர உலகை நோக்குக.

இந்தியாவின் இயற்கைவளம், அஹிம்ஸா தருமத்தை ஓம்பும் பண்பு வாய்ந்தது. அஹிம்ஸை வளர்ச்சிக்குப் போதனையுடன் - சாதனையுடன் - இயற்கை வளமுந் தேவை.

மற்ற நாடுகளில் அஹிம்ஸா தர்மம் தோன்றுவதில்லையோ? வளர்வதில்லையோ? போதனையினாலும் சாதனையினாலும் பிறநாடுகளிலும் அஹிம்சா தர்மம் தோன்றும்; வளரும். ஆனால் அவ்விடங்களில் அத்தருமம் நிலைத்து நிற்பதில்லை. காரணம் அவ்விடங்களில் இயற்கை வளமெனும் ஒளியை அஹிம்ஸா தர்மம் பெறுவதில்லை.

அதனால் அஃது அவ்விடங்களில் ஒரேரவழி வளர்ந்து வீழ்ந்துபடுவதாகிறது.

இந்தியாவின் இயற்கை, அஹிம்ஸா தர்மம் வளர் தற்குரிய ஒளியைக் கால்கிறது. அதனால் அஹிம்ஸா தர்ம வளர்ச்சிக்கு இந்தியா ஒரு சக்தி பீடமாக (Power House) விளங்குகிறது. பிறநாடுகளினின்றும் இந்தியா போந்து இந்தியாவைத் தாய்நாடகக் கொண்டவரும் நாள டைவில் அஹிம்ஸையில் பற்றுள்ளங் கொள்வோராவர். இந்தியாவின் இயற்கை, மனோ நிலையையும் மாற்றவல்ல தென்க.

## ஆரியரும் இந்தியாவும்

ஆரியர் ஒரே இடத்தில் வாழ்ந்தவரென்பதும், பின்னை அவர் பலவேறு நாடுகளுக்குப் போந்தனரென் பதும் பல சரித்திர ஆசிரியர் உள்ளக்கிடக்கை. ஆரியர் ஒரே இடத்தில் வாழ்ந்தபோது அவர் பெரிதும் ஆடுமாடு களை வளர்த்து அவற்றைக் கொன்று தின்று வந்தனர். இந்திய நாடு நோக்கிய ஆரிய மக்கள் ஆடு மாடுகளைக் கொன்று தின்பதை நிறுத்தி விட்டார்கள். மற்ற நாடுகள் நோக்கியவர் இன்னும் பழைய வழக்கத்திலேயே மூழ்கிக் கிடக்கின்றனர். இந்தியாவின் இயற்கை தன்னை அடைந்த வரையும் தன் வண்ணமாக்குமென்க.

ஆரியர் இந்தியாவுள் நுழைந்தபோது புலால் தின் பவராகவேயிருந்தனர்; விலங்குகளை வேள்வித் தீயிலிட் டுச் சுட்டு அவியுண்டு வந்தனர். அந்நாளில் விருஷப தேவர் என்ற அறவோர் தோன்றி மக்களுக்கு அஹிம்ஸா தர்மத்தை அறிவுறுத்தினர். மக்கள் படிப்படியே கொலை யையும், கொலை வேள்வியையும் விடுத்தார்கள். கொலை

கொல்லாமையாக மாறிற்று ; கொலை வேள்வி, கொல்லா வேள்வியாய் - ஆத்மஞான வேள்வியாய் - தியாக வேள்வியாய்-மாறிற்று. இம்மாறுதல்களை வேதத்திற் காணலாம்.

வேதத்தில் சில பகுதிகள் கொலையையும் - கொலை வேள்வியையுங் கூறுகின்றன ; சில பகுதிகள் கொல்லாமையையும் - ஞானவேள்வியையுங் கூறுகின்றன. கொலையையும்-கொலை வேள்வியையுங் கூறும் பகுதிகள் வேதத்தின் முன்னேயிருப்பன ; கொல்லாமையையும் - ஞானவேள்வியையுங் கூறும் பகுதிகள் வேதத்தின் பின்னே யிருப்பன. இரண்டையுங் கொண்டு என்ன ஊகிக்கலாம் ? ஆரிய மக்கள் இந்தியாவிற் புகப்புக - இந்தியாவின் இயற்கை நலத்தை நுகர நுகர - அவர்கள் அஹிம்ஸா மூர்த்திகளானார்கள் என்று ஊகிக்கலாம்.

இந்திய ஆரிய மக்களும், மற்ற நாட்டு ஆரிய மக்களும் பல வழியிலும் மாறுதலடைந்துவிட்டார்கள். இருவரும் ஓரினத்தவர் என்று நம்புதற்கும் இடமில்லாமற் போயிற்று. இந்திய ஆரியர் பலர் அறவோராய் - செந்தண்மையினராய் மாறினர். மற்றநாட்டாரியர் மிலேச்சராய்ப் பிறரை வதைப்பவ்ராயினர். இந்திய ஆரிய மக்கள் எழுதியுள்ள நூல்களையும், மற்றவர் எழுதியுள்ள நூல்களையும் ஆராய்ந்தால் உண்மை விளங்கும். முன்னவை ஆத்ம சக்தியை வளர்ப்பனவாகவும், பின்னவை தேக சக்தியை வளர்ப்பனவாகவுமிருத்தல் வெள்ளிடைமலை.

உலகம் ஹிம்ஸைக்கு இரையாகிவரும் இந்நாளிலும்-சேர்க்கை காரணமாக இந்தியா தனது அற நெறியினின்றும் வழுக்கி வீழ்ந்துள்ள இவ்வேளையிலும் - அஹிம்

சையை அறிவுறுத்தும் பெரியோர் யாண்டுள்ளனர்? இந்தியாவிலன்றோ? இந்தியாவை, எத்தகை இருள் சூழினும் அதன் நெஞ்சில் எம்மூலையிலாதல் அஹிம்ஸா தர்ம தெய்வம் உறங்கியேனும் கிடக்கும். அஹிம்சை, இந்தியாவின் உயிர் - உயிர்நாடி.

## சமதர்மம்

இக்கால உலகம் பெரிதும் ஹிம்சை மயமாயிருக்கிறது. எங்கணும் போராட்டமே பெருகிவருகிறது. மக்கள் அரக்கராகி வருகிறார்கள். உலகின் தற்கால நிலை மாறி அமைதி நிலைபெறுதற்குப் பொதுவுடைமை அல்லது சமதர்மம் வேண்டற்பாலது என்று பேசப்படுகிறது.

பொது உடைமைத் தத்துவத்தை உலகத்துக்கு அறிவுறுத்தியவர் சிலர். அவருள் சிறந்து விளங்குவோர் காரல் மார்க்ஸ்.

## மார்க்ஸியம்

மார்க்ஸியம் நல்லதே; கெட்டதன்று. மார்க்ஸியத்தில் சில குறைகள் சொல்லப்படுகின்றன. உலகில் குறையற்ற ஒன்றைக் காண்டல் அரிது. மார்க்ஸியத்தில் சில குறைகளிருக்கலாம். அதனால் மார்க்ஸியத்தையே கடிவது அறிவுடைமையாகாது. யான் இந்தியன். எனக்கு என்ன தோன்றுகிறது? 'காரல் மார்க்ஸ் இந்திய மண்ணில் தோன்றி, இந்திய நீரருந்தி, இந்தியக் காற்றில் உலவி, இந்திய ஒளியில் மூழ்கி, இந்தியக் கல்வி பயின்று, நூல்கள் எழுதியிருப்பாரேல், அவர்தம் நூல்கள் இன்னும் மணம் பெற்றிருக்குமே' என்று தோன்றுகிறது. சுக்கிர நீதி, கௌடில்யர் அர்த்த சாஸ்திரம், நாரத ஸ்மிருதி, உபநிஷ

தம், திருக்குறள் முதலிய நூல்களின் சாரம், மார்க்ஸியத்தில் படிந்தால், அஃது இந்தியாவுக்குப் பலவழியிலும் நலஞ் செய்வதாகும் என்று யான் கருதுகிறேன்.

மார்க்ஸியம் எங்கும் பேசப்படுவதால் அதைப் பற்றி ஈண்டுப் பேசுதல் நேர்ந்தது. அதைப்பற்றிப் பின்னும் பேச எண்ணியிருக்கிறேன். 'மார்க்ஸியம்' ஏதோ புதுமை என்று எவருங் கருதவேண்டுவதில்லை. எப்புதுமையும் ஒரு பழமையினின்றும் பிறப்பதேயாகும். மார்க்ஸியத்துக்கும் பழமைக்கால் உண்டு.

நமது நாட்டிலும் மார்க்ஸ் போன்றவர் சிலரிருந்தனர். சார்வாகத்துக்குக் கால்கொண்டவர் எவர்? பிரகஸ்பதியல்லவோ? 'பிரகஸ்பதி மடம்' என்ற அமைப்பு எதை அறிவுறுத்திக் கொண்டிருந்தது? தேவ குருவாகிய பிரகஸ்பதி, சார்வாகத்தையும் அறிவுறுத்தியதன் நோக்கமென்ன? சார்வாகம் வேதத்துக்குப் புறம்பு என்று எந்த வைதிகரும் கூறார்.

மார்க்ஸியம் சார்வாகத்தை இக்கால முறையில் கூறுவது. அஃது உள்ளவாறே எங்நாட்டிலும் வளராது. அஃது அவ்வங்நாட்டு இயற்கை வளத்துக்கேற்ற முறையிலேயே வளர்ந்து வரும். மார்க்ஸியம் ருஷ்யாவில் வளர்ந்து வரவில்லையோ என்று சிலர் கேட்கலாம். மார்க்ஸியம் உள்ளபடியே ருஷ்யாவில் வளர்ந்து வருகிறதா என்று சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். மார்க்ஸியம் ருஷ்யாவில் முன்னே லெனினிஸமாக வளர்ந்து வந்தது. இப்பொழுது அஃது ஆங்கே ஸ்டாலினிஸமாக வளர்ந்து வருகிறது. மார்க்ஸியம் இனி ருஷ்யாவில் எந்நிலையடையுமோ?

மார்க்ஸியம் ஒருவிதத் தத்துவம். அது நடைமுறையில் அதன் தத்துவப்படியே வளராது; நாடுகளின் இயற்கை நோக்குக்கும் போக்குக்கும் ஏற்ற முறையிலேயே வளர்வதாகும். நமது இந்தியா - பழமையில் பேர் பெற்ற இந்தியா - மார்க்ஸியத்தை அப்படியே ஏற்று நடத்தல் அரிது. எத்துணையோ தத்துவ இயல்களை உண்டு, ஜீரணஞ் செய்து, சத்தை ஏற்று, அசத்தைத் தள்ளிய இந்தியா - மார்க்ஸியத்தை மட்டும் உள்ளவாறு ஏற்குமா? அதை உள்ளவாறே ஏற்க இந்தியாவின் இயற்கை இடந் தாராது. ஆதலின், 'மார்க்ஸியம்' என்றதும், 'அந்தோ! சார்வாகம் - உலகாயதம் - நாஸ்திகம்' என்று மருட்சியடைந்து, '' அதைத் தீண்டலுமாகாது' என்று பிடிவாதஞ் செய்வது அறிவுக் கழகன்று. தார்க்கீகத்தையும் மிமாஞ்சகத்தையும் ஈன்ற இந்தியா - வியாச சூத்திரத்தை ஈன்ற இந்தியா - திருவள்ளுவரையும் இளங்கோவையும் ஈன்ற இந்தியா - மார்க்ஸியத்தை ஏற்க அஞ்சுமோ? அதை ஆராய்ந்து உண்மை காணப் பின்னிடுமோ? ஒருபோதும் அஞ்சாது; பின்னிடாது. எதையும் ஆராய்ந்து பார்க்கும் உரிமை மன்பதைக் கிருத்தல் வேண்டும். அவ்வுரிமையற்ற இடம் நாகரிகம் செறிந்ததாகாது.

மார்க்ஸியம் ஹிம்ஸையைப் போதிப்பதென்று சில இடங்களில் கருதப்படுகிறது. இஃது உலகை ஹிம்ஸிக்குங் கூட்டத்தாரின் பொய்ப்பிரசாரம். பொய்ப் பிரசாரத்துக்குச் செவிசாய்க்கும் அளவில் நின்று விடுவது தவறு. மார்க்ஸியத்தைத் துருவி ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்; பார்த்தால் அதன் முடிவு ஹிம்ஸையை அறிவுறுத்துகிறதா

அல்லது அஹிம்சையை அறிவுறுத்துகிறதா என்பது புலனாகும். மார்க்ஸியத்தில் ஆங்காங்கே ஹிம்சை இருத்தல் உண்மை. அது தனி மனிதனை உளங்கொண்டதன்று; அஹிம்சை முடிவைக் குறிக்கொண்டது. நமது இந்தியாவின் பண்டை அஹிம்ஸா தர்மத்தைப் புதுக்க வல்லது மார்க்ஸியம் என்பது எனது கொள்கை. மார்க்ஸியம், சுக்கர நீதி - சாணக்கியம் - உபநிஷதம் - திருக்குறள் முதலியவற்றின் சாரம் படியப்பெற்று, இந்திய இயற்கைக்கேற்ற வண்ணம் இந்தியாவில் பரவினால், இந்தியா அஹிம்ஸா மயமாகும் என்பது எனது உறுதியான நம்பிக்கை.

## அஹிம்சையின் நுட்பம்

அஹிம்ஸா தர்மம் பல பொருளில் வழங்கப்படுவது; அஹிம்சையைக் கோழைமையின் பாற்படுத்திப் பேசுவோரும் உளர். அவர், அஹிம்சையின் தத்துவத்தை உணராதவரென்க. அஹிம்ஸா தர்மத்தில் விளைவதே வீரம் என்பது. *அஹிம்ஸா வீரமே வீரம். மற்றையது வீரமாகாது. அது கொலையாகும்.

போர் இருவகை. ஒன்று அறப்போர்; மற்றொன்று மறப்போர். அறப்போர் தன்னலமற்றது; மற்றையது தன்னலமுடையது. தன்னலமற்ற - அஹிம்ஸா தர்மப் போர் கொலையாகாது. மற்றப் போர் கொலையின்பாற்படும். விளக்கம் பகவத்கீதையிலும் திருக்குறளிலும் பார்க்க.

---

*ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணியல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ—சேக்கிழார்

அஹிம்ஸா தர்ம இயல்களையெல்லாம் ஈண்டு விரித்துரைத்தல் அநாவசியம். அஹிம்ஸா தர்மம் வாழ்விடை வளர்தற்குரிய முயற்சிகளில் தலைப்படுதல் சிறப்பு. அம்முயற்சிகளால் பொருளாதாரம் செம்மையுறும்; போர் நிகழாது. அஹிம்ஸா தர்ம ஆக்கத்துக்குப் பொருட் பொதுமை இன்றியமையாதது. பொருட் பொதுமை இல்லாத இடத்தில் அஹிம்ஸா தர்மம் வளர்தல் அரிது.

பண்டை இந்தியாவில் பொருட் பொதுமை அடையும் வகையில் தொழில்முறைகள் அமைந்திருந்தன. அத்தொழின் முறைகள் பின்னை மாய்ந்தன. அதனால் அஹிம்ஸை வளராதொழிந்தது.

பொதுமை அறத்தைக் கெடுக்கவல்லது சாம்ராஜ்ய ஆட்சிமுறை. சாம்ராஜ்ய ஆட்சிமுறையில் அஹிம்ஸா தர்ம வளர்ச்சிக்குரிய தொழின்முறைகள் அமைவதில்லை. அதனால் பொதுமை குலைந்துவிடும். பொதுமை மறையுமிடத்தில் அஹிம்ஸையும் மறையும்.

## விடுதலை

இக்கால உலகம் ஹிம்ஸைக்கு இரையாதல் கண்கூடு. காரணம் சாம்ராஜ்ய நோய் உலகிடைப் பரவியதேயாகும். அந்நோய் நமது இந்தியாவிலும் புகுந்துகொண்டது. அதனால் இந்திய இயற்கைவழி மக்கள் வாழ்வு நடைபெறுவதில்லை. அந்நோயினின்றும் இந்தியா விடுதலை அடைதல் வேண்டும்; அடைந்தால் இந்தியாவின் இயற்கைக்குரிய அஹிம்ஸை நன்கு வளரும். ஆகவே, இப்பொழுது இந்தியாவுக்கு என்ன வேண்டும்? விடுதலை வேண்டும். இதுபற்றியே இந்நூலுக்கு 'இந்தியாவும் விடுதலையும்' என்னுந் தலைப்புச் சூட்டப்பட்டது.

1947 ஆகஸ்ட் 15-ம் நாள் முதல் இந்தியா விடுதலை அடைந்தது என்று சிலர் கனவு காண்கின்றனர். இந்

தியா விரும்பியது முழுவிடுதலை. இப்பொழுது முழு விடுதலை கிடைத்துவிட்டதோ ? இல்லை. ஆதலின் இந்தியா இன்னும் முழுவிடுதலை அடையவில்லை என்க. இதுபற்றிய விளக்கத்தை நூலின் இறுதியில் பார்க்க.

## முக்கால இந்தியா

இந்தியா பலதிற மாறுதல்களை அடைந்துள்ள ஒரு நாடு. அம்மாறுதல்களை உணர உணர இந்தியாவின் விடுதலைக்குரிய வழியும் இனிது புலனாகும். ஆகவே, பல திறப்பட்ட இந்தியாவை ஈண்டு முற்கால இந்தியா என்றும், இடைக்கால இந்தியா என்றும், இக்கால இந்தியா என்றும் முத்திறப்படுத்தி நிலைமைகளை ஆராய்ந்து, விடுதலைக்குரிய வழி காண முயல்கிறேன்.

மூவகை இந்தியாவைக் கால வரையறைப்படுத்தல் எளிதன்று. அதில் பல சிக்கல்கள் குறுக்கிடும். எடுத்த பொருளுக்கேற்ப ஒல்லும்வகை கால வரையறை செய்கிறேன். பிழைபொறுக்க.

முற்கால இந்தியாவின் தொடக்கம் தெரியவில்லை. அசோகர் காலம்வரை அது நிலவியது என்று கூறலாம். அசோகருக்குப் பின்னர் இடைக்கால இந்தியா பிறந்தது. அஃது அவுரங்கசீப் காலம்வரை காட்சியளித்து, இக்கால இந்தியாவை ஈன்று மறைந்தது. இக்கால இந்தியா அன்றுதொட்டு இன்றுவரை உருப்பெற்று நிற்கிறது.

இக்கால அடிமை இந்தியா மாய்ந்து உரிமை இந்தியா முகிழ்த்தல்வேண்டும். அதற்குரிய முயற்சி தேவை. அம்முயற்சிக்கு முற்கால இந்திய வரலாறு பெருந்துணை செய்யும். ஆதலின், முற்கால இந்தியா மீது சிறிது கருத்துச் செலுத்திப் பின்னை விடுதலைமீது கருத்துச் செலுத்த விரும்புகிறேன்.

# க. முற்கால இந்தியா

'முற்கால இந்தியா' என்னுந் தலைப்பைக் காணும் போதே, இக்கால இளைஞர் பலர், 'அந்தோ! இன்னுமா பழமை! இனிப் பழமை எற்றுக்கு? புதுமையன்றோ இப்பொழுது வேண்டும்?' என்று கருதுவர். இவ் வாறு கருதுவோர் தொகை பெருகப் பெருகப் பழமை உணர்வு அருகியே போகும். பழமை உணர்வு அருகி னால் புதுமை உணர்ச்சிக்கு இடம் ஏது?

## பழமை - புதுமை

புதுமை இளைஞரே! புதுமை எது? புதுமைக்குத் தோற்றுவாய் உண்டா? இல்லையா? புதுமை வெறும் பாழினின்றும் - சூந்யத்தினின்றும் - தோன்றுமா? தாயின்றிச் சேய் பிறக்குமா? வித்தின்றி முளை உண் டாகுமா? ஓர்க.

பழமையின்றிப் புதுமையில்லை. புதுமைக்குத் தாய் பழமையே. புதுமையின் ஆக்கத்துக்கு ஊக்கமூட்டு வதும் பழமையே. பழமையின் உயிர்ப்பே புதுமையை வளர்க்கவல்லது. பழமையற்ற நாடும் சமூகமும் பிறவும் விரைவில் எளிதில் புத்துணர்வு பெறுதல் அரிது. பழஞ் சிறப்புணர்ந்து புத்துணர்ச்சி பெறவேண்டுவது இளைஞர் கடமை. இவற்றைப் புதுமை இளஞ் சகோதரர் உணர்ந்து நடந்து நலம் பெறுவாராக.

ஒரு நாட்டினிடத்து அன்பை எழுப்புதற்குரியன பல. அவற்றுள் சிறந்த ஒன்று பழமை. முன்னோர் வரலாற்றையும், வீரத்தையும், கலைஞானத்தையும்,

இன்ன பிறவற்றையும் படிக்கும்போதும் கேட்கும் போதும் நமக்குள் எழுச்சியும் ஊக்கமும் உண்டாகின்றனவா? இல்லையா? 'வால்மீகி வாழ்ந்த காடு இது - வியாசர் வளர்ந்த காடு அது; புத்தரிருந்த மரத்தடி இது- சிவாஜி உலவிய மலையடி அது; கண்ணகி நின்ற இடம் இது - மணிமேகலை சிறைப்பட்ட இடம் அது' என்று அறிஞர் உணர்த்தும்போது உள்ளக் கவர்ச்சியும் கிளர்ச்சியும் உறுகின்றனவா? இல்லையா? இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுக்கு முன்னர் நமது நாடு பாபிலோனுடன் வாணிபஞ் செய்தது என்றும், இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுக்கு முன்னர், எகிப்தியப் பிணங்கட்கு நமது நாட்டு மெல்லிய துணிகள் புனையப்பட்டன என்றும் பழைய சரித்திரம் சாற்றுவதை உணரும்போது நமக்குள் உணர்ச்சி எழுந்து ததும்பி வழிகிறதா? இல்லையா? எல்லோரா ஓவியமும், மல்லை (மாவலிபுர) ஓவியமும் நமக்கு மகிழ்ச்சி யூட்டுகின்றனவா? இல்லையா? அநுபவத்திற் பார்க்க.

'இம்மன்னன் இப்படி நடந்ததால் நன்மை விளைந்தது' என்றும், 'அம்மன்னன் அப்படி நடந்ததால் தீமை விளைந்தது' என்றும் பழைய சரித்திரஞ் சொல்கிறது. அக்குறிப்புக்கள் ஒருவனது வாழ்வுக்குத் துணை செய்யுமா? செய்யாவா? ஆராய்க.

சரித்திர உலகம் எற்றுக்கு உண்டாயிற்று? பழமையை உணர்த்திப் புதுமையை எழுப்புதற்கென்று அவ்வுலகம் உண்டாயிற்று. ஆதலின், பழமை பல வழியிலும் வேண்டற்பாலதே.

பழமையின் மாண்பை உன்னியே, முற்கால இந்தியா, இக்கால இந்தியாவின் பிணி தீர்க்கும் மருந்தாய், விடுதலைக்கு ஊக்கமூட்டி வழிகாட்டுவதாய்த் துணை செய்யுமென்று உறுதிகொண்டு, அவ்விந்தியாவைப்பற்றிச் சிறிது கூற முற்படுகிறேன்.

## முற்கால இந்தியர்

முற்கால இந்தியர் யார்? அவர் எத்தகை வாழ்வு நடாத்தினர்? அவர்தம் அறம், அரசு, கல்வி, நாகரிகம் முதலியன எப்படி இருந்தன? இன்ன பிறவற்றைத் தெளியத் தெளிய முற்கால இந்தியாவின் நிலைமை ஒருவாறு புலப்பட்டுக்கொண்டே போகும்.

முற்கால இந்தியர் யார்? இதற்கென்ன விடை இறுப்பது? முற்கால இந்தியர் திராவிடரும் ஆரியரும் ஒன்றிய ஓரினத்தவர் என்று விடை இறுக்கலாம். இது பற்றிய சரித்திரம் இன்னும் நன்கு கனியவில்லை. திராவிடர் வரலாறும் ஆரியர் வரலாறும் சரித்திர முறையில் இந்நாளில் அரும்பியே வருகின்றன; இன்னும் கனியவில்லை. சரித்திரம் நன்கு கனிந்தால் பலதிற ஐயப்பாடுகள் நீங்கும்.

உலக நிகழ்ச்சிகள் பலப்பல. அவற்றிற் சில சரித்திர இயலுக்கு உரியன என்று சரித்திரக்காரரால் கொள்ளப்படுகின்றன; சில அவ்வியலுக்கு உரியன அல்ல என்று அவரால் தள்ளப்படுகின்றன.

## சரித்திர உலகம்

சரித்திர உலகம் எப்பொழுது திரண்டது? கிறிஸ்துவுக்கு முன் - ஏழாம் நூற்றாண்டின் இடையில் - சரித்

திர உலகம் திரண்டது என்று மேல்நாட்டறிஞர் கூறி னர். அதை உலகம் ஏற்றுக்கொண்டது.

நமது நாட்டுச் சரித்திரம் எந்நாளில் துவங்கிற்று? சரித்திரக் காலத்துக்கு முன்னரே நமது சரித்திரம் துவங்கிற்று. காலம் புலனாகவில்லை. நம் நாட்டுச் சரித் திரங்கள் பெரிதும் புராணங்களில் இருக்கின்றன. அவற்றையெல்லாம் இக்காலச் சரித்திர உலகம் ஏற்குமா என்பது ஐயம்.

சரித்திர ஆசிரியராகிய வின்ஸென்ட்ஸ்மித் என்ப வர், 'புராண உலகம் சரித்திர உலகுக்கு முற்றும் புறம் பானது' என்னுங் கருத்தை ஏற்றுக்கொள்கிறாரில்லை. அவர், சரித்திர உலகம் புராண உலகை முற்றும் புறக் கணித்தல் கூடாது என்றும், அவ்வுலகிலும் சரித்திரச் சான்றுகள் உள்ளன என்றும், விஷ்ணு புராணத்தின் வாயிலாக மௌரியர் வரலாறும், மச்ச புராணத்தின் வாயிலாக ஆந்திரர் வரலாறும் அறியக் கிடக்கின்றன என்றும் கூறுகிறார். அவர்தங் கூற்றும் உன்னற்பாலதே.

இந்தியாவின் பழைய வரலாறுகளைச் சரித்திர முறையில் காண முயன்றவருள் முழு வெற்றி பெற்றவர் எவருமில்லை. இந்தியாவின் பழமையை எளிதில் காண் டல் இயலாது. நம் நாட்டுப் பழைய நிகழ்ச்சிகள் சரித் திரக் காலத்தைக் கடந்து கடந்து நிற்பன; யுகக்கணக்கி லிருப்பன. அச்சேய்மை நிகழ்ச்சிகள் இக்காலச் சரித் திரக் கண்ணுக்கு எங்ஙனம் புலனாகும்? யுகக்கணக்கு களைச் சரித்திர வழியில் ஆராய்ந்து காலவரம்பு கோல லும் அரிதே. காலவரம்பில் அகப்படாததை அநாதி என்று சொல்லிவிடுவது நம்மனோர் வழக்கம்.

சரித்திரக் காலங்கடந்த நிகழ்ச்சிகளைச் சரித்திர உலகில் புகுத்த இக்கால ஆராய்ச்சியாளர் சிலர் அரும்பாடு படுகின்றனர். அவர்தம் பாடு ஆண்டவனுக்கே தெரியும். அரும்பாட்டினின்றுதல் நன்முடிபு வெளிப்படுகிறதா? இல்லை. ஒருவர் காணும் முடிவை இன்னொருவர் மறுக்கின்றனர்; இவர் காணும் முடிவை மற்றொருவர் மறுக்கின்றனர். இவ்வாறு மறுப்புக்களே பெரிதும் மலிகின்றன. மறுப்புக்கள் எழ எழ உண்மையும் ஒருபுடை விளங்கிக்கொண்டே போகும். பழைய நிகழ்ச்சிகளின் உண்மை அகக்கண்ணர்க்கே விளங்கும் என்று விளம்பிவிடுவது எளிது.

## திராவிடர் - ஆரியர்

திராவிடர் ஆரியர் வரலாறுகளைச் சரித்திர உலகமே பலவாறு பகர்ந்து கொண்டிருக்கிறது. 'அவ்வரலாறுகளைப்பற்றிச் சரித்திர உலகில் ஒருமைப்பட்ட கருத்து இன்னுந் தோன்றவில்லை. திராவிடர் இந்தியாவின் பழங்குடி மக்கள் என்று சிலர் சொல்கின்றனர்; அவரும் வேறு புலத்திருந்து இந்தியா போந்து தங்கினவர் என்று சொல்வோரிருக்கின்றனர். ஆரியர் மத்திய ஆசியாவினின்றும் இந்தியாவில் குடி புகுந்தவரென்று சிலரும், முதல்முதல் ஆரியர் ஆர்க்டிக் பிரதேசத்தில் வதிந்தனரென்றும், ஆண்டிருந்து அவர் பலபல இடங்களில் குடியேறினரென்றும், ஒரு கூட்டத்தார் மத்திய ஆசியாவை அடைந்து இந்தியா நண்ணினரென்றும் வேறு சிலருங் கூறுகின்றனர். ஆரியர் இந்தியாவில் குடி புகுந்தவரல்லரென்றும், அவரும் இந்தியாவின் பழங்குடி மக்களிற் சேர்ந்தவரென்றுங் கூறுவோருமுளர்.

மற்றுஞ் சில ஆராய்ச்சிகளும் இந்நாளில் வெளி வந்துலவுகின்றன. அவற்றில் இரண்டு வருமாறு:— (1) இந்துமகா சமுத்திரம் நிலப்பரப்பா யிருந்தபோது இந்தியா பெரிதும் நீர்ப்பரப்பா யிருந்ததென்றும், அந் நிலப்பரப்பிலேயே முதல் முதல் மக்கள் தோன்றினார்கள் என்றும், பின்னை நிலப்பரப்பு நீரால் விழுங்கப்பட்ட தென்றும், அதனால் நீர்ப்பரப்பு நிலப்பரப்பாயிற்றென் றும், அந்நிலப் பரப்பில் மக்கள் படிப்படியே குடியேறி னார்களென்றும், அம்மக்களே திராவிடர்களென்றும், பின்னை அவர்களிற் சிலர் வெவ்வேறிடங்கள் நோக்கி நோக்கிச் சென்றனரென்றும், அவர் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொருவிதப் பெயர் பெற்றனரென்றும், மத்திய ஆசியாவில் தங்கினவர் ஆரியரென்று அழைக்கப்பட்டன ரென்றும், அவ்வாரியர் மீண்டும் இந்தியா போந்து தம் பழைய சகோதரருடன் கலந்து கொண்டனரென்றுஞ் சொல்லப்படுகின்றன. (2) இந்தியா ஒருபோது கடல் களால் மூன்று பகுதியாகப் பிரிக்கப்பட்டிருந்ததென்றும், பின்னை கடல்கள் மறைந்தனவென்றும், நிலங்கள் எழுந்து ஒன்றுபட்டன என்றும், முன்னை வடக்குப் பகுதியில் வாழ்ந்தவர் ஆரியரென்றும், தெற்குப் பகுதி களில் வாழ்ந்தவர் திராவிடரென்றும் அழைக்கப்பட்டன ரென்றும், நாளடைவில் இருவரும் ஒருமைப்பட்டு நாகரி கத்தை வளர்த்தனரென்றுஞ் சொல்லப்படுகின்றன.

ஆரியர் பிறநாட்டினின்றும் இற்றைக்குச் சுமார் நாலாயிரம் ஆண்டுக்கு முன்னர் இந்தியாவில் குடிபுகுந் தவரென்பதும், அவர் இந்தியநாடு நோக்குதற்கு முன் னரே இந்தியாவில் மக்கள் நாகரிகமுடையவர்களாய்

வாழ்ந்தார்களென்பதும், அந்நாகரிக மக்களே திராவிடர் களென்பதும் இப்போது பலரால் ஒப்புக்கொள்ளப்பெற்ற முடிபுகளாக விளங்குகின்றன. அவற்றை வலியுறுத்துஞ் சான்றுகளும் இருக்கின்றன.

ஆரியர்க்கும் இந்தியப் பழங்குடி மக்கட்கும் சில விடங்களில் போர்கள் நடந்தன என்று வேதம் முழங்கு கிறது. இஃது ஆரியர் இந்தியா போதரற்கு முன்னரே இந்தியாவில் மக்கள் வதிந்தார்கள் என்பதை உணர்த்துவ தாகும். பழைய காவியமாகிய வால்மீகி ராமாயணத்தில் திராவிடர் நாகரிகம் பேசப்பட்டிருத்தலுங் கருதற்பாலது.

இயற்கை அன்னையின் திருவிளையாடலால் சிந்து பிரதேசத்தில் மண்ணால் மூடப்பட்டுக்கிடந்த மோஹெஞ் சோதாரோ, ஹாரப்பா முதலிய சில ஊர்கள் அணித்தே காணப்பட்டன. அவை சரித்திர ஆராய்ச்சி யுலகின் முன் நிற்கின்றன. 'மொஹெஞ்சொதாரோ'வும் 'ஹாரப்பா'வும் பலதிறச் சரிததிர முடிவுகளை மாற்றிவருகின்றன. அவற் றின் தொன்மை ஐயாயிரத்தைந்நூறு ஆண்டு (3500 கி. மு.) கடந்ததென்று சிலர் கருதுகின்றனர்; சிலர் பன் னிரண்டாயிரம் வரை (10,000 கி. மு.) செல்கின்றனர். 'மொஹெஞ்சொதாரோ' 'ஹாரப்பா' முதலியவற்றைப் பற்றிய ஆராய்ச்சிகள், ஆரியர் இந்தியாவில் நுழைதற்கு (1,500 கி. மு.) முன்னரே இந்தியாவில் நாகரிகம் வாய்ந்த மக்கள் கூட்டம் ஒன்றிருந்ததென்பதை விளக்கு வனவாம். திராவிடர் ஆரியர் வரலாறுகளைப் பற்றிய குறிப்புக்கள் இன்னுஞ் சில இருக்கின்றன. அவை இந் நூலுக்கு வேண்டுவதில்லை.

பழையகாலத்தில் திராவிடரும் ஆரியரும் போரிட் டுக் கொண்டனரென்றும், பின்னே நாளடைவில் உறவு

பூண்டனரென்றும் உரைக்கப்படுகின்றன ; சில சான்று களுங் காட்டப்படுகின்றன. இவையெல்லாம் சரித்திரக் காலங்கடந்த நிகழ்ச்சிகள். பழைய இந்தியச் சரித்திர உலகம் இன்னும் நன்கு கனியவில்லை. ஆதலின், உண்மை இதுதான் என்று அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. அவ் வப்போது கிடைக்குஞ் சான்றுகளை ஆராய்ந்து உண்மை காண முயலவேண்டுவது அறிஞர் கடமை. அவற்றைப் போருக்கும் பிணக்குக்கும் பூசலுக்கும் பயன்படுத்துவது அறிவுடைமையாகாது.

திராவிடரும் ஆரியரும் நீண்டகாலம் போரிட்டுக் கொண்டே இருந்தனர் என்று கருதுதற்குப் போதிய சான்றுகளில்லை. தொடக்கத்தில் - சிலகாலம் - இருவரும் போரிட்டிருப்பர். பின்னை இருசார்பினரும் ஒரு நாட்டவ ராயினர். இருவர்க்கும் இரத்தக் கலப்புண்டாயிற்று. இருவர் நாகரிகமும் ஒன்றுபட்டன. இதுகாலை, 'இன்னார் திராவிடர்' 'இன்னார் ஆரியர்' என்று பிரித்துப் பேசு தற்கே இடமில்லாமற் போயிற்று. கங்கையும் யமுனையும் இரண்டற்று ஒன்றிக் கலந்து ஓடுவது போலத் திராவிடர் நாகரிகமும் ஆரியர் நாகரிகமும் ஒன்றுபட்டு நாட்டில் ஓடு கின்றன என்று கவிதாகூர் கூறியது ஈண்டு நினைவுக்கு வருகிறது. ஆகவே, முற்கால இந்தியர் யார் என்னுங் கேள்விக்கு என்ன விடை இறுப்பது ? திராவிடரும் ஆரி யருங் கலந்த ஓரினத்தவரே முற்கால இந்தியர் என்ற விடை இறுக்கலாம்.

இனி முற்கால இந்தியரின் வாழ்க்கை, அரசு, கலை, நாகரிகம் முதலியவற்றின்மீது சிறிது கருத்துச் செலுத் துவோம்.

## வாழ்க்கை

உலகை நோக்குவோம். உலகில் மலை, மரம், பாம்பு, பறவை, விலங்கு, மக்களினம் முதலியன இருத்தலைக் காண்கிறோம். இவையெல்லாம் ஒன்றா? வேறா? இவற்றை ஒருவழியில் ஒன்று என்றுங் கொள்ளலாம்; இன்னொரு வழியில் வேறு என்றுங் கொள்ளலாம்.

உயிரளவில் எல்லாம் ஒன்றே. உடலளவில் எல்லாம் வேறே. உயிரின் அறிவு விளக்கத்துக் கென்றே பலதிற உடலங்கள் அமைகின்றன. அப்பலதிற உடலங்களின் கருவி கரணங்களுக்கு ஏற்றவாறு அறிவு விளக்கமுற்றுக் கொண்டே போகும். அறிவு விளக்கம், புலன்கள் அரும்புதலின் அளவைப் பொறுத்திருப்பது.

புலன்கள் சில உடலங்களில் வெளிப்படையாக அரும்புவதில்லை; சில உடலங்களில் ஒன்றிரண்டு அரும்பும்; சில உடலங்களில் ஐந்தும் அரும்பும்.

மக்கட்கு அடுத்தபடியிலுள்ள விலங்குகட்கு ஐம்புலன் உண்டு. மக்கட்கும் ஐம்புலன் உண்டு. ஆனால் மக்கள் விலங்குகளைப்போல வாழ்வதில்லை. ஏன்? மக்கட்கு ஐம்புலனுடன் மற்றுமொன்று விளக்கமுறும் வாய்ப்புண்டு. அவ்வாய்ப்பு விலங்குகட்கு இல்லை.

அஃது எது? மனவுணர்வு. அவ்வுணர்வு மக்களை விலங்கினின்றும் பிரிப்பதாகிறது. மனவுணர்வின் விளக்கத்துக் கேற்றபடி மக்கள் உடலிலே கருவி கரணங்கள் அமையும்.

உயிர்க்குப் பலதிற உடம்புகள் அமைகின்றன. உடம்புகட் கேற்றவண்ணம் புலன்கள் முகிழ்க்கின்றன.

மனவுணர்வு விளக்கத்துக்கென்று உயிருக்கு மனித உடம்பு அமைகிறது.

மனவுணர்வின் இயல்பென்னை? பலதிறங் கூறலாம். இங்கே, நூலின் போக்குக்கேற்ப ஒன்றைச் சிறப்பாகக் கொள்ளலாம். அது கூடிவாழும் இயல்பு. மனிதனைக் கூடிவாழும் பிராணி (Social animal) என்று உயிர் நூல் (Biology) சொல்கிறது.

கூடிவாழும் இயல்பு அஃறிணை உயிர்களிடத்தில் இல்லையோ என்று சிலர் கேட்கலாம். அஃறிணை உயிர்களில் கூடி வாழ்வனவும் உண்டு; கூடி வாழாதனவும் உண்டு. கூடிவாழ்வனவும் தம் இனத்துடனேயே சேர்ந்து வாழும்; பிற இனங்களுடன் சேர்ந்து வாழ்வதில்லை. அவை பிற இனங்களைக் காணும்போதே சீறும்; பகைமைகொள்ளும். காரணம், அவை மனவுணர்வு விளக்கம்பெறாது கிடப்பதே யாகும்.

மனிதனிடம் மனவுணர்வு விளக்கமுற்று நிற்றலால், அவன் கூடிவாழும் இயல்பினனாகிறான். சிற்சில செயற்கை முறைகளால் மனிதனிடத்துள்ள மனவுணர்வு ஒடுங்கிப் போதலுண்டு. மனவுணர்வு ஒடுங்குமிடத்தில் விலங்குணர்வு நுழைந்து கொள்ளும். விலங்குணர்வு மன்பதையில் பெருகினால் உலகம் பாழ்பட்டுப் போகும். விலங்குணர்வு தங்களிடை நுழையாதவாறு மனவுணர்வை மக்கள் காத்து வரல்வேண்டும். எல்லாம் அரசின் நிலைமையைப் பொறுத்து நிகழ்வன என்று பொதுப்படக் கூறலாம். கூடிவாழும் இயல்புக்குரிய மன உணர்வைக் கெடுத்துக்கொள்வோன் செயற்கைப் பாவியாவன். முற்கால மக்கள் இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தி வந்தமையால், அவர்களிடம் கூடிவாழுங் குணமே பெருகி நின்றது.

மனிதன் கூடி வாழும் இயல்பினன். இதற்கென்று அவனிடம் பலதிறக் கூறுகள் அமைந்துள்ளன. அவற்றுள் இரண்டு சிறப்பாகக் குறிக்கத்தக்கன. ஒன்று மொழி; இன்னொன்று அன்பு நிகழ்ச்சி.

மக்களிடை மொழி ஏற்பட்டுள்ளதன் நோக்கம் என்னை? ஒருவர் கருத்தை இன்னொருவர்க்குத் தெரியப்படுத்தற்கேயாம். இது கூடிவாழும் இயல்புக்கு ஓர் அறிகுறியன்றோ? உலகில் மொழி ஏற்பட்டதை உன்ன உன்ன மனிதன் கூடிவாழும் இயல்பினன் என்பது நன்கு விளங்கும்.

அன்பு, மனவுணர்வில் நிகழ்வது. சேர்க்கையில்லாத இடத்தில் அன்பு நிகழ்தற்கு ஏது இராது. அங்கே அன்பு சிறைப்பட்டே கிடக்கும். அன்பு எழுதற்குக் கூட்டுறவு இன்றியமையாதது. ஆதலின், மனிதன் கூடி வாழும் இயல்பினன் என்று தெளிக.

உலக வாழ்வு எதற்காக அளிக்கப்பட்டது? உயிர்கள் படிப்படியே உடல் தாங்கி, மாசுகளை அகற்றி, அன்பால் அறிவு விளக்கம் பெற்று, இன்பந் துய்த்து விடுதலை பெறுதற்கன்றோ? அத்தகைய உலகைத் தனி வாழ்க்கையால் நாசப்படுத்தினால் உயிர்க்கு விடுதலை யாண்டிருந்து வரும்? பெண்ணின்றிப் பிள்ளை எப்படிப் பிறக்கும்? ஆகவே சேர்ந்து வாழ்தலே இயற்கை என்க.

## குடும்பம் - கிராமம் - நாடு - உலகம்

மனிதனது கூடிவாழும் இயல்பு வாழ்க்கையாக விரிகிறது; குடும்பமாக விரிகிறது; கிராமமாக விரிகிறது; நாடாக விரிகிறது; உலகமாக விரிகிறது.

குடும்பத்தில் உறவு உண்டு; ஒழுங்கு உண்டு; ஒருமைப்பாடு உண்டு. அஃதோர் அமைப்பு. அமைப்புக்குக் கால் கொள்ளுமிடம் குடும்பமென்க.

குடும்பங்கள் சேர்ந்த ஒன்று கிராமம். கிராமங்களிலும் உறவு, ஒழுங்கு, ஒருமைப்பாடு முதலியன இருத்தல் வேண்டும். 'கிராமக்கட்டு' என்னும் வழக்காற்றை உன்னுக. கிராமமும் ஓர் அமைப்பே.

கிராமங்கள் சேர்ந்த ஒன்று நாடு என்பது. நாடு, குடும்ப அமைப்புக்களாகிய கிராம அமைப்புக்களினின்றும் பரிணமிப்பது. நாடும் ஓர் அமைப்பே.

நாடுகளெல்லாம் சேர்ந்த ஒன்றே உலகம். உலகம் ஓர் அன்பு அமைப்பாக இலங்குதல் வேண்டுமென்பது இயற்கையின் நோக்கம். அந்நோக்கத்தை நிறைவேற்றும் பொறுப்பு நாடுகட்கு இருத்தல் வேண்டும்.

நகர அமைப்பு மிகப்பழைய காலத்திலில்லை என்றே கூறலாம். பின்னை சிலவிடங்களிலேயே அஃது அமைந்தது. தொடக்கத்தில் நகரம், அரசையும், அதன் அங்கங்களையும், அவற்றின் சார்புகளையுங் கொண்டதாயிருந்தது. பின்னை அதனிடைக் களியாடல்கள் நுழைந்தன. அவற்றைத் தொடர்ந்து மற்ற உயிர்க் கொல்லிகள் புகுந்தன. இந்நாளில் நகரம் மக்கள் வாழ்க்கைக்குக் கேடு சூழும் ஒழுக்கவீனங்கட்கும், நோய்கட்கும், இன்ன பிறவற்றிற்கும் பிறப்பிடமாக நிற்கிறது. நகரம் நரகமாய் விட்டது என்று சுருங்கச் சொல்லலாம்.

## அமைப்பு - நாடு - உலகு

ஈண்டு அமைப்பு என்றது இயற்கை வழியே பொருந்தும் ஒன்றையென்க. இயற்கை வழி அமைவதே

அமைப்பாகும். செயற்கைக் கட்டுகளால் அமைவது அன்பு வளர்தற்குரிய நல்லமைப்பாகாது. செயற்கை அமைப்புக்கள் இயற்கை அமைப்புக்களுக்குங் கேடு சூழ் வனவாகும். இந்நாளில் அரசு முதலிய பல, செயற்கை அமைப்புக்களாக மாறியிருத்தல் கண்கூடு.

உறவு, ஒழுங்கு, ஒருமை முதலியன நிலவும் ஒன்றே அமைப்பெனப்படுவது. அவையில்லாத ஒன்று அமைப்பா காது. ஆகவே, குடும்பங்களைக்கொண்ட கிராமங்களா லாகிய நாடு என்பது, உறவு, ஒழுங்கு, ஒருமை, இன்ன பிறவாற்றால் ஆக்கப்பட்ட அமைவாயிருத்தல் வேண்டும் என்பதை மறத்தலாகாது.

நமது உடலை நோக்குவோம். உடல் ஓர் அமைப்பு என்பது எளிதில் விளங்கும். உடம்பு இயற்கை அமைப்பா? செயற்கை அமைப்பா? இயற்கை அமைப் பென்று எவருஞ் சொல்வர். உடம்பைப் போன்று நாடும் இயற்கை அமைப்பு வாய்ந்தது.

நாடுகள் எப்படிப் பிரிவுண்டன? இவ்வளவு கிரா மங்களைக் கொண்டது ஒரு நாடு என்பதற்கு ஏதேனும் நியதியுண்டா? அல்லது இவ்வளவு அகலம் இவ்வளவு நீளம்கொண்டது ஒரு நாடு என்னும் நியதியாதலுண்டா? நாடுகள் ஒரே அளவில் அமைந்தில்லை. அவை பெரியன வாகவும் சிறியனவாகவும் அமைந்துள்ளன. ஆதலின், நாடுகள் கிராமத் தொகை கொண்டோ அல்லது அகல நீள அளவுகொண்டோ ஆதியில் எவராலும் பிரிக்கப்பட வில்லை. பின்னை எப்படி நாடுகள் பிரியலாயின? இயற் கைத் தன்மைகளுக்கேற்ற வண்ணம் நாடுகள் பிரிந்தன என்று கொள்க.

இயற்கை ஒன்றே. ஆனால் அதன் தன்மைகள் பல வகை. இயற்கைத் தன்மைகள் தட்ப வெப்ப நிலைமைக் கேற்றவாறு பலவகைப்பட்டு நிற்கின்றன. ஒரு வகை இயற்கைத் தன்மை எவ்வளவு தூரம் - நான்கு பக்கமும் செல்கிறதோ அவ்வளவு பரப்பைக்கொண்டது ஒரு நாடு. அந்நாட்டில் அடங்கிய கிராமங்களெல்லாம் பெரிதும் ஒரேவித இயற்கைத் தன்மையுடையனவா யிருக்கும். ஒரேவித இயற்கைத் தன்மை கொண்ட கிராமங்களால் ஆக்கப்பெற்றது நாடென்க.

நாட்டாசை வெறியும், வேறு சில கொடுமைகளும் நாடுகளின் இயற்கை வரம்புகட்குக் கேடு விளைத்த லுண்டு. அதனால் குடும்பங்களும் கிராமங்களும் தத்தம் இயற்கை நெறியினின்றும் வழுக்கி விழும் நிலைமையை அடைகின்றன. குடும்பங்களின் நிலையும் கிராமங்களின் நிலையும் குலைந்தால் நாடுகளின் நிலை குலையும் ; அதனால் உலக நிலையுங் குலையும். ஆகவே, அவ்வந்நாட்டு இயற்கை வரம்பு கேடுறாதவாறு காக்கும் பொறுப்பு அவ்வந்நாட் டவ ருடையதாகும்.

உடம்புகளெல்லாம் ஒரே தன்மையனவா யிருக்கின் றனவா ? இல்லை. அதேபோல நாடுகளெல்லாம் ஒரே தன்மையனவா யமைந்தில்லை. ஒவ்வோர் உடம்பும் ஒவ் வோர் இயல்பினதா யிருப்பதுபோல, ஒவ்வொரு நாடும் ஒவ்வொருவித இயல்பினதா யிருக்கிறது. அவ்வவ்வியல் புக்கியைந்த முறையில் அவ்வவ்வுடல் ஓம்பப் பெறுதல் வேண்டும் ; அங்ஙனே அவ்வந்நாடும் காக்கப் பெறுதல் வேண்டும் ; இல்லையேல் சிதைவு நேரும்.

உடம்பைப்போலவே நாட்டையும் ஓம்புதல் வேண்டும். உடலில் ஒரு சிறு விரலுக்கு ஊறு நேர்வதாக வைத்துக்கொள்வோம். ஊறு எதற்கு ? சிறு விரலுக்கு மட்டுமா ? முழு உடலுக்குமா ? ஊறு உற்றது சிறு விரல் தானே என்று வாளா கிடக்கிறோமா ? ஊறு முழு உடலையும் தாக்காமலிருக்குமா ? ஒரு சிறு விரலில் உற்ற ஊறு முழு உடலையுந் தாக்கித் துன்புறுத்தலான், அதைப் போக்க உடனே முயல்கிறோம். அதேபோல நாட்டின் ஒரு மூலையில் ஊறு நேரினும் அதை உடனே போக்க முயலல்வேண்டும் ; இல்லையேல் சிறு ஊறு நஞ்சாகி, நாடு முழுவதும் பரவி நாட்டையே துன்புறுத்துவதாகும்.

ஒரே உடலில் பல உறுப்புக்களிருக்கின்றன. அவ்வுறுப்புக்களெல்லாம் சத்துடையனவாய்த் தத்தம் கடமைகளைச் செய்கின்றன. அவையெல்லாம் சத்துடையனவாய் இயங்கச் சக்தி வழங்குதற்கு உயிர் என்பதொன்றுளது. அவ்வுயிரே ஒரு விரலுக்கு உற்றதை உடல் முழுவதும் உற்றதாக உணர்த்துகிறது. உயிர் நீங்கிவிடின் ஒன்றுந் தெரிவதில்லை. நாடும் உடல் போன்றதாதலின், நாட்டின் உறுப்புக்களினூடே ஓர் உயிர் நிலவிக் கொண்டிருக்கிறது. அதை உணர்ந்து நடப்பதே நாட்டுப் பற்றுடைமையாகும்.

'யான் ஓர் இந்தியன்' என்று ஒருவன் தன்னைச் சொல்லிக் கொள்கிறான். அதன் பொருளென்னை ? 'அவன் இந்தியாவின் ஓர் உறுப்பு' என்பதேயாகும். இந்திய மக்களெல்லாரும் இந்தியாவின் உறுப்புக்களேயாவர். ஒருவர் துன்பம் மற்றவர்க்குந் தோன்றுதல் வேண்டும். இவ்வியல்புடைய நாடே உயிருடையதாகும்.

மற்றையது உயிரற்ற நாடாகும். அது நாடு என்னும் பொருளுடையதாகாது. அது காடு; சுடுகாடு.

நாட்டன்பு என்று பிறநாடுகளைத் துன்புறுத்தலாகாது. நாட்டன்பு என்பது பிறநாடுகளைத் துன்புறுத்துவதன்று. ஒருவன் தன் உடலை யோம்பப் பிறர் உடலைத் துன்புறுத்தவா புகுதல் வேண்டும்? எவ்வியற்கைத் தத்துவம் இவ்வாறு கூறுகிறது? ஆதலின், ஒரு நாட்டுக்கு நலஞ் செய்யப் பிற நாடுகளைத் துன்புறுத்த வேண்டுவதில்லை.

மனிதர் கூடிவாழும் இயல்பினர் என்பது மேலே சுருங்கச் சொல்லப்பட்டது. கூடி வாழும் இயல்புடைய மக்களினின்றுமே நாடு பரிணமிக்கிறது. ஒரு நாடு ஒரு மனிதனைப் போன்றது. மனிதர் எங்ஙனங் கூடி வாழ்கின்றனரோ அங்ஙனமே நாடுகளுங் கூடி வாழலாம். அப்பொழுதே சகோதரநேயம் உலகில் நிலவும்.

இப்போது சாம்ராஜ்யமென்னும் பெயரால் ஒரு நாடு மற்ற நாடுகளைப்பற்றி வதைக்கும் அதர்மம் பரவி வருகிறது. அதனால் உலகில் போராட்டம் பெருகி நிற்கிறது. போராட்டம் இயற்கைக்கு மாறுபட்டதாதலின், அவ்வியற்கையின் அருளால் சாம்ராஜ்ய முறைக்கு மாறுபட்ட சமதர்ம இயக்கம் ஆங்காங்கே உருக்கொண்டு வருகிறது.

ஒவ்வொருவரும் தம்தம் உடலின் இயல்புக்கு இயைந்த உணவு, உடை, ஒழுக்கம் முதலியவற்றைக் கொள்வது முறைமை. அப்படியே ஒவ்வொரு நாடும் தன் தன் இயல்புக்கேற்ற உணவு உடை ஒழுக்கம் முதலியவற்றை உடையதாதல் வேண்டும். அவற்றை ஆங்

காங்கே இயற்கை வழியில் நிலவச் செய்தற்குரிய அரசு, கல்வி, நாகரிகம் முதலியன அமைதல் வேண்டும். மாறுதல் நேர்ந்தால் நாடு பிணியுடையதாகும்.

உடலில் அந்நியம் (Foreign Matter) கலந்தால் அது பிணிபட்டு நோய்வாய்ப் படுகிறது. நாட்டிலும் அந்நியம் நுழைந்தால் அது பிணிபட்டு நோய்வாய்ப்படுவதாகும்.

ஒரு நாட்டில் அயலவர் புகாமலிருத்தல் இயலுமோ? இயலாது. ஒரு நாட்டில் அயலவர் புகநேர்ந்தால் அவர் தமது வழக்க ஒழுக்கங்களைக் கொணர்ந்து அந்நாட்டில் நுழைக்க முயலுதல் கூடாது. அயலவர் நாளடைவில் தாம் புகுந்த நாட்டைத் தாய்நாடாகக் கொண்டு, அதன் இயற்கைவழி வாழ்வு நடாத்த உறுதி கொள்வது அறம். அதனால் நாட்டின் வாழ்க்கை, அரசு, கலை, வழக்க ஒழுக்கம் முதலியன கெடுறு. நாடு பிணியுடையதாகாது என்று சுருங்கச் சொல்லலாம்.

நாடு என்பது ஓர் எல்லைக்கு உட்பட்ட வெறும் நிலப்பரப்பு மட்டுமன்று. நிலத்தின் இயற்கைத் தன்மையினின்றும் முகிழ்த்த வாழ்க்கை, அரசு, கல்வி, தொழில், நாகரிகம் முதலியனவுஞ் சேர்ந்த ஒன்றே நாடு என்பது.

இதுகாறும் பொதுப்படக் கூறப்பெற்ற மக்களின் வாழ்க்கை, குடும்பம், கிராமம், நாடு முதலியவற்றை உளங்கொண்டு, முற்கால இந்தியர் வாழ்க்கை, குடும்பம், கிராமம், நாடு முதலியன எப்படி இருந்தன என்பதை நோக்குவோம்.

## முற்கால வாழ்க்கை

முற்கால இந்தியர் இயற்கையுடன் இயைந்து வாழ்ந்து, இயற்கை இயலை நன்கு உணர்ந்தவராதலால், அவர்க்கு, 'மக்கள் கூடிவாழும் இயல்பினர்' என்ற இயற்கை நுட்பம் எளிதில் விளங்கலாயிற்று. அவர் கூடிவாழும் அறத்தைக் கடைப்பிடித்து ஒழுகினர். முற் கால இந்தியர் சேர்க்கை வாழ்க்கையைக் கொண்டமை யால், அவர்தம் அன்பு, குடும்பமாய், கிராமமாய், நாடாய், உலகாய்ப் பெருகி, உயிர்நலத்துக்கு - விடுதலைக் குத் - துணை புரிந்தது.

மேல்நாட்டு வாழ்க்கை, பிளாட்டோ, அரிஸ்டாட்டல் முதலியோர் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. நம் நாட்டு வாழ்க்கை *ஆதி மநுவின் தத்து வத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது. இரண் டுக்கும் என்ன வேற்றுமை? அத்தத்துவம் வெறும் அரசியல் கலப்புடையது. இத்தத்துவம் தர்மக் கலப் புடையது. தர்மமற்ற அரசியல் மக்களை விலங்காக்கும். இக்கால மேல்நாடு எக்காட்சி வழங்குகிறது? கொலை - கொலைக் காட்சியன்றோ வழங்குகிறது?

மநு என்றதும் சிலர்க்குச் சீற்றமுண்டாகும். 'மநுவாலல்லவோ நம் நாடு இந்நிலைக்கு வந்தது' என்று அவர் வாதப் போர் புரிவர். அன்னார் பலதிற ஸ்மிருதி களை மனங் கொண்டு சீறி வாதப்போருக் கெழுவோ ராவர். ஆதி மநு, ஸ்மிருதி செய்தவரல்லர். அவர் தர்மத்தை அளித்தவர். தர்மத்தை அடிப்படையாகக்

---

*ஆதிமநு ஜைநர் என்று ஜைந நூல்கள் சொல்கின்றன; திராவிடரென்ற சம்பிரதாயமும் உண்டு.

கொண்டே காலதேச வர்த்தமானங்கட் கேற்றவாறு ஸ்மிருதிகள் பிறக்கும். ஸ்மிருதிகள் மாறுந் தகையன. தர்மம் மாறுந் தகையதன்று ; என்றும் ஒரு பெற்றியதா யிருப்பது.

முற்கால இந்தியர் வாழ்க்கையினடியில் *தர்மம் நிலவிக்கொண்டிருந்தது. தர்மம் உலகியலுக்கென நான் காகவும், உயிரியலுக்கென நான்காகவும், பிரிந்து வாழ்க் கையை வளர்த்து வந்தது. தர்மம் உலகியல் வளர்ச்சிக் கென்று மக்களை ஆசிரியரென்றும், அரசினரென்றும், வாணிபரென்றும், தொழிலாளரென்றும் பிரித்தது ; உயிரியல் வளர்ச்சிக்கென்று அவர்களை மாணுக்கரென்றும் இல்வாழ்வினரென்றும், அறவோரென்றும், துறவோ ரென்றும் பிரித்தது. அந்நான்கில் அடங்காத உலகிய லில்லை ; இந்நான்கிலடங்காத உயிரியலில்லை. இப்பிரிவு கள் இயற்கையின்பாற்பட்டன ; மன்பதைக்குரியன. இவற்றைப்பற்றி மயூரமென்னும் மாயவரத்தில் 1927-ம் ஆண்டில் கூடிய 'சமரச சன்மார்க்க மகாநாட்டில்' தலைமையுரையில் சிறிது விரிவாகப் பேசியுள்ளேன். அத் தலைமையுரை, 'தமிழ்த் தென்றல்' என்னும் நூலில் ஒரு பகுதியாகவும், 'சமரச தீபம்' என்னும் நூலில் தனிமையாகவும் வெளிவந்துளது. விளக்கம் அவ்வுரை யில் பார்க்க.

இயற்கைப் பிரிவுகள் தொடக்கத்தில் பிறப்பை யொட்டி நிகழவில்லை ; சிறப்பை அதாவது குணத்தை யொட்டியே நிகழ்ந்து வந்தன ; பின்னே பிறப்பை யொட்டி நிகழலாயின. பிறப்பையொட்டியும் சிலகாலம்

*ஜைநம் தன் கொள்கையைத் 'தர்மம்' என்றே கூறுகிறது.

நன்முறையில் பிரிவுகள் இயங்கிவந்தன. நாளடைவில் பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டன. அதனால் மக்கள் நலனுக்கென்று ஏற்பட்ட பிரிவுகள் தீமைக்குப் பயன் படுவனவாயின. இது தர்மத்திலுள்ள குறை பாடன்று; மக்களிடத்து இடைநாளில் ஏற்பட்ட குறைபாடு. இதுபற்றி, 'இந்நூலில் இடைக்கால இந்தியா', 'இக்கால இந்தியா' என்னும் பகுதிகளில் விரித்துப் பேசுவன். இங்கே விரிவு வேண்டுவதில்லை. முற்கால இந்தியரின் உலகியல் வாழ்க்கையும், உயிரியல் வாழ்க்கையும் தர்மத்தை அடிப்படையாகக்கொண்டு நடைபெற்றன என்று கூறும் அளவில் இங்கே நின்று விடுகிறேன்.

முற்காலத்தில் தர்மம் வாழ்க்கையில் இரண்டறக் கலந்து நின்றமையால், அது குடும்பத்தில் - கிராமத்தில் - நாட்டில்-ஒன்றி, மக்களைத் தன் வழியிற் செலுத்தி வந்தது. அந்நாளில் சட்டங்கள் குடும்பத்தை-கிராமத்தை நாட்டை-ஆளவில்லை. அவற்றை ஆண்டது தர்மம். தர்மத்தின் விளைவு அமைதியன்றோ?

## குடும்பம்

முற்கால இந்தியரின் சேர்ந்த வாழ்க்கை குடும்பமாகப் பரிணமிக்கலாயிற்று. ஒரு பெரியவர் குடும்பத்தின் தலைவராயிருப்பர்; மற்றவர் உறுப்பினராயிருப்பர். தலைவரைச் சர்வாதிகாரச் செருக்கு விழுங்குவதில்லை. அவர் உடலாக நின்று உயிராகிய குடும்பத்தைப் பாதுகாப்பர். தலைவர்க்கும் மற்றவர்க்கும் இடையில் அன்பும் - பயன் கருதாப் பணியும் - நிலவிவந்தன. ஒழுக்கம் குடும்பத்

தின் உயிர் நாடியாய் ஓடிக்கொண்டிருக்கும். அறம், குடும்ப வாழ்க்கையினின்றும் படிப்படியே வளர்ந்துவரும்.

## கிராமம்

இத்தகைக் குடும்பங்களாலாகியது முற்கால இந்தியக் கிராமம். முற்கால இந்தியர் கோலிய கிராம அமைப்பு இன்னும் வீழ்ந்துபடவில்லை. ஆனால் அதன் ஆட்சி முறை வீழ்ந்துபட்டது. முற்கால இந்தியரின் கிராம வாழ்க்கை,வாழையடி வாழையென நீண்டகாலம் வளர்ந்து வந்தது. மற இருள் சூழ்ந்துள்ள இக்காலத்திலும் பண்டைக் கிராம மணம் ஓரோர வழியாதல் கமழ்ந்து கொண்டிருக்கிறது. இதனால் அமைப்பின் பெற்றி இனிது விளங்குதல் காண்க.

முற்கால இந்தியர் கிராமத்தை அமைத்த திறம் வியக்கற்பாலது. அவ்வமைப்பு வகைகளை விரித்துக் கூறப்புகுந்தால் அவைகட்கு இந்நூல் போதாது. முற்கால இந்தியர் வாழ்க்கைக்கு வேண்டுவனவற்றைப் பெரிதும் கிராமத்திலேயே அமைத்துக் கொண்டனர். கிராமத்தின் ஒரு பகுதி மக்கள் உறைதற்கென்று ஒதுக்கப்பட்டது. அப்பகுதியில் மக்கள் வீடு கட்டிக் கொள்வார்கள். வீடுகளிற் பெரும்பான்மையன ஓலைகளால் வேயப்பட்ட கூரை நிலையங்கள். கூரை நிலையங்கள் அடைப்புடையனவாயினும், அவற்றில் ஒளியும் காற்றும் நன்கு உலவும். ஒவ்வொரு வீட்டின் புறக்கடையில் நெல்லி, அத்தி, விளா, முருங்கை, கிச்சிலி, நாரத்தை, எலுமிச்சை, வாழை, பலா, மா முதலிய மரங்கள் பொலிந்துகொண்டிருக்கும்; காய்கறிச் செடி

கள் வைக்கப்பட்டிருக்கும் ; முன்புறத்தில் ஆல், அரசு, வேம்பு முதலிய மரங்கள் நிழல் செய்யும். தெருக்கள் அழகாக அமைக்கப்பட்டிருக்கும். முற்காலக் கிராமத்தில் ஒவ்வொரு குடும்பத்தவர்க்கும் சொந்த வீடு உண்டு ; குடிக்கூலி முறையே கிடையாது.

கிராம எல்லைப்புறங்களை மலையோ காடோ பொழிலோ ஆறோ அல்லது சிற்சிலவோ அல்லது எல்லாமோ அழகு செய்யும். கிராமத்தைச் சுற்றிலும் பெரிதும் வயல்களை நிரம்பியிருக்கும். வெளியிடமும் மேட்டு நிலமும் விடப்பட்டிருக்கும். கேணி குளம் ஏரி வாய்க்கால் முதலியன தண்மை வழங்கும். கோயில் பள்ளி சத்திரம் சாவடி முதலிய அறச்சாலைகளுண்டு. வெளிப்புறத்தில் சுடுகாடிருக்கும்.

கிராமத்தில் பலதிறத் தொழிலாளர் இருப்பர். அவர், ஆசிரியர், உழவர், நெய்வோர், பண்டமாற்று வோர், இடையர், தச்சர், தட்டார், குயவர், வண்ணார், மருத்துவர், கணிதர், புலவர், பல்லியர், சிலம்பர், மல்லர் முதலியோர். இப்பெயர்கள் யாவும் முன்னாளில் தொழில் பற்றி வந்தன ; பிறப்பையொட்டி வந்தனவல்ல ; பின்னா ளில் பிறப்பையொட்டி ஆளப்பட்டன.

ஒரு கிராமத்தில் விளையாத பொருள்கள் மற்றக் கிராமங்களினின்றும் பண்டமாற்று முறையில் தருவிக் கப்படும். பண்ட மாற்றுவோர் பல கிராமஞ்சுற்றி வரு வர். நன்னாட்களில் கிராமத்தார் வேலைசெய்யார். அந் நாட்களில் வீடுகள் அணி செய்யப்படும் ; விழாக்கள் நிகழ்த்தப்படும்; ஊர்வலமும், ஆடல் பாடலும், இன்ன பிறவும் கிராமத்தைத் தெய்வலோகமாக்கும்.

கிராமக் காரியங்களைக் கவனிப்பதற்கென்று ஒரு சபை அமைக்கப்பட்டிருக்கும். அதன்கண் பெரிதும் அறவோர் அமர்ந்து வினையாற்றுவர். அச்சபைக்கு அடங்கிய காவலன், வெட்டியான், தலையாரி முதலியோரிருப்பர். சபை, மன்றத்தில் அதாவது மரத்தடியில் கூடுவது வழக்கம். சில விடங்களில் தேர்தல் வாயிலாகவும் சபை அமைக்கப்படும்.

இன்னும் பழைய கிராமச் சிறப்புகளைப் பலபடக் கூறிச் செல்ல வேண்டுவதில்லை. அவற்றுள் ஒன்றை மட்டும் ஈண்டுச் சிறப்பாக வலியுறுத்த விரும்புகிறேன். *அது கிராமம் கிராமத்தார் சொத்தாகவே பாவிக்கப்

---

* 'Rivers, water - courses, running through the village, ponds large and small, burning - places, were free to all. Every village had a comparatively large space of land round it for pasture. This, as well as lands which were entirely barren and uncultivable, were also common property. On lands which were not cultivated any villager had the right to graze his cattle. On lands which were cultivated after the harvest, before the next cultivating season, the same right of grazing existed. Everybody had an equal right to cut jungle fire - wood for fuel, and take jungle produce for manure, and to take timber for building his house. This right was only limited and generally regulated by the village assembly. The rights in cultivable lands varied with the type of village. The village, or the rights in the village, were vested in the settlers as a collective body. * * * **By this means they effectully excluded the right of any proprietor to any particular spot and established the claim of the general body to the whole village in common'**

—*T. Rangachari*

பட்டதென்பது. கிராமம் கிராமத்தாரின் பொதுவுடை மையா யிருந்தது. அவ்வத்தொழிலாளர் தத்தம் தொழி லைக் குறைவறச் செய்து கிராமத்தை நன்முறையில் ஓம்புவர். கிராமத்தாரனைவரும் ஒரு மனிதனைப் போலக் கடனாற்றுவர் என்று சுருங்கச் சொல்லலாம்.

பொதுவேலைகட்கென்று கூலியாள் அமைக்கும் முறையே அந்நாளில் கிடையாது. பொது வேலைகளை எவ் வித ஊதியமுமின்றிக் கிராமத்தாரே செய்வர். காடளிக் கும் பொருளெல்லாம் பொதுமையிலேயே பயன் பட்டு வந்தன. கால் நடைகள் காடுகளில் மேய்ந்து வரும். எவ் விதக் கட்டுப்பாடுங் கிடையாது. கூடிவாழும் அறமே கிராமமாகக் காட்சியளித்தது.

பொதுமை அற இன்பத்தை நுகர்ந்துவந்த மக்க ளிடை எத்தகை வாழ்க்கை மணங் கமழ்ந்திருக்கும்? அவர்களிடை அன்பு மணங் கமழ்ந்திருக்கு மென்று சொல்லலும் வேண்டுமோ? உண்மையும், நிறையும், ஒப் புரவும், இன்ன பிறவும் மக்கள் வாழ்க்கையின் பயனாக விளைந்து வந்தன.

பிற நாட்டினின்றும் நமதுநாடு போந்து நாட்டைப் பார்வையிட்ட மெகஸ்தினஸ் முதலியோர் பண்டை இந் தியக் கிராமங்களைப் பற்றிச் சில குறிப்புக்கள் வரைந் துள்ளனர். அன்னார், 'ஒவ்வோர் இந்தியக் கிராமமும், ஒவ்வொரு சிறிய சுதந்திரக் குடியரசாயிருக்கிறது' என் றும், 'கிராம மக்கள் உண்மைக்கும் ஒழுக்கத்துக்கும் உறையுளாக விளங்குகிறார்கள்' என்றும் பொறித்த குறிப்புக்களை இக்காலத்தவர் கண்டுகொண்டு பார்ப்பாராக.

முற்கால இந்தியர் தம் கிராமமென்னும் அன்பு நிலையத்துக்குக்கொண்ட அறக்கால் எளிதில் அசைவுறவ

தன்று. எத்துணையோ புயல்கள் அதன்மீது வீசின! அஃது அசையவில்லை. இன்னும் அக்கால் பெரிதும் அசைவுபடாமலே நிற்கிறது.

இந்தியாவில் பலர் படையெடுத்தனர். அவருள் கொலைஞரும் கொள்ளையரும் இருந்தனர். கொலை - கொள்ளைப்படைகள் கிராமங்கள் வழியே செல்ல நேர்ந்த போதெல்லாம் அப்படைகட்குக் கிராமங்கள் இரையாக வில்லை. படைகளின் ஆரவாரம் கிராமங்கட்கு எட்டிய போதே மக்கள் கட்டாகக் கிராமங்களை விடுத்து விலகி நீண்டதூரம் போய்விடுவார்கள். கொடிய படைகள் நீங்கிய பின்னர் மக்கள் தம் தம் கிராமம் போதருவார்கள். படைகள் கொலைபுரிதற்கு மக்கள் அகப்படுவதில்லை; கொள்ளையிடுதற்குப் பொன் பொருள் கிடைப்பதில்லை. கிராமச் செல்வங்களாகிய மலைகளையும் ஆறுகளையும் நிலபுலங்களையும் எப்படைகளால் என்ன செய்தல் முடியும்? சோலைகளும் கூரைவீடுகளும் சட்டிப் பானைகளும் படைகளால் அழிக்கப்படலாம். அவை மீண்டும் எளிதில் அமைக்கப்படலாமல்லவோ? கிராமங்களின் எளிய இயற்கைப் பொதுமை அற வாழ்வைச் சிதைத்தல் எவராலும் இயலாது. முற்கால இந்தியர் கொண்ட கிராமக்கால் உரமானது; மிக உரமானது.

## நாடு

தர்ம மயமான கிராமங்கள் பலசேர்ந்த ஒன்று நாடு என்பது. நாட்டின் பழைய அமைப்புக்கும், இடைக்கால அமைப்புக்கும், இக்கால அமைப்புக்கும் பலதிற வேற்றுமைகள் உண்டு. வேற்றுமைகள் காலப்போக்கைப்

பொறுத்து உறுவன. இரண்டோர் எடுத்துக்காட்டு வருமாறு :—

தென் இந்தியா, பழைய காலத்தில் சேர சோழ பாண்டிய நாடுகளென்று மூன்றால் ஆக்கப்பட்டிருந்தது. இடையில் சோழநாட்டினின்றும் தொண்டை நாடென்று ஒன்று பிரிந்தது. சோழ நாட்டின் ஒரு பகுதியினின்றும்-சேரநாட்டின் ஒருபகுதியினின்றும் - கொங்குநாடென்று மற்றொன்று பிரிந்தது. இவற்றினின்றும் வேறு சில நாடுகளும் பிரிந்தன. வட இந்தியாவிலும் இவ்வாறே பல நாடுகள் தோன்றித்தோன்றிப் பலவகையாயின. (கிராமங்கட்கும் நாட்டுக்கும் இடையே கோட்டம் முதலியன எழுந்த காலமுமுண்டு).

இந்தியா ஒருபோது ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிந்துநின்றது. ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு மன்னரால் ஆளப்பட்டது. அம்மன்னர்க்கெல்லாம் மன்னர் மன்னரென்று (சக்கரவர்த்தி என்று) ஒருவர் இருந்தனர். விவரம் புராணங்களிற் காண்க.

நம் இந்தியா பரதகண்டம் என்று அழைக்கப்படுவது. கண்டமாவது பல நாடுகளைக் கொண்டது. நாடுகள் கிராமங்களால் அமைவன.

கிராமங்கள் ஒரு நாடாகும் ; நாடுகள் ஒரு கண்டமாகும். கிராமம் தோற்றுவாய் ; கண்டம் இறுவாய்.

பரதகண்டம் மற்றக் கண்டங்களைப்போன்றதன்று. பரதம், கண்டம்போல் பரந்து விரிந்ததாயினும் அஃதொரு பெரும் நாடேயாகும். பாரதநாடு - இந்தியநாடு - என்னும் வழக்குகளை நோக்குக. ஒரு பெரும் நாட்டின் இயல்புகளெல்லாம் பரதகண்டத்திற் பொருந்தியுள்ளன.

இமயம் முதல் கன்னிவரை நீண்டிருப்பது பரதம். 'இமசேது பரியந்தம்' என்னும் வழக்கையும் நோக்குக. இமய வாடையும் பொதிகைத் தென்றலும் பரதத்தில் மண்டி இயற்கை ஒருமைப் பாட்டை வளர்த்து வருகின்றன.

'பரதகண்டம் ஒரு பெரிய நாடாயின் நாட்டுக்குரிய இயல்புகள் பல அதன்கண் இருத்தல் வேண்டுமன்றோ? எப்பொழுதேனும் பரதம் ஒருமைப் பாடுடையதாயிருந்ததா?' என்று சிலர் வினவ முற்படலாம். முற்காலப் பரதம் ஒருமைப்பாடுடையதா யிருந்தது என்பதற்குச் சான்றுகளிருக்கின்றன. முதலாவது 'பரதகண்டம்' என்ற பெயரை உன்னுக. பரதன் என்னும் ஒருவனால் கண்டம் முழுவதும் ஆளப் பெற்றமை விளங்குதல் காண்க. வேறு சில சக்கரவர்த்திகளின் பெயர்களைப் புராணங்களிற் காணலாம்.

பழம்பரதம் ஐம்பத்தாறு நாடுகளாகப் பிரிந்திருந்த காலமுண்டு. ஒவ்வொருநாடும் ஒவ்வொருமன்னரால் ஆளப்பட்டு வந்தது. அம்மன்னர்க்கெல்லாம் மன்னர் மன்னர் என்று (சக்கரவர்த்தி என்று) ஒருவர் வீற்றிருந்தனர். பழையகாலச் சக்கரவர்த்திகளின் பெயர்களைப் புராணங்களிற் பார்க்கலாம். சரித்திர காலத்திலும் சிலர் சக்கரவர்த்திகளாக நின்று முற்கால இந்தியாவை ஆண்டனர் என்று தெரிகிறது. அவருள் சிறப்பாகக் குறிக்கதக்கவர் அசோக சக்கரவர்த்தி (272 - 232 கி. மு.)

அசோகர் ஆட்சியில் சேரசோழ பாண்டிய நாடுகள் அகப்படவில்லை என்று சிலர் கூறுப. அது தவறு. சேர சோழ பாண்டியர், அசோகர் அறத்தை எதிர்க்கவில்லை. அவ்வறம் தம் நாடுகளில் வளர அவர் இடந்தந்தனர்.

அசோகர் விரும்பியவாறு அறவுரைகள் பொறிக்கப் பெற்ற தூண்களைத் தம் நாடுகளில் ஆங்காங்கே நாட்ட மூவேந்தரும் ஒருப்பட்டதைச் சரித்திரஞ் சொல்கிறது. இதனால் அசோகர் அற ஆட்சி இந்தியா முழுவதும் நிலவியதென்றே கொள்ளுதல்வேண்டும்.

'முற்கால இந்தியாவின் ஆட்சியில் ஒருமைப்பாடு பொலிந்திருக்கலாம். மக்களுக்குள் ஒருமைப்பாடிருந் ததா? அவர்களுக்கென்று ஒரு மொழி இருந்ததா ? ஒரே வித தர்மம் இருந்ததா ? ஒரேவித நாகரிகம் இருந்ததா ' என்னும் வினக்கள் இந்நாளில் பொறிக்கப்படுகின்றன. முற்கால இந்தியா நீண்டகாலந் தொட்டு அசோகர் ஆட்சிவரை நிலவியது என்று மேலே குறிக்கப்பட்டது. இப்பெருங்கால எல்லையை உளத்திருத்தி, முற்கால இந்தியாவை ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்கினால், அக்கால இந்தியாவின் ஒருமைப்பாடு புலனாகும்.

ஒரு நாட்டின் ஒருமைப்பாட்டை அறிவிக்குங் குறி கள் சில உண்டு. அவற்றுள் ஒன்று மொழி. முற்கால இந்தியா ஒருமொழியைப் பெற்றிருந்ததா ? இல்லையா ? முற்கால இந்தியா தொடக்கத்தில் ஒரு மொழியைப் பெற்றிருந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால் அம்மொழி எது என்னும் ஆராய்ச்சி இன்னும் நிகழ்ந்து வருகிறது. இதுகாறும் நிகழ்ந்த ஆராய்ச்சி, முற்கால இந்தியாவின் தொடக்கத்தில் ' திராவிடம் ' நாட்டின் ஒரு மொழியா யிருந்தது என்றும், அதன் பெருக்குக் குறைந்த பின்னை அதனிடத்தில் ' சம்ஸ்கிருதம்' ஆட்சி பெற்றது என்றும் உணர்த்துகிறது. திராவிடமும் சம்ஸ்கிருதமும் தனித் தனி வேறுபட்ட மொழிகளா அல்லது ஒன்றன் சிதைவு

களா என்று ஒலி நூல் வல்ல அறிஞர் அவற்றை ஆராய்ந்து வருகின்றனர். இருமொழியும் பிராகிருதத்தின் சிதைவுகள் என்று சிலரால் கருதப்படுகின்றன. அஃது உறுதிப்படின், முற்கால இந்தியாவின் பொது மொழி பிராகிருதம் என்றே கோடல் வேண்டும். இப்பொழுது வட இந்தியாவில் பேசப்படும் பலமொழிகள் பிராகிருதத்தின் சிதைவுகள் என்று தெரிகிறது.

திராவிடத்தின் பழைய பெயர் தமிழ். தமிழ் ஒரு பகுதியில் தனித்து நின்றும் - மற்றப் பகுதிகளில் ஏராளமான வடமொழிக் கலப்பால் தெலுங்கு கன்னடம் மலையாளமாகத் திரிந்தும் - போனபின்னரே அது பொதுவாகத் திராவிடம் என்ற பெயர் பெறலாயிற்று. திராவிடம் என்ற ஆட்சி பழந்தமிழ் நூல்களில் இல்லை. பிற்காலத் தமிழ்நூல்களிலேயே அவ்வாட்சி நுழைந்தது. திராவிடப் பெயர் வடமொழி நூல்களிற் காணப்படுகிறது. தமிழ் ஒரு தனிமொழி. தமிழ், தமிழம், தமிளம், திரமிளம், திரவிடம், திரவிளியம், துரளியம் எனப் பலவாறு மருவலாயிற்று. விரிவு ஈண்டைக்கு வேண்டுவதில்லை.

'சம்ஸ்கிருதம்' என்பது, செம்மையாக - நன்றாக - செய்யப்பட்டது என்னும் பொருளையுடையது. அஃது எதினின்றும் செம்மை செய்யப்பட்டது? அது பிராகிருதத்தினின்றும் செம்மை செய்யப்பட்டதென்பது பல அறிஞர் ஒப்பமுடிந்த உண்மை.

சம்ஸ்கிருதம் கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுக்கு முன்னரே இந்தியாவில் நல்லாட்சி பெற்ற ஒரு பெருமொழி. அது, பலதிறக் கலைகள் பிறத்தற்கு நிலைக்களனாக - ஊற்றாக - நிற்கும் பேராற்றல் வாய்ந்தது.

பண்டைநாளில் அப்பெரு மொழியில் பலவகைக் கலைகள் பிறந்தன. பிளாட்டோ அரிஸ்டாட்டல் முதலியோர் காணாத பல நுட்பங்களைப் பண்டைச் சம்ஸ்கிருதக் கலைகள் கண்டன. அவை இன்னும் திகழ்ந்து கொண்டிருக்கின்றன. கிறிஸ்து பிறப்பதற்கு ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னர்ப் பழைய சமஸ்கிருதத்தில் வேதம் எழுதப்பட்டது; அறுநூறு ஆண்டுக்கு முன்னர் இலக்கணம், காவியம், இசை, நாட்டியம் முதலிய கலைகள் சம்ஸ்கிருதத்தில் தோன்றின. முந்நூறு ஆண்டுக்கு முன்னர் அர்த்த சாஸ்திரம் முதலியன அம்மொழியில் பிறந்தன. இடைக்கால இந்தியாவில் தோன்றிய சம்ஸ்கிருதக் கலைகட்கு அளவே இல்லை. இந்நாளிலும் இமயம் முதல் கன்னிவரை சம்ஸ்கிருத வாடை வீசாமலில்லை.

முற்கால இந்தியாவை ஒரே தர்மம் ஒருமைப்படுத்தி வந்ததும் குறிக்கத்தக்கது. இடையிடைச் சில மாறுதல்கள் நிகழ்ந்தன. அவையும் தர்ம மூலத்தில் நிகழவில்லை; முறைகளிலேயே நிகழ்ந்தன. ஒரே தர்மம் நிலவுமிடத்தில் ஒரே நாகரிகம் மருவுதல் இயல்பு.

நீண்டகால முதல் அசோகர் ஆட்சி வரை ஆண்டுகள் ஆயிரக்கணக்கி லாகின்றன. ஆயிரக்கணக்கான ஆண்டு - இடையிடைச் சிற்சில மாறுதல்களுடன் - ஒரேவித தர்மமும் நாகரிகமும் வாழையடி வாழையாக வழிவழியே வளர்ந்துவருதல் அரிதே. மற்ற நாட்டுச் சரித்திரங்களை நோக்கினால் சில நூற்றாண்டுகூட ஒரு தர்மமோ ஒரு நாகரிகமோ வீழ்ந்துபடாமல் நிலவியதாகத் தெரியவில்லை. பழைய பாரத தர்ம விதை விதைத்தவர்

மெய்யுணர்வற்ற மூர்க்கரல்லர் ; அவர் மெய்யுணர்வுடைய முனிவரர். அதனால் அத் தர்மமும், அதன்வழிப் பிறந்த நாகரிகமும் ஆயிரம் ஆயிரம் ஆண்டுக் கணக்கில் வீழ்ந்து படாமல் வளர்ந்து வரலாயின.

அத் தருமமும் நாகரிகமும் இடைக்கால இந்தியாவிலும் சாகவில்லை ; இக்கால இந்தியாவிலும் சாகவில்லை. இக்காலத்தில் அவை சிதைவுற்றுக் கிடக்கின்றன என்றே கூறலாம்.

நீண்டகால முதல் அசோகர் ஆட்சிவரை, ஆயிரக் கணக்கான ஆண்டுகளில், கிராமத்துக்கும்(பாரத) கண்டத்துக்கும் இடையே - ஆட்சிமுறையில் - நாடு நகர அமைப்புக்களில் - சமூகங்களில் - மாறுதல் நிகழ்ந்திருக்கலாம். மாறுதல் இயற்கை. ஆனாலும் கிராம மூல தர்மமும், அதனால் ஆகிய பாரத தர்மமும் பெரிதும் மாறுதல் அடையவில்லை. நீண்ட காலமாக ஒரு கண்டம்போன்ற ஒரு பெரும் நாட்டை வளர்த்துவந்த தருமத்தினின்றும் பிறந்த அரசு, கலை, தொழில், வாணிபம் முதலியவற்றைச் சிறிது தெரிந்து கொள்வது நலம். அது விடுதலைக்கு ஊக்கமூட்டும் ; வழிகாணத் துணையும் புரியும்.

## அரசு

கிராம சபை, படிப்படியே காலத்துக்கேற்ற வண்ணம் அரசாங்கமாக வளர்ந்தது. கிராமக் காவலன் மன்னனானன் ; சக்கரவர்த்தியானன். முற்கால இந்திய மன்னனும் காவலனாக இருந்தே கடனாற்றினன் ; சக்கரவர்த்தியும் காவலனாக நின்றே சேவை செய்தான். அக்கால மன்னரையும் சக்கரவர்த்திகளையும் சர்வாதிகாரப் பேய் விழுங்கவில்லை.

மன்னராட்சி இந்நாளில் தூற்றப்படுகிறது ; அந் நாளில் போற்றப்பட்டது. ஆட்சி முறை எதுவாயினு மாக. அது கோனாட்சியாயினுமாக ; குடிக்கோனாட்சி யாயினுமாக ; குடியாட்சியாயினுமாக. பெயர்களிலே மருட்சிகொள்ளுதல் கூடாது ; ஆட்சிமுறை அவ்வக்கால தேசவர்த்தமானங்கட்கேற்றபடி, சக்கரம்போலச் சுழன்று சுழன்று மாறுதலடைந்தே போகும். ஆட்சிமுறை எத்த கையதாயினும் அதனடியில் ஜனநாயக தர்மமென்னும் உயிர்நாடி ஓடிக்கொண்டிருத்தல் வேண்டும். குடிமக் களுக்கு நலஞ்செய்யுங் கோனாட்சியும் உண்டு ; குடிகளுக் குத் தீமைசெய்யும் குடியாட்சியும் உண்டு. ஏழைத் தொழிலாளியின் நலன் நாடாத குடியாட்சிகள் இன்னுஞ் சில நாடுகளில் நடைபெறுகின்றன.

பொதுமை அறம் பொருளாதார வழியில் எப்பொ ழுதும் நிலவியே தீர்தல்வேண்டும் என்னும் நியதி தேவை யில்லை. அறங்குலைந்து தன்னலம் மேலிடும் இடங்களில் பொருளாதாரத்தில் பொதுமை இருந்தே தீரல்வேண் டும். இல்லையேல் தன்னலச் சாம்ராஜ்யமுறை தலை தூக்கி உலகுக்குக் கேடுசெய்யும். அறங்குலையாது வளர்ந்து பரநலங் கனியும் இடங்களில் பொருளாதாரப் பொது மைப் பேச்சும் வேண்டுவதில்லை.

முற்கால இந்திய மன்னரும், அவரைச் சார்ந்தவரும் அறவழியில் நின்றவர் ; தமது வாழ்க்கையைப் பிறர்க் கென்று அர்ப்பணஞ் செய்தவர். அவர்தம் நெஞ்சில் ஆசைப்பேய் ஆடியதில்லை ; தியாகத் தெய்வமே தாண் டவம் புரிந்தது. அத்தகைய மன்னராட்சியில் பொதுமை தானே புகுந்துகொள்ளும். ஜீவகாருண்யம் நிறைந்த

மக்களிடத்திலிருந்து அரும்பி மலரும் ஆட்சி எத்தகைய தாயினும், அது பொதுமை அறவழியிலேயே வினைகளை ஆற்றுவதாகும்.

நாட்டாசையின்றி நாட்டு நலனை நாடியே ஆட்சி புரிந்த பழைய மன்னர் வரலாறுகள் பல உண்டு. அவற்றில் இரண்டொன்றிலுள்ள அறக்குறிப்புக்கள் வருமாறு :—

அரிச்சந்திரன், ஸ்ரீராமபிரான், புத்தர் பெருமான் முதலியோர் வரலாறுகள் உலகறிந்தன. அரிச்சந்திரன் சத்தியத்தின் பொருட்டு நாட்டை விடுத்தவன் ; ஸ்ரீராமபிரான் தமது ஆட்சியை ஒரு பெண்மணி விரும்பவில்லை யென்று நாட்டைத் துறந்து காட்டுக்கேகியவர் ; புத்தர் பெருமான், 'உலகம் துன்பமயம்' என்று உணர்ந்ததும் அரசை நீத்தவர். இவரனைய வேறு சிலரும் உளர்.

முற்கால இந்தியரின் ஆட்சித் திறங்களைப்பற்றிக் கூறுங் காவியங்கள் பல இருக்கின்றன. அவற்றுள் தலையாயது ஒன்று. அது வால்மீகி இராமாயணம். அதன்கண் அந்நாளைய ஆட்சி நலங்கள் பலபடப் பேசப்பட்டுள்ளன. அவற்றின் சாரம் வருமாறு: †'உள்ள நிறைவும் அறமும் மக்களின் செல்வங்கள் ; தூய்மையும் அடக்கமும் அவர்

---

† 'வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செருந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்.

தெள்வார் மழையுந் திரையாழியு முட்காளும்
வள்வார் முரசம்மதிர் மாநகர்வாழு மக்கள்

களின் அணிகள் ; பிணியும் பசியும் வறுமையும் கவலை யும் பொய்மையும் பொறாமையும் மக்கள் அறியா தன. * * * * * கதவுகளுக்குப் பூட்டிடுதல் இல்லை ; காலதர்கட்கு (ஜன்னல்கட்கு) அடைப்புக்களில்லை. * * * '
—இவற்றைக் காவிய வருணனை என்று சிலர் கருதலாம். ஸ்ரீராமபிரான் வழிவழி வந்தவரென்று சொல்லப்படும் சந்திரகுப்தமௌரியர் காலத்தில் தலை நகராகிய பாடலி புத்திரத்தில் சில ஆண்டு வதிந்த மெகஸ்தினஸ் என்ற கிரேக்க அறிஞர் தாங்கண்டனவற்றை அவ்வப்போது குறித்து வைத்துக்கொண்டனர். அவர்தங் குறிப்புக் களில், 'மக்கள் கதவுகட்குப் பூட்டிடுவதில்லை' என்பதும் ஒன்றாகத் திகழ்கிறது. அதைச் சரித்திர ஆசிரியர் வில் லியம் ஹண்டர் என்பவர் எடுத்துக் காட்டியுள்ளனர். அச்சரித்திரக் குறிப்பும் காவிய வருணனையாகுமோ ? சிந்திக்க.

முற்கால இந்தியாவில் 'மக்கள் கதவுகட்குப் பூட் டிடுவதில்லை' என்னுங் குறிப்பு, ஆட்சியிலும் மன்பதை யிலும் அறக் கடவுள் ஒருங்கே கோயில் கொண்டதை உணர்த்துவதென்க.

முற்கால இந்தியாவில் சரித்திரக் காலத்திலே ஒரு ராஜ்யம் எழுந்து நீண்டகாலம் - ஏறக்குறைய நான்கு

---

கள்வா ரிலாமைப் பொருள்கவலு மில்லையாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லைமாதோ.

கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லையவை வல்லரல் லாருமில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்தலாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லைமாதோ' —கம்பர்

நூற்றாண்டு - நிலைத்திருந்தது. அந்த ராஜ்யம் மகதம் என்பது. மகத ராஜ்யத்தில் சில காலம் அறமே ஆட்சி புரிந்தது என்றுகூறல் மிகையாகாது. மகதத்தை வளர்த்த மன்னர் சிலர். அவருள் குறிக்கத்தக்கவர் பிம்பிசாரர் (580—550 கி. மு.), சந்திர குப்த மௌரியர் (327—298 கி. மு.), அசோகர் (272—232 கி. மு.).

பிம்பிசாரருக்கு முன்னரே பரதகண்டத்தின் அறநெறியிலே சிறுசிறு மாசுகள் படரலாயின. பிம்பிசாரர் காலத்தில் அம் மாசுகள் பெருக்கெடுக்கத் தொடங்கின. மாசுகளால் அறநெறி மறையும் வேளையில் அவற்றைப் போக்கி அந்நெறியை விளங்கச்செய்ய ஒரு பெரியோர் தோன்றுவர் என்பது நமது நாட்டு மரபுகளுள் ஒன்று. அதன்படி புத்தர் பெருமான் தோன்றினர். புத்த ஞாயிற்றின் எழுச்சியால் மாசுகள் மறைந்தன; அறநெறி இனிது விளங்கிற்று. தர்ம சோதியே ஒரு வடிவங்கொண்டு உலகிடைத் தோன்றிய பெருமையைப் பிம்பிசாரர் ஆட்சி பெற்றது.

சந்திரகுப்தமௌரியர் காலத்தில் மகதராஜ்யம் பரதகண்டத்தின் எல்லையையுங் கடந்து நீண்டது. அலக்சாந்தரென்ற கிரேக்க மன்னர் இந்தியா போந்து பற்றிய சில இடங்களைச் சந்திர குப்தர் பற்ற நேர்ந்தமையால் மகதம் வடமேற்கிலும் பரவலாயிற்று. காபூல், ஹீரத், காந்தார், பலுச்சிஸ்தான் முதலிய இடங்களும் சந்திர குப்தர் ஆட்சிக்கு உட்பட்டன.

சந்திரகுப்தர் காலத்தில் மேல்நாட்டுத் தொடர்பு - சிறப்பாகக் கிரீஸ் தேசத்துத் தொடர்பு - இந்தியாவுக்கு ஏற்பட்டது. இந்தியா போந்த கிரேக்கரைக் கவனிப்ப

தற்கென்று ஒரு தனி இலாக்கா அரசாங்கச் சார்பில் அமைக்கப்பட்டது. கிரீஸ் தேசத்தினின்றும் மெகஸ் தினஸ் என்ற ஒரு தூதுவர் மகதத்துக்கு அனுப்பப்பட் டனர். அவர் பல ஆண்டு இந்தியாவில் தங்கி அக்கால நிகழ்ச்சிகளை எழுதிவைத்தனர். அவர்தம் எழுத்துக் குறிப்புக்கள் சரித்திர உலகுக்கு விருந்தாயின என்று கூறலாம். மெகஸ்தினஸ் குறிப்புக்களிற் சிலவற்றை நோக்கினுல் சந்திரகுப்தரது ஆட்சியின் மாண்பு ஒரு வாறு புலனுகும்.

இந்தியாவில் அடிமை வாணிபம் காணப்படவில்லை யென்றும், இந்தியர் உண்மையும் நேர்மையும் உடைய வரா யிருந்தனரென்றும், அவர்தம் வாழ்வில் பொய்மை புகுவது அருமையாயிருந்ததென்றும், அவர் வழக்கு களில் பெரிதும் மனஞ்செலுத்துவதில்லையென்றும், பெண் மணிகள் கற்பை உயிரணியாகப் பாதுகாத்து வந்தார்க ளென்றும், ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு குடியர செனப் பொலிந்ததென்றும், மக்கள் கிராமச் சபைக்கும் தலைவர்க்கும் அன்புடன் அடங்கி நடந்து ஒழுங்குமுறை யைக் காத்து வந்தார்களென்றும், அரசாங்கச் சார்பில் பஞ்சாயத்து அமைப்பும் - நகரசபை அமைப்பும் இருந் தனவென்றும், நால்வகைச் சேனையுடன் கடற்படையும் இருந்ததென்றும், ஏற்றுமதி இறக்குமதி நிலையங்கள் அமைக்கப்பட்டிருந்தன வென்றும், சுங்கச் சாவடிகள் இருந்தனவென்றும் அரச இயலுக்குரிய வேறு பல அமைப்புக்களும் பொருந்தியிருந்தனவென்றும் மெகஸ் தினஸ் கூறிச் செல்கிறுர். இவை, சந்திரகுப்தர் ஆட்சி யில் முற்கால இந்தியர் நிலைமையை ஒருவாறு தெரிவிப் பனவாம்.

சந்திரகுப்தர் ஆட்சித் திறத்துக்குப் பெருந்துணை வராயிருந்த அமைச்சர் அர்த்தசாஸ்திரமளித்த கௌடில் யர் என்னும் சாணக்கியர் என்பது சிறப்பாகக் குறிக்கத் தக்கது.

அசோக சக்கரவர்த்தி நாற்பதாண்டு ஆட்சி புரிந் தவர். அவர் சந்திர குப்தர் பேரர். அவர் காலத்திலேயே பரம்பரை தர்மம், பௌத்தப் போர்வையில் முழு உருக் கொண்டு, முற்கால இந்தியாவிலும் வேறிடங்களிலும் தாண்டவம் புரிந்தது.

அசோகர் நினைவெழும்போதே வேறிரண்டு வடிவம் உள்ளத்தில் உடன் தோன்றுகின்றன. ஒன்று ஆதி மநு வின் வடிவம் ; மற்றொன்று புத்தரது வடிவம். இரண்டுக் கும் இடையில் சிங்கநோக்காக நிற்பது அசோகர் வடி வம். இம்மூன்றுஞ் சேர்ந்த ஒன்று பழங்காலப் பாரத தர்ம ஆட்சிக்கு ஓர் அறிகுறியா யிலங்கிய தென்க.

இக்கருத்தை இக்காலச் சரித்திர உலகம் ஏற்குமோ ? ஏலாது. பின்னே வரப்போகுஞ் சரித்திர உலகமாதல் ஏற்குமோ அறிகிலேன். யான் கற்ற அளவில் - கேட்ட அளவில் - இரண்டுஞ் சேர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் திரண்ட அநுபவத்தில் - ஆதி மநு நெறியில் உற்ற இழுக்கைத் தர்மத்தால் போக்கி அந்நெறியைச் செம்மை செய்யப் போந்தவர் புத்தர் என்றே தோன்றுகிறது. எனக்கு இக்கருத்துத் தோன்றுமாறு துணை செய்த நூல்கள் சில. அவற்றுள் ஒன்று, பாபு பகவான் தாஸ் மநுதர்மத்தை ஆராய்ச்சிசெய்து வெளியிட்ட நூலாகும். என்னுடைய ஊகம் தவறாகவுமிருக்கலாம். யான் அகக் கண் திறக்கப் பெற்றவனல்லன்.

மநுவின் பெயரால் பின்னை எத்துணையோ பேர் தோன்றி யிருப்பர் ; அவரால் எத்துணையோ சாஸ்திரங்கள் எழுதப்பட்டிருக்கும். சிலர் திருவள்ளுவர் பெயராலும் திருமூலர் பெயராலும் நூல்கள் எழுதியுள்ளனர். இவர்கள் நூல்களும் ஆதி திருவள்ளுவராலும் ஆதி திருமூலராலுமே எழுதப்பட்டன என்று பொல்லாத உலகம் கொண்டொழுகுகிறது. இஃது உலக இயல்பு போலும்! பழைய உண்மைகள் யாவும் உள்ளவாறே சரித்திர உலகில் படிகின்றன என்று கொள்ளுதலுங் கூடாது. சரித்திரக் காலத்தில் நடந்ததென்று சொல்லப் படும் கல்கத்தா இருட்டறை நிகழ்ச்சி இப்பொழுது சிலரால் மறுக்கப்படுகிறது ; இன்னும் பல நிழ்ச்சிகள் மறுக்கப்படுகின்றன. உண்மை ஆண்டவனுக்கும் அகக் கண்ணார்க்குமே தெரியும்.

ஆதி மநு நெறியில் இரண்டு இயல் இருக்கின்றன. ஒன்று அறம் ; மற்றொன்று அரசியல். இரண்டுஞ் சேர்ந்த ஒன்று மநுநெறி (மநுதத்துவம்) என்பது. சில சமயம் அரசியலினின்றும் அறம் ஒதுங்கிவிடும். அச்சமயம் பெரியோர் ஒருவர் தோன்றிக் காலத்துக் கேற்றமுறையில் அறத்தை நிலைபெறுத்துவர்.

புத்தர் காலத்துக்கு முன்னரே அறம் அரசியலினின்றும் ஒதுங்கியிருக்கும். அறமற்ற அரசு உயிரற்ற உடல் போன்றது. புத்தர் பெருமான் தோன்றி அறத்தை நிலைபெறுத்திச் சென்றனர். அறம் மீண்டும் அரசியலில் நுழைந்து மநுநெறியை விளங்கச் செய்தது. இந்நுட்பம் அசோகர்க்கு விளங்கியிருக்கும். அதனால் அவர் அரசாட்சியில் பௌத்த தர்மத்தைப் புகுத்த

முயன்று செந்நெறியை ஓம்பியிருப்பர். ஆகவே, அசோகர் மநுவைப் பௌத்தக் கண்ணாடியில் கண்டு, உண்மை விளங்கப் பெற்றிருப்பரென்று எனக்குத் தோன்றுகிறது. ஆதி மநுவும் புத்தருஞ் சேர்ந்த ஒருவர் அசோகரென்று கொள்வது நலம். அசோகர் எந்நெறியில் நின்றனரோ எவ்வறத்தைக் கடைப்பிடித் தொழுகினரோ அதைப் பற்றிய கவலை மக்களுக்கு வேண்டுவதில்லை. அவர் ஆட்சியில் மக்கள் அறவொழுக்கத்தில் நின்று, நல் வாழ்க்கை நடாத்தி, இன்பம் துய்த்தது உண்மை. ஆதலின், அசோகர் ஆட்சி இன்றும் போற்றப்படுகிறது.

அசோகரைப் போன்ற மன்னர் மீண்டும் எந்நாளில் தோன்றுவரோ தெரியவில்லை. இக்காலத்துக்கு ஓர் அசோகர் தேவை. இந்நாளில் காரல் மார்க்ஸைத் தந்த தெய்வம் இன்னும் ஏன் அசோகரை அளியாமலிருக்கிறது? அசோகர் வரலாற்றை இளைஞர் பன்முறை படித்துப் படித்துப் பண்பட்டு நாட்டுக்குச் சேவை செய்ய முற்படுவாராக.

நமது நாடு இப்பொழுது ஒருவித விடுதலை பெற்றுள்ளது. அதற்கெனக் கொடி அமைந்துள்ளது. அக்கொடியில் அசோக சக்கரம் பொறிக்கப்பட்டிருக்கிறது. கொடியிலுள்ள தர்ம சக்கரம் ஆட்சியில் - வாழ்க்கையில்- புகுந்தால் இந்தியா முழு விடுதலை எய்தும். அசோகமும் மார்க்ஸியமும் ஒன்றினால் நாடு முழு விடுதலை எய்தல் ஒருதலை.

அசோகர், நாட்டாசை கொண்டோ - பதவி மோகங்கொண்டோ - ஆட்சிபுரிந்தாரில்லை. அறமும் அருளும் - எங்கணும் பரவிப் பெருகுதல் வேண்டும்

என்ற எண்ணத்துடன் அவர் ஆட்சி புரிந்தனர். உலகை அறம் ஆளவேண்டுமென்பதே அசோகரின் வேட்கையா யிருந்தது. அரசின் நோக்கம், இராணுவ பலத்தால் நாடுகளைப் பற்றிச் செல்லாததா யிருத்தல் வேண்டுமென் றும் - தர்ம பிரசாரத்தால் நாடுகளுக்குள் ஒருமைப்பாடு உண்டாக்குவதா யிருத்தல் வேண்டுமென்றும் - மக்க ளிடை அறவொழுக்கமும், தயையும், ஒப்புரவும், நேய மும், தூய வாழ்க்கையும், இன்ன பிறவும் பெருகத் துணை செய்வதாயிருத்தல் வேண்டுமென்றும் - ஒருவர் தங்கொள்கையை நேசிப்பதுபோலப் பிறருந் தங்கொள் கையை நேசிக்க உரிமையிருக்கவும், கருத்து வேற்று மைக்குப் பிணங்கும் விலங்கியல்பு எழாதவாறு காக்கும் பொதுமை பெறவும், சகோதர நேயம் குடும்பத்திலும், குடிமக்களிடத்திலும், அரசிலும் வளரவும், தர்ம போதனை செய்து அப்போதனையைச் சாதனையில் கொணர்வதாயிருத்தல் வேண்டுமென்றும் - அசோகர் கருதினர். அவர் தாங் கருதியவாறே நடந்து தம்மை முதல் முதல் பண்படுத்திக் கொண்டனர்; பின்னை நாட்டைப் பண்படுத்த முயன்றனர்.

அசோகர், அரசாட்சியுடன் தர்மமும் வளரப் பிர சாரஞ்செய்யப் புறப்பட்டனர். அவர் ஒவ்வொரு மாகா ணத்திலுமிருந்த இராஜப்பிரதிநிதி உள்ளிட்ட அரசாங் கத்தினரையெல்லாம் தர்ம பிரசாரஞ் செய்யத் தூண்டி னர். இராணுவப்படைகளும் தர்ம பிரசாரத்தில் ஈடுபட் டன. தர்ம பிரசாரத்துக்கென்றே அரசாங்கத்தில் ஒரு தனி இலாக்கா அமைக்கப்பட்டது.

அசோகர், அறவுரைகளைக் கற்களிலும் கற்றூண் களிலும் பொறித்து அவற்றைப் பலவிடங்களுக்கு

அனுப்பினர். அவை நாட்டில் ஆங்காங்கே பலவிடங் களில் நாட்டப்பட்டன. அவற்றில் சில இன்னுஞ் சில இடங்களில் காணப்படுகின்றன.

அசோகர் ஆட்சியில் ஆங்காங்கே பலதிற அறநிலை யங்கள் அமைக்கப்பட்டன; நீர் நிலைகள் எடுக்கப்பட் டன; மருத்துவச் சாலைகள் நிறுவப்பட்டன; மூலிகை கள் வளர்க்கப்பட்டன; நிழல்தரு மரங்களும் பழச் சோலைகளும் பாதைகளிலும் பிறவிடங்களிலும் வைக்கப் பட்டன.

அஃறிணையுயிர்களும் அசோகர் ஆட்சியில் அன் புடன் நடத்தப்பட்டன. வேட்டை நிறுத்தப்பட்டது. பலி நிறுத்தப்பட்டது. அஃறிணையுயிர்களும் நீர் நிலை களில் நீர் அருந்தும்; மர நிழல்களில் தங்கும்; படுக்கும்; உறங்கும்.

அசோகர் எதையும் வலியுறுத்தலால் நிகழ்த்துவ தில்லை; அன்பால் - அறவுரையால் - நிகழ்த்துவர். அவ ரிடம் அஹிம்ஸை மனமொழிமெய்களில் வளர்ந்தது என்று சுருங்கச் சொல்லலாம்.

அந்நாளில் பொருளற்ற கிரியைகள் பல ஆக்கம் பெற்றிருந்தன. கிரியைகளுக்கு அடிமைப்பட்ட மக்கள் மனம் தர்ம பிரசாரத்தால் மாறுதல் அடைந்தது. கிரியைகளை விட அறவொழுக்கமே விழுமியது என்னுங் கொள்கை மக்களிடைப் பரவலாயிற்று.

தமது நாடு பெற்ற இன்பத்தை மற்ற நாடுகளும் பெறுதல் வேண்டுமென் றெண்ணி, அசோகர் தர்ம பிர சாரத்துக்கென்று, அறவோரைப் பல நாடுகளுக்கனுப் பினர். இலங்கை, பர்மா, சீனம், எகிப்து, சிரியா, மாஸி

டோனியா முதலிய இடங்களில் அறவோர் வாயிலாகத் தர்மம் பரவலாயிற்று.

தர்ம பிரசாரம் எங்கெங்கே சென்றதோ அங்கங் கெல்லாம் அதற்கு வரவேற்பு நடந்தது. தர்மம் எங் கெங்கே பரவிற்றோ அங்கங்கெல்லாம் அசோக ராஜ்ய மும் பரவியதாகக் கொள்க. அசோகர் ஆட்சிக்கு எங்கும் எதிர்ப்பு நேரவில்லை. கொள்ளைக்கு எதிர்ப்பிருக் கும்; கொலைக்கு எதிர்ப்பிருக்கும்; தர்மத்துக்கு எதிர்ப் பிருக்குமோ?

பழம் பாரத தர்மத்துக்கு அசோகர் ஆட்சி ஓர் எடுத்துக்காட்டு.

## கலை

பழைய இந்தியாவில் வாழ்வுக்குரிய கலைகள் படிப் படியே பிறந்தன; வளர்ந்தன. அவை தொகையில் * ஆறு; வகையில் † அறுபத்து நான்கு. அவற்றிற்

* சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந் தோபிசிதம்.

† அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புரா ணம், வியாகரணம், நீதி சாத்திரம், சோதிட சாத்திரம், தரும சாத்திரம், யோக சாத்திரம், மந்திர சாத்திரம், சகுண சாத்திரம், சிற்ப சாத்திரம், வைத்திய சாத்திரம், உருவ சாத்திரம், இதி காசம், காவியம், அலங்காரம், மதுரபாடணம், நாடகம, நிருத்தம், சத்தப் பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அத்திர பரீட்சை, கனக பரீட்சை, இரத பரீட்சை, கச பரீட்சை, அசுவ பரீட்சை, இரத்தின பரீட்சை, பூமி பரீட்சை, சங்கிராமவிலக் கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடணம், வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம், காந்தருவ

சிறந்து விளங்குவன சிலவே. அறம் மலிந்த அரசாட்சியில்-வறுமையற்ற ஆட்சி முறையில் - நல்ல கலைகள் அறிஞர் வாயிலாகப் பிறத்தல் இயல்பு. முற்கால இந்தியாவி லேயே சிறந்த கலைகள் தோன்றின எனில், நம் நாட்டின் தொன்மையை என்னென்று புகழ்வது ?

முற்கால இந்தியரின் கல்விநிலை எப்படி இருந்தது ? அந்நாளில் ஏட்டுக்கல்வி பயில்வோர் தொகை சிறிதாக வும் தொழிற்கல்வி பெறுவோர் தொகை பெரிதாகவும் இருந்தன. அதனால் நாட்டிடை ஒழுக்கமும் அமைதியும் நிலவியிருந்தன. அந்நாளில் ஏட்டுக்கல்வி கட்டாயப் படுத்தப்படவில்லை. கட்டாய அரக்கன் அந்நாளில் தோன்றவேயில்லை. எதற்குங் கட்டாயம் கூடாது. ஏட் டுக் கல்வியே கல்வி என்று கருதல் தவறு. தொழிலுங் கல்வியே. இரண்டும் வாழ்வுக்குத் தேவை. 'ஒன்று உயர்ந்தது - மற்றொன்று தாழ்ந்தது' என்று கருதுவது அறியாமை.

சிலர் மனம் ஏட்டுக்கல்வி மீது செல்லும்; சிலர் மனம் தொழிற்கல்விமீது செல்லும். அவரை இக்கல்வி பயிலுமாறும், இவரை அக்கல்வி பெறுமாறும் வலியுறுத் துவது மூர்க்கமேயாகும். அவரவர் இயல்புக்குத் தக்க கல்வியை அவரவர் பெறுமாறு விடுவதே இயற்கை.

---

வாதம், பைபீல வாதம், கவுத்துக வாதம், தாது வாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாய கமனம், பரகாயப் பிரவேசம், அதிருசயம், இந்திரசாலம், மகேந்திரசாலம், அக் கினித் தம்பம், சலத் தம்பம், வாயுத் தம்பம், திட்டித்தம்பம், வாக் குத் தம்பம், சுக்கிலத் தம்பம், கன்னத் தம்பம், கட்கத் தம்பம், அவத்தைப் பிரயோகம்.

கட்டாயமும் வலியுறுத்தலும் இயற்கையாகா ; இவை செயற்கை. செயற்கை, துன்பம் விளைத்தல் இயல்பு.

முற்கால இந்தியர் இயற்கை நுட்பத்தை நன்கு தெளிந்தவர் ; எப்பொழுதும் ஒழுக்கத்தையும் அமைதியையும் விரும்பியவர் ; அவற்றை நாட்டிடை நிலை பெறுத்த முயன்றவர். அக்கால இந்தியப் பேரறிஞர் மன்பதையில் ஒழுக்கத்தையும் அமைதியையும் நிலை பெறுத்த இயற்கை வழி காண முயன்றபொழுது, இயற்கை அன்னை தனது இன்முகங்காட்டி, 'என் படைப்பில் ஏட்டுக்குரியர் சிலராகவும் தொழிற்குரியர் பலராகவும் தோன்றுவர். என் படைப்புவழி நின்று கல்வி பயில்க. ஒழுக்கமும் அமைதியும் நிலவும்' என்று அருளியிருப்பள். அவள் வழி நின்று பண்டை மக்கள் கல்வி பயின்று வந்தமையால், அவர்கள் வாழ்வில் ஒழுக்கமும் அமைதியும் ஒன்றி நின்றன ; போராட்டம் புகவில்லை. இந்நாளில் இயற்கை நோக்குக்கு மாறுபட்ட முறையில் கல்வி மக்களிடை வளர்ந்து வருதலால், எங்கணும் ஒழுக்கமும் அமைதியுங் குலைந்து போராட்டம் மிகுந்து வீறிடுகிறது.

காவியக் கலையில் இந்தியா பேர்பெற்றது. இந்தியக் காவியங்கள் மலையெனக் குவிந்துகிடக்கின்றன ; கடலெனப் பரந்துகிடக்கின்றன. பழைய இந்தியக் கவிகள் இயற்கைச் சூழலிடை வாழ்ந்தவர்கள். அவர்தம் புலன்களும் மனமும் இயற்கையில் ஒன்றி இயற்கைவண்ணமானவை. இயற்கை மனத்தினின்றுஞ் சுரக்கும் எண்ணங்கள் இயற்கைப் பாக்களாகு மல்லவோ ? இயற்கைப் படங்களே இயற்கைப் பாக்கள் என்பன.

இந்தியக் காவியத்துக்குக் கால்கொண்டவர் எவர்? வால்மீகி என்று இந்தியக் காவிய உலகங்கூறும். வால்மீகி இயற்கைப் பசுமையிடை - பறவைப் பாட்டிடை - வாழ்ந் தவர்; வளர்ந்தவர். அவரே பழைய இந்தியக் காவியத் தந்தை. அவர் வாயினின்றும் பிறந்த இராமாயணம், காவிய உலகுக்கோர் இலக்கியம்; வாழ்வுக்கோர் எடுத் துக்காட்டு; பழம் பாரதத்தின் உயிரோவியம்; இயற்கை நிலையம்; அறத்தின் உறையுள்; சரித்திரக்கூடம்; காதலின் காதல்; வீரத்தின் வீரம். வால்மீகியின் வழி வழித் தோன்றிய சேய்கள் பல.

கி. மு. ஆறாம் நூற்றாண்டிலேயே பதினைந்து வித இலக்கணங்கள் தோன்றின என்று சரித்திர ஆசிரி யன்மார் கூறுகின்றனர். அந் நூற்றாண்டுக்கு முன்னரே பல நற்காவியங்கள் நாட்டிடை மலிந்திருத்தல் வேண்டும். இந்தியக் காவிய உலகின் தொன்மையை என்னென்று கூறுவது?

ஓவியம் காவியம் போன்றதே. காவியமும் இயற் கைப் படம்; ஓவியமும் இயற்கைப் படம். இயற்கைக் கூறுகள் காவியத்தில் ஒருவிதமாகவும் ஓவியத்தில் வேறு விதமாகவும் இறக்கப்படும். இறக்கப்படும் விதத்தில் இரண்டுக்கும் வேற்றுமை உண்டு. பொருட் பயனில் இரண்டுக்கும் வேற்றுமை இல்லை. ஓவியம் காவியமே; காவியம் ஓவியமே.

பாரதமாதாவே ஓர் ஓவியம். மலைமுடியும், ஆற்றணி களும், பசும்போர்வையும், நீலக்கடலுடையும் கொண்ட ஓரழகிய வடிவம் ஓவிய மன்றோ? தாயின் ஓவிய இயல் அவள் கருவிடைத் தோன்றும் சேய்களிடத்திலும் அமைதல் இயல்பன்றோ?

இந்தியா ஓர் ஓவியக்கூடம். எவ்வோவியத்தை ஈண்டு எடுத்துக்காட்டுவது? பல தோன்றித் தோன்றி மறைகின்றன. ஒன்று நினைவில் உறுத்து நிற்கிறது. அஃது எது? அஃது எல்லோரா.

எல்லோரா, *இமயக் கொடியில் பொலியும் ஒரு வெள்ளிய மலரின் ஓவியம். அவ்வோவியத்தைக் காண்போர், 'அது மனிதனால் செய்யப்பட்டதா? தெய்வத்தால் செய்யப்பட்டதா?' என்று ஐயுறுவர். ஒரு பெரும் பாறை, எல்லோரா ஓவியமாக அமைந்துள்ளது. அதை வடித்த ஓவியரே, அதைப் பார்த்துப் பார்த்து, 'இஃது என்னிடத்தினின்று முகிழ்த்ததா' என்று ஐயுறுவாராம். இதையொட்டி ஓர் அற்புதக் கதையும் வழங்கப்படுகிறது. 'ஓவியத் தெய்வமே ஒரு சிற்பனுருக்கொண்டு எல்லோராவை அமைத்ததுபோலும்' என்று பேசுவோரு முளர்.

எல்லோராவை யொத்த ஓவியங்கள பலப்பல பாரதத்தை அழகு செய்கின்றன. பழைய இந்தியர் கோயில்களில் உயிரோவியங்கள் பல இன்னுங் காட்சி யளித்துக் கொண்டிருக்கின்றன.

பழைய இந்திய ஓவியங்களை எடுத்த அறிஞர், பள்ளிகளில் பணந்தந்து படித்துப் பட்டம் பெற்றவரல்லர்; பிற நாடு சென்று தேர்ச்சிபெற்று வந்தவரல்லர். ஏட்டுப் படிப்பில் அவர் நாட்டஞ் செலுத்தியதில்லை. முன்னாளில்

---

* 'நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளி ராக எழுந்ததோர்
உலக மென்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை'—சேக்கிழார்

ஓவியக்கலை எப்படி வளர்ந்தது? அது வழி வழியே வளர்ந்து வந்தது. பழைய இந்திய ஓவியர் எவ்வழியில் காவியப் புலவோர்க்குக் குறைந்தவராவர்? முன்னுக. தொழிற் கல்வியின் மாண்பு என்னே! என்னே! மற்று முள்ள தொழிற் கல்வித் துறைகள் பலவும் வழி வழிப் பிறந்து வளர்ந்தனவே.

இந்திய இசைக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ வேறு ஒரு நாட்டு இசை இன்னும் தோன்றவில்லை; இனியும் தோன்றுதென்றே கூறலாம். இந்தியாவின் தட்ப வெப்ப இயற்கை நிலை இசைவளர்ச்சிக்குத் துணை செய்யும் சீர்மையது. அதனால் இந்தியமக்கள், சரித் திரக் காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இசையின் எல்லையைக் காணும் பேறுபெற்றார்கள்.

இப்போது பலதிறக் கலை வளரும் இடம் மேல்நாடு என்று எவருங் கூறுவர். ஆனால் அந்நாட்டிலும் இசைக் கலை இன்னும் ஓங்கி வளராது ஓரிடத்தில் தேங்கியே நிற்கிறது. காரணம் என்னை? மேல்நாட்டின் இயற்கை நிலையே காரணம். மேல் நாட்டில் குளிர் அதிகம். குளிர் மிகுந்த நாட்டில் இசை வளர்ச்சி ஓரளவிலேயே நின்று விடும்.

மேல்நாட்டு இசையும் இசைக்கருவிகளும் புறக் கருவி கரணங்களில் மட்டும் நுழைந்து கிளர்ச்சியுண்டு பண்ணும்; அகக்கருவி கரணங்களில் நுழைந்து அமைதி யுண்டுபண்ணு; சில சமயம் அவை வெறியை எழுப்பி விடும்.

மேல்நாட்டின் இயற்கை, தத்துவங்களிலெல்லாம் ஊடுருவிச் சென்று அவற்றை ஆய்தற்கு மக்களை விடுவ

இல்லை. மேல்நாட்டார் பெரிதும் ஐந்து பூதங்களையே ஆய்ந்து ஆய்ந்து, அவற்றிலுள்ள சக்திகள் சிலவற்றைக் கண்டு கண்டு, அவற்றைப் போருக்கும் கொலைக்கும் பயன்படுத்தி வருவது கண்கூடு. ஐம்பூதங்கட்கு மேலுள்ள தத்துவ நுட்பங்களைக் காணும் பேற்றை மேல்நாட்டுச் சகோதரர் பெறுவாராயின், அவர் பூத சக்திகளைத் தவ்றான வழியில் பயன்படுத்த முற்படமாட்டார்.

நம் நாட்டார் தத்துவங்களையெல்லாம் ஆய்ந்து, அவற்றிலுள்ள பல நுட்பங்களைக் காணும் பேறு பெற்றவர். நம் நாட்டார் கண்ட தத்துவ நுட்பங்கள் பல படக் கிடக்கின்றன. அவற்றைத் தத்துவ நூல்களிற் காண்க. எடுத்த பொருளுக்கேற்பச் சுருங்கிய முறையில் இரண்டொன்றை ஈண்டுக் குறிக்கிறேன்.

தத்துவமென்பது மாயா காரியம். மாயையே இயற்கை. இயற்கை, இறைவனது உடல் - போர்வை. இறைவனுக்கு இருவித நிலையுண்டு. ஒன்று இயற்கையை உடலாக் கொண்டது; மற்றொன்று இயற்கையைக் கடந்து நிற்பது. இயற்கையின் கூறுகளாகிய தத்துவங்கள் முப்பத்தாறு. அவை பிருதிவி முதல் நாதமீறாயிருப்பவை. இயற்கையின் எல்லை முடிந்த இடம் நாதம். நாதத்துக்கு அணித்தே ஒளிர்வது தனித்த இறை. நாதம் இறைக்கு மிக அணுக்கமாய் இறுதிப் போர்வையாயிருத்தலான், அதை * நாதப்பிரமமென்றும் ஆன்றோர் கூறிப் போந்தனர். அந்நாதமே இசையின் மூலம்.

---

* 'ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய்
என்னுடைய தோழனுமாய்' —சுந்தரர்

இசை, நாதத்தின் வாயிலாக எல்லாத் தத்துவங்களி லும் கலந்து நிற்பது. அவ்வத்தத்துவத்தில் நின்று இசை எழும்போது, அஃது அவ்வத்தத்துவ சொரூபமாகவே பயன் விளைக்கும். அதன் சுய சொரூபம் நாதத்திலேயே விளங்கும். நாதம்வரை சென்ற மக்களே இசையின் முழு நுட்பமுணர்ந்தவர்களாவார்கள்.

இசை மூலமாகிய நாதங் கண்டு, இசையின் எல்லை யைக் கண்டவர் முற்கால இந்தியர். குளிர் நாட்டவர் அவ்வளவு தூரஞ் செல்ல அந்நாட்டின் இயற்கை அவரை விடுவதில்லை.

நம் முன்னோர் நாதத்தில் இசை நுட்பம் கண்டவ ராதலின், அவரிடத்திருந்து ஏழிசையும், யாழ் குழல் என்ற இசைக் கருவிகளும் பிறந்தன. யாழுங் குழலும் விலங்குகளையும் வயப்படுத்தும் நீர்மையன; மனிதரிடத் துள்ள விலங்கியல்புகளைக் கல்வி யொழிக்குந் தன்மையன. கண்ணபிரானும் ஆனுயரும் இசை முழக்கியபோது, பலவித விலங்குகளெல்லாம் தங்களை மறந்து - பகை மையை மறந்து - ஒன்றாகி, இன்பம் நுகர்ந்ததை நமது நாட்டு நூல்களிற் காண்க. தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய ‘கருணாமிர்த சாகரம்’ என்னும் நூலில் முற்கால இந்தியரின் இசைநுட்பங்கள் பேசப்பட்டுள்ளன.

நமது நாட்டு இசை, நாத தத்துவத்தினின்றும் தோன்றிய ஒன்றாதலானும், அத் தத்துவத்துக்குமேல் வேறு தத்துவம் இன்மையானும், அதைக் கடந்து சாந்தத் தெய்வம் விளங்குதலானும், அது தன்னை முழக்கு வோரையும் கேட்போரையும் சாந்தத்தில் திளைக்கச் செய்யும். எத்துணையோ யோகியர், எத்துணையோ யாண்டு,

தவங்கிடந்தும் அடைய இயலாத சாந்தநிலையை, நமது நாட்டு நல்லிசை எளிதில் கூட்டவல்லதெனில், அதன் மாண்பை விரித்து விரித்துக் கூறுதல் வேண்டுங்கொல் ?

கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டு நூற்றாண்டுக்கு முன்னரே முற்கால இந்தியர் நாதம் காற்றலையில் தோன்றுகிறதா ஆகாய அலையில் தோன்றுகிறதா என்ற ஆராய்ச்சியில் தலைப்பட்டனரென்று சரித்திரஞ் சொல்கிறது.

நாட்டியம் இசையுடன் தொடர்பு கொண்டது. இசையின் உணர்ச்சியை வெளிப்படுத்துவது நாட்டியம். நமது நாட்டுப் பரதநாட்டியத்தால் ஒவ்வொரு நாடி நரம்பும் ஒவ்வோர் உறுப்பும் பயிற்சி பெறும். அந்நாட்டியம் தன்னைப் பயில்வோரிடம் பிணி அணுகாதவாறு காத்து வரும் ; உடலில் அழகொழுகச் செய்யும். இந்திய நாட்டியக் கலை கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே பண்பட்டு வளம் பெற்றிருந்தது. இன்னும் அஃது ஆட்சியிலிருந்து வருதல் அதன் மாண்பை உணர்த்துவதாகும்.

நாடக சாஸ்திரம், சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் நாடகமேடை பேசப்படுகிறது. அவ்வமைப்பு முதல் முதல் தொடங்கப்பெற்ற காலத்தை அறிஞர் துருவித் துருவி ஆராய்ந்தனர் ; கி. மு. முந்நூறு ஆண்டு என்ற முடிவுக்கு வந்தனர். சோட்டா நாகப்பூரிலே அரங்கமலையிலே மண்ணில் புதைந்து கிடந்த ஒரு நாடக நிலையம் அணித்தே காணப்பட்டது. அதன் வயது கி. மு. இரண்டாம் நூற்றாண்டு என்று சொல்லப்படுகிறது. அந்நிலையத்தில் 'நாடக சாஸ்தி'ரத்திலுள்ள இயல்கள் பொலிதருகின்றன. ருக் வேதம், பாணினி முதலிய பழைய நூல்களிலும் நாடகக் குறிப்

யுக்களுண்டு. சாகுந்தலம், மிருச்சகடிகம் முதலிய நாடகக் காவியங்களின் மேன்மையை என்னென்று வருணிப்பது? இந்திய நாடகக் கலை மற்ற நாடுகளின் நாடகக் கலைக்கு வழிகாட்டி என்று சரித்திர உலகம் சாற்றும்.

## கணிதம்

கணிதத்துக்குத் தாயகம் நமது இந்தியா என்று இறுமாந்து கூறலாம். நமது நாட்டுக் கணிதக் கலை அராபியாவுக்குச் சென்றது. அங்கிருந்து அது மேல் நாடு போந்து வளர்ந்தது.

நமது நாட்டில் எண் சுவடி, நல்லிலக்கம், பொன்னிலக்கம் முதலியன எந்நாளில் தோன்றினவோ தெரியவில்லை. போதாயனக் கணிதம் கி. மு. எட்டாம் நூற்றாண்டில் தோன்றியது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் ஆபஸ்தம்பம், கத்யாயனம் முதலியன வெளி வந்தன. இவை கோணங்களின் இயல்களை விளக்குவன. ஆரியபட்டர் என்றொரு பேர்பெற்ற வான நூலாரை நமது நாடு ஈன்றது (476 கி. பி.). முதல் பாஸ்கரரும் (522 கி. பி.) இரண்டாம் பாஸ்கரரும் (1114 கி. பி.) பாஸ்கரர்களாக விளங்கினர். பின்னவரால் ‘லீலாவதி’ என்ற சீரிய கணிதம் யாக்கப்பட்டது. இவர் பின்னை தோன்றியவர் சிலர்.

இந்திய சோதிடக்கலை தொன்மை வாய்ந்தது. சோதிடக்கலை இந்தியாவினின்றும் கிரீஸ் சென்றதென்றும், கிரீஸினின்றும் இந்தியா வந்ததென்றும் சொல்லப் படுகின்றன. இதுபற்றிய ஆராய்ச்சி இன்னும் முற்றுப் பெறவில்லை. இதுவரை எழுந்துள்ள ஆராய்ச்சிகளையும்,

கண்டுள்ள முடிபுகளையும் சிந்தனை செய்தால், சில நுட்பங்கள் இந்தியாவினின்றும் கிரீஸுக்குச் சென்றிருக்கலாமென்றும், சில நுட்பங்கள் கிரீஸினின்றும் இந்தியாவுக்கு வந்திருக்கலாமென்றும் விளங்குதல் பெறலாம்.

சோதிடக்கலை இந்நாளில் மேல்நாட்டில் நன்கு பெருகி வளர்ந்து வருகிறது. கோள்களின் நிலைகள் செவ்வனே கணிக்கப்படுகின்றன. ஆனால் பலன் சொல்வதில் இன்னும் மேல்நாட்டார் பண்படவில்லை. இக்காலக் கணித ஞானமில்லாத கிராமச்சோதிடன் சொல்லும் பலனில் பெரிதும் தவறுதல்நேராதிருப்பதுகருதற்பாலது.

கிறிஸ்து பிறப்பதற்கு எத்துணையோ ஆண்டுகட்கு முன்னரே இந்தியாவில் மருத்துவக் கலை மருவலாயிற்று. இந்திய மருத்துவத்தில் சத்திரமும் உண்டு ; மருந்தும் உண்டு.

சத்திரவித்தை இந்தியாவினின்றும் மேல் நாட்டுக்குச் சென்றது. இதனை ஜெர்மென் மருத்துவ அறிஞர் சிலர் ஏற்றுக்கொண்டுள்ளனர். இந்தியா ஏறக்குறைய ஆயிரம் ஆண்டாகத் தனது இயற்கை உரிமையை இழக்க நேர்ந்தமையான், இந்தியச் சத்திர வித்தை மேலும் மேலும் ஓங்கா தொழிந்தது. பழைய வழியில் சத்திரஞ் செய்வோர் இன்னும் ஈங்கொருவராக - ஆங்கொருவராக- இருக்கின்றனர். சுதந்திர மேல்நாட்டில் அவ்வித்தை மேலும் மேலும் வளர்ந்தே செல்கிறது.

மருந்தில் இன்னும் மேல்நாடு இந்தியாவுக்கு ஒப்பாகவும் வரவில்லை என்று கூறலாம். தொழுநோய் (குஷ்டம்), என்புருக்கி (க்ஷயம்), நீரிழிவு (மதுமேகம்) முதலிய பெருநோய்களை முற்றும் - அறவே - போக்க வல்ல

மருந்து இன்னும் மேல்நாட்டு மருத்துவத்தில் கருக் கொள்ளவில்லை. அப்பெரு நோய்களை அறவே போக்க வல்ல இந்திய மருந்துகள் இந்நாளிலும் கிடைக்கக் கூடியனவாயிருக்கின்றன. அம்மருந்துகளைச் செய்யும் மருத்துவர் தொகை நாளுக்குநாள் சுருங்கி வருவது வருந்தத்தக்கது.

முற்கால இந்திய மருத்துவம் இரு கிளையாகப் பிரிந்துநின்றது. ஒன்று சித்தமுறை; இன்னொன்று ஆயுள் வேதமுறை. முன்னையது பெரிதும் முரிந்து பண்பட்ட ரசகந்த பாஷாணங்களால் ஆவது; பின்னையது பெரிதும் மூலிகைகளால் ஆவது. இரண்டும் இன்றி யமையாதன.

பழங்கால இந்திய மருத்துவத்தில் ஒரு தனிச் சிறப்பிருக்கிறது. அது நாடிபார்த்து நோய்களின் தன்மையை அளந்து கூறுவது.

இந்திய மருத்துவம் இன்று உண்டானதன்று; நேற்று உண்டானதன்று. அஃது அதர்வ வேதத்தில் விளங்குஞ் சிறப்புப் பெற்றுள்ளது. அதர்வ வேத காலம் 800 கி. மு. என்று இக்கால ஆராய்ச்சியாளர் கூறு கின்றனர். முற்கால இந்திய மருத்துவத்தின் தொன்மை, சிறப்பு முதலியன *பி. ஸி. ரே. எழுதிய ஹிந்து மருத்துவ நூலில் விளக்கப்பட்டுள்ளன.

கி. மு. நாலாம் நூற்றாண்டிலேயே இந்திய அரசியற் கலைகளும் பொருளாதாரக் கலைகளும் யாக்கப்பட்டன.

பழங்கால இந்தியரால் சமயக்கலை மிக ஊக்கமுடன் வளர்க்கப்பட்டது. அவர் இயற்கை இயலை-உயிர் இயலை-

---

* History of Hindu Chemistry.

இறை இயலை - ஆராய்ந்தனர்; அவற்றின் உண்மையை யும் படிப்படியே கண்டனர். இயற்கை - உயிர் - இறை ஆகியவற்றின் ஆராய்ச்சியும், தெளிவும் பண்டை இந்தியரிடைச் சமய ஒழுக்கத்தைப் புகச் செய்தன.

பழைய இந்தியர் சமயம் எது? அதன் நிலை எப்படி யிருந்தது? இவை சிக்கலான கேள்விகள். இவைகட்குப் பலர் பலவாறு விடை இறுப்பர்.

சமயம் இந்தியாவின் உயிர்; மற்றவை உடல் - உறுப்புக்கள். இந்தியாவின் கல், மண், புல், புழு முதலிய எல்லாஞ் சமயக்காட்சி வழங்கிய காலமுண்டு. இந்தியச் சமயம் உலகுக்கு இமயமாயிற்று; கங்கையாயிற்று. இமயமும் கங்கையும் சமயக் குறிகள்.

முற்கால இந்தியரின் சமயக் கலைகள் எவை? சித்த நூல்களும், ருக்வேதமும், பிறவுமென்க. பழஞ்சித்த நூல்களில் பல மறைந்தன.

சில நாட்டார் தத்துவத்தை (Philosophy) வேறாகவும், சமயத்தை (Religion) வேறாகவும் பிரித் துக்கொண்டனர். இந்திய முனிவரர் இரண்டையும் ஒன்று கப் பின்னிவிட்டனர். அவர்தம் மூளைகள் சமயத் தத்து வங்களை ஆராய்வதிலேயே பெரிதும் உழைத்தன.

முற்கால இந்தியச் சமயம் சார்வாகக் கால்கொண்டு, சாங்கியமாயெழுந்து, வேதாந்த சித்தாந்த உச்சிகண்டது. உலகிடைக் கண்டங் கண்டமாக உள்ள சமயங்களை யெல்லாம் பழைய இந்தியச் சமய ஒருமையில் காணலாம். நல்லது எதையுந் தள்ளும் இயல்பு முற்கால இந்தியச் சமயத்திலில்லை. சமயத் தத்துவங்கட்கெல்லாம் உறையுள் இந்தியா என்று அறிஞர் கூறுப.

அக்கால இந்தியர் பெரிதும் சமயத் தத்துவ உலகில் உழைத்து உழைத்துப் பலவகைத் தத்துவ நுட்பங்களை எற்றுக்கு உதவினர் என்று சிலர் கருதலாம. இந்திய முனிவரர் முக்கால ஞானிகள். காலதேச வர்த்தமானங் கள் என்றும் ஒரு தன்மையனவாயிரா என்பதும், அவை மாறி மாறிச் சுழன்றுகொண்டே போகும் இயல்பின என்பதும் பழங்கால முனிவரர்க்குத் தெரியும். காலதேச வர்த்தமானப் புயலில் அகப்பட்டுச் சுழலும் மக்கள் கூட்டத்துக்கு ஒவ்வொருபோது ஒவ்வொரு தத்துவம் உண்மையதாகவும் பொருந்தியதாகவும் தோன்றும். மக்களின் அவ்வக்கால உணர்வுக்கு உணவாகும் முறை யில் பழைய முனிவரரால் பலவகைத் தத்துவங்கள் சமைத்து வைக்கப்பட்டன. சார்வாகம் உள்ளிட்ட எல்லாக் கொள்கைகளும் உலகில் நிலவிக்கொண்டிருத்தல் வேண்டுமென்பது இறைவன் திருவுள்ளம். அத்திரு வுள்ளக் குறிப்பை யுணர்ந்து நடந்தவா பழங்கால முனிவரர்.

முற்கால இந்தியர் சமய வாழ்வை வேருகவும் உலக வாழ்வை வேருகவும் தனித்தனியே பிரித்துக்கொண் டாரில்லை. அவர், இன்பப் பேற்றுக்கென்று உலகம் ஆண்டவனல் அளிக்கப்பெற்ற அருட்கொடை என்றே கருதி வாழ்வு நடாத்தினர். அறவழியில் நின்று, அறவழி யில் பொருளீட்டி, அறவழியில் இன்பம் நுகர்ந்தால் விடுதலை தானே உண்டாகும் என்பது அவர் தங் கொள்கை. அவர் தங் கருத்துத் தனியே வீட்டின்மீது சென்றதில்லை; அறவொழுக்கத்தின் மீதே சென்றது. பெண் ஆணை வெறுத்தும், ஆண் பெண்ணை வெறுத்தும் தனித்து

வாழ்வது இயற்கைக்கு மாறுபட்டு நடப்பது என்னும் உண்மை பழைய மக்களுக்கு நன்கு விளங்கியிருந்தது. அந்நாளில் முனிவரரும், 'மனைவி மக்களை நீத்தோடுவது துறவு' என்று கருதினாரில்லை; 'மனமாசென்னுந் தன்னலத்தை நீப்பதே துறவு' என்று அவர் கருதினர். பண்டை முனிவரர் பலரும் மனமாசென்னும் தன்னலத்தை அகற்ற மனைவிமக்களுடன் வாழ்ந்தே உயிர்கட்குச் சேவை செய்தமை உலகறிந்ததொன்று.

அக்கால இந்தியர், இயற்கை வாயிலாகவே இறை யுண்மையை யுணர முயன்றவர்; அவர் தனித்த வாழ்விற் புகாது, பெண் ஆண் சேர்க்கையென்னும் இயற்கை வாழ்வில் ஈடுபட்டவர்; இயற்கையின்பம நுகர்ந்தவர்; அவர் இயற்கையை வழிபட்டவர் என்று சுருங்கச் சொல்லலாம்.

இயற்கை வழிபாடென்பது இயற்கையைக் கை கூப்பித் தொழுது வாளா கிடப்பதன்று. பின்னை என்னை? 'இயற்கை இறை வடிவம்' என்று, அதைச் சிந்தித்தல், கற்றல், கேட்டல், தொழில் செய்தல், தனித்து வாழாது இல்வாழ்க்கையில் நின்றொழுகல், மக்களை ஈன்று உலக வளர்ச்சிக்குத் துணைபுரிதல், விருந்தோம்பி அன்பையும் தியாகத்தையும் பெருக்கல், அன்பாலும் தியாகத்தாலும் மனமாசென்னும் தன்னலத்தை அகற்றல், எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகல் முதலியன இயற்கை வழி பாட்டின் பாற்பட்டன.

முற்கால இந்தியாவில் உருவ வழிபாடு இருந்ததா இல்லையா என்பது உன்னற்பாலது. உருவ வழிபாட் டைப்பற்றிப் பலதிறக் கருத்துக்கள் தோன்றியுள்ளன.

உருவ வழிபாடு புராண காலத்தில் ஏற்பட்டதென்று ஒரு சாரார் சொல்லுப. புராணத்தில் உருவ வழிபாடிருத்தல் வெள்ளிடைமலே. இதிகாசத்தில் உருவ வழிபாடு சொல்லப்படாமலா இருக்கிறது? இதிகாசத்திலும் உருவ வழிபாடு சொல்லப்பட்டே இருக்கிறது. வேதத்தில் 'லிங்கம்' பேசப்படுகிறது. அதனல் வேத காலத்திலும் உருவ வழிபாடிருந்ததென்றே கொள்ளுதல் வேண்டும். காலத்தால் இவையெல்லாவற்றிற்கும் முற்பட்ட 'மொஹெஞ்சொதாரோ - ஹாரப்பா' ஆராய்ச்சியால் உருவ வழிபாடு இருந்ததென்றே தெரிகிறது. அப்பழம் பதிகளின் நாகரிகத்தை உணர்த்தும் வடிவங்களும் பொருள்களும் சில கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று மோனமூர்த்தி வடிவம். அஃது அந்நாளில் உருவ வழிபாடிருந்தமையை வலியுறுத்துவதாகும். 'மொஹெஞ்சொதாரோ-ஹாரப்பா' நாகரிகம் பண்பட்டது. அந்நாகரிகத்தில் உருவ வழிபாடு நிகழ்ச்சியிலிருந்ததெனில், அதற்கு முன்னரும் அவ்வழிபாடு நிகழ்ச்சியிலிருந்து வளர்ந்திருத்தல் வேண்டுமென்பதற்கு விளக்கந் தேவை இல்லை. உருவ வழிபாடு எக்காலத்தில் தோன்றிற்றோ தெரியவில்லை. அக்காலத்தை அறுதியிட்டுக் கூறுதல் இயலாது. முற்கால இந்தியாவில் உருவ வழிபாடு இருந்தது உண்மை. அதை மறுப்போர் சரித்திர உலகில் வாழாதவராவர்.

முதலில் உருவ வழிபாடு மரத்தடியிலே தோன்றியிருத்தல்வேண்டும். இதற்குத் 'தல விருட்சங்க'ளின் சான்றே சாலும். பின்னே ஓவியத்துறை வளர வளரத் திருமாளிகைகள் கட்டப்பட்டன. அந்நாள் தொட்டு உருவ வழிபாடு, திருக்கோயில் வழிபாடு என்ற பெயர் பெற்றது. திருக்கோயில் பழைய இந்தியரின் ஒருமைப்

பாட்டுக்கும் எடுத்துக் காட்டாக நிற்கிறது. சமய மூல தர்மத்தில் ஒருமைப்பாடிருந்தமையால் வழிபாட்டிலும் ஒருமைப்பாடிருந்தது.

கயிலை முதல் கன்னியாகுமரிவரை திருப்பதிகள் உள்ளன. அத்திருப்பதிகளிற் போந்து இறைவனை வழிபடுவதில் பண்டை மக்கள் தலைசிறந்து விளங்கினார்கள். திருப்பதிகள் சென்று திரும்புவதால் உடலுக்கும் நலன் உண்டாகும்; உயிருக்கும் நலன் உண்டாகும். பழைபகால க்ஷேத்திர யாத்திரையால் விளைந்த நலன்கள் பல. அந்நலன்கள் இப்பொழுது விளைவதில்லை. க்ஷேத்திர யாத்திரையின் நோக்கமும் நுட்பமும் இந்நாளில் மறைந்தே போயின. இந்நாளைய நினைவு இங்கே வேண்டுவதில்லை. அதற்குரிய இடம் நூலின் பிற்பகுதி.

கயிலையைத் தொழுவோர் பத்திரியை வணங்குவர்; பத்திரியை வணங்குவோர் காசியைப் பணிவர்; காசியைப் பணிவோர் துவாரகையைப் போற்றுவர்; துவாரகையைப் போற்றுவோர் ஜகந்நாதத்தை ஏத்துவர்; ஜகந்நாதத்தை ஏத்துவோர் காஞ்சியை இறைஞ்சுவர்; காஞ்சியை இறைஞ்சுவோர் இராமேசுரத்தை வழுத்துவர்; இராமேசுரத்தை வழுத்துவோர் கன்னியை வழிபடுவர். இவ்வழிபாடுகளினூடே உள்ள ஒருமைப்பாட்டை நோக்குக. பழைய இந்தியா பல வழியிலும் ஒருமைப்பட்டே வாழ்ந்தது.

## தொழிலும் வாணிபமும்

பழைய கால இந்தியத் தொழில் முறைகளிற் சிறந்தது, உழவு. அதற்கு அடுத்த படியில் நின்றது நெய்வு. இரண்டும் இந்தியத் தாயின் இரண்டு நுரை

சால் போன்றன. மற்றும் பல கிராமத் தொழில்களும் செழுமை பெற்றே விளங்கின.

முற்கால இந்தியா வாணிபத்திலும் பேர் பெற்று விளங்கியது. இற்றைக்குச் சுமார் ஐயாயிரம் ஆண்டுக்கு முன்னர் (3000 கி. மு.) இந்திய வாணிபம் தொடங்கப் பெற்றது. இந்தியக் கப்பல் அராபிக்கடலிலும் மத்திய தரைக் கடலிலும் ஓடின. பழைய இந்தியா பாபிலோன், மெஸபெட்டோமியா, எகிப்து, ரோம், கிரீஸ், ஸிரியா முதலிய நாடுகளுடன் வாணிபஞ்செய்தது. அந்நாடு களுக்கு அரிசி, துணி, சாயம், தந்தம், பொன், தேக்கு, சந்தனம், மயில், யானை, குரங்கு, ஓவியச் சிங்கம் - மான் முதலியவற்றை இந்தியா அனுப்பிவந்தது. ரோமர் கிரேக்கர் முதலியோர் முற்கால இந்தியாவில் தங்கியும் வாழ்வு நடாத்தினர் ; கலப்பு மணமும் நடைபெற்றது. (இவை யாவும் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே நிகழ்ந்தவை என்பதை மறத்தலாகாது).

## நாகரிகம்

முற்கால இந்திய நாகரிகத்தை அறிவிக்கச் சான்று களாக உள்ள கருவிகள் சிலவே. அவற்றுள் பெருந் துணைசெய்ய வல்லதாக இப்போது நிற்பது, 'மொஹெஞ் சொதாரோ - ஹாரப்பா' ஆராய்ச்சி. 'மொஹெஞ்சொ தாரோ-ஹாரப்பா' நாகரிகம் எப்பொழுது தோன்றியது? *அந்நாகரிகம் கிறிஸ்துவுக்கு முன்னர்-வேதகாலத்துக்கு முன்னர் - தோன்றியது. அந்நாகரிகத்தில் இறைவழி பாடிருந்தது ; உழவும் நூற்றலும் வளம் பெற்றிருந் தன ; கல், தந்தம், பொன், வெள்ளி, செம்பு முதலியவற்

* J. Marshall : Mohenjo Daro and the Indus civilization.

றால் ஆக்கப்பெற்ற பொருள்களிருந்தன ; பதின்மூன்று முதல் முப்பதடி வரை அகன்ற பாதைகள் அமைந்திருந் தன ; சாக்கடைகள் நன்முறையில் அமைந்திருந்தன ; நாட்டிய வகைகள் காணப்பட்டிருந்தன ; நீரின் நுட்ப மும் காற்றின் நுட்பமும் உணரப்பட்டிருந்தன.

இன்னும் எத்துணைப் பழம் பதிகள் இந்திய மண் ணில் கிடக்கின்றனவோ ? அவற்றில் என்னென்ன நாகரிக நுட்பங்கள் விளங்கிக் கொண்டிருக்கின்றனவோ ? இந்தியாவின் நாகரிகத் தொன்மையைக் காலவரையிட் டுக் கூறுதல் இயலவில்லை. உலகிலே இந்திய நாகரிகம் தொன்மைவாய்ந்த தென்பது நன்கு விளங்குகிறது.

முற்கால இந்திய நாகரிகம் தன்னைத் தன்னளவில் கட்டுப்படுத்தி நிற்கவில்லை. அது தன் நாகரிகத்தைக் கடல் கடந்துஞ் செல்லச் செய்தது; உலகிற்கு வழங் கியது என்று சுருங்கச்சொல்லலாம். பாபிலோன், எகிப்து, கிரீஸ் முதலிய இடங்களில் பரவிய இந்திய நாகரிகம் உலக முழுவதும் பரவிற்று என்று கூறல் உயர்வு நவிற்சி யாகாது.

பழைய இந்திய நாகரிகம் உலகுக்கு உயிராய் உலகை ஓம்பி வந்தது என்று கூறல் மிகையாகாது. அவ்விந் தியா எங்கே ? அது குலைந்தது. அதனால் உலகம் புரள் கிறது. மீண்டும் பழைய இந்தியா, காலத்துக் கேற்ற போர்வை பூண்டு உயிர்த்தெழுந்தால் இக்கால இந்தியா செம்மையுறும்; உலகம் நலம் பெறும்; எங்ஙனும் அமைதி நிலவும்.

முற்கால இந்தியா எப்படிக் குலைந்தது ? அதை யுணர்தற்கு இடைக்கால இந்தியாவை ஆராய்தல் வேண் டும். இடைக்கால இந்திய நிலைமீது சிறிது சிந்தை செலுத்துவோம்.

## உ. இடைக்கால இந்தியா

முற்கால இந்தியாவினின்றும் இடைக்கால இந்தியா பிறந்தது; பிறந்தபோது நன்றாயிருந்தது; குழந்தைப் பருவத்தில் செழுமையாகவே வளர்ந்தது; நடுவில் சில பருவங்களில் செழுமையாய் வளரும் பேறு பெறவில்லை; சில பருவங்களில் செழுமையுற்றுத் தெளிவுபெற்றது முடிவில் வெம்மையில் வீழ்ந்தது.

### மத்தியம்

முற்கால இந்தியாவின் இறுதியில் அசோகர் ஆட்சி நடைபெற்றமையால், அவ் வாட்சியொளி இடைக்கால இந்தியாவின்மீது சிலகாலம் கான்றிக் கொண்டிருந்தது. பின்னை அவ்வொளி கால்வதைக் குன்றச்செய்யும் வழியில் ஆட்சிமுறைகள் நடைபெற்றன; சமூகங்கள் மாறின. அதனால் மத்திய ராஜ்யத்தின் உயிர்நாடிகளுக்குத் தளர்ச்சி ஏற்பட்டது; நாளடைவில் நாடிகளின் ஓட்டத்துக்குத் தடை நேர்ந்தது.

மாகாணத் தலைவர்களும் மற்றவர்களும் மத்திய ராஜ்யத்தை மதித்தார்களில்லை; பொருட்படுத்தினார்களில்லை; மத்தியத்தின் கட்டளைகளை மீறவும் முற்பட்டார்கள். கட்டுக் குலைந்தது; எங்கணும் கிளர்ச்சிகளும் புரட்சிகளும் எழுந்தன. மத்திய ராஜ்யத்தின் நாலு பக்கத் தொடர்புகளெல்லாம் அறுந்தன; அதன் உறுப்புக்கள் குறைந்தன. அவ்வவ்விடத்தில் ஒவ்வோர் இராஜ்யம் தனித்தனியே கிளம்பிற்று. கிளம்பிய சில வளர்ந்து மறைந்தன; சில உடனே மறைந்தன.

தோன்றிச் சிலகாலம் நின்று மறைந்தனவற்றுள் குறிக்கத்தக்கன கலிங்கம், பழைய ஆந்திரம், கர்நாடகம், இராஜபுதனம் முதலியன. கிரேக்கம் மீண்டும் சிறிது தலைகாட்டிச் சாய்ந்தது. இடையிடைச் சிலர் இளைய இடைக்கால இந்தியாவை நன்முறையில் வளர்க்க முயன்றனர்; முயன்று ஒரோ வழியில் வெற்றியும் பெற்றனர். அவருள் கனிஷ்கர், சமுத்திரகுப்தர், சந்திரகுப்த விக்கிரமாதித்தர், ஹர்ஷர் ஆகிய நால்வரைச் சிறப்பாகச் சொல்லலாம்.

## நால்வர்

கனிஷ்கர் (120 - 156 கி. பி.) பேஷாவரைத் தலைநகராகக் கொண்டவர். அவர் பௌத்த தர்மத்தில் பெரும்பற்று வாய்ந்தவர். கனிஷ்கர் துருக்கிஸ்தானத்திலே சில பகுதிகளையும், சீனத்திலே பல பகுதிகளையும் பற்றி ஆங்காங்கே பௌத்த தர்மத்தை நுழைத்தவர். அவர் காலத்தில் பௌத்த தர்ம வாயிலாகச் சீனத்துக்கும் இந்தியாவுக்கும் பல வழியிலும் அன்புத் தொடர்பு ஏற்பட்டது.

கனிஷ்கர் காலத்தில் பாடலிபுத்திரத்தில் அஸ்வகோஷர் என்ற பௌத்தப் புலவர் ஒருவர் இருந்தனர். அவரைக்கொண்டு பௌத்த நூல்களை எழுதுவிக்க வேண்டுமென்பது கனிஷ்கரின் வேட்கை. அவ்வேட்கையை நிறைவேற்றிக்கொள்ள அவர் பலவகையில் முயற்சிசெய்தனர். ஒன்றேனுங் கைகூடவில்லை. இறுதியில் கனிஷ்கர் பாடலிபுத்திரத் தலைவருடன் போர் புரிந்து அவர் தமது வேட்கையை நிறைவேற்றிக்

கொண்டனர். கனிஷ்கர் காலத்தில் அரிய மருத்துவ நூல்கள் அறிஞரால் எழுதப்பட்டன.

சமுத்திரகுப்தர் (335 - 375 கி. பி.) பல கலைகளில் வல்லவர்; இசைக்கலையில் சிறந்த புலவர். அவர் காலத்தில் இராஜ்யம் சிறிது பெருகிற்று என்று கூறலாம். சமுத்திரகுப்தர் ஹிந்து தர்மத்தில் பற்றுடையவர். ஆனால், அவர் மற்ற மதங்களிடத்தில் வெறுப்போ பகைமையோ கொண்டவரல்லர். இலங்கையில் மன்னராயிருந்த மேகவர்ணர், சமுத்திரகுப்தரிடம் இரண்டு அறவோரை அனுப்பிப், புத்தகயையில் ஒரு பௌத்தமடம் அமைக்கக் கட்டளை பெற்றது ஈண்டுக் குறிக்கத்தக்கது.

சந்திரகுப்த விக்கிரமாதித்தர் (375 - 413 கி. பி.) ஆட்சி நல்லதே. அவர் சம்ஸ்கிருத கலைகள் வளரத் துணை புரிந்தவர். தட்சணத்தை ஆண்ட பிரபாவதி, சந்திரகுப்த விக்கிரமாதித்தரின் புதல்வியாரே. சந்திரகுப்த விக்கிரமாதித்தரைப் பற்றிப் பலபடப் பேசவேண்டுவதில்லை. அவர் ஆட்சியில் பாஹியான் என்ற சீன அறிஞர் இந்தியா போந்து பல இடங்களைச் சுற்றிப்பார்த்து, தாங் கண்ட காட்சிகளை எழுத்து வாயிலாக வெளியிட்டனர். அவ்வெளியீட்டை நோக்குழிச் சந்திரகுப்த விக்கிரமாதித்தரின் ஆட்சித்திறன் நன்கு புலனாகும். பாஹியான் வெளியிட்ட கருத்துக்களின் சாரம் வருமாறு:—

> யான் பாடலிபுத்திரத்தில் ஒரு பௌத்தமடத்தில் தங்கிச் சம்ஸ்கிருதம் பயின்றேன்.
>
> மக்கள் செல்வராய், தூயராய், உரிமையுணர்வுடையராய், இன்ப வாழ்வு நடாத்தியதைக் கண்டேன்.

பாதைகளில் எந்த நேரத்திலும் எவரும் நடக்கலாம். யான் பலவிடங்கள் சென்றேன். என்னை ஒருவருந் தடுத்ததில்லை. கள்ளரால் யான் தாக்கப்பட்டதேயில்லை.

ஆடு மாடு கோழி பன்றிகள் வாணிபத்திற்கென்று வளர்க்கப்படுவதில்லை. ஊன் கடை என் கண்ணில் பட்டதே இல்லை. பெரும்பான்மையோர் சைவ உணவு உண்டதை யான் பார்த்தேன். குடி கிடையாது. வெங்காயம் வெள்ளைப்பூண்டு தின்பவர் சிலராகவே காணப்பட்டனர்.

அறவோர் ஆதரிக்கப்பட்டனர்.

அறச்சாலைகள் பல என் கண்ணைக் கவர்ந்தன. பாதைகளில் தங்குமிடங்களிருந்தன. அரசினராலும் செல்வராலும் இலவச மருததுவச் சாலைகள் நடத்தபபட்டன.

ஹர்ஷர் (606—648 கி. பி.) இந்தியச் சரித்திரத்தில் பேர் பெற்றவருள் ஒருவர். அவர் நாளில் ஹுயூன்ஸியாங் என்ற சீனப் பெரியார் இந்தியா அடைந்து பலவிடம் போந்து பலவற்றைக் கண்டனர். அவரும் தாங் கண்டனவற்றை எழுதிச் சென்றனர். அவற்றின் சுருக்கம் வருமாறு :—

ஹர்ஷர் ஆட்சி நன்முறையில் நடந்து வந்தது. வரிச் சுமை பெரிதும் இல்லை. பெரும்பான்மையோர் தொழில், விவசாயம். வாணிபம் செவ்வனே நடைபெற்றது. ஆற்று வழியிலும் சாலையிலும் சுங்கச்சாவடிகள் இருந்தன. தேர்ச்சி பெற்ற சேனைகளிருந்தன.

ஹர்ஷர் சோர்வில்லாதவர் ; சுறுசுறுப்புடையவர் ; நாட்டின் பல பாகங்களைத் தாமே நேரிற்சென்று பார்த்து நிலைமைகளை யுணர்ந்து வேண்டுவ செய்ய முயன்றவர்.

மக்களிடம் உண்மையும் நீதியும் விளங்கின.

ஹர்ஷர் பௌத்தர். மற்ற மதங்களின் உரிமையில் அவர் குறுக்கிடுவதில்லை.

கனோஜில் ஒருசமயம் மகாநாடு அவரால் கூட்டப்பட்டது. அம்மகாநாட்டைப் பத்தொன்பது மன்னரும், மூவாயிரம் பௌத்த - பிராமண சந்நியாசிகளும், நளந்தா கழகத்தினின்றும் போந்த ஆயிரம் புலவரும் அணிசெய்தனர்.

சில இடங்களில் ஹிந்துமதம் செல்வாக்குப் பெற்றிருந்தது ; சில இடங்களில் பௌத்தம் செல்வாக்குப் பெற்றிருந்தது. நேபாளத்தில் பௌத்தம் மறைந்தே போயிற்று. காசியில் ஹிந்துக்களே ஏராளமாக இருந்தார்கள். பாடலிபுத்திரம் பாழ்பட்டது. கயையில் பிராமணர் மலிந்திருந்தனர். போதியைச் சுற்றியிருந்த பாழிகள் நன்னிலையிலில்லை. ஆப்கன் ஸ்தானத்தில் நுழைந்த பௌத்தம் சிறப்புடன் விளங்கிற்று.

நளந்தா கழகம் கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்தது ; போதனை இடங்கள் நூறு இருந்தன ; ஆசிரியரும் மாணாக்கருமாகப் பதினாயிரம் பேர் இருந்தனர். அதன் காப்புக்கென்று இருநூறு கிராமங்கள் மன்னர்களாலும் மற்றவர்களாலும் விடப்பட்டிருந்தன.

யான் பார்த்த நாடுகளில் எனக்கு இனிமை யூட்டியது தமிழ்நாடு.

ஹர்ஷர் ஐந்தாண்டுக்கு ஒருமுறை பிரயாக்கில் அறவிழா நிகழ்த்துவர். அவ்விழா எழுபத்தைந்துநாள் நடைபெறும். ஐந்து லட்சம் பேர் கூடுவர். முதல் மூன்றுநாள் புத்தர் பெயராலும், சூரியன் பெயராலும், சிவன் பெயராலும் முறையே தானங்கள் வழங்கப்படும். நான்காம்நாள் பதினாயிரம் பௌத்த சந்நியாசிகளுக்குப் பொருள் வழங்கப்படும். ஒவ்வொருவரும் நூறு பொன்னும், ஒரு நல்முத்தும், ஓர் உடையும் பெறுவர். இருபதுநாள் பிராமணருக்கென்றும், பத்துநாள் மற்ற சந்நியாசிகட்கென்றும், ஒரு மாதம் ஏழை எளியவர் அநாதைகட்கென்றும்

ஓதுக்கப்படும். அவர்கட்கு முறை முறையே தானங்கள் செய்யப்படும்.

இக்குறிப்புக்கள் ஹர்ஷர் காலத்திய நிலைமையை உணர்த்துவனவாம்.

## முற்பகுதி

இடைக்கால இந்தியாவின் முற்பகுதியில் மன்னர் ஆட்சியில் கலைகள் உச்சநிலை யடைந்தன என்று கூறல் மிகையாகாது. கலை வளர்ச்சிக்குச் சிறப்பாக இரண்டு வேண்டும். ஒன்று செல்வச் செழுமை ; மற்றொன்று அமைதி. பழைய மன்னர் காலத்தில் செல்வம் உள் நாட்டிலேயே கொழித்துக்கொண்டிருந்தது ; உட்குழப்பம் நிகழ்வதில்லை ; பிறநாட்டுப் படையெடுப்பு முதலியனவும் நேரவில்லை ; மதப்பூசல் விளைவதில்லை ; மதங்களெல்லாம் உரிமை பெற்றே உலவின. இன்னோரன்ன காரணங்களால் நாட்டுக் கலைக்ள் நன்முறையில் வளர்ந்தன.

பல விடங்களில் சிவ - விஷ்ணு - புத்த கோயில்கள் கட்டப்பட்டன. அவை ஓவியக் கூடங்களாகவே அமைக்கப்பட்டன. குகைகள் பலவும் ஓவியங்களாயின. படத்தில் உருவெடுப்பு, பூ வேலை, சித்திர அணிகள் முதலியனவும் வளர்ந்தன.

இசை பலவழியிலும் ஓங்கியது. பலதிற இசைக் கருவிகள் காணப்பட்டன. பரதநாட்டியக் கலை சிறப்புற்றது.

காவியம், கணிதம், மருத்துவம், சோதிடம் முதலியன வளம்பெற்றன. காளிதாஸர் என்ற பெரும்புலவர்

வடமொழிக் காவிய உலகுக்கே விழுப்பம் அளித்த னர். ஆரியபட்டர், வராகமிகிரர், பரமகுப்தர், சரகர், சுசுருதர் முதலியோர் கணிதம், சோதிடம், மருத்துவம் முதலிய கலைகளை வளர்த்தனர். ஜைனப் புலவரும் பௌத்தப் புலவரும் வடமொழிக்குப் போாக்கந் தேடி னர். பாளி மொழியிலும் தத்துவ நூல்கள் வரையப் பட்டன. புராணங்களும் தர்ம சாஸ்திரங்களும் பெரு வாரியாக எழுதப்பட்டன.

அந்நாளில் இந்தியக் கலைகள் பல சீனம், ஜப்பான், கிரீஸ் முதலிய இடங்களிலும் பரவின. இந்தியக் கலைச் செல்வத்தைக் கண்டின்புற உலகின் நாலு பக்கங்களி லிருந்து அறிஞர் இந்தியா போந்ததும் இங்கே குறிக் கற்பாலது.

'அரசு எவ்வழி அவ்வழிக் குடிகள்' என்பது பழ மொழி. இடைக்கால இந்தியாவின் முதற்பகுதியில் வாழ்ந்த மன்னர்களிற் பெரும்பான்மையோர், மதம் - தர்மம் - கலை - முதலியவற்றில் கருத்திருத்தியே ஆட்சி புரிந்தனர். இது சரித்திரத்தால் நன்கு தெரிகிறது. அந் நாளில் மன்னர் மனம் ஒரு மதத்தில் பற்றுக்கொண் டிருப்பினும், அம்மனம் மற்ற மதத்தவரைத் துன்புறுத்த எழுந்ததில்லை. காரணம் அவர் மனத்தில் மதத்துடன் தர்மமும் இரண்டறக் கலந்திருந்தமையே யாகும். அத னால் மக்களிடத்திலும் நல்ல குணங்களும், குணங்களுக் கேற்ற கலைகளும் அரும்பி மலரலாயின.

## பிற்பகுதி

பின்னாளில் கலை இந்தியாவில் கலகம் நுழைந்தது. கலகம் தர்மத்தைச் சாய்த்தது. தர்மச் சாய்வால் மத

வெறி எழுந்தது. கலகம் வெளிநாட்டினின்றும் வர வில்லை. கலகம் பிற்கால மன்னர் மனத்தினின்றும் பிறந் தது. அது நாட்டையே கெடுத்தது.

நாளடைவில் மன்னர் மனோநிலை மாறுபட்டது ; அதற்கேற்ப மக்கள் மனோநிலையும் மாறலாயிற்று. மன் னர் மனம் வெறும் மதப்பித்தில் தோய்ந்தது ; தர்மத் தினின்றும் ஒருவியது. தர்மம் அற்ற மதம் வெறும் பித்தாய் - வெறியாய்ப் போவது இயல்பு. மன்னர் மத வெறியராயினர் ; மக்களும் மத வெறியரானார்கள். வெறிக்கேற்ற கலைகள் பிறந்தன. மதப் பூசல்கள் ஆங் காங்கே தோன்றின ; பரவின.

## மதமா ?

பூசலுக்குக் காரணம் மதங்களின் தத்துவங்களல்ல; மக்கள் மனோ நிலையே யாகும். இதையுணராதார் மதங் கள்மீது பாய்ந்து அவற்றைக் குறை கூறப் புகுகிறார்.

சரித்திரக் கண்கொண்டு மதங்களின் தோற்றங் களைப் பார்த்தால் அவை யாவும் அவ்வக்கால தேச வர்த்த மான நிலைமைகளை யொட்டியே தோன்றின என்பது நன்கு புலனாகும். மதங்களின் அடிப்படை ஒன்றே. மதங்களின் தத்துவ மூலங்கள் ஏடுகளிலுள்ள படியே மக்கள் மனங்களிற் படிந்து செயல்களாக அரும்பினால் போருக்கு இடம் ஏது ?

எம்மதம் தீயொழுக்கத்தை அறிவுறுத்துகிறது ? தீயொழுக்கத்தை அறிவுறுத்துவது மதமாகுமா? ஆகாது. அது மூர்க்கமாகும். மனிதனிடத்துள்ள மூர்க்கத்தைப்

போக்கவே மதம் தோன்றியது. அம்மதத்தை மூர்க்கத்துக்கு இரையாக்குவது அறமன்று.

எந்த மதத்தை ஆராய்ந்தாலும் அதனடியில் அறமிருக்கும்; அருளிருக்கும். இவையற்ற மதமே யில்லை. இவையற்றது மதமுமாகாது. ஆதலின், பூசலுக்குக் காரணம் மதம் என்று கொள்ளற்க. பூசலுக்குக் காரணம் மத தர்மமற்ற மூர்க்கமேயாகும். மூர்க்கத்தை மதமாகக் கோள்வது தவறு.

## மும்மதம்

இடைக்கால இந்தியாவின் முற்பகுதியில் மூன்று மதங்களே பெரிதும் சிறந்து விளங்கின. அவை ஹிந்துவும் ஜைனமும் பௌத்தமுமாம். அம்மூன்றற்கும் அடிப்படையாக நிற்கும் அறம் ஒன்றே. ஓர் அற மன்றம் மூன்று கிளையாகப் பிரிந்ததென்க. ஒவ்வொரு கிளை ஒவ்வொரு விதமாகப் பருத்தது. அடிப்படை அறமே. இதில் ஐயமில்லை. அறம் பின்னாளில் மக்களால் திரிபாகக் கொள்ளப்பட்டது. தவறு, கோளாளரிடத்ததே; அறத்தினிடத்ததன்று. மக்களிடைத் தோன்றிய திரிபுணர்வே இந்தியா உரிமையின் கழுத்தையறுக்குங் கூரிய வாளாயிற்று. இடம் நேர்ந்துழி அதைப்பற்றி விரித்துக்கூற எண்ணியுள்ளேன்.

மக்கள் மனநிலைகளில் திரிபு உண்டாதற்குக் காரணம் பல கூறலாம். எல்லாவற்றிற்கும் வேராக நின்றது ஆட்சி முறையே.

இடைக்கால இந்தியாவில் ஹர்ஷர் ஆட்சிவரை, அசோகர் ஆட்சியின் ஒளி கான்றிக்கொண் டிருந்தமை

யான், சாதிமதப் பூசல்கள் வெளிப்படையாகத் தோன்றி நிகழவில்லை. ஹர்ஷர் அற விழாவில் எல்லாச் சமயத்தவருக்கும் தானம் வழங்கப்பட்டதை மறத்தலாகாது.

அசோகர் ஆட்சியிலிருந்து ஹர்ஷர் ஆட்சிவரை பூசல்கள் வெளிப்படையாகத் தோன்றி நிகழவில்லை என்றே சொல்லலாம். சிறு சிறு பூசல்கள் சிற்சிலவிடங்களில் கனன்றிருந்தன என்பதுமட்டும் சரித்திரத்தால் விளங்குகிறது. கனல் பெருந்தீயாகி எழுநாவிட்டெரியவில்லை. பின்னே படிப்படியே இடைக்கால இந்தியா சாதிமதப் பூசல்களால் எரியுண்டது.

பூசல்கள் எப்படி எழுந்தன என்பதை உணர்தற்கு அக்கால மதங்கள் காலத்துக்குக் காலம் உற்ற நிலைகளை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். அவ் வாராய்ச்சிமீது சிறிது கருத்துச் செலுத்துவோம்.

## ஹிந்து

மேலே குறிக்கப்பெற்ற மூன்று மதங்களில் ஹிந்து மதத்தை முதலில் எடுத்துக் கொள்வோம்.

ஹிந்து மதம் ரிக்வேதத்தை அடிப்படையாகக்கொண்டெழுந்தது; ஆதிமநு தர்மத்தால் வளர்ந்தது. ஹிந்து மதத்தின் உயிர்நாடி சநாதன (அழியாத) தர்மம். அத் தர்மம் தொடக்கத்தில் தொழில் வழியே இயங்கிற்று; பின்னே பிறப்பு வழி இயங்கலாயிற்று. எப்படி?

ஒரு தொழில் செய்வோன் பிள்ளை, பெரிதும் அத் தொழில் செய்யப்புகுவது இயற்கை. இஃது இந்தியக் குடும்ப அமைப்பிலுள்ள பண்புபோலும்! ஒவ்வொரு

தொழிலும் ஒவ்வொரு கூட்டத்தார் வழி வழியே வளர லாயிற்று. ஆசிரியன் பிள்ளை ஆசிரியனாகவும், உழவன் பிள்ளை உழவனாகவும், தச்சன் பிள்ளை தச்சனாகவும், மற்றத் தொழிலாளர் பிள்ளைகள் அவ்வத்தொழில் செய்வோராகவும் வாழ்க்கை நடாத்தல் நேர்ந்தது. இவ்வாறு தொழில்கள், பிறப்பு வழி வழியே வளரும் நிலைமையை அடைந்தன. அதனால் பிறப்பு வழியே வகுப்பு வேற்றுமை கருதும் மனப்பான்மை சமூகத்தில் படிப்படியே நுழைந்தது ; வேரூன்றியது.

ஹிந்து நூல்களில் இருவிதக் கொள்கைகளையுங் காணலாம். ஹிந்து மதத்தில் வகுப்புக்களைத் தொழில் பற்றிக்கூறும் நூல்களும், பிறப்பையொட்டிக் கூறும் நூல்களும் உண்டு. அவ்வக் காலத்தில் அவ்வந்நூல்கள் எழுதப்பட்டன. இருவிதக் கொள்கைகளும் நூல்களிற் பின்னவிட்டுக் கொண்டிருக்கின்றன.

நாளுக்குநாள் பிறப்பு வழி வகுப்பு வேற்றுமை கருதும் கொள்கையே ஆக்கம் பெற்றது. அக்கொள்கை இன்று தோன்றியதன்று ; நேற்றுத் தோன்றியதன்று. அது புத்தர் காலத்துக்கு முன்னரே தோன்றியது. அக்கொள்கையை ஒழிக்கப் புத்தர் பெருமுயற்சி செய்தனர். அவர்தம் முயற்சியாலும் நிலைத்த பயன் விளையவில்லை.

ஹிந்து மன்னர் பலரும் பிறப்பு வழித் தோன்றிய வகுப்பு முறைகளையும், அவ்வவ் வகுப்புக்குரிய தொழின் முறைகள் அவ்வப்படியே நடைபெறுவதையும் பாது

காப்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தனர்; அதையே சிறந்த இராஜ தருமமாகவுங் கருதினர்.

அந்நாளில் பிறப்பால் வகுப்பு வேற்றுமை கொள்ளப் பட்டாலும், அது காரணமாக மக்களுக்குள் பிணக்கு நேரவில்லை. பின்னை பிணக்கு நேர்ந்தது. காரணம் வகுப்புக்களில் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டமையாகும். பிறப்பில் உயர்வு தாழ்வு கருதப்படும் இடங்களில் பிணக்கு நேர்வது இயல்பே.

ஹிந்து தர்மம் பின்னாளில் மூன்று கிளையாகப் பிரிந்தது. ஒன்று தொழில் வழி வகுப்பு வேற்றுமை கொண்டது. இன்னொன்று பிறப்பு வழி வகுப்பு வேற்றுமை மட்டுங்கொண்டது; வேறொன்று பிறப்பில் உயர்வு தாழ்வு கொண்டது. இம் மூன்றற்கும் நூல்கள் ஏற்பட்டன. எக்காலத்திலும் பிராமணரிருந்தனர்.

தொழின்முறைக் காலத்தில் குணத்தினால் பிராமணர் தோன்றி வந்தனர். அறத்தன்மை எவரிடத்திலுண்டோ அவர் பிராமணராகக் கொள்ளப்பட்டனர். அந்தப் பிராமணர் தகைமையை விரித்துக் கூறுதலும் வேண்டுமோ? அக்காலத்தில் பிராமணரென்பவர் தமக்கென வாழாதவராய், பிறர் நலமே கருதுவோராய், நிராசையுடையவராய், முனைப்பில்லாதவராய், நடுநிலையில் நின்று நீதி வழங்குவோரா யிருந்தனர். அவர்தங் குண நலங் கண்டு மக்கள் அவரை அந்தணரென்றும், அறவோரென்றும் போற்றினார்கள். அவர் மாசற்ற தேவரெனத் திகழ்ந்தன ரென்று சுருங்கச் சொல்லலாம். அதனால் அவர் பூசுரர் என்றும் போற்றப்பட்டனர். அவரே சமூக தர்மகர்த்தராகவும் கருதப்பட்டனர். பொன் பொரு

னீட்டாது அறம் வளர்த்த அவருக்குப் பொது மக்கள் அன்புடன் உதவி வந்தார்கள்.

பிறப்பில் மட்டும் வகுப்பு வேற்றுமை தோன்றிய போதும் பிராமணர் தமது இயல்பினின்றும் பெரிதும் பிறழவில்லை ; நல்ல குணமுடையவராகவே அறத்தொண்டாற்றி வந்தனர்.

பிறப்பில் உயர்வு தாழ்வு தோன்றிய நாள்தொட்டுப் பிராமண உலகின் நிலைமை மாறிவிட்டது. அவ்வுலகின் இயல்புகளெல்லாம் படிப்படியே மாறலாயின.

ஹிந்து மதம் சாதி மதமாகிவிட்டது என்று சுருங்கச் சொல்லிவிடலாம்.

## ஜைனம்

இனி ஜைனத்தை நோக்குவோம். ஜைனம் தொன்மை வாய்ந்தது ; விருஷபதேவரால் காணப்பட்டது ; 'அஹிம்ஸா பரமோ தர்ம' என்பதை அடிப்படையாக் கொண்டது. அச் சமயத்தின் *இருபத்து நான்காவது தீர்த்தங்கரர் மஹா வீரர் ; அவர் புத்தர் காலத்தவர்.

ஜைனம் தொடக்கத்தில் நன்முறையில் அஹிம்சையை வளர்த்துவந்தது ; கொலை வேள்வியைக் கடிந்து

---

* விருஷபர், அஜிதர், சம்பவர், அபிநந்தனர், சுமதி, பத்மப்பிரபர், சுபார்சுநாதர், சந்திரப் பிரபர், புஷ்பதந்தர், சித்திபட்டாரகர், சிரேயாம்ஸர், வாஸுபூஜ்யதேவர், விமலர், அநந்தஜித் பட்டாரகர், தர்மர், சாந்திநாதர், குந்துபட்டாரகர், அரதேவர், மல்லிஸேணதேவர், சதாநந்த தேவர், நமிபட்டாரகர், அட்டநேமி, பார்சுவநாதர், மஹாவீரர் (ஸ்ரீ வர்த்தமானர்).

வந்தது. ஜைனத்தில் வருணபேதமில்லை. ஞானத்தால் தெளிவடைந்தவரையே அந்தணரென்று ஜைனங் கொண்டது.

ஜைனம் சில கிளைகளாகப் பிரிந்தது. இரண்டு சிறந்தன. ஒன்று திகம்பரம்; மற்றொன்று சுவேதாம்பரம். திகம்பரம் இயற்கைஇன்பத்தை வெறுப்பது; உடலை ஒறுப்பது; பெண் பிறவியை இழிவாகக் கருதுவது; பெண் பிறவிக்கு வீடுபேறில்லை யென்றும், பெண் தவங் கிடந்து பின்னர் ஆண் பிறவி தாங்கியே வீடுபேறடைதல் வேண்டு மென்றுங் கூறுவது. சுவேதாம்பரம், திகம்பரத்தை மறுப்பது. அது பெண் பிறவியை இழிவாகக் கருதுவதில்லை. ஜைனத்தின் திகம்பரத்தால் அஃது ஆக்கம் பெறாது அருகலாயிற்று.

## பௌத்தம்

பௌத்தமும் தொன்மை வாய்ந்தது. அது கௌதம புத்தரால் காணப்பட்டதென்பதைப் பௌத்த சம்பிரதாயம் ஏற்பதில்லை. *பல புத்தருள் கௌதமர் ஒருவ

* ' இறந்த காலத் தெண்ணில்புத் தர்களும்
சிறந்தருள் கூர்ந்து திருவாய் மொழிந்த '
—மணிமேகலை : ௩௦ : ௧௪ - ௧௫.

' கௌதம புத்தருடைய காலத்திற்கு முன்பு தருமங் குறைந்த ஒவ்வொரு காலத்தும் ஒவ்வொருவராகப புத்தர்கள் பலர் அவதரித்து உபதேசஞ்செய்து தரும ஸ்தாபனஞ் செய்தார்க ளென்பது பௌத்த நூற்றுணிபாதலின், ' இறந்த காலத் தெண்ணில்புத் தர்களும் ' என்றார்; கௌதம புத்தருடைய சரித்திரத்திலும், புத்த ஜாதகக் கதையிலும் இக்கருத்து ஆங்காங்குப் பெறப்படும்; கௌதம புத்தருக்கு முன்னேயுள்ள புத்தர்களுள், இருபத்தெழுவர் பெயர்கள் மட்டும் இப்பொழுது

ரென்று சம்பிரதாய நூல்கள் கூறுகின்றன. கௌதம புத்தரே சரித்திர சம்பந்தமுடையவர்.

கௌதமபுத்தர், பிறப்பில் வகுப்புவேற்றுமை கருது வது - கொலை - வேள்வி - குடி - முதலியவற்றை யொழித்து, அறவொழுக்கத்தை மக்களிடைப் பரப்ப முயன்றவர். அவர் காலந்தொட்டுத் தர்ம சங்கங்களும், தர்ம மடங்களும், தர்ம சந்நியாசக் கூட்டங்களும் பெருகி வந்தன. அவ்வமைப்புக்களால் உலகின் நாலுபக்கமும் பௌத்த தர்மம் பரவிற்று. பின்னை நாளடைவில் சங்கங் களும் மடங்களும் சந்நியாசக் கூட்டங்களும் வேறு வழியில் திரும்பலாயின. அவை புத்தர் அறிவுறுத்திய தர்மத்தில் கருத்திருத்தாது நாத்திகத்தை மட்டும் பெருக்குவதில் கருத்தைச் செலுத்தின. அதனால் பௌத்தம் தான் பிறந்த நாட்டிலேயே ஆக்கம் பெறா தொழிந்தது.

---

தெரிகின்றன. அவை வருமாறு:—(க) தண்ணகாரர் (உ) மேதங் கரர் (ங) சரணங்கரர் (ச) தீபங்கரர் (ரு) கௌண்டின்னியர் (சு) மஙகளர் (எ) ஸுமங்களர் (அ) இரேவதர் (கூ) சோபிதர் (க0) அநோமதர்சி (கக) பதுமர் (கஉ) நாரதர் (கங) பதுமோத்த ரர் (கச) ஸுமேதர் (கரு) ஸுஜாதர் (கசு) பிரியதர்சி (கஎ)அர்த்த தர்சி (கஅ) தர்மதர்சி (ககூ) ஸித்தார்த்தர் (உ0) திஷ்யர் (உக) புஷ்யர் (உஉ) விபச்சித் (உங) சிகி (உச) விருஷபர் (உரு) ககுந்தர் (உசு) கோவகாமர் (உஎ) கசியபர். இவ்விருபத் தெழுவரும் கௌதமபுத்தரும் ஸர்வஜ்ஞ புத்தரென்று கூறப்படு வர். இஃது, இலங்கையிலுள்ள வித்தியோதய பாடசாலைத் தலைவ ராகிய ஸ்ரீ ஸுமங்களரால் தெரியவந்தது. தண்ணங்காரன், மஹாவீரன் முதலிய இருபத்துமூன்று புத்தரென்பாரும் உளர்.'

—டாக்டர் சாமிநாத ஐயர்.

## பிணக்கு

மூன்று மதமும் தத்துவக் கோட்பாட்டில் வேற்றுமையுடையன; தர்மத்தில் ஒற்றுமையுடையன. பழைய மன்னர்கள் மனத்தைத் தத்துவங்களில் பெரிதும் செலுத்தாது, விழுமிய தர்மமூலத்தில் செலுத்தி மூன்றையும் ஓம்பி வந்தார்கள். பிற்காலத்தில் மூன்றும், தர்மத்தை மறந்து புன்மைத் தத்துவ வேற்றுமையில் மூளையைப் புகுத்தி முட்டி மோதிப் போரிடலாயின.

ஜைனத்துக்கும் பௌத்தத்துக்கும் பிணக்கு நேர்ந்தது. ஜைனத்துக்கும் ஹிந்து மதத்துக்கும் பூசல் விளைந்தது. பௌத்தத்துக்கும் ஹிந்து மதத்துக்கும் போர் மூண்டது. அப்போராட்டங்களின் முன்னும்பின்னுமாக ஆழ்வார், நாயன்மார், நீலகண்டர், சங்கரர், இராமாநுஜர், மத்துவர் முதலியோர் தோன்றினர். இவர்தம் உள்ளக் கிடக்கைகள் இவர் அருளிய நூல்களில் வெள்ளிடைமலையென விளங்கிக் கொண்டிருக்கின்றன. இறுதியில் ஹிந்து மதமே ஆக்கம் பெற்றது. ஜைனத்தின் ஆக்கமும், பௌத்தத்தின் ஆக்கமும் அருகின.

## சாதி ஹிந்து

ஹிந்து அறிஞர்கள், மன்னரைத் தங்கள் வயப்படுத்தி, ஜைன - பௌத்த - ஆக்கத்தைக் குலைத்தார்கள் என்று சரித்திர உலகம் கூறுகிறது. அதனுடன் வேறு முறைகளும் கையாளப்பட்டன. அவற்றுள் ஒன்று, ஹிந்து மதம், ஜைன - பௌத்த-இரத்தத்தை, அதாவது சாரத்தை உறிந்து, அவ்விரண்டன் ஆக்கத்தைச் சாய்த்த

தென்பது. ஹிந்து மதம், ஜைன - பௌத்த அறக் கூறு களில் தனது நலத்துக்குத் துணை செய்வனவற்றை உட் கொண்டு, பிறவற்றை என்பு தோலாக்கி, இரண்டின் செல்வாக்கையும் வீழ்த்தியதென்க.

ஜைன-பௌத்த - சாரத்தைக் கவர்ந்துண்ட ஹிந்து மதமாதல் நாளுக்குநாள் செழித்தோங்கி வளர்ந்ததா? இல்லை. ஏன்?

ஹிந்து மதம் தோன்றியபடியே வளர்ந்து வந்திருப் பின், அது ஜைன - பௌத்த - சாரத்தை உண்டதன் பயனை அடைந்திருக்கும். அது, பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் புல்லிய சாதிக்கட்டில் அகப்பட்டுக் கொண்டது! அக் கட்டால், ஜைன - பௌத்த - சாரம், ஹிந்து மதத்துக்கு ஜீரணமாகவில்லை. சாதியும் தர்மமும் ஒன்று பட்டு ஜீரணமாகுமா? ஆகா. அஜீரணம் என்ன செய்யும்? நோய் செய்வது இயல்பு.

ஹிந்து மதம் நோய்வாய்ப்பட்டது. நோயின் வெம்மை அதன் தலைக்கேறியது. அது மதிமயங்கித் தன் உடலுறுப்புக்களைப் பிய்த்துப் பிய்த்து எறிந்தது. ஹிந்து மதம் புண்பட்டுவிட்டது.

ஹிந்து மதத்தினின்றும் நாளுக்குநாள் பல கிளைகள் பிரியலாயின. ஒவ்வொன்றும் தனித்தனியே சம்பிர தாயத்தை ஏற்படுத்திக் கொண்டது. சம்பிரதாய வளர்ச்சிக்கென்று மடங்கள் தோன்றின.

பௌத்தம் செல்வாக்கிழந்தமையால், அதன் தர்ம வளர்ச்சிக்கென்று ஆங்காங்கே பெருகிக்கிடந்த பௌத்தப் பாழிகள் பலவும் பள்ளிகள் பலவும் பிக்ஷுக்கூட்டங்

கள் பலவும், ஹிந்து சம்பிரதாய மடங்களாகவும் சந்நியாசக் கூட்டங்களாகவும் மாறின. எங்கணும் மொட்டைத் தலைகளும் காவி யுடைகளும் பிறங்கின. மநுவின் பெயராலும் முனிவரர் பெயராலும் சாதி சாஸ்திரங்களும் சம்பிரதாய சாஸ்திரங்களும் ஏராளமாக எழுதிக் குவிக்கப்பட்டன. புன்மைச்சாதியும், சிறுமைச் சம்பிரதாயமும், தீண்டாமையையும் பெண்ணடிமையையும் சாஸ்திரங்களில் புகுத்தி ஹிந்துமதத்தைப் பாழ்படுத்தின.

சாதிகளும், சம்பிரதாயங்களும், மடங்களும், மொட்டைக் காவிகளும் வாளாகிடக்குமோ? அவற்றிற்கு ஏதேனும் வேலை வேண்டுமன்றோ? அவை ஹிந்து மதத்துக்குள் குழப்பம் உண்டுபண்ணப் புறப்பட்டன. அந்நாளில் ஒரு கொள்கையினரை இன்னொரு கொள்கையினரும், அவரை இவரும் நிந்தித்து நிந்தித்து எழுதிய குப்பைகள் மலைமலையாகக் குவிந்தன. சமரச சன்மார்க்க உபநிடதங்களும், அவையனைய நூல்களும் ஒன்றுஞ் செய்ய இயலாது விழித்தன.

ஹிந்து மதம் தர்மத்தினின்றும் வழுவிச் சாதி சம்பிரதாய வெறிக்கு இரையாகி இழிந்த நிலையடைந்தது. அதற்கேற்றபடி அரசும் சமூகமும் மாறின. தர்மத்தில் படிந்து கிடந்த மக்கள் மனோநிலை சாதி சம்பிரதாய வாதச் சேற்றில் விழலாயிற்று.

முற்கால இந்தியா, இயற்கைச் சேர்க்கை வாழ்க்கையைக் கொண்டது; தனி வாழ்க்கையைக் கொள்ளவில்லை. இடைக்கால இந்தியா, இயற்கைக்கு மாறுபட்ட தனித்த வாழ்க்கைக்கு மதிப்புத் தேடிற்று. மொட்டை

யடித்துக் காவிசுற்றித் தனித்த வாழ்க்கை நடாத்து வோர்க்கு மக்கள் அடிமைகளானார்கள். அவர்கள் கோலத்தில் மக்கட்கு மயக்கம் ஏற்பட்டுவிட்டது.

மொட்டையடித்துக் காவியணிந்தோருள் அற வோரும் இருப்பர். அவரைப் பற்றி ஈண்டு யான் பேசு கிறேனில்லை ; ஊரை ஏமாற்றும் போலிகளைக் குறித்தே பேசுகிறேன்.

மொட்டைக்காவிகள் கிராமங்களில் நுழைந்து கொண்டன. ஒரு கிராமத்தில் ஒரு மொட்டைக்காவி புகுந்தால் போதுமே ! அக்காவிக்குக் கிராமமே அடிமையாகிவிடும்.

கிராமம் மொட்டைக்காவிக்கு அடிமையானதால் அதன் கதி என்னவாயிற்று ? கிராமத்தின் மூளை இயற்கை வாழ்க்கையில் படியாதொழிந்தது. கிராமங் களால் ஆக்கப்பெற்ற நாடும் அந்நிலை எய்தியது.

சாதிக்கொடுமை ஒரு பக்கம் ! சம்பிரதாயக் கொடுமை இன்னொரு பக்கம் ! சாமியார் கொடுமை மற்றொரு பக்கம் ! பாரதமாதா எரிகிறாள் !

## விளைவு

பிறப்புச் சாதிப் பாகுபாட்டால் விளைந்த தீமை என்னை ? தீமைகள் பல சொல்லலாம். ஈண்டு ஒன்றை மட்டுங் குறிக்க விரும்புகிறேன். அது சாதிப் பாகு பாட்டால் கோழமை விளைந்ததென்பது.

சாதிப்பாகுபாட்டால் அவரவர் தத்தம் தொழிலையே செய்யும் நிலைமை ஏற்பட்டது. அதற்கு மாறுபட்டால் அரசின் ஒறுத்தல் நேரும். கட்டுப்பாட்டால் அவரவர்

தத்தம் தொழிலையே செய்யலாயினர். நால்வகையினருள் பெரும்பான்மையோர் உழவு முதலிய தொழில்கள் செய்வோர். எஞ்சியவர் மூவகையினர். அவருள் ஓரினத்தவரே அரசினர்; போர் புரிவோர். மற்றவர் அத்தொழிலில் ஈடுபடுவதில்லை. ஆகவே, நாட்டு மக்களுள் ஒரு சிறு பிரிவினர் தவிர, மற்றப் பெரும்பான்மையோர் போர்ப் பயிற்சி பெறாத கோழையராயினர்.

சம்பிரதாயங்கள் என்ன செய்தன? மக்களிடைக் கண்மூடிப் பழக்கவொழுக்கங்களைப் பெருக்கின; அவை கட்கு மக்களை அடிமைப்படுத்தின; மக்களுக்குள் பிரிவையும் பிணக்கையும் உண்டுபண்ணிச் சகோதர நேயத்துக்குக் கேடு சூழ்ந்தன.

மொட்டைக்காவிகளால் நேர்ந்ததென்னை? மொட்டைக் காவிகள், 'உலகம் பொய்'; 'மண் - பொன் - பெண்-மூன்றும் மாயை' என்று போதித்துப் போதித்து இயற்கை வாழ்க்கைக்குக் கேடு விளைத்தன; மக்களுக்கு வாழ்க்கையில் வெறுப்பை உண்டாக்கின. வாழ்க்கை வெறுப்பால் மக்கட்கு நாட்டுநேயம் அற்றுப் போகுமன்றோ?

## நாட்டின் வீழ்ச்சி

பாரதமக்கள் பன்முகச் சமய உணர்வினராய், சாதிப்பித்தராய், சம்பிரதாய அடிமைகளாய், தனி வாழ்க்கையில் பற்றுள்ளங் கொள்வோராய், உலக வாழ்வில் வெறுப்புடையராய், தீண்டாமை பெண்ணடிமை முதலியவாற்றால் சகோதரநேயம் இழந்தவராய், நாட்டுப் பற்றுமில்லாதவராய் அறமும் வீரமும் அற்றவர்களானர்

கள். முற்கால இந்தியரின் குணங்களெல்லாம் மாண்டு போயின என்று கூறலாம்.

முற்கால இந்திய அறமும் வீரமும் மலையாகவும், கடலாகவும் நின்று இந்தியாவைக் காத்து வந்தன. அவ்வறமும் வீரமும் இமயக் கணவாய்களில் காவலரென நின்றுகொண் டிருந்தன. அவை இரண்டும் சாய்ந்தன.

அசோகரால் கட்டப்பெற்ற அறவீரக்கோட்டை - கனிஷ்கர், சமுத்திரகுப்தர், சந்திரகுப்த விக்கிரமாதித்தர், ஹர்ஷர் முதலியோரால் காக்கப்பட்ட அக்கோட்டை-சாதி மத சம்பிரதாய மறக் குண்டுகளால் தாக்கப்பட்டது ; தகர்க்கப்பட்டது.

## முஸ்லிம் உலகம்

அக்கால இந்தியாவின் செல்வநிலை மட்டும் செழுமையாகவே இருந்தது. அந்நாளில் இந்தியச் செல்வம் அயலவரால் சுரண்டப்படவில்லை. இந்தியாவின் செல்வநிலையும் அதன் உள்நிலையும் வாணிபர் வாயிலாகவும் பிறர் வாயிலாகவும் வேறு நாடுகளுக்குத் தெரியலாயின. முஸ்லிம் உலகின் நோக்கம் இந்தியாமீது சென்றது. எழுந்தது முஸ்லிம் உலகம்.

### இஸ்லாம்

முஸ்லிம்களின் சமயம் இஸ்லாம் இஸ்லாம் ஒரே தெய்வத்தை அறிவுறுத்துவது. தெய்வம் பிறப் பிறப்பில்லாதது என்பது அதன் அடிப்படையான கொள்கை. அவதாரத்தில் இஸ்லாத்துக்கு நம்பிக்கையே கிடையாது. நபிகளிடத்தில் இஸ்லாத்துக்கு உறுதியுண்டு. அது

முகம்மதுவையே நபிகள் நாயகமாகக் கொண்டியங்கு வது. அதில் உருவ வழிபாடில்லை. அது பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுவதில்லை; மக்களுக்குள் தீண்டாமை பாராட்டுவதில்லை. சகோதர நேயம் இஸ்லாத்தின் உயிர் நாடி. இயற்கை இன்ப வாழ்வை அது வெறுப்பதில்லை; அரசியலையும் சமயத்தையும் ஒன்றாகப் பிணித்தது அதன் தனிச் சிறப்பு.

நபிகள் நாயகம் அரபியாவில் தோன்றி இஸ்லாத் துக்கு ஆக்கந் தேடிய நாள்தொட்டு அரபியரிடைப் புத் துணர்வும் ஊக்கமும் பொங்கியெழுந்தன. அவர்தம் முயற்சியால் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் ஆப்ரிக்கா விலும் முஸ்லிம் ராஜ்யம் பரவியது. அரபியர் மனம் இந்தியாமீதும் நடந்தது.

## அரபியர்

அரபியர் இந்தியாவுக்குப் புதியவரல்லர். மகம்மது நபி பிறப்பதற்கு நீண்டகாலத்துக்கு முன்னரே அரபியர் இந்தியாவுடன் வாணிபத் தொடர்புகொண்டு பழகியவர். இந்தியாவை வயப்படுத்தி, அதன்கண்ணும் இஸ்லாத் தைப் பரப்பவேண்டுமென்ற வேட்கை அரபியரிடை வளர்ந்தே வந்தது. அவ்வேட்கையால் அவர் இந்தியக் கரையோரங்களைத் தாக்கத் தொடங்கினர். மகம்மத் காஸிம் என்பவர் ஏழாம் நூற்றாண்டில் கட்டுப்பட்ட படைகளுடன் போந்து சிந்துவைப் பற்றிக் கொண்டது ஈண்டுக் குறிக்கத்தக்கது.

## பலநாட்டு முஸ்லிம்கள்

அக்காலத்திருந்து பலநாட்டு முஸ்லிம்கள் இந்தியா வில் நுழையலானார்கள். இடையிடை அவர்கட்கும்

ஹிந்து மன்னர்கட்கும் நடந்த போர்கள் பலப்பல. சில போர்களிடை இராஜ புத்திரர் வீரமும், மராட்டியர் வீரமும் பொங்கித் ததும்பி வழிந்தன. வழிந்ததனால் விளைந்த பயன் என்ன? ஹிந்து ராஜ்யம் நிலைபேறாக எழுந்து நின்றதா? சாதியும், சம்பிரதாயமும், கண்மூடி வழக்கவொழுக்கமும், உட்குழப்பமும் ஹிந்துராஜ்யத்தை எப்படி நிலைபெறச் செய்யும்? ஹிந்து ராஜ்ய வீழ்ச்சியும் முஸ்லிம் ராஜ்ய எழுச்சியுமே விளைந்த பயன்.

மகம்மத் காஸிம் காலந்தொட்டு இந்தியாவில் நுழைந்துவந்த பலநாட்டு முஸ்லிம்களைப்பற்றி முறை முறையே விளந்து கூறுவது இந்நூலின் நோக்கமன்று. நூலின் நோக்கத்துக் கியைந்த சிலவற்றைக் குறித்துச் செல்கிறேன்.

மகம்மத் காஸிமுக்குப் பின்னை குறிக்கத்தக்கவர் மகம்மத் கஜனி (997—1030). அவர், கஜனியைத் தலைநகராக் கொண்டு இந்தியாவின்மீது பதினேழு முறை படையெடுத்தனர்; ஒவ்வொருபோதும் ஏராளமான செல்வத்தைத் திரட்டிச் சென்றனர். பேர்பெற்ற சோமநாதர் கோயிலும், வேறு ஆயிரங் கோயிலும் அவரால் தகர்க்கப்பட்டன.

மகம்மது கோரி (1191—1206) என்பவரும் இந்தியாவினுள் புகுந்து சில இடங்களைப் பற்றித் தமது படைத் தலைவருள் ஒருவராகிய குத்புடீனை டெல்லியில் அமரச் செய்து சென்றனர். குத்புடீன் போரில் வல்லவராதலின், அவர் இந்தியாவின் பல பகுதிகளைப் பற்றி முஸ்லிம் ராஜ்யத்தைப் பரப்பினர்.

மகம்மது கோரியைத் தொடர்ந்து வந்தவர் பலர். அவருள் பேர் பெற்றவர் மோகலாய முஸ்லிம்கள். அவர் துருக்கியினின்றும் போந்தவர்.

மகம்மதுகோரியின் காலத்திலிருந்து இந்தியா புகுந்த முஸ்லிம் மன்னர் பலரும் இந்தியாவையே தாய் நாடாகக்கொண்டு ஆட்சி புரிந்தவர். அதனால் இந்தியச் செல்வ நிலைக்குப் பழுது நேரவில்லை.

மொகலாய ராஜ்யத்தை முதல் முதல் இந்தியாவில் அமைத்தவர் பாபர் (1526—30). அவர் புதல்வர் உமாயூன் (1530—40). உமாயூன் மைந்தர் அக்பர். அக்பர் (1556—1605) காலத்திலேயே முஸ்லிம் ராஜ்யம் அளவிலும் ஆக்கம் பெற்றது; பண்பிலும் ஆக்கம் பெற்றது.

## எழுச்சி

அக்பர் நினைவு தோன்றும்போது அசோகர் நினைவும் உடன் தோன்றுகிறது. அசோகர் வழிவழி வளர்ந்த தர்மராஜ்யம் அக்பர்வழி மீண்டும் வளரத் தொடங்கிற்று. ஏறக்குறைய இருபது நூற்றாண்டு இடையில் நிற்கின்றன.

இருபது நூற்றாண்டில் காலதேச வர்த்தமானங்களில் - வாழ்வுத் துறைகளில் - ஆட்சி முறைகளில் - மாறுபாடு உற்றிருக்கலாம். மாறுபாடு தர்மத்தில் உறுதன்றோ? தர்மம், என்றும் ஒரு பெற்றியதாயிருக்குந் தகையது.

'அசோகர் பௌத்தர்; அக்பர் இஸ்லாமானவர். இருவர் ராஜ்யமும் எங்ஙனம் ஒற்றுமையுடையனவாகும்?' என்று சிலர் ஐயுறலாம். பௌத்தமும் இஸ்லாமும் தத்

துவத்தில் வேறுபட்டிருக்கலாம். சகோதர நேயத்தை வளர்க்குந் தர்மத்தில் எங்ஙனம் இரண்டும் வேற்றுமை யுடையனவாகும்? இரண்டும சகோதர நேய வளர்ச் சியை நாடுவதைத் தமக்குரிய தருமமாகக் கொண்டவை.

வாழ்வில் - கோலத்தில் - உணவில் - இன்ன பிற வற்றில் அசோகரைப்போலவே அக்பரும் இருத்தல் வேண்டும் என்னும் நியதியில்லை. இருவரும் பொது நோக்கில் – மக்களிடைச் சகோதர நேயம் வளர்ப்பதில் – தர்மத்தில் - ஒருமை மனப்பான்மையுடையவரா யிருந்த மையே ஈண்டுக் கொள்ளற்பாலது.

மதவெறியை அரசிடை நுழைப்பது தவறு. ஒரு மன்னன் தனது மனத்துக்கியைந்த ஒரு மதத்தைக் கொண்டொழுகுகிறான். அவன் தன் மதத்தையே குடி மக்களும் கொண்டொழுகல் வேண்டுமென்று வலியுறுதத லாகாது. வலியுறுத்துவோன் வெறியனாகிறான். அவன் மன்னனாயிருத்தற்கு அருகனல்லன். அவரவர் மனத்துக் கியைந்த மதத்தில் அவரவர் நின்றொழுகும் உரிமை யிருத்தல் வேண்டும். அதைப் பறிக்கும் அரசு நீடூழி நிலவாது.

ஒருவன் தான் உண்ணும் உணவுப் பொருளையே மற்றவரும் உண்ணுதல் வேண்டும் என்று வலியுறுத்து வது நியாயமாகுமா? உடற்கூறு பலவிதம். அவரவர் தத்தம் உடற்கூற்றுக்கு ஏற்ற உணவுப் பொருளை உண் ணும் உரிமை யிருந்தே தீரல்வேண்டும். அவ்வுரிமை யைப் பறிக்கப் புகுவோர் மனிதராகார்.

மதமும் உணவு போன்றதே. அஃதும் உரிமை யுடையதாகவே யிருத்தல்வேண்டும்.

அசோகர் பௌத்தரை மட்டும் நேசித்து மற்றவரைத் துன்புறுத்தினாரில்லை. அவர் பௌத்தரையும் குடிமக்களாகவே கருதினர்; மற்றவரையுங் குடிமக்களாகவே கருதினர்; இருவருக்கும் ஒரே நீதி வழங்கினர். அக்பரும் முஸ்லிம்களையும் மற்றவரையும் குடிமக்களாகவே கருதி எல்லோருக்கும் ஒரே நியாயம் வழங்கினர். இருவர் அரசும் உலகிற்கு எடுத்துக்காட்டுக்களாக நிற்கும் மாண்பு வாய்ந்தன.

அக்பர் ஆட்சிமுறை திறமை வாய்ந்ததாகவே இருந்தது. அதன்கண் அன்பும் நீதியும் விரவியே நின்றன. நல்லமைச்சும் வீரப் படைத்தலைமையும் அக்பர் ஆட்சிக்குத் தூண்களாக நின்றன. அவர்தம் ஆட்சியில் அரசுக்குரிய அங்கங்களெல்லாம் ஒழுங்குபட அமைந்திருந்தன. அவ்வமைப்புக்களின் வகைகளை ஈண்டு விரித்துக் கூறவேண்டுவதில்லை. அக்பர் ஆட்சியில் கோலப்பெற்ற சீர்திருத்த முறைகளே பெரிதும் கருதற்பாலன.

அக்பர் முஸ்லிம். அவர் ஆண்ட நாடோ ஹிந்துக்களாலும் முஸ்லிம்களாலும் ஆக்கப்பட்டது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பலதிற வேற்றுமைகளுண்டு. அவ்விருவர்க்குள் ஒற்றுமை காண்டல் அருமையினும் அருமை என்று சொல்லப்படுவது வழக்கம். அருமையினும் அருமையை அக்பர் எளிமையினும் எளிமையாக்கினர். அரசர் மனம் ஒரு பக்கம் சாராது நேரிய நடுமையில் நின்றால் அருமைகளெல்லாம் எளியனவாகும். வேற்றுமை ஒற்றுமை என்பன மனத்திலிருப்பன. மனத்தில் வேற்றுமை விளைந்தால் உலகிலும்

வேற்றுமை விளையும். அதில் ஒற்றுமை நிலவினால் உலகிலும் ஒற்றுமை நிலவும்.

அக்பர் முஸ்லிம் வயிற்றில் பிறக்க நேர்ந்தமையால், அவர் ஹிந்துக்களை அடக்கவோ தம் கொள்கையில் ஈர்க்கவோ முயன்றிருத்தல் வேண்டுமோ? அது மூர்க்கர் செயலாகும். அக்பர் அறிஞர்; அன்பர்; பரந்த நோக்குடையவர். அவருக்கு ஹிந்துக்களும் நாட்டவராகவே காணப்பட்டனர்; முஸ்லிம்களும் நாட்டவராகவே காணப்பட்டனர். இருவரிடத்திலும் அவருக்கு வேற்றுமை தோன்றவில்லை

அக்பர் அரசாங்கத்திலும் சேனையிலும் பிறவற்றிலும் ஹிந்துக்களையும் அமர்த்தினர்; முஸ்லிம்களையும் அமர்த்தினர். அவர், ஹிந்து என்றோ முஸ்லிம் என்றோ கருதி எவரையும் வேலையில் அமர்த்துவதில்லை. அவர் தம் மனம எல்லாரையும் மனிதரென்றே கருதிற்று. அக்பர் மனம் வேற்றுமையில் நில்லாமையால் குடிமக்கள் மனமும் வேற்றுமையில் நிற்கவில்லை. ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை அக்பர் ஆட்சியில உரம்பெற்றே நின்றது.

ஆட்சிக்குத் தூண் போன்றவர் அமைச்சரும் படைத் தலைவருமாவர். அக்பர் ஆட்சித்தூண்கள் ஹிந்து முஸ்லிம் கலப்புற்றனவாகவே இருந்தன. அக்பரின் அமைச்சர் ராஜா தோடர்மாலும் அபுல் பாஜிலும்; படைத் தலைவர் ராஜாமான் சிங்கும் ராஜா பிர்பாலும்.

அக்பர், முஸ்லிம் பெண்ணையும் மணஞ் செய்தனர்; ஹிந்து ரஜபுத்திரப் பெண்ணையும் மணம் செய்தனர்; ஒரு கிறிஸ்துவப் பெண்ணையும் மணஞ் செய்தனரென்று சில சரித்திராசிரியர் சொல்கின்றனர்.

ஒற்றுமைக்குரிய கலப்பு மணத்தை அக்பர் தாமே செய்து காட்டினர். கலப்புமணம் அந்நாளில் காட்டுத் தீப்போல் நாட்டிடைப் பரவியிருந்தால் இந்தியா அடிமை நாடாகியிராது. ஹிந்துக்களின் சாதிக்கட்டும், சம்பிரதாயக் கட்டும், பிறகட்டுக்களும் கலப்பு மணத்தைப் பெருக விடவில்லை. ஒற்றுமைக்குரிய நல்ல நல்ல வாய்ப்புக்களையெல்லாம் இந்தியா நெகிழவிட்டது.

முஸ்லிம் அல்லாதார்க்கென்று பிறப்பிக்கப்பெற்ற சட்டங்களெல்லாம் அக்பரால் ஒழிக்கப்பட்டன. அவரால் குழந்தை மணம் விலக்கப்பட்டது ; கைம்மையர் கொடுமை ஒருவாறு அகற்றப்பட்டது ; கட்டாய உடன் கட்டையேறுதல் நிறுத்தப்பட்டது ; அடிமை முறை அழிக்கப்பட்டது.

அக்பர் மாட்டிறைச்சி தின்பதை விடுத்ததும், பசுக் கொலையையும் பலியையும் நிறுத்த முயன்றதும் குறிக்கத் தக்கன.

அக்பர் ஆட்சியில் நிலவரி தவிர மற்றெல்லா வரிகளும் தொலைக்கப்பட்டன ; வேறு பல சீர்திருத்தங்களும் செய்யப்பட்டன.

அக்பர் இஸ்லாமானவர் ; வேறுபல சமயங்களையும் ஆராய்ச்சி செய்தவர் ; எல்லாச் சமயங்களிலும் உண்மையிருத்தல் விளங்கப்பெற்றவர். அவரைச் சமரச சன்மார்க்கர் என்றே கூறுதல்வேண்டும். அவர் கிறிஸ்துவப் பாதிரிமாரை அன்புடன் வரவேற்றது கருதற்பாலது. அக்பர் காலத்திலேயே இங்கிலீஷ் கிழக்கிந்திய வாணிபக் கூட்டமும், டச்சுக் கிழக்கிந்திய வாணிபக் குழுவும் தன் தன் அரசர் கட்டளை பெற்று இந்தியா போந்தன. அக்-

குழுவினர் உரிமையுடன் வாணிபஞ் செய்ய அக்பர் கருணை ஆட்சி இடந்தந்தது.

அக்பர் ஆட்சியில் தமிழ்நாடு கலவாமலே இருந்த தென்று சரித்திரங் கூறுகிறது. ஆனால் தமிழ்த் தென்றல் அவர் ஆட்சியில் வீசாமலில்லை. குமரகுருபரர் என்ற தமிழர் அக்பர் காலத்திலேயே காசியம்பதி சேர்ந்து, தமிழ் மடமொன்று அமைத்துத் தமிழ்வளர்த்தது தமிழ் மக்களுக்குத் தெரிந்தவொன்று. குமரகுருபரர் அக்பரை நேரிற்கண்டு பேசினர் என்றுஞ் சொல்லப்படுகிறது. குமரர், காசியில் கம்ப இராமாயணத்தை ஹிந்தியில் பிரசங் கஞ் செய்தனராம். அப்பிரசங்கத்தைக் கேட்டுக் கேட்டுத் துளஸிதாஸ் ஹிந்தி இராமாயணம் எழுதினரென்று டாக்டர் சாமிநாத ஐயர் கூறுகிறார். அக்பர் காலத்துப் புலவருள் துளசி தாஸரும் ஒருவர். அக்பர் ஆட்சியில் தமிழ்க்கம்பர் கருத்துக்கள் ஹிந்தியில் அமரவும் நேர்ந் தது போற்றுந் தகையதே.

அக்பர் அற ஆட்சி அரை நூற்றாண்டு நிகழ்ந்தது ; இன்னும் பல ஆண்டு அவர்தம் ஆட்சி நீண்டு வளர்ந் திருப்பின், இந்தியா பழைய நிலை எய்தும் பேறு பெற் றிருக்கும் ; இடையில் தோன்றிய கட்டுக்கள் குலைந்திருக் கும் ; ஹிந்து முஸ்லிம் வேற்றுமை முற்றும் மறைந் திருக்கும் ; இந்தியா அடிமைக்குழியில் வீழ்ந்திராது. அஃது உலகுக்கே ஒரு வழிகாட்டியாக விளங்கியிருக் கும். இந்தியாவின் தவக்குறை ! என்செய்வது !

அக்பருக்குப் பின்னர் அவர்தம் புதல்வர் ஜிஹாங் கிர் (1605—27) அரசுரிமை ஏற்றனர். ஜிஹாங்கிர் குணத்தில் அக்பரை யொத்தவரல்லர் ; ஆட்சிமுறையில்

தந்தையாரின் அடிச்சுவட்டைப் பற்றியே பெரிதும் நடந்தவர். அக்பர் ஆட்சியால் விளைந்த நலன்களையெல்லாம் துய்த்தவர் ஜிஹாங்கிர் என்று கூறலாம்.

ஜிஹாங்கிர் கலாவிநோதர்; இயற்கை நேயர்; ஓவிய உளத்தர். அவர் காலத்தில் அழகிய கட்டடங்கள் சில கட்டப்பட்டன. ஒரு பாரஸீக அகராதி அவரால் தொகுக்கப்பட்டது.

ஜிஹாங்கிர் காலத்தில் இங்கிலாந்தை ஆண்ட மன்னர் முதலாவது ஜேம்ஸ். அம்மன்னரால் அனுப்பப் பெற்ற வாணிபர்க்கும் ஒற்றர்க்கும் ஜிஹாங்கிர் ஆட்சி வரவேற்பளித்தது. ஆங்கில வாணிபம் ஜிஹாங்கிர் காலத்திலே இந்தியாவில் கால் கொண்டது. இந்நாளில் இரண்டு ஆங்கிலத் தூதுவர் இந்தியா நோக்கினர். முன்னே வந்தவர் காப்டன் வில்லியம் ஹாகின்ஸ்; பின்னே வந்தவர் ஸர் தாமஸ் ரோ.

அவ்விருவருள் காப்டன் ஹாகின்ஸ், ஜிஹாங்கிருடன் நெருங்கிப் பழகினர்; கெழுதகை நண்பராயினர். அவர் தாங்கண்ட காட்சிகள் பலவற்றை எழுதியுள்ளனர். அவை வியப்பூட்டுவன. ஆட்சிமுறை, செல்வநிலை, சேனைத்திறம், திருவிழாப்பெருக்கு முதலியன அவரால் சிறப்பிக்கப்பட்டுள்ளன. அந்நாளில் செல்வநிலை மதர்த்துக் கொழித்திருந்தது; சுரண்டல் இல்லை.

அரசர் முடியிலும், அரசகுடும்பப் பெண்மணிகள் அணியிலும் பதிக்கப்பெற்றிருந்த மணிகள் கோடி கோடிப் பொன் பெறுவன. அம்மணி ஒவ்வொன்றும் சிறு சிறு ஞாயிறெனை ஒளிர்ந்ததாம். பொன் மயமான சிம்மாசனத்தில் நவமணிகள் இழைக்கப்பட்டிருந்தன. ஜிஹாங்

கிரின் சொந்த நிலங்கள் ஒவ்வோராண்டும் ஐம்பது கோடி ரூபா வருவாயுடையனவாம். அவர்தம் ஒருநாட் செலவு ஐம்பதனுயிரம் ரூபா. பெண்மணிகளின் தனிச் செலவு வேறு. அது நாளொன்றுக்கு முப்பதினுயிரம்.

அந்நாளில் நாட்டில் பலவகைத் தொழில் முறைகள் வளம் பெற்றிருந்தன. பட்டுத்துணிகள் ஏராளமாகப் பலவிடங்களில் நெய்யப்பட்டன.

ஜிஹாங்கீர் மைந்தர் ஷாஜஹான் (1627—58) ஆட்சியில் நாடு செழுமையாயிருந்தது; இராஜ்யம் செவ்வனே நடைபெற்றது. ஷாஜஹான் மயிலாசனத்தில் வீற்றிருந்து ஆட்சிபுரிந்தமை குறிக்கற்பாலது. அம்மயிலாசனத்துக்கென்று செலவழித்த தொகை அறுபது லட்சம் பவுன்.

ஷாஜஹான் காலத்தில் அழகிய இன்ப நிலையங்கள் எழுப்பப்பட்டன. அவற்றுள் ஆக்ரா பள்ளிவாசலும், தாஜ் மஹாலும் சிறந்தன. அவை இரண்டும் வானுலகமென இன்னும் திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

ஷாஜஹானுக்குப் பின்னர் எவர் அரசுரிமை ஏற்பது என்பதைப்பற்றி அவர்தம் பிள்ளைகளுக்குள் போர் மூண்டது. அவருள் அவுரங்கஜீப் என்பவர் தந்தையைச் சிறையிலடைத்துச் சகோதரரைக் கொன்று அரசராயினர்.

அரச பதவியின் பொருட்டுத் தந்தையைச் சிறை செய்து, சகோதரரைக் கொலைபுரிந்த ஒருவரை நற்குணம் வாய்ந்தவர் என்று எப்படிக் கூறுவது? முதற் கோணல் முற்றுங் கோணலாகுமன்றோ? அவுரங்க

ஜீப்பின் ஆட்சி கோணிக் கோணி முடிவில் இந்தியாவில் முஸ்லிம் ராஜ்யமே மறைதற்கு ஏதுவாக நின்றது.

**வீழ்ச்சி**

அவுரங்கஜீப் ஆட்சியில் (1659—1707) அமர்ந்த போது இந்தியாவில் முஸ்லிம் ராஜ்பம் செழிய நிலையி லிருந்தது ; உச்ச நிலையை அடைந்தது என்று கூறலாம். அவர்தம் ஆட்சியில் முஸ்லிம் ராஜ்பம் தென்னாட்டிலும் பரவியது ; அவுரங்கஜீப் ஏக சக்ராதிபதியாக விளங்கி னர். ஏகச்சக்கரம் நிலைபேருக நின்றதா ? இல்லை. அவு ரங்கஜீப் காலததிலேயே முஸ்லிம் ராஜ்யம் தளர்ச்சி யடைந்தது. அக்பர் கட்டிய கோட்டை அவுரங்கஜீப்பால் தகர்க்கப்பட்டது என்று சரித்திர உலகங் கூறுகிறது.

அக்பர் ஆட்சி யாண்புற்று விளங்கியதற்குக் கார ணம் பல கூறலாம். அவற்றுள் சிறந்தது அக்பர் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை நாடி உழைத்ததாகும். அவ் வுழைப் புக்குரிய பயனும் விளைந்தது. அக்பர், குடிமக்களின் மனக் கோயில்களிலெல்லாம் வீற்றிருக்கும் பேறு பெற்றவர்.

அவுரங்கஜீப் ஹிந்து முஸ்லிம் வேற்றுமை நாடி உழைத்தனர். அவ்வுழைப்புகுரிய பயனும் விளைந்தது. குடிமக்களிற் பெருபான்மையோர் அவுரங்கஜீபை வெறுத்தே நின்றனர். குடிமக்களிடத்தில் வேற்றுமை பாராட்டும் எவ்வரசும் வீழ்ந்தே தீரும. இதற்கு எடுத் துக்காட்டு அவுரங்கஜீப் ஆட்சி.

அக்பருக்கு மதபக்தி இல்லாமலில்லை. அவரும் மதபக்தரே. ஆனல் மத வெறியரல்லர். அவுரங்கஜீப்

மத பக்தரல்லர் ; மத வெறியர். பக்தி, இராஜ்யத்தை நல்வழியில் நடத்திற்று ; வெறி, இராஜ்யத்தை வீழ்த்தியது.

அவுரங்கஜீப் முஸ்லிம்களை ஒருவிதமாகவும் ஹிந்துக்களை இன்னொரு விதமாகவும் பார்த்தார் ; நடத்தினார். பெரும்பான்மையோர் மனம் புண்படும் முறையில் அவர்தம் ஆட்சி நடைபெற்றது.

முஸ்லிம் அல்லாதார்மீது சில வரிகள் சுமத்தப்பட்டிருந்தன. அவை அக்பரால் விலக்கப்பட்டன. அவுரங்கஜீப் அவற்றை மீண்டும் புதுக்கினர். அவ்வளவிலாதல் அவர் நின்றனரா? அவர் மகமத் கஜனியைப் பின்பற்றத் தொடங்கினர். ஹிந்து கோயில் பல அவுரங்கஜீப்பால் தகர்க்கப்பட்டன ; காசிக்கோயில் இடிக்கப்பட்டது. ஹிந்துக்கள் மனத்தைப் புண்படுத்தக் கூடிய வேறு பல கொடுஞ்செயல்களும் நிகழ்ந்தன. அவுரங்கஜீப் ஆட்சியில் பெரும்பான்மையோர் மனம் கனன்றது.

பலவிடங்களில் பலவிதக் கலகங்கள் தோன்றின. அவற்றை விரிந்த சரித்திர நூல்களிற் பார்க்க. சிலவற்றை மட்டும் ஈண்டுக் குறித்தல் நலம்.

மராட்டியர் மனம் கொதித்தது. அதன் பயனாகச் சிவாஜி தோன்றி அவுரங்கஜீப் ஆட்சிக்கு அசைவு தேடினர்.

ஜாத் என்னும் ஒரு வகுப்பார் கிளர்ச்சி செய்தனர். அக்கிளர்ச்சி ஒறு சிறு இடத்தில் எழுந்ததாயினும், அது நீண்டகாலம் அவுரங்கஜீப்புக்குத் தொல்லை விளைத்துக் கொண்டே யிருந்தது.

சத்நாமிகள் என்றவர் மதவெறி கொண்டவர். அவுரங்கஜீப் ஆட்சி அவருக்குப் பிடிக்கவில்லை. அவராலும் குழப்பம் நிகழ்ந்தவண்ணமிருந்தது.

சீக்கியர் தலைவர் தேக் பஹதூர் என்பவர் இஸ்லாம் மதத்தைத் தழுவுதல் வேண்டுமென்று வலியுறுத்தப் பெற்றார். அதற்கு அவர் இணங்கவில்லை. அது காரணமாக அவர் கொலை செய்யப்பட்டனர். தேக் பஹதூர் கொலையால் அவுரங்கஜீப் ஆட்சி, சீக்கியர் பகைமையைப் பெற்றது.

சீக் சமயம், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கென்று காணப்பட்டது, அக்பர் ஆட்சி, சீக்கியர் குளத்துக் கென்றும் கோயிலுக்கென்றும் நிலபுலம் விடுத்தது ஈண்டு நினைவூட்டிக்கொள்ளத்தக்கது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கென்று தோன்றிய ஒரு கொள்கையினர் அவுரங்கஜீப்பின் அடாத செயலால் முஸ்லிம் பகைவராயினர். அவரும் அவுரங்கஜீப் ஆட்சிக்கு இடர்விளைக்கப் புகுந்தனர்.

இரஜபுத்திரப் படையெழுச்சியும் இடையிடை நேர்ந்தது. அதனாலும் அவுரங்கஜீப் ஆட்சி நடுக்குற்றது.

முஸ்லிம்கள் எல்லாருமாதல் அவுரங்கஜீப் ஆட்சிக்குத் துணைநின்றனரா ? இல்லை. அவுரங்கஜீப் சுன்னி ஷியா சண்டையைப் பெருக்கினர். அவுரங்கஜீப் சுன்னி. அவர், ஷியாக்களைச் சுன்னிகளாக்க அதிகாரத்தால் முயன்றனர். அதனால் ஷியா வகுப்பினர் அவுரங்கஜீப்பின் ஆட்சியை விரும்பினாரில்லை. அவ்விருப்பமின்மையும் ஒருவிதக் குழப்பத்தை விளைத்தது.

கலகங்களாலும், குழப்பங்களாலும், கிளர்ச்சிகளாலும், அவற்றையொட்டிய பிற நிகழ்ச்சிகளாலும், அவுரங்கஜீப் பல தொல்லைகளுக்குள்ளாயினர். அவுரங்கஜீப்பின் நிலைமையை யுணர்ந்த மாகாணாதிபதிகளும் மற்றவர்களும் அவருக்குக் கீழ்ப்படியாது போர் துவங்கினார்கள்.

அவுரங்கஜீப் ஆட்சி ஏற்பதற்கு முன்னரே மேல் நாட்டவருள் போர்ச்சுக்கீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் இந்தியாவில் ஆங்காங்கே வாணிபஞ் செய்வோராயினர். அவுரங்கஜீப் காலத்தில் பிரஞ்சுக்காரரும் இந்தியா புகுந்து வாணிபஞ்செய்யும் உரிமைபெற்றனர். அந்நாளில் மேல் நாட்டவர் வாணிபமும், மதப்பிரசாரமும், சூழ்ச்சியும், பிறவும் முஸ்லிம் ஆட்சிக்கு ஓரோவழி இடுக்கண் விளைத்தே வந்தன.

தொல்லைகளெல்லாம் ஒன்றுபட்டு அவுரங்கஜீப் ஆட்சியைத் தாக்கின. அவுரங்கஜீப் தமது ஆட்சியிலே போராட்டத்துக்கென்று இருபத்தைந்தாண்டு கழித்தல் நேர்ந்தது. இதனால் அவர்தம் ஆட்சி பல வழியிலும் தாக்குண்டமை பெறப்படுதல் காண்க.

தொல்லைகளின் பிறப்பிடம் எது ? புறமன்று ; அகமே. இத்தத்துவத்தை உணர்ந்து நடப்பது அறிவுடைமை. அவுரங்கஜீப்பின் எண்ணங்கள் அவரது ஆட்சியையே வீழ்த்தும் தொல்லைகளாயின. ' பெருமையுஞ் சிறுமையும் தான்தர வருமே '.

அவுரங்கஜீப்பின் மதவெறி என் செய்தது பாருங்கள் ! ஒரு ராஜ்யத்தையே சாய்த்தது. அதிகாரத்தாலும் சேனாபலத்தாலும் குடிமக்கள் மனத்தைப் புண்படுத்தும் அரசு, நீடூழி நிலவுங்கொல் ?

அதிகாரஞ் சிறந்த தன்று; சேனுபலமும் சிறந்த தன்று; குடிமக்களின் மகிழ்ச்சியே சிறந்தது. அதிகாரமும், சேனுபலமும் எற்றுக்கு? குடிமக்களின் மகிழ்ச்சிக்கே. அதற்கென்று அதிகாரமும் சேனுபலமும் பயன் படல்வேண்டும். தமது எண்ணங்களை நிறைவேற்றுதற் கென்று அதிகாரத்தையும் சேனுபலத்தையும் பயன் படுத்தும் அரசுகள் வீழ்ந்துபடுதல் ஒருதலை.

அவுரங்கஜீப்பின் அதிகாரமும் சேனுபலமும் பெரியனவாகவே இருந்தன. அவை தீயவழியில் பயன்படுத்தப்பட்டன. பெரிய அதிகாரமும் பெரிய சேனுபலமும் என்னவாயின?

பாபர் நாளிலிருந்து செவ்வனே வளர்ந்து வளர்ந்து, அக்பர் காலத்தில் ஓங்கியுயர்ந்த மொகலாய முஸ்லிம் ராஜ்யம், ஓர் அவுரங்கஜீப்பின் மதவெறியால் வீழலாயிற்று. கோனுட்சியில் மன்னர் நல்லவராக வாய்க்கப்பெற்ருல் குடிமக்கட்கு நல்லன விளையும்; மன்னர் தீயவராளுல் * * * * *? அவர் அழிவதுடன் இராஜ்யமும் அழிவதாகும்.

அவுரங்கஜீப் மதவெறியால் மயங்காது அக்பரைப் போலப் பொதுநோக்குடன் ஆட்சிபுரிந்திருந்தால், இந் தியாவில் சுதேச ஆட்சி நிலைத்திருக்கும்; பரதேச ஆட்சி நுழைதற்கே இடம் நேர்ந்திராது. அவுரங்கஜீப்பின் மதவெறி அவரை வீழ்த்தியது; இராஜ்யத்தை வீழ்த்தி யது; நாட்டையும் அடிமைக் குழியில் வீழ்த்தியது. ஆகவே, அரசு எப்பொழுதும் சாதி மத நிற மொழி முதலிய வெறிகளைக் கடந்த ஜனநாயக முறையைக் கொண்டதா யிருத்தல்வேண்டும்.

அவுரங்கஜீப்புக்குப் பின்னே டெல்லியில் சக்கர வர்த்திகள் என்ற பெயரால் பொம்மைகளைப்போலச்

சிலர் சிம்மாசனத்தில் கொலுவீற்றிருந்தனர். அவ ரனைவரும் இடிந்து வீழ்ந்த அக்பர் கோட்டையின் சிதைவுகளாகிய கற்குவியல்களின் நிழலில் நின்று காலங் கழித்தவர். ஆகவே, அவரைக் கணக்கில் சேர்க்க வேண்டுவதில்லை. அவுரங்கஜீப்புடன் முஸ்லிம் ராஜ்ய ஆக்கமே முடிந்தது என்று கொள்க.

அவுரங்கஜீப் ஆட்சியில் கருக்கொண்ட உள்நாட்டுக் குழப்பங்கள் பலதிற உருவந் தாங்கித்தாங்கிப் பெருகின. அவை மத்திய அரசாங்கத்தின் கால்களை முறித்தன; அதனை இயங்க ஒட்டாமல் செய்தன. குழப்பங்களின் இடையிடையே மஹாராஷ்டிரம், இராஜபுதனம் முதலியன எழுந்தும் விழுந்தும் மறைந்தன. ஓர் இந்தியா, ஹிந்து இந்தியா - முஸ்லிம் இந்தியா - போர்ச்சுக்கீசிய இந்தியா - பிரஞ்ச் இந்தியா - இங்கிலீஷ் இந்தியா - என்று பலவகை யாகப் பிரியத்தொடங்கிற்று. இப்பிரிவுகளால் நேர்ந்த பிணக்குகளும் போர்களும் பலப்பல. அவற்றை ஈண்டு விரித்துக்கூற வேண்டுவதில்லை.

இடைக்கால இந்தியாவின் தோற்றுவாய் நன்று யிருந்தது; இறுவாய் இரங்கத் தக்கதாயிற்று. இடைக்கால இந்தியாவின் முற்பகுதியின் இறுதி, ஹிந்து ராஜ்பத்துக்கு முடிவு தேடியது. அதனால் சாதிப் பாகுபாடுகளும், சம்பிரதாயக் கட்டுக்களும், பிறவும் அயலவரைக் கூவி அழைப்பனவாயின. அவ்விந்தியா, முஸ்லிம் ராஜ்ய எழுச்சிக்கு நல்வரவு கூறிற்று என்று பொதுப்படச் சொல்லலாம்.

முஸ்லிம் மன்னர்கள் இந்தியாவைத் தாய்நாடாகக் கொண்டமையால் இந்தியாவின் செல்வம் இந்தியாவுக்கே

பயன்பட்டு வந்தது. முஸ்லிம் ராஜ்யத்தில் இந்தியா வறுமையால் அரிக்கப்படவில்லை ; பஞ்சத்தால் எரிக்கப் படவில்லை. அந்த ராஜ்யத்தில் கலைகள் வளர்ந்தன ; உலகம் வியக்கும் கட்டடங்கள் எழும்பின ; பன்னெடு நாள் சகோதர நேயம் பெருகியே நின்றது.

இடைக்கால இந்தியா செம்மையில் தோன்றி, இடையிடை வெம்மையில் சிறிது சிறிது வீழ்ந்தெழுந்து, மீண்டும் மீண்டும் செம்மையிலேயே வளர்ந்து, முடிவில் வெம்மையில் வீழலாயிற்று.

வெம்மை நோயுற்ற இடைக்கால இந்தியா, ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையை - பிணக்கை - பகைமையை - கண்டு கண்டு, மனம் நொந்து நொந்து, கண்ணீர் உகுத்துக்கொண்டே மறைந்தது. அதனின்றும் தற்கால இந்தியா பிறந்தது.

# ௯. தற்கால இந்தியா

இடைக்கால இந்தியா நோய்வாய்ப்பட்டுக் கிடந்த போது, அதனின்றும் பிறந்தது தற்கால இந்தியா. நோயின் சேய் எப்படி இருக்கும்? தற்கால இந்தியாவின் நிலைமை வெள்ளிடைமலை.

இடைக்கால இந்தியா இரண்டு இராஜ்யங் கண்டது. ஒன்று ஹிந்து ராஜ்யம்; மற்றொன்று முஸ்லிம் ராஜ்யம். இரண்டும் சுதேச ராஜ்யமே.

## சுதேச ராஜ்ய அழிவு

ஹிந்து ராஜ்யம் எப்படி அழிந்தது? தனி வாழ்க்கைக் கேற்பட்ட மதிப்பு, சாதிப் பாகுபாடு, மதத்திலே உட்குழப்பங்கள், சம்பிரதாயக்கட்டுகள், கண்மூடி வழக்க ஒழுக்கங்கள், தீண்டாமை, பெண்ணடிமை முதலியன ஹிந்து ராஜ்யத்தை அழித்தன. மதவெறியால் நேர்ந்த ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை, முஸ்லிம் ராஜ்யத்தைச் சாய்த்தது. ஆகவே, முன்னே குறித்த சாதி முதலியன வும், பின்னே குறித்த ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையும் சுயராஜ்யத்தை அழித்த கொலைக் கருவிகள் என்பதை உளங்கொண்டே தற்கால இந்தியாவை நோக்குவோமாக.

சாதி முதலியனவும் ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை யும் ஒன்றி, ஒருருக்கொண்டு வளர்ந்து, சுதேச ராஜ்யத்தை வீழ்த்திப் பரதேச ராஜ்யத்துக்கு அழைப்பு அனுப்பின. பரதேச ராஜ்யம், அழைப்புக் கிணங்கித் தற்கால இந்தியாவை மணஞ்செய்து கொண்டது. அதன் இயற்கை ஒருவிதம்; இதன் இயற்கை வேறுவிதம். இரண்டின் சேர்க்கையைப் பற்றியும், அச்சேர்க்கையின் விளைவைப்

பற்றியும் விரிவுரை நிகழ்த்த வேண்டுவதில்லை. தற்கால இந்தியா செயற்கை வண்ணமாயிற்று என்று சுருங்கச் சொல்லலாம்.

## மேல்நாட்டுக் கூட்டுறவு

மேல்நாட்டுக் கூட்டுறவு இடைக்கால இந்தியாவி லேயே வேரூன்றியது. மேல்நாட்டினின்றும் முதல் முதல் இந்தியா நோக்கியவர் போர்ச்சுக்கீசியர்; அவருக்குப் பின்னே போந்தவர் டச்சுக்காரர்; டச்சுக்காரரைத் தொடர்ந்து வந்தவர் இங்கிலீஷ்காரர்; இறுதியில் நண் ணியவர் பிரஞ்சுக்காரர். இவரனைவரும் இந்தியாவில் வாணிபஞ் செய்யவே போந்தவரென்று சரித்திர உலகம் சாற்றுகிறது. பின்னே நிலைமை மாறிவிட்டது. போர்ச் சுக்கீசியர் சில ஊர்களில் தங்கியும் சில ஊர்களைச் சொந்த மாக்கியும் வாணிபஞ்செய்து, கடைசியில் கோவா, டையு, டாமன் என்னும் மூன்று ஊரளவில் நின்றுவிட்டனர். டச்சுக்காரர் சிறப்புடன் பலவிடங்களில் வாணிபஞ் செய்து முடிவில் ஒன்றுமில்லா தொழிந்தனர். பிரஞ்சுக் காரர் இந்தியாவையே விழுங்க முயன்று, இறுதியில் சந்திரநாகூர், ஏனம், மாகி, காரைக்கால், புதுச்சேரி என்னும் பதிகளுடன் நிற்கலாயினர். இங்கிலீஷ்காரர் வாணிபம் திருவுடையதாய் இந்தியாவை ஏகபோகமாய் ஆளும் பேறு பெறலாயிற்று.

## பிரிட்டிஷ் வாணிபம்

1600-ம் ஆண்டில் எலிஸபெத் ராணியார் காலத்தில் இங்கிலாந்தில் கிழக்கிந்திய வாணிபக் கூட்டம் (ஈஸ்ட் இந்தியக் கம்பெனி) என்ற ஒன்று திரண்டெழுந்தது.

அக்கூட்டம், இந்தியாவில் வாணிப உரிமை பெறுதற்கு இராணியாரிடமிருந்து ஒரு மடல் தாங்கி இந்தியா நோக்கிற்று. அந்நாளில் இந்தியச் சக்கரவர்த்தியாயிருந்தவர் அக்பர். அவரிடம் இங்கிலாந்து வாணிபக் கூட்டம் தான் ஏந்திவந்த மடலைத் தந்தது. அக்கூட்டம் இந்தியாவில் வாணிபஞ் செய்ய அக்பர் கருணையுடன் இசைந்து வாழ்த்துக் கூறினர்.

முதல் முதல் பிரிட்டிஷார் வாணிபந் தொடங்கிய இடம் சூரத். அங்கிருந்து அவர்தம் வாணிபம் ஆமதாபாத், பர்ஹம்பூர், அஜ்மீர், ஆக்ரா, மஸூலி முதலிய இடங்களிற் பரவிப் பின்னை பம்பாய், சென்னை, கல்கத்தா முதலிய இடங்களிலும் பரவியது.

சென்னையும் பம்பாயும் கல்கத்தாவும் சிறந்த வாணிபத் துறைகளாயின; தலைநகரங்களாயின. இம் மூன்றிடங்களிலும் கட்டப்பெற்ற வாணிபக் கோட்டைகள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யக் கோட்டையாயின.

சென்னை எளிதில் பிரிட்டிஷ் வாணிபருக்குக் கிடைத்தது (1639). சென்னையில் ஒரு பகுதி பிரிட்டிஷ் வாணிபருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டது. இத் தானத்தைச் செய்தவர் விஜயநகரப் பரம்பரையில் வந்த சந்தரகிரி ராஜா - சென்னப்ப நாய்க்கர் - என்று சிலர் கூறுகின்றனர். சென்னப்ப நாயகர் (வன்னியர்) என்று சிலர் சொல்கின்றனர். சென்னையில் பிரிட்டிஷ் வாணிபரால் ஒரு கோட்டை கட்டப்பட்டது.

பம்பாய் மிக முக்கியமானது. அதை இந்தியாவின் நுழைவாயில் என்று மேல்நாட்டவர் கூறுவது வழக்கம். பிரிட்டிஷ் வாணிபர் சூரத்தில் நுழைந்த காலத்தில் பம்பாய் போர்ச்சுக்கீசியர் வயப்பட்டிருந்தது. பிரிட்டி

ஷார் விழி அம்பு பம்பாயின்மீது பாய்ந்துகொண்டேயிருந்தது. அதைப் பெறுதற்குப் பலதிற முயற்சிகளும் செய்யப்பட்டன. நல்லாள் கண்ணோட்டம் பிரிட்டிஷார் மீது சென்றது. பம்பாய் தானே வலியவந்து பிரிட்டிஷ் வாணிபரிடம் சிக்கிக்கொண்டது.

1661-ம் ஆண்டில் இங்கிலாந்து மன்னர் இரண்டாவது சார்லஸுக்கும், போர்ச்சுக்கல் மன்னர் புதல்விக்கும் திருமணம் நடந்தது. பம்பாய், சார்லஸ் மன்னருக்கு ஸ்ரீதனமாகக் கொடுக்கப்பட்டது. அது பின்னே 1668-ம் ஆண்டில் சார்லஸ் மன்னரால் கிழக்கிந்திய வாணிபக் கூட்டத்துக்கு அளிக்கப்பட்டது. அங்கொரு கோட்டை அவ்வாணிபக் கூட்டத்தால் எழுப்பப்பட்டது.

மொகலாய மன்னரின் ஆணைபெற்றுக் கல்கத்தாவில் பிரிட்டிஷார் வாணிபஞ் செய்ய முயன்றனர். அவர்தம் முயற்சி விரைவில் வெற்றியளிக்கவில்லை. பல சிக்கல்களையும் பல எதிர்ப்புக்களையும் கடத்தல் நேர்ந்தது. நாளடைவில் பிரிட்டிஷ் வாணிபர் தமது முயற்சியில் வெற்றி பெறலாயினர். 1690-ல் ஒரு வாணிபத்துறை அமைக்கப்பட்டது. 1697-ல் வில்லியம் கோட்டை கட்டப்பட்டது.

1750-க்குள் சென்னையும், பம்பாயும், கல்கத்தாவும், வேறு சிலவும் பிரிட்டிஷ் வாணிபருக்குச் சொந்தமாய்த் தலைநகரங்களாய்ப் பிரிட்டிஷ் ஆட்சியை இந்தியா முழுவதும் நிலைபெறச் செய்தன.

## பிரிட்டிஷ் ஆட்சிக் கால்கோள்

பிரிட்டிஷ் வாணிபர் முதல் முதல் எந்நோக்குடன் இந்தியா நோக்கினர் என்று அறுதியிட்டுக் கூறுதல்

இயலவில்லை. அவர் வாணிப எண்ணத்துடன் நோக்கினரோ? நாட்டாசைகொண்டு நோக்கினரோ? தெரியவில்லை. உண்மை கடவுளுக்கே தெரியும். சரித்திரக் கண்கொண்டு பார்க்குங்கால் பிரிட்டிஷ் வாணிபர் வாணிப நோக்கு ஒன்றேகொண்டு இந்தியா நோக்கினர் என்று தெரிகிறது. பின்னே மேல்நாட்டின் நிலைமையும், இந்தியாவின் நிலைமையும் அவர்தம் நோக்கத்தில் மாற்றம் விளைத்திருக்கும்.

அந்நாளில் மேல்நாடு ஒரு போர்க்களமாகவே விளங்கிற்று. அங்கே பிரிட்டிஷாருக்கும் பிரஞ்சுக்காரருக்கும், பிரிட்டிஷாருக்கும் டச்சுக்காரருக்கும், மற்ற மற்றவர்க்கும் விட்டுந் தொட்டும் போர்கள நிகழ்ந்த வண்ணமிருந்தன. அப்போர்களின் அதிர்ச்சி, இந்தியாவில் வாணிபஞ்செய்யப் போந்த மேல்நாட்டவர்க்குள்ளும் வீறிட்டது. முன்னெச்சரிக்கையாகப் பிரிட்டிஷ் வாணிபர் தங்கோட்டைகளைப் பீரங்கிகளால் வேய்ந்தனர்.

அவுரங்கஜீப் காலத்திலும் அவருக்குப் பின்னரும் இந்தியா பலவாறு சிதறுண்டமையால் பலவிடங்களில் தனித் தனிச் சிறு சிறு ராஜ்யங்கள் தோன்றலாயின; உட்குழப்பங்களும் நிகழலாயின. இந்தியர் சிலர் பிரெஞ்சுக்காரர் துணையை நாடினர்; சிலர் பிரிட்டிஷார் துணையை நாடினர். இந்தியரின் ஒற்றுமையின்மை பிரிட்டிஷ் வாணிபருக்கு நன்கு புலனாயிற்று. அது பிரிட்டிஷ் வாணிபரின் மனோநிலையை மாற்றியது. அவர்தம் வாணிபநோக்கம் அரசாட்சிமீது திரும்பிற்று.

பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கூட்டம் 1685-ல் ஒரு தலைவரைப் பெற்றிருந்தது. அவர் பெயர் ஜோஷ்வா

சைல்ட் என்பது. அவர் இந்தியாவின் நிலைமையைக் கண்டு தமது வாணிபக் கூட்டத்தை ஓர் அரசியல் கூட்டமாக மாற்ற முயன்றனர். அவர்தம் முயற்சி நாளுக்கு நாள் வெற்றியையே அளித்து வந்தது.

பிரிட்டிஷாரின் மனமாற்றம் அவரை இராஜதந்திரத்தில் ஊக்கியது. அவர்தம் இராஜ தந்திரம் அளப்பரியது. இராஜதந்திரத்தில் பிரிட்டிஷாரைப் போன்றவர் உலகில் இல்லை என்றே கூறலாம். பிரிட்டிஷாரிடமிருந்தே இராஜதந்திரம் உலகில் பரவியது என்று கூறலும் மிகையாகாது. அவர் இந்தியாவிற் செய்த இராஜதந்திரங்களில் இரண்டொன்றை மட்டும் ஈண்டு எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

பிரிட்டிஷார் சூரத்தில் வாணிபஞ் செய்துகொண்டிருந்தபோது ஆண்டுற்ற சிவாஜியை அவர் எதிர்த்தனர். அச்செயல் மொகலாய சக்கரவர்த்திக்கு மகிழ்ச்சியூட்டிற்று. பிரிட்டிஷாருக்குப் போதிய உதவி செய்யவும் அவர் முற்பட்டனர். பின்னே சிவாஜி வெற்றிமேல் வெற்றிபெற்று முடிசூட்டிய காலத்துப் பிரிட்டிஷ் வாணிபர் அவரை வாழ்த்தினர்; அதன் பயனாகச் சில புலங்களையும் பெற்றனர். மொகலாய சக்கரவர்த்திக்கும் சிவாஜிக்கும் இடையே எத்தகை இராஜதந்திரம் பிரிட்டிஷ் வாணிபரால் கையாளப்பட்டது. பாருங்கள்!

பொதுவாக வாணிபப் பாதுகாப்புக்கென்றும், சிறப்பாகப் பிரஞ்சுக்காரர் ஆக்கத்தைக் குலைப்பதற்கென்றும் சொல்லிக்கொண்டு ஆங்காங்குள்ள தங்கோட்டைகளில் பிரிட்டிஷார் பீரங்கிகளை ஏற்றியதும், பிரிட்டிஷ் கப்பற் படையொன்று ஹூக்லியை அடைந்ததும் அவுரங்க

ஜீப்புக்கு ஐயமூட்டின. அவர், பிரிட்டிஷ் வாணிபர் அனைவரையும் தமது ராஜ்யத்தினின்றும் விலகிப் போக வேண்டுமென்று கட்டளையிட்டார். அச்சமயத்தில் அவுரங்கஜீப்பை எதிர்க்குந்திறன் பிரிட்டிஷாருக்கு இல்லை. நிலைமையைப் பிரிட்டிஷ் வாணிபர் ஆழச் சிந்தனை செய்து அவுரங்கஜீப்புக்குப் பணிந்து அவருடன் சமாதானஞ் செய்துகொண்டனர். பிரிட்டிஷ் இராஜதந்திரம் போற்றுதற் குரியதன்றோ ?

அவுரங்கஜீப்பின் மதவெறி அவர்தம் ஆட்சியை நாளடைவில் குலைத்தது. குலைவுக்குப் பெருங்காரணமாக நின்றது ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையே. ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையுணர்வு, பிரிட்டிஷ் வாணிபரை நாட்டை ஆள்வோராக்கியது என்று சுருங்கச்சொல்லலாம்.

அவுரங்கஜீப்பை எதிர்த்துப் போராடியவர் சிலர். அவருள் சிறந்தவர் சிவாஜி. அவுரங்கஜீப் மனத்தில் முஸ்லிம் உலகே நின்றது ; சிவாஜி மனத்தில் ஹிந்து உலகே நின்றது. இருவர் மனத்திலும் இந்தியா என்னுந் தாய்நாடு நிற்கவில்லை. தமது பிணக்கால் அயலவர் ஆதிக்கம் நாட்டிற் பெருகி, முடிவில் சுயஆட்சியை வீழ்த்தும் என்பதை இருவரும் உணர்ந்தாரில்லை. அவர் தம் உணர்வை மதவெறி விழுங்கிவிட்டது. சுதேச ஆட்சியின் வீழ்ச்சிக்குக் காரணர் அவுரங்கஜீப் மட்டுமல்லர்; சிவாஜியும் ஆவர். உள்ளோர்ப் பிணக்கு வெளியூரை அழைத்தல் இயல்பன்றோ ?

இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்யத்துக்குக் கால் கொண்டவர் ராபர்ட் கிளைவ் என்று சரித்திரங்கூறுகிறது. இது புறநோக்கு. அகநோக்கு வேறொன்றுண்டு. அகக்

காரணத்தின்மீது கருத்திருத்தி உண்மை காண முயல்வது அறிவுடைமை.

ராபர்ட் கிளைவ் இங்கிலாந்தில் அங்கும் இங்குந் திரிந்து கொண்டிருந்த கூட்டத்தைச் சேர்ந்தவர். அவர் கிழக்கிந்திய வாணிபக் கூட்டத்தில் கணக்கு வேலைசெய்ய இந்தியா நோக்கினவர். அவ்வொருவரா பெரிய இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்யத்துக்குக் கால் கொள்ள வல்லுநராவர் ? ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை, ராபர்ட் கிளைவின் முயற்சி வெற்றி பெறுதற்கு வலிந்து வலிந்து துணை போயது என்று தெளிக.

## ஒற்றுமை

இந்தியா பெரியது ; மிகப் பெரியது. அதில் பிரிட்டிஷ் ராஜ்யத்தை எளிதில் நிலை பெறுத்தல் எவராலும் இயலாது. ராபர்ட் கிளைவ் எப்படிப் பிரிட்டிஷ் ராஜ்யத்தை நிலை பெறுத்தினர் ? சரித்திரத்தை நோக்குங்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்யங் கால்கொள்ள ராபர்ட் கிளைவ் எத்துணை நாள் முயன்றார் ? எத்துணைப் போர்கள் நடாத்தினர் ? எத்துணைப் பிரிட்டிஷார் உயிர் துறந்தனர் ? எல்லாம் சுருக்கம் ; மிகச் சுருக்கம். ஒரு பெரிய மல்லன் நோயாளியாய் நாடிநரம்பு தளரப் பெறுவனேல், அவனை வீழ்த்துதற்கு அவன் அனைய வேறு ஒரு மல்லன் வேண்டுவதில்லை. அவன் ஒரு சிறு புல்லனால் எளிதில் வீழ்த்தப் படுவன். பெரிய இந்தியா, சாதிமத நோயால் - ஹிந்து முஸ்லிம் வேற்றுமை நோயால் - பீடிக்கப்பட்ட ஒரு நாடாகியது. அதன் சுயஆட்சியைக் கிளைவ் எளிதில் கவரலாயினர்.

இங்கிலாந்து ஒரு சிறிய தீவு. இந்தியா ஒரு பெரிய கண்டம். ஒரு சிறிய தீவுக்கு ஒரு பெரிய இந்தியா எளி

தில் இரையாகியது! இது வியப்போ? வியப்பன்று. ஒற்றுமை என்ன செய்யாது? ஒற்றுமையிற் பிறக்குஞ் சக்திக்கு அளவே கிடையாது. இங்கிலாந்து ஒற்றுமை செறிந்த நாடு; சக்தியுற்றது. இந்தியா வேற்றுமை நிறைந்த நாடு; சக்தியற்றது. வேற்றுமை நிறைந்த நாடு எளிதில் அயலார் வயப்படுவது இயல்பு. பெரிய வேற்றுமை இந்தியா, சிறிய ஒற்றுமை இங்கிலாந்துக்கு இரையாகியதில் வியப்பொன்றுமில்லை. பிரிட்டிஷார் இந்தியாவில் வாணிபஞ் செய்து வந்த காலத்தில் அவுரங்கஜீப்பும் சிவாஜியும் ஒத்துழைத்திருந்தால், பிரிட்டிஷ் ராஜ்யம் இந்தியாவில் கால்கொண்டேயிராது. பிழை எவருடையது?

மக்களுக்குள் பொறாமை - பிணக்கு - பூசல் - எழுதல் இயல்பு. நாட்டு நலத்துக்கு ஊறு நேருங்கால் மக்கள் பொறாமையையும் பிணக்கையும் பூசலையும் மறந்து, நாட்டு நலங்கருதி ஒருமைப்படுதல் வேண்டும். இவ்வியல்பு பொதுவாக மேல்நாட்டவரிடத்திலும் சிறப்பாக இங்கிலீஷ்காரரிடத்திலும் வெள்ளிடைமலையென விளங்குகிறது.

பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கூட்டம் இந்தியாவில் வாணிபஞ்செய்து ஆக்கம்பெற்று வந்தபோது, அவுரங்கஜீப் ராஜ்யம் ஹிந்து-முஸ்லிம் வேற்றுமையால் குலைந்து வரலாயிற்று. அஃது அயலவரால் விழுங்கப்பட்டு வந்ததைக் கண்ணுற்ற காலத்திலும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருமைப்பட விருப்பங் கொண்டார்களில்லை. அவர்கள் பிரிந்து பிரிந்து தனித்தனியே அயலவர்க்குத் துணைநின்று சுதேச ஆட்சியை வீழ்த்தவும் முயன்றார்கள். அறியாமை!

பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கூட்டத்தின் வாணிபம் இந்தியாவில் பெருகி வந்த காலத்தில் வேறு பல பிரிட்டிஷ் வாணிபக்கூட்டங்களுந் தோன்றலாயின. அவை ஒன்றோடொன்று பிணங்கிக் கலகம் விளைக்கத் தொடங்கின. அக்கலகம் மின்னொளிபோல் தோன்றி மறைந்தது. பிரிட்டிஷார் ஒற்றுமை என்னே! பிரிட்டிஷ் இராஜ தந்திரிகள் கலகத்தை நீக்கி, வாணிபக் கூட்டங்களை யெல்லாம் ஒன்றுபடுத்தி விட்டார்கள்.

இந்தியாவில் அந்நாளில் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை நிலவியிருந்தால், பிரிட்டிஷ் வாணிபக் கூட்டங்களுக்குள் ஒற்றுமை காணப் பிரிட்டிஷ் இராஜ தந்திரிகள் முயன்றிருக்க மாட்டார்கள். ஒவ்வொரு கூட்டமும் தனித் தனியே வாணிபஞ் செய்திருக்கும். இந்தியாவின் வேற்றுமைப் பிணக்கு, பிரிட்டிஷாரை விழிக்கச் செய்தது; வாணிபக் கூட்டங்களுக்குள் ஒற்றுமை தேடியது; வாணிப நோக்கை ஆட்சிமீது திருப்பியது.

## ஆர்க்காடும் பிளாஸியும்

ராபர்ட் கிளைவ் இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்யத்தைக் காண எத்தனை வீரப்போர் நிகழ்த்தினார்? நேரிய வீரப்போர் ஒன்றேனும் நிகழ்த்தவில்லை; சூழ்ச்சிப்போர் சில செய்தனர். அவற்றுள் சிறந்தன இரண்டு. ஒன்று ஆர்க்காட்டுப்போர்; மற்றொன்று பிளாஸிப் போர். இரண்டும் பிரிட்டிஷ் ராஜ்யத்தை இந்தியாவில் கால் கொள்ளச் செய்தன என்று சரித்திர ஆசிரியன்மார் கூறுகின்றனர்.

இந்தியாவில் பிரஞ்சுக்காரர் ஆக்கம் மீக்கூரும் நிலை நேர்ந்தது. அவ்வேளையில் ஆர்க்காட்டு நவாப்

பீடத்தை யோட்டி முஸ்லிம் உலகில் இரண்டு கட்சி தோன்றின. ஒன்று சந்தா சாஹெப்பைத் தலைமையாகக் கொண்டது ; மற்றொன்று மகம்மத் அலியைத் தலைமை பூண்டது. சந்தா சாஹெப்புக்கே நாட்டில் செல்வாக்கு உண்டு என்று பிரஞ்சுக்காரர் கருதி அவர் பக்கஞ் சேர்ந்தனர். அதனால் பிரிட்டிஷார் மகம்மத் அலி பக்கம் சேரும் நெருக்கடி ஏற்பட்டது.

சந்தா சாஹெப்புக்கும் மகம்மத் அலிக்கும் மூண்ட போரால் திரிசிராப்பள்ளி முன்னவரால் முற்றுகையிடப் பட்டது. திரிசிராப்பள்ளிக்குள் மகம்மத் அலி அகப்பட்டுக் கொண்டனர். அந்நிலைமை சென்னையிலிருந்த பிரிட்டிஷாருக்குக் கலக்கமூட்டிற்று. அவ்வேளையில், வாணிபக் கூட்டத்தில் கணக்கு வேலைபார்த்துப் பட்டாளத்திற் சேர்ந்து காப்டனாகிய ராபர்ட் கிளைவ் பிரிட்டிஷ் தலைவரை அணுகி, 'இச்சமயத்தில் தலைநகராகிய ஆர்க்காட்டைத் தாக்கினால் திரிசிராப்பள்ளி விடுதலையடையும் ; மகமத் அலியையுங் காத்தல் கூடும்' என்று ஆலோசனை கூறினர். அது தலைவருக்குத் தெய்வ வாக்குப்போலத் தோன்றிற்று. உடனே ராபர்ட் கிளைவ் தலைமையில் ஐந்நூறு பேர் (300 ஹிந்துக்கள் + 200 பிரிட்டிஷார்) கொண்ட ஒரு பட்டாளம் அனுப்பப்பட்டது. கிளைவ் ஆர்க்காடு சென்று அதைப் பற்றிக்கொண்டனர். அச் செய்தி சந்தா சாஹெப்புக்கு எட்டிற்று. சந்தா சாஹெப் தமது மைந்தர் ராஜா சாஹெப் தலைமையில் ஒரு பெரும் படையை ஆர்க்காட்டுக்கு அனுப்பினர். கிளைவுக்கும் ராஜா சாஹெப்புக்கும் போர் நடந்தது. அச்சமயத்திலும் ஹிந்து - முஸ்லிம வேற்றுமையே கிளைவுக்குத் துணை

செய்தது. ஆர்க்காடு, ராஜா சாஹெப்பால் முற்றுகை யிடப்பட்டமையால் கிளைவ் கூட்டத்திற்கு உணவுப் பொருள் நெருக்கடி நேர்ந்தது. ஹிந்துக்கள் கிளைவினி டம் போந்து, ‘ஐய! உணவுப்பொருளைப்பற்றிக் கவலை கொள்ளற்க. நாங்கள் கஞ்சிநீர் உண்டு போரிடுகிறோம். நல்ல சோற்றைப் பிரிட்டிஷாருக்குக் கொடுங்கள்’ என்று தேர்தல் கூறினார்கள். இவ்வாறு ஹிந்துக்கள் ஏன் கூறி னார்கள்? மத உணர்ச்சி அவர்களை அவ்வாறு கூறச் செய்தது. ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையுணர்ச்சி என்னே! இழிவு! வெட்கம்!

சிறு பட்டாளத்தின் துணைகொண்டு ராபர்ட்கிளைவ், பெரும் படையுடன் வந்த ராஜா சாஹெப்பைத் துரத்தினர். அவ்வேளையில் மராட்டியப் பெருஞ் சேனை யொன்று கிளைவுக்குத் துணைபுரிய வேக மாக ஓடிவந்தது. சென்னையினின்றும் வேறு ஒரு படையும் அனுப்பப்பட்டது. இவற்றைக் கொண்டு கிளைவ் ராஜா சாஹெப்பைத் துரத்தித் துரத்தி முறி யடித்துத் திரிசிராப்பள்ளியின் முற்றுகையை யுடைத்து மகம்மத் அலியைக் காத்தனர். ஆர்க்காட்டில் நேர்ந்த வெற்றியே பிரிட்டிஷ் ராஜ்யத்தை முதல் முதல் இந்தியா வில் காலூன்றச் செய்தது. ஆர்க்காட்டு வெற்றிக்குக் காரணம் முஸ்லிம்களுக்குள் நேர்ந்த பிணக்கும், ஹிந்து-முஸ்லிம் வேற்றுமைக் கனலுமேயாகும். சந்தா சாஹெப்பும் மகமத் அலியும் பிணக்குறாதிருந்தால் நிலைமை எவ்விதமாயிருக்கும்?

பிளாஸி சண்டையின் விரிவைச் சரித்திர நூல்களிற் பார்க்க. அதனிடை வஞ்சனையும் சூழ்ச்சியும் மோச

மும் தாண்டவமாடின. வஞ்சனை முதலியன மேல் நாட்டு இராஜதந்திரச் சேய்கள்.

மாகாண நவாப்புகள் மத்திய அரசாங்கத்துக்குத் தொல்லை விளைத்தும் துரோகஞ் செய்தும் ஆங்காங்கே தனித்தனி இராஜ்யம் நடத்தலானார்கள். துரோகிகளுக்குத் தொல்லை விளைக்க வேறு வேறு சக்திகள் உறுத்தெழுந்தன. 'கத்தியால் பிறரை வெட்டுகிறவன் பின்னை கத்தியாலேயே வெட்டப்படுவன்'; 'எவன் எதை விதைக்கிறானோ அவன் அதையே அறுப்பன்'; 'நெல் கழுகாய் நீளுமோ?'

வங்காளத்தில் பிரஞ்சுக்காரருக்கும், பிரிட்டிஷாருக்கும் அடிக்கடி பூசல் நிகழ்ந்தே வந்தது; அதனுடன் ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையும் வளர்ந்தே வந்தது. இரண்டும் வங்காள நவாப் ஸுராஜ்உத் தௌலாவுக்குத் தொல்லை விளைக்கலாயின.

பிரஞ்சுக்காரரால் தமக்கு இடுக்கண் நேருமென்று அஞ்சிப் பிரிட்டிஷ் வாணிபர் தமது கோட்டையைப் பழுதுபார்க்க முயன்றனர். அது ஸுராஜ்உத் தௌலாவுக்கு மருட்சியூட்டிற்று. மருட்சியும், வேறு சிலவும் நவாப்புக்கும் பிரிட்டிஷ் வாணிபருக்கும் போர் மூட்டின. பிரிட்டிஷ் வாணிபர் முறியடிக்கப்பட்டனர். கைதிகளாகப் பிடிபட்ட 146 பிரிட்டிஷார் 18 அடி சதுரமுள்ள ஒரு சிற்றறையில் புளிமூட்டைபோல அடைக்கப்பட்டனரென்றும், அவருள் 123 பேர் உயிர்துறந்தனரென்றுஞ் சொல்லப்படுகின்றன. இதைக் 'கல்கத்தா இருட்டறை' என்று சில சரித்திரக்காரர் கூறுகின்றனர். 'கல்கத்தா இருட்டறை' நிகழ்ச்சி கற்பனையென்று வேறு சில சரித்

திரக்காரர் சொல்கின்றனர். பதினெட்டடி அறை நூற்று நாற்பத்தாறு பேரைக் கொள்ளுமா என்று சில அறிஞர் ஐயுறுகின்றனர். புனைந்துரைகள் புராணங் களில் மட்டுமில்லை; சரித்திரங்களிலும் இருக்கின்றன. புராணப் புனைவுகளிலாதல் தத்துவ நுட்பங்கள் விளங்கு கின்றன. அவற்றால் மக்கள் வாழ்வுக்குத் தீமை விளை வதில்லை; நலன் விளையினும் விளையும். சரித்திரப் பொய் மைகளோ மன்பதையில் பகைமையை வளர்த்துக் கொண்டே போகும். பகைமை மூட்டுதற்கென்றுஞ் சிலர் பொய்மைகளைப் புனைந்துரைப்பதுண்டு.

கல்கத்தாவில் பிரிட்டிஷ் வாணிபர் உற்ற தோல்வி சென்னைக்கு எட்டியது. கிளைவும் வாட்ஸனும் உடனே கல்கத்தா நோக்கினர். முன்னவர் தரைப்படை செலுத்தி யும், பின்னவர் கடற்படை செலுத்தியும் கல்கத்தா சேர்ந் தனர். கிளைவ் விரைந்து போர்த்தீயில் குதித்தாரில்லை. அவர் நிலைமையை ஆராய்ந்தார்; ஸுராஜின் பலத்தை உணர்ந்தார்; சூழ்ச்சியில் இறங்கினார். அச்சூழ்ச்சி இராஜதந்திரத்தின் பாற்பட்டது. சூழ்ச்சியும் இராஜ தந்திரமும் அற்ற அரசியல் பயனற்றதாகுமன்றோ! அரசியலுலகில் சூழ்ச்சியும் இராஜதந்திரமும் இன்று தோன்றவில்லை; நேற்றுத் தோன்றவில்லை. அவை தோன்றி நீண்ட நாட்களாயின. எந்நாட்டுக் கதைகளி லும் அரசியல் சூழ்ச்சியும் இராஜதந்திரமும் பேசப்படு கின்றன. சூழ்ச்சிக்கும் இராஜதந்திரத்துக்கும் மேல்நாட்டு அரசியல் பேர்பெற்றது. கிளைவ் தமது நாட்டு நலன் கருதிச் சூழ்ச்சியிலிறங்கி இராஜதந்திரத் திருவிளையாடல் புரியலாயினர் போலும்!

கிளைவின் சூழ்ச்சியும் இராஜதந்திரமும் நவாப்பைச் சார்ந்த மூவரை விழுங்கின. அவர் மாணிக்சந்த், மீர்ஜாபர், உமச்சந்த் என்பவர். மாணிக்சந்த் கல்கத்தா அதிகாரி; மீர்ஜாபர் சேனைத் தலைவர்; உமச்சந்த் நவாப்பின் இரகசியங்களைத் தெரிந்தவர். மும்மூர்த்திகளும் தேசத் துரோகஞ் செய்ய ஒருப்பட்டார்கள்.

கிளைவ் முதன் முதல் கல்கத்தாவிலுள்ள பஜ்பஜ் என்ற கோட்டையைத் தாக்கிப் பார்க்க முயன்றனர். மாணிக்சந்த் கிளைவை எதிர்ப்பவர்போல நடித்துச் சேனைகளுடன் புறமுதுகிட்டு ஓடினர். மாணிக்சந்தின் தோல்வி நவாப்பின் நெஞ்சைப் பிளந்தது. அதைக் கிளைவ் உணர்ந்து ஸுராஜ்உத தெளலாவுடன் உடன்படிக்கை செய்துகொள்ள முற்பட்டனர். உடன்படிக்கை முயற்சி நவாப் ஸுராஜ்உத்துக்கு நல்லதெனத் தோன்றிற்று. உள் நிகழ்ச்சி ஒன்றும் தெரியாத ஸுராஜ், பிரிட்டிஷார் வாணிபத்தை உரிமையுடன் நடாத்தவும், அவர் விரும்பும் போது கோட்டைகளைப் பழுதுபார்க்கவும் உடன் பட்டனர். இவ்வுடன்படிக்கையோடு தம்மைப் பிடித்த அஷ்டமத்துச் சனி தொலைந்தது என்று நவாப் கருதினர். கிளைவின் ஆழ்ந்த சூழ்ச்சியும் இராஜதந்திரமும் நவாப்புக்கு விளங்கவில்லை.

ஐரோப்பாவில் பிரிட்டிஷாருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் போர் மூண்டது. அது காரணமாகப் பிரிட்டிஷ் கப்பற்படையும் பிறவும் வங்காளத்துக்கு அனுப்பப் பட்டன. பிரிட்டிஷார் படை பெருகுவது ஸுராஜ்உத் தெளலாவுக்குப் பிடியாமலிருந்தது. அவர் அடிக்கடி பிரிட்டிஷாரை எச்சரிக்கை செய்தே வந்தனர்.

கிளேவ், மீர்ஜாபர் துணைகொண்டும், உமச்சந்த் துணைகொண்டும் நவாப்பை வீழ்த்தச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தனர். போரில் வெற்றி பெற்றால் நவாப் பதவி மீர்ஜாபருக்கு வழங்குவதாகக் கிளேவ் கூறினர். கிளேவ் கூற்று மீர்ஜாபரை வயப்படுத்தியது.

உமச்சந்த் பேராசைக்காரர். அவர் பெருந்தொகை எதிர்பார்த்தனர். உமச்சந்தின் பேராசை கிளேவுக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும், உமச்சந்தின் உதவி கிளேவுக்குத் தேவையாயிருந்தது. சிறிய உமச்சந்தை ஏமாற்றல் பெரிய கிளேவினாலா முடியாது ? கிளேவ் தமது இயற்கைக்குரிய சூழ்ச்சியிலிறங்கினர். இரண்டு பத்திரம்-ஒன்று சிவப்புக் காகிதத்திலும் மற்றொன்று வெள்ளைக் காகிதத்திலுமாக - சித்தஞ் செய்யப்பட்டன. அவற்றில் கையெழுத்திடும்படி கிளேவ், வாட்ஸனைக் கேட்டனர். வாட்ஸன் இணங்கவில்லை. கிளேவ் முன்னும் பின்னும் சிந்தித்து, முடிவில் தாமே வாட்ஸன் கையெழுத்திட்டுச் சிவப்புப் பத்திரத்தை உமச்சந்தினிடஞ் சேர்த்து, வெள்ளையைத் தாமே வைத்துக்கொண்டனர்.

சூழ்ச்சிகளெல்லாம் முற்றுப்பெற்றன. 1757-ல் பிளாஸிப் போர் முழக்கு எழுந்தது. கிளேவ் படைகளைத் திரட்டிப் போர்க்களம் புகுந்தனர். நவாப்புக்காகத் துரோகி மீர்ஜாபர் படைகள்சூழப் போர்க்களம் அடைந்தனர். இரண்டு சேனைகளும் கைகலந்து போரில் இறங்கின. படைத்தலைவர் மீர்ஜாபர் திடீரென மறைந்தனர். தலைவர் மறைவு சேனைகளைத் திகைக்கச் செய்தது. வெற்றி கிளேவுக்கு எளிதில் கிடைத்தது. மீர்ஜாபர் வங்காள - பீஹார் - ஒரிஸா - நவாப் ஆக்கப்பட்டார்.

மீர்ஜாபரால் லட்சக்கணக்கான பொருள் வாணிபக் கூட்டத்துக்கு வழங்கப்பட்டன ; கிளைவுக்கு நல்ல வருவா யுள்ள ஜாகிர் ஒன்று கொடுக்கப்பட்டது.

உமச்சந்த் பெற்ற வெகுமதி என்ன ? நவாப்பின் இரகசியங்கள் வெளிவரத் துணைபுரிந்த மோசக்காரர் கதி என்னவாயிற்று ? அவர் ஏமாற்றப்பட்டார். அவர் தம் பொறிபுலன்கள் கலங்கின ; மனமுடைந்தது ; மதிமயங் கிற்று ; பித்தந் தலைக்கேறிற்று. கடைசியில் வஞ்சகர் மாண்டார்.

ஸுராஜ்உத் தெளலாவை வஞ்சித்து வங்காள நவாப் பாகிய மீர்ஜாபர் நீண்டகாலம் பதவியிலிருக்கும் பேறு பெற்றனரா ? பாவம் ! பாவம் ! கிளைவ் வங்காள வாணி பக் கூட்டத்தின் தலைவராகி மீர்ஜாபரைத் தம் வழியே ஆட்டி வந்தனர். அந்நாளில் டெல்லி சக்கரவர்த்தியால் வங்காள இராஜப்பிரதிநிதி என்று ஒருவர் அனுப்பப் பட்டனர். அவருக்கு அயோத்தி நவாப் துணை நின்றனர். இராஜப்பிரதிநிதியென்று ஒருவர் வருதலை மீர்ஜாபர் விரும்பவில்லை ; கிளைவும் விரும்பவில்லை. அது காரண மாகப் பாடலிபுத்திரத்தில் 1758-ல் போர் நிகழ்ந்தது. இராஜப்பிரதிநிதி என்று வந்தவரும் அயோத்தி நவாப்பும் முறியடிக்கப்பட்டனர்.

டெல்லி சக்கரவர்த்தி வங்காளத்தை விட்டுவிட மனங்கொள்ளவில்லை. அவர் பிரஞ்சுக்காரர் செல்வாக் கைக்கொண்டு வங்காளத்தை அச்சுறுத்த முயன்றனர். அம்முயற்சி பிரிட்டிஷ் கோட்டைக்கெதிரில் தலைகாட்டா தொழிந்தது.

மீர்ஜாபருக்கு ஒரு புத்துணர்ச்சி பிறந்தது. வங்காளம் மத்திய அரசாங்கத் தொடர்பை முற்றும் அறுத்து நிற்பது நல்லதாக அவருக்குத் தோன்றவில்லை. அதைப் பற்றிய சிந்தனை மீர்ஜாபருக்கு உண்டாயிற்று. அதை யுணர்ந்த பிரிட்டிஷ் வாணிபர், மீர்ஜாபர் மத்திய அரசாங்கத்துடன் அந்தரங்க உறவு கொண்டுள்ளாரென்று, அவர் மீது பழிசுமத்தி, அவரை விலக்கினர். வங்காள நவாப் பதவி மீர்ஜாபரின் மருகராகிய மீர்காஸிமுக்கு வழங்கப் பட்டது. பிரிட்டிஷ் வாணிபர் நல்ல பரிசு பெற்றனர். மீர்காஸிம் பிரிட்டிஷ் வாணிபக் கூட்டத்துக்குப் பெருந் தொகை நன்கொடை யளித்ததோடு ஆண்டுக்கு ஐம்பது லட்சம் வருவாய் தரவல்ல மூன்று ஜில்லா தந்தனர்.

மீர்காஸிமின் நவாப் வாழ்வாதல் நிலைத்ததா? எல்லாக் காரியங்களிலும் பிரிட்டிஷார் தலையிடுவது மீர் காஸிமை விழிக்கச் செய்தது. அவர் அதை விரும்ப வில்லை. மீர்காஸிம் தலைநகரை மூர்ஷிதாபாத்திலின்றும் மாங்கீருக்கு மாற்றினர்; ஜெர்மன் வீரர் ஒருவர் தலைமையில் சேனைகளை விருத்தி செய்தனர்; அயோத்தி நவாப் புடன் உறவுகொண்டனர்; மற்ற வாணிபரைப்போலப் பிரிட்டிஷ் வாணிபரும் சுங்கவரி கட்டவேண்டுமென்று வலியுறுத்தினர். பிரிட்டிஷ் வாணிபர் வெகுண்டெழுந்து மீர்காஸிமின் பழைய - புதிய தலைநகரங்களைப்பற்றிக் கொண்டனர். மீர்காஸிம், அயோத்தி நவாப்பின் துணை கொண்டும், அப்பொழுது அயோத்தியிலிருந்த சக்கர வர்த்தி ஷா அலம் உதவிகொண்டும் பக்ஸார் அடைந்தனர். ஸர் ஹெக்டர் மன்ரோ தலைமையில் பிரிட்டிஷ் படை பக்ஸாரில் புகுந்து 1764ல் மீர்காஸிமைத் தோற்கடித்தது

பக்ஸார் போரும் வெற்றியும் சரித்திரத்தில் பேர்பெற்று விளங்குவன. பிரிட்டிஷாருக்கு அயோத்தியின் வழி தானே திறந்து கொண்டது. அயோத்தி நவாப், பிரிட்டிஷாருக்குப் பணிந்தனர்; சக்கரவர்த்தியும் இணங்கினர்.

மீர்காஸிம் டெல்லி சென்று உயிர் துறந்தனர். மீண்டும் மீர்ஜாபர் வங்காள நவாப் ஆக்கப்பட்டார். அவருக்குப்பின் அவர் மைந்தர் நவாப் ஆனார். மைந்தர் நிலை என்ன ஆயிற்று? அவர் உபகாரச் சம்பளம் பெறும் மனிதரானார். ஆட்சி புரிவோர் பிரிட்டிஷாரே ஆயினர்.

பிரஞ்சுப் படைகளின் பாதுகாப்புக்கென்று வட சர்க்கார் ஜில்லாக்கள், படைத் தலைவர் புஸ்ஸிக்கு நைஜாமால் அளிக்கப்பட்டன. 1758-ல் புஸ்ஸி, பிரிட்டிஷாரோடு போர்புரியத் தென்னாடு நோக்கினர். அச்சமயத்தில் ஒரு துரோகம் நடந்தது. பிரஞ்சு நண்பராயிருந்த விஜயநகரத்து மன்னர் திடீரென்று கிளைவின் துணை நாடினர். வாய்த்த சமயத்தைக் கிளைவ் விடுவரோ? அவர் சுவைகண்ட பூனையல்லவோ? கிளைவ் துணைபுரிய ஒருப்பட்டு வடசர்க்காருக்குப் பட்டாளம் அனுப்பினர். போர் நடந்தது. பிரஞ்சுக்காரர் தோல்வியுற்றனர். அதை முன்னிட்டு நைஜாமுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. அதன்பயனாக, நாற்பதுலட்சம் வருவாயுடைய வடசர்க்கார் ஜில்லாக்களைப் பிரிட்டிஷாரிடம் ஒப்புவிக்கவும், தம் ராஜ்யத்தில் பிரஞ்சுக்காரர் தொடர்புகளையெல்லாம் அறுக்கவும் நைஜாம் இசைந்தனர்.

சிலவிடங்களில் பிரிட்டிஷ் வாணிபரின் நேராட்சி நடைபெற்றது. பலவிடங்களில் அவரால் ஆட்சி நடத்துவிக்கப்பட்டது. இதைப்பற்றிக் கிளைவைச் சிலர் கேட்

பராம். அதற்குக் கிளைவ், 'பலவிடங்களிலும் ஆட்சி செலுத்தும் நிலைமையை நாங்கள் அடைந்தே யிருக் கிறோம். ஆனால் இப்பொழுது அவ்விடங்களில் நேராட்சி எங்களால் செலுத்தப்படின், அஃது ஐரோப்பாவிலுள்ள பல நாட்டவர்க்குப் பொறாமை யூட்டும். அதனால் சில இடர் உண்டாகலாம். ஆதலால், பல இடங்களில் ஆட்சியை நடாத்துவிக்கும் வழியில் நின்று எங்களுக்கு ஆக்கந் தேடிக்கொள்கிறோம்' என்று விடையளிப்ப ராம். என்ன தந்திரம்! இராஜ தந்திரம்!

ஆர்க்காட்டுப் போரும் பிளாஸிப் போரும் இந்தி யாவில் பிரிட்டிஷ் ராஜ்யத்தை நிலைபெறுத்தின என்று சரித்திரஞ் சொல்கிறது. இரண்டிடத்திலும் நேரிய வீரப்போர்கள் நடைபெற்றனவா என்று சரித்திர உலகை நோக்கிக் கேட்கிறேன். அவ்விடங்களில் சூழ்ச்சிப் போர்களே நடைபெற்றன. அச் சிறுமைப் போலிப் போர்களும் பிரிட்டிஷாரால் மட்டும் நடத்தப்படவில்லை. அவற்றில் ஹிந்துக்கள் கலப்புப் பெரிது மிருந்தது. வேறிடங்களில் நடைபெற்ற போர்களும் சூழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டனவேயாம்.

ஆர்க்காட்டு நவாப் பீடத்தைக் குறித்துச் சந்தா சாஹெப்புக்கும் மகமத் அலிக்கும் நேர்ந்த பிணக்கும், பிளாஸியில் மீர்ஜாபரும் உமச்சந்தும் செய்த துரோக மும், அவற்றை முன்னிட்டுக் கிளைவ் நிகழ்த்திய சூழ்ச்சி யும் இராஜதந்திரமும் பிரிட்டிஷ் ராஜ்யத்தை இந்தியா வில் கால்கொள்ளச் செய்தன. அக்கால் எத்தகையது? அதன்கண் அறம் உண்டா? இந்தியாவில் பிரிட்டிஷ்

ராஜ்யம் அறக்கால் கொண்டெழுவில்லை என்று சுருங்கச் சொல்லலாம்.

## கிளைவின் இறுதி நிலை

கிளைவ் செல்வர் வயிற்றிற் பிறந்தவரல்லர். அவர் ஓர் ஏழை. அவர் கணிதராயமர்ந்தபோது அவரிடம் காசுப்பையேயில்லை. கிளைவ் பின்னே சிறு சேனைத் தலைவராய், பெருஞ்சேனைத் தலைவராய், கவர்னராய், பெரிய கவர்னராய் இங்கிலாந்துக்குப் பெருஞ்செல்வராகவே திரும்பினர். அவருக்குச் செல்வம் எப்படிக் கிடைத்தது? அவர் வாணிபக்கூட்டச் சார்பில் சம்பளம் முதலியன பெற்றதோடு தனித்த முறையிலும் பொருளீட்டினர் என்று சொல்லப்படுகிறது. தனித்த முறையில் அவர் பொருளீட்டியது தவறு என்பது சிலரது கருத்து.

கிளைவின் சொத்து விவரம் சில சரித்திர நூல்களில் வந்துள்ளது. கிளைவின் சொந்த உபயோகத்துக்கென்று மீர்ஜாபரால் ஒதுக்கப்பட்ட ஜாகீரின் அக்கால வருவாய் 30,000 பவுன். இங்கிலாந்தில் வாணிபக் கூடங்களில் கிளைவ் வைத்திருந்த நிதி 220,000 பவுன். அவர் வசத்தில் 25,000 பவுன் மதிப்புடைய மாணிக்கங்களிருந்தனவாம்; 27,000 பவுன் பெறும் நிலபுலங்களிருந்தனவாம்; கொடுக்கல் வாங்கலுக்கென்று ஒரு பெருந்தொகையும் இருந்ததாம்.

கிளைவ் இந்தியாவில் நடந்துகொண்ட முறைகள் சிலவற்றைப்பற்றியும், அவர் பொருட்செல்வம் பெற்ற விதத்தைப் பற்றியும் காமன்ஸ் சபையில் குற்றச்சாட்டுகள்

திரண்டெழுந்தன. பிரிட்டிஷ் ராஜ்யத்தை இந்தியாவில் கண்ட ஒருவர்மீது சுமத்தப்பட்ட குற்றங்கள் ஏற்கப்படுமோ? 'கிளைவினிடம் சில குற்றங்களிருக்கலாம்; ஆனால் அவர் நாட்டுக்குப் பெருந்தொண்டு செய்தவர்' என்று சொல்லப்பட்டது. பார்லிமெண்டும் அரசும் கிளைவுக்குச் சாதகமாகவே நின்றன.

இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்யத்துக்குக் கால் கொண்ட ஒருவரது இறுதிநிலை இரங்கத்தக்கதாயிற்று! லார்ட் கிளைவ் நஞ்சுண்டு தற்கொலை செய்துகொண்டார்! அந்தோ! கிறிஸ்து பெருமான் அவரைக் காப்பாராக. கிளைவின் வாழ்க்கை வரலாற்றைக் கூர்ந்து நோக்கினால் அதன்கண் மனச்சான்றும் விளங்கா நிற்கிறது. கிளைவ் முற்றும் மனச்சான்று அற்றவரல்லர் என்றே தெரிகிறது.

ஆசையோ ஆவேசமோ எழும்பும்போது சிலர் அதற்கு எளிதில் இரையாகித் தாம் இன்னது செய்வதென்று உணராமலே என்னென்னவோ செய்வர். அது அடங்கிய பின்னைத் தஞ்செயல்மீது சிந்தனைசெலுத்துவோருமுளர்; சிந்தனை செலுத்தாது கிடப்போருமுளர்; சிந்தனை செலுத்துமளவில் நிற்பவருமிருப்பர்; சிந்தனை செலுத்தித் தஞ்செயல் தகாதது என்று உணர்ந்ததும் வருந்தி வருந்திக் கதறுவோருமிருப்பர். வருந்துவோர் கரையேறுதற்கு வழிகாணும் பேறு பெறுவர். கிளைவ் இவ்வினத்தைச் சேர்ந்தவர்.

இந்தியாவில் பிரிட்டிஷ்ராஜ்யத்தைக் காண்டல்வேண்டுமென்ற ஆசை - பேராசை - மீக்கூர்ந்தபோதெல்லாம், கிளைவ் அதன்வண்ணமாய்த் தகாதசெயல்களையும் செய்யத் துணிந்தனர். பேராசைப் பேய், கிளைவை நெறியல்லா

நெறியிலுந் தூரத்தியது. பின்னே ஓய்ந்த நேரங்களில் கிளைவ், 'நாம் ஏன் அதைச் செய்தோம்; இதைச் செய்தோம்' என்று வருந்துவோராயின ரென்று ஊகித்தற்கு இடமிருக்கிறது. இதுபற்றிய குறிப்புக்கள் கிளைவ் வரலாற்றில் சில உண்டு. அவற்றில் இரண்டொன்றை ஈண்டு வெளியிடுவது நலம்.

கிளைவ் லார்ட் பட்டம் பெற்று இறுதியாக இந்தியா போந்தபோது, அவர் தம் நண்பர் ஒருவருக்கு ஒரு முடங்கல் தீட்டினர். அதன் சாரம் வருமாறு :—

......நம் பெயர் கெட்டே வருகிறது. இங்கிலீஷ்காரரின் பண்டைப் பெருமைகள் நினைவிலுறும் போதெல்லாம் கண்ணீர் பெருகுகிறது. பரலோகம் இல்லையோ! ஆண்டவன் இல்லையோ! தீச்செயல்களுக்கு உட்படாதவாறு நடக்க உறுதி கொண்டுள்ளேன்; நம்மவரிடை வளர்ந்து வரும் தீமைகளை ஒழிக்க முயன்றே தீர்வேன். அதனால் எனக்கு என்ன இடுக்கண் நேரினும் நேர்க......

தமக்குப் பின்னே வாரன் ஹேஸ்டிங்ஸ் கவர்னர் ஜெனரலாய போது, கிளைவ் அவருக்கொரு கடிதம் விடுத்தனர். அதில் அவர்,

நடுநிலை பிறழற்க; மனச்சான்றுக்கு மாறுபட்டு எதையுஞ் செய்யற்க; குடிகளுக்கு நியாயம் வழங்கவே முயல்க.

என்றொரு குறிப்புப் பொறித்தனர்.

இவ்விரு கடிதமும் கிளைவின் மனச்சான்றுடைமையையும், மனந்திரும்பும் இயல்பையும் உணர்த்துவன. கிளைவ் இறுதியில் தற்கொலை செய்துகொண்டதும் ஈண்டு உன்னற்பாலது.

கிளைவின் அடாத செயல்கள் முதல் அமைச்சர் வில்லியம் பிட்டாலும் அவரைச் சேர்ந்த சிலராலும்

வெறுக்கப்பட்டன என்றும், அவர்தம் வெறுப்பே பார்லி மெண்டில் குற்றச்சாட்டாக உருக்கொண்ட தென்றுஞ் சொல்லப்படுகின்றன. கிளைவின் அடாத செயல்கள் பெரிதும் எதை அடிப்படையாகக் கொண்டு நிகழ்ந்தன ? இந்தியாவில் பிரிட்டிஷார் ஆக்கம்பெறுதல் வேண்டுமென்ற எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டே நிகழ்ந்தன. கிளைவின் அடாத செயல்களை வெறுத்த 'ஒழுக்கச் சீலர்கள்' அவரால் இந்தியாவில் காணப்பெற்ற பிரிட்டிஷ் ராஜ்யம் வேண்டாமென்றோ பிரிட்டிஷ் வாணிபமெல்லாம் இந்தியாவை விடுத்துத் திரும்புதல் வேண்டுமென்றோ முயன்றதுண்டா என்று கேட்கிறேன். வில்லியம் பிட், கிளைவின் செயலை அருவருத்தாரென்று சொல்லப்படு கிறது. வெறும் அருவருப்பால் என்ன விளையும் ? ஒருவர்மீது சிறுபான்மையோர் குற்றஞ் சுமத்துவதும், பெரும்பான்மையோர் அவரை ஆதரிப்பதும் ஒருவித இராஜதந்திர வித்தை. கிளைவ்மீது குற்றஞ்சாட்டி அவரை விடுதலை செய்ததும் இராஜதந்திர வித்தையாகவுமிருக்கலாம்.

கிளைவ் பின்னாளில் கிறிஸ்துவின் பிள்ளையாக முயன்றிருக்கலாம். ஆனால் அவர் பேயின் பிள்ளையாய் இந்தியாவில் செய்தனவெல்லாம் இந்தியாவின் உரிமைக்குக் கேடே விளைத்தன. பேய்ச்செயல் இந்தியாவில் நிலைத்து விட்டது. ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை, கிளைவைப் பேயின் பிள்ளையாக்கி, அவர் வாயிலாகப் பாரதமாதவுக்குத் தளையிட்டதுபோலும்! வேறு என்ன கூறுவது ? காரணமின்றிக் காரியமுண்டோ ?

கிளைவுக்குப் பின்னே வாரன் ஹேஸ்டிங்ஸ் (1771-85) கவர்னர் ஜெனரல் பதவியில் அமர்த்தப்பட்டார். வாரன் ஹேஸ்டிங்ஸ் வாணிபக் கூட்டத்தில் பலதிற வேலை பார்த்துப் பார்த்துப் பண்பட்டவர்; இந்தியர் மனோ நிலையை நன்குணர்ந்தவர்; இந்தியரை ஏய்க்கும் வித்தையில் கைபோயவர்; எதையும் துணிந்து செய்வோர்; திறமையாளர்; மனச்சான்றில்லாதவர். அவரைச் சரித்திர ஆசிரியர் சிலர் போற்றியும் உள்ளனர்; சிலர் தூற்றியும் உள்ளனர். உலகில் கீழ்களையும் போற்றுவோரிருத்தல் இயல்பு. அரசியல் உலகில் பொய்ம்மையாளரே பெரிதும் போற்றிப் புகழப்படுவது வழக்கம்.

இந்தியாவில் பிரிட்டிஷ் வாணிபர் மனம் போனவாறு நடக்கத் துணிந்தனர்; நெறியல்லா நெறி நின்றும் பொருளீட்டப் புகுந்தனர். அவர்தம் அடாத செயல்கள் இங்கிலாந்துக்கு எட்டின. பார்லிமெண்டின் கருத்து இந்திய வாணிபக் கூட்டத்தின்மீது திரும்பியது. ஒரு சட்டம் நிறுவப்பட்டது. அச்சட்டத்தில் கிழக்கிந்திய வாணிபக் கூட்டம் பார்லிமெண்டுக்கு உத்தரவாதமாகவே நடத்தல் வேண்டுமென்றும், வரவு செலவுக் கணக்கைப் பார்லிமெண்டுக்குச் செலுத்தல் வேண்டுமென்றும், கவர்னர் ஜெனராலுக்குத் துணைபுரிய நால்வரடங்கிய ஒரு சபை அமைக்கப்பெறல் வேண்டுமென்றும், அச்சபையிலுள்ள பெரும்பான்மையோர் வழியே கவர்னர் ஜெனரல் நடத்தல் வேண்டுமென்றும், ஒரு நீதிமன்றம் அமைக்கப்படல் வேண்டுமென்றும் குறிக்கப்பட்டன. சட்டம் நன்னோக்கத்துடன் செய்யப்பட்டது.

சட்டம் தானே இயங்குமோ? அதை இயக்குவோர் மனிதரே. மனிதரால் சட்டம் நன்முறையில் இயக்கப் படுவதும் உண்டு; தீயமுறையில் இயக்கப்படுவதும் உண்டு. சட்டத்தின் நலனும் தீமையும் அதைச் செலுத்தும் மனிதரையே பொறுத்து நிற்கின்றன. குணம் சட்டத்தினின்றும் பிறப்பதன்று; மனிதரிடத் தினின்றும் பிறப்பது. நற்குணம் பிறப்பதற்குரிய கல்வி, அரசு, வாழ்க்கை முதலியன வேண்டும்.

பார்லிமெண்ட் நிறைவேற்றிய சட்டம் நால்வரைக் கொண்ட சபையின் போக்கையொட்டியே இயங்குவது. நால்வருள் பெரும்பான்மையோர் கவர்னர் ஜெனரலுடன் சேர்ந்து கெடுதிசெய்யப் புகுந்தால் சட்டம் என்ன செய்வதாகும் என்பது கருதற்பாற்று.

வாரன் ஹேஸ்டிங்ஸ் ஆட்சியில், சட்டப்படி தொடக் கத்தில் அமைந்த சபையிலிருந்த சிலர் அவருடன் மாறு பட்டு நின்றனர். பின்னே அதில் அங்கம் பெற்றவர் வாரன் ஹேஸ்டிங்ஸ் வழியே பெரிதும் நிற்கலாயினர். சபை ஒழுங்குபெற நடைபெற்றிருந்தால், வாரன் ஹேஸ் டிங்ஸ் ஆட்சியில் அடாத செயல்கள் நடைபெற்றிரா. அவர்மீது குற்றச்சாட்டுகளும் பார்லிமெண்டில் தலை காட்டியிரா. பர்க் என்னும் கொண்டல், மாரியும் பொழிந்திராது.

வாரன் ஹேஸ்டிங்ஸ் நிகழ்த்திய தவறுதல்கள் பலப்பல. அவற்றுள் சிறந்தன நான்கு. ஒன்று நந்தகுமாரர் கொலை; இன்னொன்று ரோஹிலர் ஒடுக்கம்; வேறொன்று சைத்சிங் வீழ்ச்சி; மற்றொன்று அயோத்தி பேகங் களின் சிறை.

ஹேஸ்டிங்ஸ் லஞ்சம் வாங்கியதாக நந்தகுமாரர் அரசாங்க சபையினர்முன் முறையிட்டு செய்தார். சபையிலிருந்த சிலர் ஹேஸ்டிங்ஸினுடன் ஒத்துழைப்பவரா யில்லை. அதே சமயத்தில் நந்தகுமாரர்மீது பொய்க் கையெழுத்துக் குற்றஞ் சாட்டப்பட்டு நீதிமன்றத்தில் விசாரணை செய்யப்பட்டது. நந்தகுமாரர் தூக்குத் தண்டனை விதிக்கப் பெற்றார். தம்மைக் காத்துக் கொள்ள வாரன் ஹேஸ்டிங்ஸ் செய்த அநியாயச் சூழ்ச்சி யாலேயே நந்தகுமாரர் கொலையுண்டாரென்று மக்கள் பேசலானார்கள்.

மராட்டியர் முன்னேறி வருவதை ரோஹிலர் விரும்பவில்லை. அதற்கென்று அவர் அயோத்தி நவாப்பை அடைந்தனர். நவாப் நாற்பது லட்சம் ரூபா கேட்டனர். ரோஹிலர் எதிர்பார்த்தபடி மராட்டியர் டெல்லியில் முன்னேறி வரவில்லை. அவர் தாமே திரும்பி விட்டனர். அதுகண்ட நவாப் வாளா கிடந்தாரில்லை; தொகையைப் பெறவே முயன்றார். ரோஹிலர் மறுத்தனர். நவாப் நெஞ்சில் வன்மம் உண்டாயிற்று. வன்மம் ரோஹிலரை ஒடுக்க எழுந்தது. நவாப்பால் ஹேஸ்டிங் ஸின் துணை நாடப்பட்டது. ரோஹிலருக்கும் பிரிட்டி ஷாருக்கும் எவ்விதப் பகைமையுமில்லை. ஆனாலும் ஹேஸ்டிங்ஸ், நவாப்பின் விருப்பத்துக்கு இணங்கினர். மராட்டியர் செல்வாக்கை ஒழிக்க அயோத்தி நவாப் பின் துணை தேவை என்று ஹேஸ்டிங்ஸ் கருதினரென்று சொல்லப்படுகிறது. உண்மை தெரியவில்லை. எக்காரணமு மின்றிக் குற்றமற்ற ரோஹிலர் ஒடுக்கப்பட்டனர். குற்றமற்றவரை ஒடுக்குதற்குச் சைன்யச் செலவென்று

ஐம்பது லட்சம் கேட்கப்பட்டது. அத்தொகை நவாப் பால் அளிக்கப்பட்டது. கோராவும் அல்லஹாபாத்தும் ஐம்பது லட்சத்துக்கு நவாப்புக்கு விற்கப்பட்டன.

சைத்சிங் காசி மன்னர். அவர் பிரிட்டிஷ் வாணிபக் கூட்டத்துக்கு உட்பட்டவரானார். அக்கூட்டத்துக்கு ஆண்டு தோறும் இருபதினாயிரம் பவுன் அவரால் செலுத்தப்பட்டு வந்தது. அத்தொகையுடன் மேலும் ஐம்பதினாயிரம் ஹேஸ்டிங்ஸால் கேட்கப்பட்டது. அவ்வாறே சைத் ஸிங் ஈராண்டு எழுபதினாயிரம் செலுத்தி வந்தனர். பின்னை சுணக்கம் ஏற்பட்டது. அதற்குப் பதினாயிரம் பவுன் அபராதம் விதிக்கப்பட்டது. ஆயிரம் பிரிட்டிஷ் குதிரைப்படையைப் பாதுகாக்க வேண்டுமென்றும் சைத் ஸிங்குக்கு வாரன் ஹேஸ்டிங்ஸால் அறிவிக்கப்பட்டது. அதற்குச் சைத் ஸிங் தமது இயலாமையைத் தெரிவித்து, இரண்டு லட்சம் பவுன் கொடுத்துவர இசைந்தனர். ஹேஸ்டிங்ஸ் ஐந்து லட்சம் கேட்டனர். காசி வாசிகள் பெருங்கிளர்ச்சி செய்தார்கள். உடனே சைத் ஸிங் பதவியினின்றும் நீக்கப்பட்டார். அப்பதவி அவர்தம் மைத்துனர் நாராயணர்க்கு வழங்கப் பட்டது. நாராயணர்க்கு ஒரு நிபந்தனை விதிக்கப்பட்டது. அது, சைத் ஸிங் செலுத்தி வந்த தொகையினும் இருபங்கு கொடுத்துவரல் வேண்டுமென்பது. ஹேஸ்டிங் ஸின் அடாத செயல்களைக் கடவுளுங் கண்டுகொண்டு பார்த்தே இருந்தனர்.

அயோத்தி பீகம்கட்கு முறைப்படி கிடைக்க வேண்டிய உரிமைப் பொருளை அவர்கள் பெறாதவாறு அவர்களைக் காவலில் வைத்து இடர்ப்படுத்த வாரன்

ஹேஸ்டிங்ஸின் மனம் எழுந்தது. அவர்தஞ் செயல்களில் பெண்மணிகள் சிறையிலிருந்து வாழுமாறு செய்தது மிகக் கொடுமையானது.

வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் இந்தியாவில் பிரிட்டிஷ் வாணிபம் பெருகி வந்ததும், இந்தியத்தொழின் முறைகள் அருகி வந்ததும் மறக்கத் தக்கனவல்ல.

இந்தியாவில் பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சியை ஒழுங்கு படுத்த மீண்டும் ஒரு சட்டம் பார்லிமெண்டில் புதுக்கப் பட்டது. அது 'பிட்ஸ் சட்டம்' என்று சொல்லப் பட்டது. அச்சட்டம் தமது அதிகாரத்தைக் குறைத்தற் பொருட்டே செய்யப்பட்டதென்று வாரன் ஹேஸ்டிங்ஸ் ஐயுற்றுப் பதவியினின்றும் விலகித் தாய்நாடு சேர்ந்தனர். அரசும் அமைச்சும் அவருக்கு நன்மொழி கூறின. வெட்கம்! வெட்கம்!

'பிட்ஸ் சட்டத்தின்' மீது ஹேஸ்டிங்ஸுக்கு ஐயம் தோன்றுவானேன்? குற்றமுள்ள நெஞ்சம் வாளா கிடக்குமோ? குறுகுறு என்று உறுத்தல் இயல்பே.

வாரன் ஹேஸ்டிங்ஸ் இங்கிலாந்து சேர்ந்ததும் அவர் மீது இருபது குற்றங்கள் சுமத்தப்பட்டன. விசாரணை பார்லிமெண்ட் சார்பில் லார்ட்ஸ் முன்னிலையில் துவங்கப் பட்டது. எட்மண்ட் பர்க் முதலியோர் ஹேஸ்டிங்ஸை எதிர்த்துப் பேசிய பேச்சுக்களில் அவர் இந்தியாவில் நிகழ்த்திய அட்டூழியங்கள் வெள்ளிடை மலையென விளங்கிக் கொண்டிருத்தலைக் காணலாம். அவற்றைக் கேட்டவரிற் சிலர் கண்ணீர் உகுத்தனராம்; சிலர் மயங்கி விழுந்தனராம்.

வழக்கு ஏழு ஆண்டு நடந்தது. ஹேஸ்டிங்ஸுக்குப் பெரும்பொருள் செலவாயிற்று. கடைசியில் ஹேஸ்டிங்ஸ் விடுதலையடைந்தனர். அவர் மனிதர் முன்னே விடுதலையடைந்தனர்; கடவுள் முன்னிலையில் விடுதலையடைந்திருப்பரோ? அவர் தம் தவறுதல் குறித்து வருந்தினரோ என்னவோ தெரியவில்லை.

இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்ய விதையிட்டவர் இருவர். அவரிட்ட விதை எத்தகையது? சரித்திரக் கண்ணாடி கொண்டு பார்க்க. அவ்விதை தனது வளர்ச்சிக்குரிய நீர் காற்று ஒளி முதலியவற்றைப் பெற்று ஓன்றிச் செடியாகி மரமாகி நின்றது.

## வாணிபர் ஆட்சியின் ஆக்கம்

வாரன் ஹேஸ்டிங்ஸுக்குப் பின்னே - பிரிட்டிஷ் வாணிபக் கூட்ட ஆட்சி இறுதிவரை - கவர்னர் ஜெனரல்களாக வந்தவர் லார்ட் காரன்வாலிஸ், ஸர் ஜான்ஷோர், மார்க்குயிஸ் வெல்லெஸ்லி, மீண்டும் லார்ட் காரன்வாலிஸ், லார்ட் மிண்டோ, லார்ட் ஹேஸ்டிங்ஸ், லார்ட் அம்ஹெர்ஸ்ட், லார்ட் வில்லியம் பெண்டிக், லார்ட் அக்லண்ட், லார்ட் எலின்பரோ, லார்ட் ஹார்டிஞ்ச், லார்ட் டல்ஹௌஸி, லார்ட் கானிங் ஆகியவர். (லார்ட் கானிங் காலத்தில் இந்திய ஆட்சி பிரிட்டிஷ் வாணிபரிடமிருந்து பார்லிமெண்டால் எடுத்துக் கொள்ளப் பட்டது - அதாவது இங்கிலாந்து மன்னருடையதாயிற்று). இவர்கள் ஆட்சியில் நிகழ்ந்த சண்டைகளும், சீர்திருத்தங்களும், பிரதேசச் சேர்க்கைகளும், இன்ன பிறவும் பிரிட்டிஷ் ராஜ்யத்தை நிலைபெறுத்தி வளர்த்து வாழச் செய்தன.

சண்டைகளில் சிறந்தன சில. அவை மைசூர் சண்டைகள், மராட்டிய சண்டைகள், நேபாள சண்டை, பர்மா சண்டைகள், சீக்கியர் சண்டைகள், எல்லைப்புறச் சண்டை முதலியன. அச்சண்டைகளின் தோற்றமும் நிகழ்ச்சியும் முடிவும் பிரிட்டிஷ் வாணிபரை இந்தியாவையே ஆள்வோராக்கின.

அவுரங்கஜீப்பின் அறியாமையை நேயர்கள் மறத்தலாகாது. அவர்தம் உள்ளத்தெழுந்த மதவெறி இந்தியாவை அடிமைக் குழியில் வீழ்த்தியது. அவர்தம் ஆட்சியிலிருந்து மத்திய அரசாங்கத்தின் உயிர்ப்பு, படிப்படியே அற்றுக்கொண்டே போயிற்று. மதவெறியால் விளைந்த பயனை இனியாதல் இந்தியா உணர்ந்து நடக்குமா ? மதவெறியால் மத்திய அரசு குலைந்தது ; மற்ற உறுப்புக்களுங் குலைந்தன.

மாகாணாதிபதிகளும் மற்ற மற்றவர்களும் ஆங்காங்கே தனித்தனி ராஜ்யத்தை அமைத்து மத்திய அரசை வஞ்சித்தார்கள். அவ்வஞ்சனை பின்னே தங்களைத் தாக்கி வீழ்த்துமென்று சகோதரர்கள் உணரவில்லை போலும் !

வஞ்சனை தன்னலத்தினின்றும் எழுவது. தன்னலம் அன்பை - சகோதர தர்மத்தை - ஒற்றுமையை - எங்ஙனம் வளர்ப்பதாகும் ? அதன் இயல்பு, ஒற்றுமையைக் குலைப்பதன்றோ ? வஞ்சனை தன் கடனை ஆற்றியது ; நேரிய முறையில் ஆற்றியது.

மாகாணாதிபதிகளிடத்தும் மற்ற மற்றவர்களிடத்தும் ஒற்றுமைகுலைந்தது; வேற்றுமைக்கு உரிய பொறாமை பொங்கிப் பொங்கி எழுந்தது ; அது வஞ்சகர் ஒவ்வொரு

வரையும் அலைத்தது ; அவர்தம் உள்ளத்தைப் போர்க்களமாக்கிற்று. பொறாமையால் எழுந்தன கலகங்கள்— உட்கலகங்கள் - முஸ்லிம் நாவப்புகட்கும் ஹிந்து மன்னர்கட்கும் பூசல்கள் - முஸ்லிம் நவாப்புகளுக்குள்ளும் ஹிந்து மன்னர்களுக்குள்ளும் பிணக்குகள் - போராட்டங்கள்! இவ்வாறெழுந்த உட்குழப்பங்கள் அயலவர் ஆட்சிக்கு விருந்தாயின ; சூழ்ச்சிக்கும் பிரித்தாளலுக்கும் இடந்தந்தன. நாட்டு நவாப்புகளும் மன்னர்களும் தங்களுக்குள் பிணங்கி, இந்தியச் சக்கரவர்த்தியின் தயவால் வாணிபஞ் செய்யவந்த அயலவரிடம் சரண் புகுந்தார்கள். உடன்படிக்கை செய்துசெய்து ஒருவரை ஒருவர் காட்டிக் கொடுக்க விரைந்தனர் ; முனைந்தனர். மீர்ஜாபர்களும் உமச்சந்தர்களும் எங்கணுந் தோன்றினார்கள் ; அயலவர் கண்ணிற்பட உலவினார்கள்.

குறைபாட்டை எவரிடஞ் சுமத்துவது ? நம்மவரிடத்திலா ? மற்றவரிடத்திலா ? சிலர் அயலவரிடத்தில் சுமத்துகின்றனர் ; பிரிட்டிஷாரின் சூழ்ச்சியும் பிரித்தாளும் முறையும் இந்தியாவை அடிமைப்படுத்தின என்று கூறுகின்றனர். பிரிட்டிஷாரிடம் சூழ்ச்சியும் பிரித்தாளும் தந்திரமும் இருக்கலாம். அவர்தம் சூழ்ச்சிக்கும் பிரித்தாளலுக்கும் இடந் தந்தவை எவை ? வெள்ளம் பள்ளத்தை நாடிச் செல்வது இயற்கை. பள்ளமில்லாத இடத்தில் வெள்ளம் என் செய்யும் ?

சாதிவெறியும், மதவெறியும், இன்ன பிறவும் இந்தியாவின் ஒருமைப்பாட்டைக் குலைத்தன. இந்தியா பன்முகக் காட்சி அளித்தது. அது வாணிபஞ் செய்ய வந்த பிரிட்டிஷாருக்குப் புலனாயிற்று. வாணிபர் தத்துவ

ஞானிகளா ? தியாகிகளா ? நிலைமை அவரை வாளா கிடக்க விடவில்லை; அவர்தங் கடனாற்ற எழுந்தனர்.

பிரிட்டிஷார் கட்டுப்பாடுடையவர் ; ஒற்றுமையுடையவர் ; தம் நாட்டுக் காரியங்களில் தனித்த பகைமை முதலியன பாராட்டி அதற்குக் கேடு சூழக் கனவிலுங் கருதாத பெருமை வாய்ந்தவர் ; இராஜ தந்திரத்தில் சிறந்தவர். அவர் ஒற்றுமை குலைந்த இந்தியாவைக் கண்டு வாளா கிடப்பரோ ? அவர் வாளா கிடந்திருப்பின்; இந்தியா வேறு ஒருவருக்கு - பிரஞ்சுக்காரருக்கு - இரையாயிருக்கும். வேற்றுமை நோயால் அழுகுறும் ஒரு நாட்டைக் கண்டு எவரே வாளா கிடப்பர்! நண்டைச் சுட்டு நரியைக் காவல் வைத்தால் நரி வாளா கிடக்குமா ? ஆதலால், குறைப்பாட்டை அயலாரிடஞ் சுமத்தாது, நம் மீது சுமத்தி, நல்லுணர்வு பெற முயல்வதே அறிவுடைமை.

பிரிட்டிஷ் வாணிபர் அவ்வப்போது நிலைமைக்கேற்றபடி போரிடவேண்டிய சமயத்தில் போரிட்டும், பொறுமை காக்கவேண்டிய காலத்தில் பொறுமை காத்தும், தந்திரமாக உடன்படிக்கை செய்தும், பிரதேசத்தைச் சேர்த்தும் இந்தியா முழுவதையும் தம் வயப்படுத்தினர். பெயரளவில் சக்கரவர்த்தி என்ற ஒரு பொம்மை டெல்லியில் கொலுவீற்றிருந்தது. நாளடைவில் அதுவும் சாய்ந்தது. இந்தியா முழுவதும் பிரிட்டிஷ் வாணிபக்கூட்ட ஆட்சியே ஓங்கி நின்றது.

இந்தியா ஒன்றுபட்டுப் பிரிட்டிஷாரை எதிர்த்ததேயில்லை. இந்தியா ஒன்றுபட்டு நின்றால் அதை எதிர்க்க ஐரோப்பா முற்றும் ஒன்றுபட்டுத் திரண்டெழுந்தாலும்,

அது வெற்றிபெறல் அரிதாகும். ஒன்றுபட்ட இந்தியாவை எதிர்த்துப் போராடும் தீவினையைப் பிரிட்டன் பெறவேயில்லை. அது பிரிட்டன் தவம்போலும்! பிரிட்டிஷாருக்கு ஆளாகியது ஒருமை இந்தியா அன்று. அந்நாளில் ஒருமை இந்தியா ஏது? முன்னாளில் ஒருமை இந்தியா இருந்தது. அது மறைந்தது. இந்தியாவின் தீவினை! பிரிட்டனின் நல்வினை! அறத்தால் ஒன்றுபட்ட அசோகன் இந்தியா - அன்பால் ஒன்றுபட்ட அக்பர், இந்தியா - குலையா திருப்பின், பிரிட்டிஷார் வாணிபராகவே காலங்கழித்திருப்பா; ஆள்வோராகியிரார். சாதி இந்தியா - மதவெறி இந்தியா - ஹிந்து இந்தியா - முஸ்லிம் இந்தியா - வேற்றுமை இந்தியா - நோய் இந்தியா - கோழை இந்தியா - தானே வலிந்து வலிந்து பிரிட்டனுக்கு அடிமையாகியது.

இந்தியாவை வீழ்த்தியது எது? பிரிட்டிஷ் வாளா? அன்று. பின்னை எது? இந்திய வாளே. சாதிமத வெறி, சம்பிரதாயச் சிறுமை, கண்மூடி வழக்க ஒழுக்கம் தீண்டாமை, பெண்ணடிமை, ஹிந்து முஸ்லிம் வேற்றுமை முதலிய இருப்பு எஃகுத் துண்டங்கள் வாளாக வடிந்தன. அவ்வாள் - அவ்விந்திய வாள் - இந்தியாவை வீழ்த்தியது. அவ்வாளைப் பயன்படுத்தப் பிரிட்டிஷ் வாணிபரை இந்தியாவுக்கு ஆண்டவன் அனுப்பினன் போலும்! இந்தியாவின் குறைபாடுகளை அடிக்கடி குறிப்பிடுவது பற்றி மன்னிக்குமாறு நேயர்களை வேண்டுகிறேன். அவற்றை அடிக்கடி நினைவூட்டினால் வருங்கால இந்தியாவாதல் திருந்தி நலம் பெறும் என்பது எனது கருத்து.

வாரன் ஹேஸ்டிங்ஸுக்குப் பின் வந்த ஒவ்வொரு கவர்னர் ஜெனரலின் காலத்தில் நிகழ்ந்தனவற்றை விரிந்த சரித்திர நூல்களிற் பார்க்க. தாலி புலாக நியாயம் பற்றிச் சிலவற்றை மட்டும் சுருங்கிய முறையில் ஈண்டுக் குறிக்கிறேன். அக்குறிப்புக்களால் பிரிட்டிஷ் ராஜ்யம் எப்படி இந்தியாவில் வளர்ந்து வாழ்வு பெற்றதென்பது புலனாகும்.

லார்ட் காரன் வாலிஸ் (1786-93) ஓர் ஐரிஷ் கனவான்; அமைச்சர்; பிட்டின் நண்பர். பார்லிமெண்டில் நிறைவேறிய இரண்டு சட்டம் அவர்தம் ஆட்சிக்குப் பெருந்துணை செய்தன. ஒன்று, கவர்னர் ஜெனரல் அதிகாரம் நிர்வாக சபைக்குக் கட்டுப்படாது அதைக் கடந்து நிற்றலையுடையது; இன்னொன்று, கவர்னர் ஜெனரலுக்குச் சேனாதிபதி பதவியும் வழங்குதலைக் கொண்டது. இதனால் காரன் வாலிஸ் தாமே சேனைத் தலைவராய்ப் போர் புரிந்து திப்புவைப் பணியச் செய்யும் பேறு பெற்றது ஈண்டுக் குறிக்கற்பாலது.

லார்ட் காரன் வாலிஸால் இந்திய ஸிவில் ஸெர்விஸுக்குக் கால்கொள்ளப்பட்டது. ஒவ்வொரு ஜில்லாவிலும் நிர்வாகத்துக்கென்று ஒவ்வொரு கலெக்டரும், நீதிக்கென்று ஒவ்வொரு நீதிபதியும் அமருமாறு அவரால் ஏற்பாடு செய்யப்பட்டது. ஜமீன்தாரி முறை அவரால் கோலப்பட்டது.

ஸர் ஜான் ஷோர் (1793-8) எப்பிணக்கிலுந் தலையிடாது ஆட்சி புரிந்தவர் என்று சொல்லப்படுவோர். அவர் காலத்தில் மராட்டியர்க்கும் நைஜாமுக்கும் போர் நடந்தது. ஸர் ஜான் ஷோர் அப்போரில் தலையிடாமல் ஒதுங்கி நின்றனர்.

மார்க்குயிஸ் வெல்லெஸ்லி (1798-1805)காலத்தில் நெப்போலியன் எகிப்துவரை போந்து இந்திய மன்னர் சிலர்க்குத் துணைபுரிய முயன்றனர். அந்நாளில் நைஜாம், ஹொல்கார், சிந்தியா, திப்பு முதலியோர் அவைக்களங்களிலும் பட்டாளங்களிலும் பிரஞ்சுக்கார ரின் செல்வாக்கு மிகுந்தே நின்றது. வெல்லெஸ்லியின் திறமையும் இராஜதந்திரமும், பிரஞ்சுக்காரரால் பலபல வழியில் நேர இருந்த இடுக்கண்கள் நேராதவாறு செய் தன. பிரஞ்சுக்காரர் செல்வாக்கை முற்றுங் களைந் தெறிந்த பெருமை வெல்லெஸ்லிக்கு உண்டு.

போதிய அளவில் பாதுகாப்புப் பெறுத ராஜ்யங் களே அடிக்கடி பிறர் உதவியை நாடுகின்றன என்றும், அந்நாட்டத்தால் பலதிற இடர்கள் விளைகின்றன என்றும் உணர்ந்த வெல்லெஸ்லி ஒரு முறை கோலினர். அதனுல் இடர்கள் விளையா என்பது அவரது நம்பிக்கை. முறை யின் உள்ளுறை என்னை ? போதிய அளவில் காப்புப் பெறுத சுதேச சமஸ்தானங்களைக் காக்கும் பொறுப்பைப் பிரிட்டிஷார் ஏற்றுக் கொள்வ தென்பதும், அதற் கெனப் பிரிட்டிஷ் படைகள் நிறுத்தப் படுமென்பதும், படைகளின் செலவைச் சமஸ்தானங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதும் முறையின் உள்ளுறையாகும். இதற்கு முதல் முதல் இணங்கினவர் நைஜாம். இந்த ஏற்பாட்டால் பிரஞ்சுக்காரர் செல்வாக்கு சுதேச சமஸ் தானங்களில் நிர்மூலமாகியது.

லார்ட் காரன்வாலிஸ் ஆட்சியில் பணிவுற்ற திப்பு மீண்டும் தலைதூக்கினர். திப்பு ஒடுக்கப்பட்டனர். ஹைதரால் கட்டுப்பட்டுத் திப்புவால் காத்து

வளர்க்கப் பெற்றுவந்த மைசூர் ராஜ்யக் கோட்டை வெல்லெஸ்லியால் தகர்க்கப்பட்டது. மைசூர் முழுவதும் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்டது. பழைய மன்னர் வழியில் பிறந்த ஒருவருக்கு மைசூர் பிரிட்டிஷா ரால் அளிக்கப்பட்டது. மைசூர் மன்னர் பிரிட்டிஷ் ஆட்சிக்கு அடங்கியே நடந்தனர்.

ஆர்க்காட்டு வெற்றிக்குப் பின்னே கர்நாடக நவாப் மகமத் அலி பிரிட்டிஷார் தயவாலேயே ஆட்சிபுரிந்து வந்தனர். மகம்மத் அலிக்குப் பின் வந்தவர் பண முடை யால் பிரிட்டிஷ் பட்டாளச் செலவைச் செலுத்தல் இயலா தவராயினர். அக்காரணத்தாலும், வேறு சில காரணங் களாலும் வெல்லெஸ்லி காலத்தில் தென்னிந்தியா நேரே பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்டது. ஆர்க்காட்டு நவாப் 'நவாப்' என்ற பெயரளவில் உபகாரச் சம்பளம் பெறு வோராயினர்.

மஹாராஷ்டிரம் முதலியன பிரிட்டிஷ் ராஜ்யத்துடன் சேர்க்கப்பட்டன. அயோத்தி பிரிட்டிஷ் பார்வையில் வரலாயிற்று.

வெல்லெஸ்லி பெர்ஷியாவுடன் உறவு கொண்டு, பிரிட்டிஷ் வாணிபத்தை ஆங்கே பரவச்செய்தனர். அது ருஷ்யாவுக்கு ஏமாற்றத்தை உண்டு பண்ணிற்று.

மார்க்குயிஸ் வெல்லெஸ்லி ஆட்சியில் இந்தியாவில் பிரிட்டிஷ் மணமே கமழ்ந்தது. டெல்லி சக்கரவர்த்தி வெறும் பொம்மைக் காட்சி வழங்கி வந்தனர்.

மீண்டும் லார்ட் காரன் வாலிஸ் (1805-7) கவர் னர் ஜெனரலாய் ஈராண்டு சேவை செய்தனர்.

லார்ட் மிண்டோ, (1807-13) வாரன் ஹேஸ்டிங்ஸ் மீது குற்றஞ் சாட்டியவருள் ஒருவர். அவர் சமாதான நேயர். காலநிலை அவரது இயற்கைக் குணத்தின் வழி அவரை நடக்க விடவில்லை.

லார்ட் மிண்டோ ஆட்சியில் இந்தியப் படைகள் பெருக்கப்பட்டன ; பார்லிமெண்டில் நிறைவேறப் பெற்ற சட்டத்தின்படி பிரிட்டிஷ் வாணிபக் கூட்டம் அரசியல் கூட்டமாக மாற்றப்பட்டது ; வாணிபரும், பாதிரிமாரும் இந்தியாவில் தங்கும் உரிமை பெற்றனர் ; அரசின் சார்பில் கிறிஸ்துவக் கோயில் அமைக்கப்பட்டது ; இந்தியக் கல்வி வளர்ச்சிக் கென்று லட்சம் ரூபா செலவழிக்கும் உரிமை உண்டாகியது ; ஸிவில் ஸர்விஸிலும் நீதிமன்றங்களிலும் சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன.

நெப்போலியனால் பெர்ஷியாவுக்கு ஒரு கூட்டம் அனுப்பப்பட்டதென்று கேள்வியுற்றதும், லார்ட் மிண்டோ விரைந்து ஒரு கூட்டதைப் பெர்ஷியாவுக்கும் அப்கானிஸ்தானத்துக்கும் அனுப்பியது அவர்தந் திறமையைப் புலப்படுத்துவதாகும்.

லார்ட்டு மிண்டோ ஆட்சியில் காஸ்மீரம் பிரிட்டிஷ் ராஜ்யத்தில் சேரலாயிற்று.

லார்ட் ஹேஸ்டிங்ஸ் (1813-23) இந்தியா போந்ததும் இரண்டு சண்டையில் தலைப்படல் நேர்ந்தது. ஒன்று மராட்டியருடையது ; மற்றொன்று நேபாள கோரட்சகருடையது. மராட்டியர் கோர யுத்தம் செய்து முடிவில் ஒடுங்கினர். கோரட்சகரும் சமாதானத்துக்கு உட்பட்டு நேபாளத்தைச் சுயேச்சை நாடாக்கிக் கொண்டனர். இவ்விரண்டு போரும் முறையே ஏறக்குறைய பம்பாய்

மாகாணத்தையும், குமாயூன், நையினிடால், அல்மோரா, கார்வால், சிம்லா முதலிய ஜில்லாக்களையும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்படுத்தின.

மராட்டியர் சமாதானத் துறையில் இறங்கினமையால் அவர்தம் பட்டாளங்கள் குலைந்துபோயின. பட்டாளங்களில் அமர்ந்திருந்த பிண்டாரிகள் பிழைப்புக்கிடமின்றி வருந்தி வருந்திக் காய்ந்து எரிந்து கொள்ளையிடப் புகுந்தார்கள். கிராமங்கள் பலவகையில் இடர்ப்படலாயின. லார்ட் ஹேஸ்டிங்ஸின் பெருமுயற்சியால் பிண்டாரிகளின் கொடுமை ஒடுக்கப்பட்டது.

லார்ட் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் சிங்கப்பூர் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டது சிறப்பாகக் குறிக்கத் தக்கது.

லார்ட் ஹேஸ்டிங்ஸ் ஆட்சியில் இந்தியப் பத்திரிகையுலகம் உருக்கொண்டது. பத்திரிகை உரிமையில் அவர் நல்லெண்ணம் வாய்ந்தவர் போலும்! 1818-ல் கல்கத்தாவில் ஆங்கிலத்திலும் தாய்மொழியிலுமாக இந்தியப் பத்திரிகைகள் முதல் முதல் வெளியாயின.

இந்திய மாகாண மொழிகளின் வளர்ச்சியில் லார்ட் ஹேஸ்டிங்ஸ் ஊக்கங் காட்டினரென்று தெரிகிறது. அதற்கென்று அவர் சொந்தப் பணத்தையும் செலவு செய்தனரென்று சொல்லப்படுகிறது. இந்தியர் ஆங்கிலம் பயில வேண்டுமென்று லார்ட் ஹேஸ்டிங்ஸ் விரும்பி உழைத்தனர்.

லார்ட் ஆம்ஹேர்ஸ்ட் (1823-8) ஆட்சியில் சொல்லத்தக்கது முதல் பர்மா சண்டை. பர்மியர் வங்காள மாகாண எல்லைப்புறங்களிற் புகுந்து பிரிட்டிஷ் பதிகளைப் பற்றலாயினர். பிரிட்டிஷ் படைகள் கடல் வழியாகப்

பர்மாவில் நுழைந்து பெரும்போர் புரிந்து பர்மிய மன்ன ரைப் பணியவைத்தன. அம் மன்னரிடத்திருந்து ஒரு கோடி ரூபா சண்டைச் செலவுக்கென்று வாங்கப்பட்டது. ஆஸாம், அரக்கன் முதலிய சில இடங்கள் பிரிட்டிஷார் வயமாயின.

லார்ட் ஆம்ஹெர்ஸ்ட் காலந்தொட்டுச் சிம்லா வேனிற்காலத் தலைநகராகியது.

லார்ட் வில்லியம் பேண்டிக் (1828-35) சென்னை யில் கவர்னரா யிருந்தவர்; இந்திய அநுபவம் பெற்றவர். அவர் காலத்தில் பார்லிமெண்ட்டில் நிறைவேறிய ஒரு சட்டத்தின்படி 'வங்காள கவர்னர் ஜெனரல்' என்றது, 'இந்திய கவர்னர் ஜெனரல்' என்று மாற்றப்பட்டது. அச்சமயம் சட்ட உறுப்பினராயிருந்தவர் மேக்காலே என்ற பேரறிஞர்.

லார்ட் பெண்டிக், கவர்னர் ஜெனரலாகியதும் பர்மா சண்டை காரணமாக நேர்ந்த பொருளாதார நெருக்கடி யைத் தீர்க்க அவர் பெரு முயற்சி செய்தனர். உத்தி யோகஸ்தர் படிச்செலவுகள் சிலவிடங்களில் விலக்கப் பட்டன; சிலவிடங்களில் குறைக்கப்பட்டன; வரிகளி லும் சிலவகைச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன.

லார்ட் பெண்டிக் செய்த சீர்திருத்தங்களால் நீதி இலாகாக்களில் ஜில்லா முன்ஸிப் - டெபுடி கலெக்டர் - பதவிகளில் இந்தியர் அமரலாயினர்; மன்றங்களில் பேசப்பட்டு வந்த பாரஸீகத்துக்குப் பதிலாக ஆங்காங் குள்ள மாகாண மொழிகள் பேசப்படலாயின.

லார்ட் வில்லியம் பெண்டிக் காலத்தில் வங்காளத் தில் ஓர் இந்தியப் பெரியார் இருந்தனர். அவர் ராஜா

ராம் மோஹன்ராய் என்பவர். அவர் ஹிந்து மதத்தி லுள்ள சாதிக்கட்டுக்களையும், கண்மூடி வழக்கவொழுக் கங்களையும், பிற ஆபாசங்களையும் ஒழிக்கப் பிரம சமா ஜம் கண்ட அருள் வள்ளலார். சமூக சீர்திருத்தஞ் செய்ய லார்ட் பெண்டிக்குக்கு ராஜாராம் மோஹன் ராயின் உத்தேசமும் தொண்டும் ஊக்கமூட்டின. சதி என்னும் உடன்கட்டையேறுங் கொடிய பழக்கத்தை ஒழிக்கப் பெண்டிக்கால் சட்டஞ் செய்யப்பட்டது; சென்னை மாகாணத்தின் வடக்கே கோந்தார் என்னும் வகுப்பாரிடைப் பரவி நின்ற நரபலி அவரால் நிறுத்தப் பட்டது.

'தக்ஸ்' என்றொரு கூட்டத்தார் நாடு முழுவதும் பரவித்திரிந்து மக்களை ஏமாற்றி வந்தனர். அவர் மத் திய இந்தியாவைத் தாயகமாகக் கொண்டவர். அவர்க் கென்று சில குறிகள் சில ஜாடைகள் உண்டு. அவை மற்றவர்க்குத் தெரியா; விளங்கா. அக் கயவர்கள், தங்களைக் காளி பக்தர்களென்றும் வரப்பிரசாதிக ளென்றும் சொல்லிக்கொண்டு, சந்நியாசிகளாகவும் யாத் திரிகர்களாகவும் திரிந்து, வழிப்போக்கர்களை மறித்துக் கொள்ளை யடித்தும் கொலை செய்தும் இடர்ப்படுத்தி வந்தார்கள். அவர்களை அடக்குதற்கென்று ஒரு தனி இலாக்கா லார்ட் பெண்டிக்கால் படைக்கப்பட்டது. கர்னல் வில்லியம் ஸ்லிமன் என்பவர் அவ்விலாக்கா தலைவராக அமர்த்தப்பட்டனர். கர்னல் முயற்சியால் கொள்ளைக் கூட்டம் அழிக்கப்பட்டது. அக்கூட்டத் தாரின் சிறுவர்கள் பள்ளிகளிலும் தொழிற்சாலைகளிலும் சேர்க்கப்பட்டார்கள்.

கல்வித் துறையிலுஞ் சில சீர்திருத்தங்கள் லார்ட் வில்லியம் பெண்டிக்கால் செய்யப்பட்டன. சமஸ்கிருத-அரபி - பயிற்சிக்கென்று ஒரு லட்சம் ரூபா செலவழிக்கப்பட்டு வந்தது. அச்செலவு நிறுத்தப்பட்டது. அப்பொருள் ஆங்கிலக் கல்விக்கும், மற்ற மாகாண மொழிகட்குமென்று பயன்படுத்தப் பட்டது. அதற்குத் துணைவரா யிருந்தவர் மெக்காலே என்ற மேதாவி.

லார்ட் அக்லண்ட் (1836-42) அப்கானியக் குழப்பத்தில் தலைப்பட்டவர். அக்குழப்பத்தின் தொடக்கத்தில் பிரிட்டிஷாருக்கு வெற்றியும் முடிவில் தோல்வியும் நேர்ந்தன. தோல்வியைப் பிரிட்டிஷ் வாணிபக் கூட்டம் விரும்பவில்லை. அதனால் லார்ட் அக்லண்ட் இங்கிலாந்துக்கு அழைக்கப்பட்டார்.

லார்ட் எலின்பரோ (1842-44) அப்கனில் நேர்ந்த தோல்வியை வெற்றியாக்கினர். சிலவிடங்களில் நடைபெற்றுவந்த அடிமை வாணிபம் அவரால் நிறுத்தப்பட்டது. அவர் காலத்தில் சிந்து பிரிட்டிஷ் கொடிக்கீழ் வந்தது. லார்ட் எலின்பரோவின் ஆட்சி வாணிபக் கூட்டத்துக்குப் பிடிக்கவில்லை. அவரும் அழைக்கப்பட்டார்.

லார்ட் ஹார்டிஞ்ச் (1844-8) சீக்கியப் போரில் சிக்குண்டவர்; இந்தியாவில் ரெயில்வே அமைக்க முயன்றவர்; ஞாயிற்றுக்கிழமைகளில் வேலைசெய்வதை நிறுத்தியவர்.

லார்ட் டல்ஹௌஸி (1848-56) ஆட்சியில் சீக்கியர் போரும் பர்மியர் போரும் இரண்டாம் முறையாக நடைபெற்றன. அவர் காலத்தில் பஞ்சாப்பும் பர்மாவும் பிரிட்டிஷ் ராஜ்யத்தில் சேர்க்கப்பட்டன.

சுதேச மன்னர்கள் தங்கள் சமஸ்தானங்களை நன்முறையில் ஆள முடியாத நிலைமை நேருங்கால், அச்சமஸ்தானங்களை நேர் பிரிட்டிஷ் ஆட்சியில் சேர்ப்பது நல்லது என்று டல்ஹௌஸி கருதியவர் ; கருதியவாறே சிலவிடங்களில் செய்துங் காட்டியவர். இவ்வகையில் சில சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் ராஜ்யமாயின. அவை பீரார், அயோத்தி முதலியன.

லார்ட் டல்ஹௌஸியால் ரெயில் தந்தி முதலியன அமைக்கப்பட்டன ; மராமத் இலாகா பெருக்கப் பட்டது ; கல்கத்தாவிலிருந்து பெஷாவர்வரை நீண்ட பெரும்பாதை எடுக்கப்பட்டது ; துறைமுகங்களும் கலங்கரை விளக்குகளும் நன் முறையில் செப்பஞ் செய்யப்பட்டன. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் முதலியன காணப்பட்டன. இந்தியாவை மேல்நாட்டு முறையில் பண்படுத்த முயன்றவர் டல்ஹௌஸி என்று கூறலாம்.

லார்ட் கானிங் (1856-8) பிரிட்டிஷ் வாணிபராட்சி யின் கடைசி கவர்னர் ஜெனரல். அவரே, பார்லி மெண்டின் நேராட்சிக்கு இந்தியா வந்தபோது முதல் இராஜப்பிரதிநிதியாகவும் கவர்னர் ஜெனரலாகவும் (1858-62) ஆக்கப்பட்டவர். மாறுதலுக்குக் காரணம் எது ? சிப்பாய் கலகம் என்று பொதுவாகச் சொல்லப் படுகிறது. சிப்பாய் கலகம் எற்றுக்கு எழுந்தது ? அதன் அடிப்படையான காரணங்கள் பலப்பல.

## சிப்பாய் கலகம்

டெல்லி பொம்மைச் சக்கரவர்த்தி இரண்டாம் பஹதுர்ஷா எல்லாவற்றையும் இழந்த நிலையில் டெல

லியை விடுத்து அகன்று போகுமாறு வலியுறுத்தப்பட்டார். அவர்தம் நிலை, ஒருவரோடொருவர் பிணங்கிப் போரிட்டு அயலவர் உதவி நாடி அடிமைகளாய்ச் சிறுமையுறுவோர்க்கு உணர்ச்சியூட்டிற்று. அன்றோ, தழை தழைத்து நின்ற மொகலாய ராஜ்ய மரம் வாடி வதங்கி, இலைகள் உதிரக் கிளைகள் முறிய வற்றி, உலர்ந்து வெடித்து, இறுகிச் சாய்ந்ததற்குத் தாமும் காரணர் என்பதை எண்ணி எண்ணி வருந்தினர்; 'நாம் ஏன் ஒருவரோடொருவர் பிணங்கினோம்? ஏன் அயலவர் காலில் விழுந்தோம்? அடிமைகளானோம்; சிறுமையுறுகிறோம்; நம்வினை நம்மைச் சுடுகிறது' என்று கசிந்து கசிந்து உருகினர்; பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சி தழைத்து நிற்றலைக் கண்டு கண்டு வயிறெரிந்தனர். இந்த வயிற்றெரிச்சல் ஒரு பக்கம்;

சாதிமத சமூகங்களில் சட்டங்களால் செய்யப் பெற்ற சீர்திருத்தங்கள், மேல்நாட்டுக் கல்விமுறை, கிறிஸ்துமதப் பிரசாரம், மதமாற்றம் முதலியன பொதுவாக மக்கள் உள்ளத்தில் எரிமூட்டின. இந்த எரி மற்றொரு பக்கம்;

பட்டாளங்களில் இந்தியர் ஒருவிதமாகவும் மற்றவர் வேறுவிதமாகவும் பார்க்கப்பட்டதும், துப்பாக்கிகளில் பன்றிக்கொழுப்பும் பசுக்கொழுப்பும் உபயோகப்படுத்தியதும் இந்தியச் சிப்பாய்களுக்குச் சீற்றம் விளைத்தன. இச் சீற்றம் இன்னொரு பக்கம்;

பிரிட்டிஷ் வாணிபம் பெருகப் பெருகச் சுரண்டல் அதிகமாயிற்று. இந்தியக் கைத்தொழில்கள் அருகின.

வறுமையும் பஞ்சமும் பிணியும் அகால மரணமும் நாட்டை அரித்தன. இவ்வரிப்பு வேறொரு பக்கம்;

இவையும், பிறவும் ஒன்றுபட்டுத் திரண்டு சிப்பாய் கலகமாக உருத்தெழுந்தன. அக் கலகம் 1857-ல் எழுந்தது. அஃது ஆவேசத்தில் தோன்றி, ஆவேசத்தில் நின்று, ஆவேசமற்றதும் அற்ற ஒன்று.

கலகம் முதல் முதல் பாரக்பூரிலும் ராணிகஞ்சிலும் தோன்றியது. பின்னை அது பலவிடங்களிலும் பரவியது. மீரத்துச் சிப்பாய்கள் வெகுண்டெழுந்து ஐரோப்பிய ஆண் பெண் குழந்தைகளைக் கொன்று கொன்று குவித்தார்கள். அவர்கள் வெறி அவர்களை டெல்லிக்குத் துரத்தியது. அவர்களுடன் டெல்லி சிப்பாய்களுஞ் சேர்ந்துகொண்டார்கள். இரு கூட்டமும் ஒன்றுபட்டு ஐரோப்பியரைச் சுட்டுச் சுட்டு வீழ்த்தின. சிப்பாய்கள், முதிய பஹதூர் ஷாவைத் தூக்கிச் சிம்மாசனத்தில் இருத்தி, 'இவரே எங்கள் சக்கரவர்த்தி' என்று ஆராவாரஞ் செய்தார்கள்.

மீரத் நிகழ்ச்சியும் டெல்லி நிகழ்ச்சியும் காட்டுத் தீப்போல், ரோஹில்கந்த், கான்பூர், குவாலியர், இந்தூர், ஜான்ஸி, இலட்சுமணபுரி முதலிய இடங்களில் பரவியது; அழல் மத்திய இந்தியாவரை வீசிற்று என்று சொல்லலாம்.

ஜெனரல் நீல், ஜெனரல் ஹாவ்லாக், நிக்கல்ஸன், ஸர் காம்பெல், ஸர் ரோஸ் முதலியோர் பட்டாளங்களைத் திரட்டிக் கலகம் பரவிய இடங்களிலெல்லாம் புகுந்து புகுந்து பீரங்கி முழக்கஞ்செய்து மக்களை வேட்டையாடினார்கள். ஜெனரல் நீல் மக்களைச் சித்திரவதை செய்தார் என்று சொல்லப்படுகிறது.

சிப்பாய் கலகத்தை அடக்கப் பிரிட்டிஷாருக்குத் துணை செய்தவர்களிற் குறிக்கத்தக்கவர் சீக்கியரும் நைஜாமுமாவர். டெல்லியில் மூண்ட கலகம் பெரிதும் சீக்கியர் உதவியாலேயே அடங்கியது.

கிழ பஹதூர்ஷா பிடிக்கப்பட்டார்; நாடு கடத்தப் பட்டார். அவர் ரங்கூனில் 1862-ல் மரணமடைந்தார். இங்கே ஓர் ஐயம். கலகம் பஹதூர்ஷாவால் எழுப்பப் படவில்லை. கலகக் கூட்டத்தார் வெறி மேற்கொண்டு அவரைப் பற்றிச் சிம்மாசனத்தில் அமர்த்தினர். அச் சமயத்தில் அவர் மறுத்தால் அவர் தலைபோகுமன்றோ? கலகக்காரர் தவறுதலை ஒரு பெரும் பரம்பரையின் வழி வந்த ஒரு முதிய சக்கரவர்த்திமீது சுமத்தி, அவரைத் தண்டித்தது அறமா என்னும் ஐயம் தோன்றுகிறது. வேறு இரண்டு இளவரசர் சுட்டுக் கொல்லப்பட்டனர். அரச மாளிகை கொள்ளையடிக்கப்பட்டது.

கலகத்தில் ஐரோப்பியரைப் பலவாறு வதைத்த நானாசாஹேப் இமயக்காடுகளில் நுழைந்து மறைந்தனர்.

கலகத்தின் அடிப்படையான காரணம் என்னவாயினும் ஆக. அஃது ஒழுங்குபட்டதன்று. பொறுப்புடைய எவரும் தலைமை வகித்து அதை நடத்தவில்லை. அக்கலகத்தின் நோக்கம் கலகமன்றி வேறொன்றில்லை. சிப்பாய்களிடைத் தோன்றிய அதிருப்தி ஒரு பெருங் கலகமாய் எழுந்து ஆடி ஒடுங்கிற்று. பிரிட்டிஷ் ஆட்சியைத் தொலைக்க வேண்டுமென்ற நோக்கம் கலகத்தின் அடியில் நிலவியதாகத் தெரியவில்லை; அந்நோக்கம் நிலவியிருந்தால் அக்கலகம் ஒழுங்குபட்ட முறையில் - சிறந்த பொறுப்பு வாய்ந்த தலைவர்களால் - நடத்தப்பட்டிருக்கும்.

பொறுப்பற்றவர் வழிப் பிறந்த கலகம் பொறுப்பற்றதாய் நடந்தொழிந்தது. ஐரோப்பிய ஆண் பெண் குழந்தைகளை இரக்கமின்றி மூர்க்கர்கள் கொன்று கொன்று குவித்தது பாரத தருமமன்று.

## வாணிபராட்சி முடிவு

லார்டு கானிங் காலத்தில் ஒரு புயலெழுந்து ஓடுங்கிற்று. அப்புயல் பிரிட்டனைக் கலக்கிவிட்டது. 'இந்தியாவில் வாணிபராட்சி வேண்டா ; பார்லிமெண்ட் ஆட்சி - மகாராணியாரின் நேராட்சி - வேண்டும்' என்ற கூக்குரல் நாலாபக்கமும் எழுந்தது. பிரிட்டன் ஜனநாயக தேசம். ஜனங்களின் கூக்குரலுக்குப் பார்லிமெண்ட் செவி சாய்த்தே தீரல்வேண்டும். பார்லிமெண்ட் சட்டஞ் செய்யப் புறப்பட்டது. வாணிபக் கூட்டத்தின் அத்தியட்சகர்கள் கிளர்ச்சி செய்தார்கள். அக்கிளர்ச்சிக்கு ஜனநாயகப் பார்லிமெண்ட் செவிசாய்க்கவில்லை. பார்லிமெண்ட் பொருந்திய சட்டஞ் செய்து இந்தியாவை மகாராணியாரின் நேராட்சியில் நடைபெறச் செய்தது. இது சிப்பாய் கலகத்தின் விளைவு போலும் !

## மகாராணியார் அறிக்கை

விக்டோரியா மகாராணியார் ஓர் அறிக்கை பிறப்பித்தனர். அதன்கண், இந்தியக் குடிமக்களும் பிரிட்டிஷ் குடிமக்களைப் போலவே பாவிக்கப் படுவார்களென்றும், சமய சம்பிரதாயங்களில் அரசு தலையிடாது நடுநிலை வகிக்குமென்றும் குறிக்கப்பட்டிருந்தன. வாணிபராட்சி மாற்றமும், மகாராணியார் அறிக்கையும் இந்திய மக்களுக்கு மகிழ்ச்சியூட்டின.

இராஜப்பிரதிநிதி லார்ட் கானிங் அல்லகாபாத்தில் ஒரு தர்பார் கூட்டி மகாராணியாரின் அறிக்கையை வாசித்துக் காட்டினார். அறிக்கை சமஸ்தானாதிபதி களாலும் மற்றப் பிரிட்டிஷ் இந்தியப் பிரமுகர்களாலும் வரவேற்கப்பட்டது.

லார்ட் கானிங் பல சீர்திருத்தங்கள் செய்ய முற் பட்டனர். கல்கத்தா பம்பாய் சென்னை ஆகிய மூன் றிடங்களிலும் பல்கலைக்கழகங்களும், ஹைகோர்டுகளும், நியமனமுறை கொண்ட சட்டசபையும் அமைக்கப் பட்டன.

## இராஜப்பிரதிநிதிகள்

ஐந்தாண்டுக்கொருமுறை இராஜப்பிரதிநிதிகள் வந்து கொண்டும் போய்க்கொண்டுமிருந்தார்கள். காலத்துக் கேற்ற சீர்திருத்தங்கள் அவ்வப்போது செய்யப்பட்டு வந்தன.

லார்ட் ரிப்பன் போன்றார் செயல்களும், இளவரசர் வருகையும், விக்டோரியா மகாராணியாரின் பொன்விழா—மணி விழா, பஞ்சநிவர்த்தி முயற்சி முதலியனவும் மக்களின் கருத்தைக் கவர்ந்து வரலாயின.

வாணிபராட்சிக்குப் பின்னும் ஆப்கன் சண்டை, பர்மியர் சண்டை முதலியன நடந்தன. அவை பிரிட்டிஷ் ஆட்சிக்கு ஆக்கமே தேடின.

லார்ட் கர்ஜன் வாணிபராட்சியின் கூறுடையார் என்று கூறல் மிகையாகாது. அவர் கல்கத்தா இருட் டறையைப் பழுதுபார்த்ததும், இந்தியர் குணத்தை இழித்துக் கூறியதும், வங்காளப்பிரிவினை செய்ததும்,

இன்னபிறவும் இந்தியாவை விழிக்கச் செய்தன. இந்தியர் அறக்கிளர்ச்சியே செய்து வரலாயினர். அக்கிளர்ச்சியின் பயனாகச் சட்டசபை உணர்வு ஜனநாயக வழியே படிப்படியாக வளர்ந்து வந்தது. இப்பொழுது (தற்கால) இந்தியா ஒருவித விடுதலை பெற்றுள்ளது.

## செல்வ நிலை

இக்கால இந்தியா தொடக்கத்திலேயே தன்னாட்சியை இழந்தது. இன்னும் அது தன்னாட்சியை முற்றும் பெறவில்லை. தன்னாட்சி இயற்கையானது. அயல் ஆட்சி இயற்கையானதன்று.

எல்லா நலன்கட்கும் அடிப்படை செல்வம். செல்வ வளமில்லாத நாட்டில் பிற வளங்கள் மதர்த்து நிலவா. 'பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை' என்று பெரியோர் கூறிப்போந்தனர்.

முற்கால இந்தியாவும் இடைக்கால இந்தியாவும் செல்வ வளத்திற் சிறந்தே விளங்கின. இக்கால இந்தியா செல்வத்திற் சிறந்து விளங்கவில்லை. ஏன்? அந்நாளிலிருந்த இயற்கைச் செல்வங்கள் இந்நாளில் இல்லாமலா போயின? நிலபுலங்கள் மறைந்தா போயின? எல்லாம் இருந்தபடியே இருக்கின்றன. ஆனால் அந்நாளில் சுத்த சுயராஜ்யம் இருந்தது; சுரண்டல் இல்லை. இந்நாளில் அச் சுயராஜ்யமில்லை; சுரண்டல் இருக்கிறது. இக்காரணத்தால் இயற்கைச் செல்வங்கள் நாட்டுக்குப் பயன்படாதொழிகின்றன.

இக்கால இந்தியாவை ஆண்ட பிரிட்டிஷார் இந்தியாவைத் தாய்நாடாகக் கொண்டவரல்லர். அவருக்குத் தாய்

நாடு வேறே உண்டு. அந்நாட்டு மக்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட பார்லிமென்டிலேயே இந்தியாவின் தலையெழுத்து எழுதப்பட்டது. இஃது இயற்கையா ? செயற்கையா ?

இந்தியா போந்த பிரிட்டிஷார் சில ஆண்டு இந்தியாவில் தங்கிப் பின்னை தமது தாய்நாடு நோக்கினர். அவர் இந்தியாவிலேயே தங்கி, இந்தியாவைத் தாய் நாடாகக் கொண்டிருப்பரேல் இக்கால இந்தியா பலவழியிலும் நலனுற்று இயற்கையதாயிருக்கும்.

அயல் ஆட்சி முறையாலும், சுரண்டலாலும் இந்தியாவின் செல்வநிலை அருகியே போயிற்று. வறுமை வளரா நாட்டில் வறுமை வளர்ந்தது ; பஞ்சம் உறுத்தா நாட்டைப் பஞ்சம் உறுத்தியது ; பிணி பீடியா நாட்டைப் பிணி பீடித்தது ; அகால மரணம் அறியா நாட்டை அகால மரணம் அரித்தது.

இந்தியாவின் வறுமை, பஞ்சம் முதலியவற்றைப் பற்றித் தாதாபாய் நௌரோஜி, இராமேச சந்திர தத்தர், டிக்பி, மதன்மோகன் மாளவியர் முதலியோர் பேசிய பேச்சுக்களும் எழுதிய எழுத்துக்களும் நூல்களாக வெளிவந்துள்ளன. அவை யெல்லாவற்றையும் சுருங்கிய முறையிலும் இந்நூற்கண் எடுத்துக்காட்டல் இயலாது. தாலிபுலாக நியாயம்பற்றி இரண்டொன்றை எடுத்துக்காட்டுவது சாலும்.

## பஞ்சம்

பஞ்சம், பிரிட்டிஷ் வாணிபராட்சியிலேயே தோன்றி நிலைத்துவிட்டது. இப்பொழுது இந்தியாவில் பஞ்சம்

இயற்கையாய்விட்டது என்று கூறல் மிகையாகாது. இக்கால இந்தியாவில் வயிறார உண்பவர் தொகை சுருங்கியே நிற்கிறது. பெரும்பான்மையோர் பட்டினி இருந்து இருந்து பண்பட்டுவிட்டனர்.

இந்திய மக்களின் பட்டினியைப் பற்றிப் பலர் பலவாறு கூறியுள்ளனர். அவருள் இரண்டொருவர் கூற்று வருமாறு :—

லெப்டினன்ட் கவர்னராயிருந்த ஸர் சார்லஸ் எலியட் என்பவர்,

> ' விவசாய மக்களிற் பாதி பேர் பட்டினியால் வதைகின்றனர். அவர் எதைக்கொண்டு தமது பசியை ஆற்றிக்கொள்வதென்று தெரியாது காலங் கழிக்கின்றனர் '

என்று சொற்றனர்.

ரெவரெண்ட் மேக்பர்லேன் என்பவர்,

> " ......இரண்டு அல்லது மூன்று நாளுக்கு ஒரு முறை உணவு கொண்டு மக்கள் காலங்கழிக்கிறார்கள். இவ்வாறு ஏழைமக்கள் தங்களைப் பண்படுத்திக் கொண்டார்கள். ஒரு கிறிஸ்துவர், ' இரண்டு நாளுக்கு ஒரு முறை உணவு கொள்ளும பழக்கம் பெறுவோமாயின், அதற்குமேல் நாங்கள் ஒன்றுங் கேளோம் ' என்று சொன்னார். முந்நூறு பேர்கொண்ட ஒரு கிறிஸ்துவக் கூட்டத்தை விசாரித்துப பார்த்தேன் ; நாளொன்றுக்கு ஒருவரது சராசரி வருவாய் ஒரு பார்த்திங்குக்குங் குறைவாயிருந்ததைத் தெரிந்துகொண்டேன். அக்கூட்டத்தார்க்கு இரண்டொரு நாள் வேலை கிடையாவிடின் அவர் பட்டினியால் வருந்தியே வதங்குவர். அவரிடைப் பஞ்சம் புகுந்தால் நிலைமை என்னும் ? சமயத்தில் தக்க உதவியை அவர் பெறா தொழிவரேல் லட்சக்கணக்கில் மாண்டே போவர் "

என்று உரைத்ததை டிக்பி எடுத்துக் காட்டியுள்ளனர்.

இவை யாவும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே எழுந்த பேச்சுக்கள். பின்னும் நிலைமை எவ்வழியிலும் மாறவில்லை. அந்தோ! இக்கால நிலைமையைச் சாற்றலும் வேண்டுமோ? ஏழை இந்தியன் நிலைமையை இயம்பலும் வேண்டுமோ? ஏழை இந்தியன் பசியால் வாடி, கண் பஞ்சடைந்து, காது செவிடாகி, தோல் வற்றி, நரம்பு தளர்ந்து, எலும்புக் கூடாய்க் கிடக்கிறான்; இருமுகிறான்; பெருமூச்சு விடுகிறான். பெருமூச்சு விடுவோன் எவன்? மற்றவர் உடை யணிய வுந் தெரியாது குரங்குகளைப்போல அங்கும் இங்கும் திரிந்து அநாகரிக வாழ்வு நடாத்திய காலத்திலே, பட்டாடை உடுத்தி, வயிரமும், முத்தும், பவளமும் பூண்டு, மணிமுடி யணிந்து, பொன்மயமான அரியாசனத் திலும் மரகத ஒளி வீசிய மயிலாசனத்திலும் வீற்றிருந்து செங்கோலோச்சியவன் - ஓவியம் காவியம் இசை முதலிய கலைகளைக் கண்டவன் - உழவுத் தொழிலால் உலகோம்பி யவன் - அறம் வளர்த்த அசோகன்வழி வந்தவன் - அன்பு வளர்த்த அக்பர் வழி வந்தவன்! அவன் நிலை என்னவாயிற்று? அவன் எங்கே இருந்தான்? இப்பொழுது எங்கே இருக்கிறான்? இழிந்தான்; கீழே விழுந்தான்; பெருமூச்சுவிட்டுக் கிடக்கிறான்! இடைநாளில் தோன்றிய தனி வாழ்க்கை யுணர்வு, சாதி வெறி, மத வெறி, ஒற்றுமையின்மை, வேற்றுமை யுணர்வு, தீண்டாமை பெண்ணடிமை கொண்டமை, பொறாமை, பிணக்கு முதலிய சிறுமைகள் - தீமைகள் - கொடுமைகள் - இழிவுகள் - இந்திய மகனை கீழே தள்ளின; இப்பொழுது இந்திய 'மைந்தன்' பிராணன் துடிக்கப் பெருமூச்சு விட்டுக் கிடக்கிறான்.

பட்டினி அறியா நாட்டில் பட்டினி குடிபுகுந்தது ; புகுந்து நீண்ட காலமாயிற்று. அதனால் பஞ்சம் இன்னதென்று இக்கால மக்களுக்குத் தெரியவில்லை. பஞ்சம் பழமையாய் நாட்டு வாழ்வில் இரண்டறக் கலந்து ஒன்றி நிற்கிறது. இந்தியர் பஞ்ச மக்களாய் விட்டனர். இந்நாளில் பஞ்சமென்றால் அது மக்களுக்கு விளங்குவதாயில்லை. பஞ்சத்தின் எல்லை கடந்த கடும் பஞ்சமே பஞ்சமென்று அவர்கட்கு விளங்குகிறது. ஆதலால், இக்காலப் பஞ்சத்தைப் பற்றிய பேச்சே வேண்டுவதில்லை.

பஞ்சத்தைப் பஞ்சமென்று மக்கள் உணர்ந்த காலத்தில், உறுத்துத் தோன்றிய பஞ்சத்தை - பழம் பெரும் பஞ்சத்தை-சிறிது நினைவூட்டிக் கொள்வோமாக. அப்பஞ்சத்தைப் பற்றிய புள்ளி விவரங்கள் மேலே குறிக்கப்பெற்ற ஆராய்ச்சியாளரால் காட்டப்பட்டிருக்கின்றன. அவற்றில் இரண்டொன்றை அகழ்ந்தெடுத்து ஈண்டுத் தருதல் நல்லதென்று தோன்றுகிறது.

1770-லிருந்து 1900 வரை, இருபத்தொரு பஞ்சம் உண்டாயின என்று தெரிகிறது. பஞ்ச விசாரணைக் கூட்டத்தின் அறிக்கையிலும் சில புள்ளி விவரங்களிருக்கின்றன.

1800-லிருந்து 1825 வரை ஐந்து பஞ்சம் ; 1825 லிருந்து 1850 வரை இரண்டு ; 1851 லிருந்து 1875 வரை ஆறு ; 1876-லிருந்து 1900 வரை எட்டு.

டிக்பி கணக்குப்படி 1854-லிருந்து 1901 வரை, பஞ்சத்தால் மரணமடைந்தவர் தொகை 28,825,000.

1700-ல் கொடும் பஞ்சம் நேர்ந்தது. அதில் இலட்சக் கணக்கில் மக்கள் மாண்டார்கள். இரண்டோரிடத்து

நிலை வருமாறு :—' ஹூக்லியில் நாடோறும் ஆயிரக்கணக்கான பிணங்கள் குவியலாயின..............கல்கத்தா வீதிகளைப் பிணங்களே அடைத்துக்கொண்டன..........'

'குண்டூர் (1833) ஜனத்தொகை 50,0000 ; அங்கே பஞ்சத்தால் மரணமடைந்தோர் தொகை 20,0000. ஓரிஸாவின் (1866) ஜனத்தொகை 3,000,000 ; மரணத் தொகை 1,000,000.'

இவ்வாறு கொடும் பஞ்சமும் மரணமும் சென்னை, பம்பாய், வங்காளம், இராஜபுதனம், பர்மா முதலிய பலவிடங்களில் நிகழ்ந்தன. பிளேக், இன்புளூயன்ஸா முதலிய நோய்களுக்கு இரையானவர் தொகை வேறு.

## தொழில்கள்

இக்கால இந்தியா பஞ்சத்துக்கும் மரணத்துக்கும் எற்றுக்கு இரையாகிறது? மூலகாரணமென்ன? இந்தியத் தொழின் முறைகளின் ஒடுக்கம், இந்திய மூலப்பொருள்கள் இந்தியாவில் தொழிற் படாமல் ஏற்றுமதியாதல், வாழ்வுக்குரிய பல பொருள்கள் அயல் நாட்டினின்றும் இறக்குமதியாதல், சுரண்டல் முதலியன மூல காரணங்களாகும்.

இந்தியத் தொழின் முறைகளில் சிறந்தன இரண்டு. ஒன்று உழவு (விவசாயம்); மற்றொன்று நெய்வு. இவ்விரண்டும் பாரத மாதாவின் இரண்டு நுரையீரல் போன்றன. வேறு பல தொழில்களும் செவ்வனே நடைபெற்று வந்தன. அயலவர் ஆட்சியால் இந்தியத் தொழில்கள் வளம்பெறாது தொழிந்தன.

மிகப் பழைய காலத்தில் கிராமம் கிராமத்தாருடையதாயிருந்தது. நாளுக்குநாள் அவ்வுரிமை மாறலாயிற்று.

மாறுதலுக்கேற்றபடி வரி முதலியன முளைத்தன. முற்கால இந்தியாவிலும் இடைக்கால இந்தியாவிலும் பெரிதும் நிலவரி ஒன்றே விதிக்கப்பட்டு வந்தது. வேறு சில வரிகள் விதிக்கப்பட்ட காலமுமுண்டு. அவை மக்களை வறுமையில் வீழ்த்தி நாட்டிற் பஞ்சத்தைப் பெருக்கவில்லை. இக்கால இந்தியாவில் உழவன் பலவித வரிகளால் நசுக்குண்டு போகிறான். வரிச்சுமை தாங்கல் அவனால் இயலவில்லை. அவன் திணறுகிறான்.

விவசாயி, பயிர்த் தொழிலுக்கு வேண்டப்படும் முதற் செலவுகளுக்கு விளைவால் பெறுவதை ஈடுசெய்த பின்னர், மிகுதியுள்ளவற்றில் ஏறக்குறைய ஒரு பகுதி நிலவரிக் கழுகிறான். அதனுடன் சுமை ஒழிகிறதா? இல்லை. வேறு வரிகள் அவனை நெருக்குகின்றன. அவைகளுக்கும் அவன் அழுதல் வேண்டும். எஞ்சியுள்ளதை அந்நியச் சரக்குகளும், அந்நியக்கல்வியும், வக்கீல் கூட்டமும், டாக்டர் ஈட்டமும், களியாட்டமும், பிறவும் விழுங்குகின்றன. இவ்வாறு விவசாயியின் வருவாய் செலவானால் அவன் எப்படி ஈடேறுவான்? அவன் கடன் படுகிறான்; கடன்பட்டே பயிரிடுவோனாகிறான். மற்றச் செலவுகளுடன் கடனும் விவசாயியை முடுக்குகிறது. தொல்லை பொறுத்தல் இயலாது அவன் நகரத்துக்கு ஓடுகிறான்; வெளியூர்க்கு ஓடுகிறான்; அந்நியத் தொழிற் சாலைகளிலும் தோட்டங்களிலும் கூலியாளாகிறான்; எலும்புந் தோலுமாய்ச் சாகிறான். கிராமத்திலிருந்தால் பிழைத்தல் இயலாது என்று விவசாயி நினைக்கும் நிலை நேர்ந்துள்ளது.

விவசாயி, நாட்டின் முதுகெலும்பு. முதுகெலும்பு பழுதுபட்டால் மற்ற உறுப்புக்களின் கதி என்னவாகும்? இந்திய விவசாயி படுந்துயரம் அளப்பரிது. விவசாயியின் நிலை இஃதாயின் மற்றவர் நிலையைச் சொல்லவும் வேண்டுமோ? இந்திய விவசாயியின் செழுமை என்று குலைந்ததோ அன்று தொட்டு இந்தியா பஞ்சத்துக்கும் அகால மரணத்துக்கும் நிலைக்களனாயிற்று.

இந்திய மன்னர் காலத்தில் விளைவை யொட்டி வரி விதிக்கப்பட்டது; அந்நாளில் விளைவினின்றும் ஆறில் ஒரு பங்கு வரி வாங்கப்பட்டது; சிலபோழ்து எட்டில் ஒரு பங்கும், சிலபோழ்து பன்னிரண்டில் ஒரு பங்கும் வாங்கப்பட்டன என்றும் தெரிகிறது. 'மன்னர் நிலங்களில் பயிரிடுவோர் மட்டும் இலாபத்தில் ஒரு சிறு பகுதி வரியாகச் செலுத்தி வந்தனர்' என்று பாஹியானும், 'மன்னர் நிலங்களில் பயிரிடுவோர் ஆறில் ஒரு பங்கு வரி செலுத்தினர்' என்று ஹுயூன்ஸியாங்கும் கூறியுள்ளனர். அக்பர் காலத்தில் மூன்றிலொரு பங்கு வரி வசூலிக்கப்பட்டது; மராட்டியார் ஆட்சியில் நாலிலொரு பங்கு ஏற்கப்பட்டது; இப்போதோ ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக வரி விதிக்கப்பட்டுள்ளது......... வெவ்வேறு வரிகளும் குடியானவனைப் பாதிக்கின்றன. அவன் என் செய்வான்? கடன்காரனாகிறான்; கடனைச் செலுத்த இயலாதவனாகிறான்; கிராமத்தையே விடுத்து நகரத்துக்கோ வெளியூர்க்கோ ஓடுகிறான். அங்கும் அவனுக்குப் பெருந்தொல்லையே.

மற்றுமோர் இந்தியப் பெருந்தொழிலாகிய நெய்வு எந்நிலை எய்தியது? சிறிது சிந்திப்போம்.

நெய்வு, விவசாயத்துக்கு இரண்டாவதாக நிற்பது. அத்தொழில் பண்டை இந்தியாவில் வளம்பெற்றிருந்தது. பட்டினுலும், பருத்தியினுலும், நாரினுலும் துணிகள் நெய்யப்பட்டன. இந்தியத் துணிகள் பண்டை நாளில் பாபிலோன், எகிப்து, ரோம், கிரீஸ் முதலிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டன; பின்னுளில் இங்கிலாந்து முதலிய நாடுகளுக்கும் அனுப்பப்பட்டன. பிரிட்டிஷ் வாணிபராட்சியில் இந்திய நெய்தற்றொழில் அருகலாயிற்று. நெய்தற்றொழில் அழிக்கப்பட்ட முறைகளைச் சரித்திர நூல்களிற் பார்க்க.

இந்தியாவில் நூற்றலும் நெய்தலும் எப்பொழுது உண்டாயின என்று கூறுதல் இயலாது. எத்துணையோ ஆயிரம் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அத்தொழில்கள் தோன்றியிருத்தல் வேண்டும். சரித்திரக் காலத்துக்கு முற்பட்ட நூல்களிலும் இந்திய நூலும் இந்தியத்துணியும் பேசப்படுகின்றன. இந்தியத் துணிகள், கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுக்கு முன்னர், பாபிலோனுக்கு அனுப்பப்பட்டன; இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னர், எகிப்தியக் கல்லறைகளிலுள்ள பிணங்கள்மீது சுற்றப்பட்டன. இந்தியத் துணிகள் ரோமில் மலிந்த காலமுமுண்டு. பிளினி முதலியோர் கூற்றுக்களைப் பார்க்க. டாக்கா மஸ்லின், கிரீஸில் 'கங்கை தீக்கா' என்று அழைக்கப்பட்டது.

'டாக்கா மஸ்லின் கிரீஸில் கங்கை தீக்கா என்ற பெயரால் அழைக்கப்பட்டது.........இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னரே இந்தியப் பருத்தி நூற்றலும் நெய்தலும் நன்னிலையிலிருந்தன............பதினேழாம் நூற்றாண்டி

லேயே இங்கிலாந்தில் பருத்தி நூலால் நெய்வது காணப் பட்டது'—(இந்திய இம்பீரியல் கெஜட்டியர் 3 : 195).

இந்தியப் பருத்தித் துணிகள் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டன. அவற்றால் இங்கிலாந்தில் வாணிப நெருக்கடி ஏற்படுமென்று அவை சட்டத்தால் தகையப்பட்டன. இங்கிலாந்து சுயராஜ்ய தேசம். அது தன்னலங் கருதி எதையுஞ் சட்டத்தால் தடுத்தல் கூடும். பிரிட்டிஷ் இந்தியா என் செய்தல் கூடும்?

> 'பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் பலவித இந்தியத் துணிகளும், சிறப்பாக மஸ்லின்களும் இங்கிலாந் துக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அவை கம்பளமும் பட்டும் நெய்வோரின் பொறி புலன்களைக் கலங்கச் செய்தன. 1700-லும், 1721-லும் பார்லிமெண்டில் சட் டங்கள் நிறுவப்பட்டன. அவற்றால் இந்தியத் துணிகள் தடுக்கப்பட்டன'—லேக்கி (இங்கிலாந்து சரித்திர ஆசிரியர்)

இந்தியத் துணிகளுள் பேர்பெற்றது மஸ்லின். அது சிறப்பாக டாக்காவில் நெய்யப்பட்டது. 'டாக்கா மஸ்லின்' என்று இன்னும் உலகம் பேசுகிறது. பிரிட் டிஷ் வாணிபர் ஆட்சி ஆக்கம் பெறப்பெற அதன் சிந்தை டாக்காமீதே சென்றுகொண்டிருந்தது. டாக்கா மஸ்லின் தொழில் அழிக்கப்பட்ட முறையை உன்ன உன்ன உள்ளம் உருகும். தொழிலாளர் பெருவிரல் நொறுக்கப் பட்டதென்றும் தாதாபாய் கூறுகிறார். தொழிற் கூடங்கள் பலவாறு அழிக்கப்பட்டன. தொழிலாளர் பட்டினியால் வாடி வாடி வதங்கினராம். அவருட் சிலர் கொள்ளைக் கூட்டத்தவராகத் திரும்பினரென்றுஞ் சொல்லப்படு கிறது. டாக்காவைப் பாழ்படுத்திய 'புண்ணியம்' பிரிட்டிஷ் வாணிபராட்சியினுடையது.

'ஏறக்குறைய ஒரு நூற்றுண்டுக்கு முன்னே டாக்கா வாணிபம் ஒரு கோடி ரூபா அளவில் புரண்டுகொண் டிருந்தது." அதன் ஜனத்தொகை இரண்டு லட்சமாயிருந்தது. 1784-ல் இங்கிலாந்துக்கு முப்பது லட்சம் ரூபா பெறுமான டாக்கா மஸ்லின் அனுபபப்பட்டது. 1817-ல் எல்லாம் நின்றன; பாழாயின. தலைமுறை தலைமுறையாக வளர்ந்து வந்த நூற்றலும் நெய்தலும் அழிந்து போயின............ டாக்காவின் தற்போதைய ஜனத்தொகை எழுபத்தொன் பதாயிரமே. இக்கதி டாக்கவுக்கு மட்டும் உறவில்லை; எல்லா ஜில்லாக்களுக்கும் உற்றது.'

—ஸர் ஹென்றி காட்டன் (1890)

வங்காளத்தில் பட்டுத் தொழில் நன்றாக நடைபெற்று வந்தது. அஃதும் அழிக்கப்பட்டது. இதைப்பற்றி இராமேச சந்திரதத்தர் கூறியதை நோக்குக:

'இந்தியத் தொழில்களின் ஆக்கத்தைக் கெடுக்கப் பிரிட்டிஷ் வாணிபர் தமக்குக் கிடைத்த அரசியல் அதிகா ரத்தை உபயோகிக்க வெளிப்படையாக முயன்றனர். 1769 மார்ச் 17-ல் வாணிபக் கூட்டத்தால் வங்காளத்துக்கு ஒரு கடிதம் வரையப்பட்டது. அதில், வங்காளம் பட்டுத தொழிலுக்குரிய மூலப பொருள் ஆக்கத்துக்கு இடம் பெறலாமென்றும், ஆனல் பட்டுத் தொழிற்சாலைகளின் ஆக்கத்துக்கு இடம்பெறலாகாதென்றும் குறிக்கபபட் டிருநதன; பட்டுத் தொழிலாளா பிரிட்டிஷ் வாணிபக் கூட்டத்தின் தொழிற்சாலைகளில் வேலை செய்ய வலி யுறுத்தப் படவேண்டுமென்றும், அத்தொழிலாளர் தமது சொந்த வீடுகளில் தொழில் செய்ய விடப்படலாகா தென்றுஞ் சொல்லப்பட்டன.'

வேறு இந்தியத் தொழில்களும் வளம்பெற்றே யிருந்தன. அவையும் நாளடைவில் அழியலாயின. இந்தியாவில் கப்பல் கட்டப்பட்டதென்றால் இந்நாளி லுள்ள சிலர் ஐயுறுவர்; சிலர் வியப்புறுவர். காலத்தின் கோலம்! இந்தியாவில் இரும்புத் தொழில் முறையும் நன்னிலையிலிருந்தது. அஃதும் அயலவர் போட்டியால் ஒழிந்தது. அயலவர் கல்வி முறையும் நாகரிகமும் ஓங்க ஓங்க மற்றும் பல தொழில்களும் மாண்டன. சுயராஜ்ய மற்ற நாடு எந்நிலை எய்தவேண்டுமோ அந்நிலையை இந்தியா எய்தலாயிற்று. சட்டத்தால் பிற நாட்டுப் பொருளைத் தடுக்கும் உரிமை அந்நாளில் இந்தியாவுக்கு ஏது?

> 'கல்கத்தா துறைமுகத்தில் பதினாயிரம் டன் இந்தியக் கப்பல்கள் அமைக்கப்படுகின்றன............அவை இங்கி லாந்தில் செய்யப்படுவதை யொத்தே யிருக்கின்றன......'
>
> லார்ட் வெல்லெஸ்லி (டிக்பி எடுத்துக்காட்டு)

> 'இந்தியாவில் செய்யப்பெற்ற இந்தியக்கப்பல்கள் இந்தியப் பொருள்களைத் தாங்கி லண்டன் துறைமுகத்தில் நின்ற போது, தேம்ஸில் பகைவர் வந்தால் எவ்வித உணர்ச்சி உண்டாகுமோ அவ்வித உணர்ச்சி அங்கே பொங்கியது. லண்டன் துறைமுகத்திலிருந்த கப்பல் செய்வோர் கூக்குர லிடலாயினர்; தம் தொழில் அழியும் நிலையிலிருக்கிற தென்றும், இங்கிலாந்திலுள்ள தம் குடும்பமெல்லாம் பட்டினி கிடக்கப்போவது நிச்சயமென்றும் அலறினர்' —டெயிலர் (இந்தியச் சரித்திரம்)

கூக்குரல் நற்பயனளித்தது! இந்தியக் கப்பற் றொழில் நிர்மூலமாகியது. இது குறித்து டிக்பி வருந்தி எழுதிய உரைகள் நோக்கற்பாலன.

இரும்புத் தொழில் குறிக்கத்தக்க ஒன்று. இரும்பின் தன்மையை உலகம் உணர்தற்கு முன்னரே இந்தியா உணர்ந்திருந்தது. இரும்புக்குக் 'கரும்பொன்' என்றொரு பெயர் இந்தியரால் சூட்டப்பட்டது. இரும்பைப்பற்றிப் பேசாத பழைய நூல்களில்லை. அயத்தில் பஸ்பம் செந்தூரம் முதலியன பழைய இந்தியரால் செய்யப் பட்டன. 'இளைத்தவன் இரும்பைத் தின்னல்வேண்டும்' என்ற பழமொழி இந்திய நாட்டில் பிறந்ததே. இன்னும் மேல்நாட்டார் இரும்பைச் சுத்தப்படுத்தி மருந்து செய்யும் திறமை பெறவில்லை. மேல்நாட்டில் பச்சை இரும்பு மருந்தே இன்னும் செய்யப்படுகிறது. இரும்பின் குணங்களை முதல் முதல் உணர்ந்தவர் இந்தியரே என்று சுருங்கச் சொல்லலாம்.

இரும்பை உருக்குதல், வடித்தல், கருவிகள் செய்தல் முதலியவற்றை இந்தியர் நீண்ட காலத்துக்கு முன்னரே பயின்றிருந்தனர். இரும்பின் துணை கொண்டு எழுதல், உழுதல் முதலியன நிகழ்ந்து வந்தன.

இரும்புத் தொழிலில் இந்தியர் வல்லவராயிருந்தனர் என்பதற்கு அறிகுறிகள் பல உண்டு. அவற்றில் சரித்திரத் தொடர்பு கொண்டது ஒன்றுளது. அது 'குதப்மினர்' என்னும் ஓர் இரும்புத் தூண். அது குத்புடீன் என்பவரால் நிறுத்தப்பட்டது. அஃது இந்திய மக்களின் இரும்புத் தொழிலின் திறத்தை உணர்த்துவது. அஸாமில் இரும்புப் பீரங்கிகள் செய்யப் பட்டன என்றுஞ் சொல்லப்படுகிறது. பேர்பெற்ற இந்திய இரும்புத் தொழில் எங்கே போயிற்று? மற்றத் தொழின்முறைகள் எங்கே போயினவோ, அஃதும்

அங்கே போயிற்று! இந்திய இரும்புத் தொழிலைப் பற்றிய அறிஞருரைகள் சில வருமாறு :—

'இரும்பை உருக்கி வார்க்கும் வித்தை இந்தத் தேசத்தில் (இங்கிலாந்தில்) சில ஆண்டுகளுக்கு முன்னரே பயிற்சி செய்யப்பட்டது. அந்த வித்தையை ஹிந்துக்கள் காலா காலமாகப் பயின்று வந்திருக்கிறார்கள்'—வில்ஸன்.

'இந்திய இரும்பு உள்ளூர்த் தேவைகளுக்கு ஈடு செய்யப்பட்டதோடு, அதனால் நன்கு செய்யப்பட்ட சாமான்கள் வெளியூர்களுக்கும் அனுப்பப்பட்டன. சாமான்களின் தன்மை உலகில் புகழ்ப்பெற்றது. டெல்லியில் ஒரு தூண் நிற்கிறது. அஃது ஏறக்குறைய ஆயிரத்தைந்நூறாண்டுப் பழமையுடையது. அஃது இந்திய இரும்புத் தொழிலின் திறமைப்பாட்டுக்கு ஓர் எடுத்துக் காட்டாயிலங்குகிறது. உலகிலுள்ள பழம்பெருந் தொழிற்சாலைகளாலும் அத்தகைய ஒரு தூணை நிருமித்தல் அரிது. இந்நாளிலும் அத்தகைய தூணை நிருமிக்க வல்ல சாலைகள் மிகச் சிலவேயிருக்கும்............

............முற்காலத்தில் பாரஸீக வாணிபர் இந்தியா போந்து இரும்புச் சரக்குகளை ஆசியாவுக்கு அனுப்பினர். இங்கிலாந்திலும் கத்தி முதலிய கருவிகள் செய்யப்பெறுதற்கு இந்திய இரும்பு வாங்கப்பட்டது. இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னரே இந்திய எஃகும் இரும்பும் செவ்விய முறையில் பண்பட்டு நின்றன............

..................பிரிட்டிஷ் ஆட்சியிலே நூற்றைம்பது ஆண்டாக இந்திய இரும்புத்தொழில் வளர்ச்சியடையவில்லை. பரம்பரை இரும்புத் தொழிலாளரின் வேலை அற்றுப்போய் விட்டது. அதனால் இரும்புக்கென்று பத்துக்கோடி ரூபா

ஆண்டுதோறும் நாட்டைவிட்டுச் செல்கிறது'—ரானடே (பொருளாதாரக் கட்டுரை: 1893) (1913-4க்குள் இருபத்தைந்து கோடியாக அதிகப்பட்டது என்று மாளவியர் சொல்கிறார்.)

இந்தியா எங்கணும் சர்க்கரை செய்யப்பட்டது. அதன் கதி என்னவாயிற்று? விரிவுரை வேண்டுவதில்லை. அயலவராட்சியால் இந்தியத் தொழின்முறைகள் பாழ்பட்டன என்று சுருங்கச் சொல்லலாம்.

முன்னாளில் இந்தியத் தொழில்கள் ஆக்கம்பெற்றிருந்தமையால் இந்தியாவில் செல்வம் கொழித்துக் கொண்டிருந்தது. அதைப்பற்றி மேல்நாட்டார் கூறியுள்ள கருத்துக்கள் பல உண்டு. அவற்றுள் இரண்டொன்று வருமாறு:—

> 'இந்தியாவின் பல பாகங்களைச் சுற்றிப்பார்த்த கிரேக்கர் வாயிலாக வெளிவந்த நன்மொழிகளால் அந்நாளைய இநதிய மக்களின் செழுமையும் மகிழ்ச்சியும் புலனாகின்றன.......
>
> ஒவ்வோர் இந்தியரும் உரிமையுடையராயிருந்தனர் என்று அர்ரியன் என்பவர் மகிழ்ச்சி பொங்கக் கூறுகிறா.........
>
> பொன்னும் மணியும் பட்டும் பூணும் பெண் மக்களின் அணிகளாயிருந்தன. பலவிதத் தானியங்களின் விளைவு நாட்டின் விவசாயச் செழுமையைப் புலப்படுததுகிறது....'
>
> —எல்பின்ஸ்டன் (இந்தியச் சரித்திரம்)

> 'பொன்னும் வெள்ளியும் நகைகளும் பிறவும் குவிந்திருந்தன. பட்டும், பீதாம்பரமும், பொன் வெள்ளிச் சரிகைத் துப்பட்டாக்களும், பொற்பூக்கள் கெழுமிய தலைப்பாகைகளும் காட்சி யளித்தன'
>
> —பேர்னியர் (ஷாஜஹான் காலத்தில் இந்தியா போந்தவர்)

'.........மயிலாசனம் உள்ளத்தைக் கவர்வது. அந்த இயற்கை மயிலைப்போலவே பொலிகிறது. அதன் தோகை, பொருந்திய பட்டாலும் பொன்னாலும் மணியாலும் அணி செய்யப்பட்டுள்ளது...........'

—டாவர்னியர் (இவரும் ஷாஜஹான் காலத்தில் இந்தியா நோக்கியவர்)

செழுமை கொழித்த இந்தியா தன் தொழின்முறைகளை இழந்தமையால் வறுமை மிக்க பஞ்ச நாடாயிற்று. இந்தியா சுயராஜ்யம் இழவாதிருப்பின், தன் தொழிலுக்கும் வாணிபத்துக்கும் பாதுகாப்புச் செய்திருக்கும். பாதுகாப்புச் செய்யும் உரிமையை இழந்த இந்தியா என் செய்யும்? சுரண்டலை வேடிக்கை பார்த்துப் பார்த்து உள்ளங் கனன்று நிற்கும் நிலையை இந்தியா எய்திற்று. இதைப்பற்றி எச். எச். வில்சன் கூறியுள்ள மொழிகள் போற்றற்குரியன.

இந்தியா சுயராஜ்யம் இழந்தமையால் அது பிரிட்டிஷாருக்கு மட்டும் சந்தையாக விளங்கவில்லை; மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் அது சந்தையாகவே விளங்கலாயிற்று. இந்திய நீலத்தொழில் ஜெர்மெனியால் விழுங்கப்பட்டது உலகறிந்ததொன்று. ஜெர்மெனி, ஆஸ்திரியா, அமெரிக்கா, ஜப்பான் முதலிய நாடுகளும் இந்தியாவினிடம் வாணிபஞ் செய்கின்றன. அவ்வந்நாட்டுச் சாமான்களின் குவியல்களைக்கண்டு இமயமும் நடுங்குகிறது. இந்தியாவில் செய்யப்பட்ட குழந்தை விளையாட்டுப் பொருட்டொழில்களும் மாண்டன. அப்பொருள்கள் பெரிதும் ஜெர்மெனியினின்றும் ஜப்பானினின்றும் போதருகின்றன. பல வழியிலும் இந்தியாவின் செழுமை குன்றலாயிற்று.

## இங்கிலாந்து செல்வம்

இங்கிலாந்து இந்தியாவைப் பற்றுதற்கு முன்னர் அஃது அவ்வளவு செல்வத் தேசமாயில்லை. அஃது இந்தியாவில் புகுந்த நாள்தொட்டே அது செல்வத்திற் சிறந்த சீர்மை நாடாயிற்று. இதை டிக்பி என்பவர், பலாது கருத்துக்களை எடுத்துக் காட்டி நூலெழுதி யுள்ளனர். அவற்றின் சாரம் வருமாறு :—

'1694-ல் இங்கிலாந்து பாங்க் காணப்பட்டது. அது காணப்பெற்ற அறுபது ஆண்டுகளுக்குப் பின்னர் இருபது பவுன் நோட் வெளிவந்தது. வங்காள வெள்ளி, லண்டனில் குவிந்த காலத்தில் 1759-ல் பத்துப் பவுன் - பதினைந்து பவுன் நோட்டுகள் வெளியிடப்பட்டன. 1756-ல் கிளைவ் இந்தியா நோக்கியபோது இங்கிலாந்தின் கடன் £ 74,575,000; செலுத்தப்பெற்ற வட்டி £ 2,753,00 ; 1815-ல் அக்கடன் £ 861,000,000 ஆகப் பெருகிற்று ; வட்டி £ 32,645,000.

இந்தியச் செல்வம் இங்கிலாந்தில் திரண்டபோது இங்கிலாந்தின் மூலதனம் பெருகலாயிற்று.

பிளாஸி சண்டைக்குப் பின்னே வங்காளத் திரு லண்டனில் குடியேறினள். அன்றுதொட்டு இங்கிலாந்துக்கு அதிர்ஷ்டம் பிறந்தது.

இந்தியச் செல்வ ஆறு இங்கிலாந்தில் ஓடத் தொடங்குதற்கு முன்னர், இங்கிலாந்தின் தொழின்முறைகள் சுருக்கமாகவே நடைபெற்றன ; பின்னர் அத்தொழின் முறைகள் ஏராளமாகப் பெருகின.'

## ரெயில்வே

'ரெயில்வே முதலிய சாதனங்கள் பிரிட்டிஷ் ஆட்சியில்தானே உண்டாயின' என்று சிலர் பேசுவதுண்டு. அச் சாதனங்கள் நல்லனவே. அவற்றைக் குறைகூறுவோர் ஒருவரும் இல்லை. அவற்றை நன்முறையில் பயன்படுத்தினால் நலமே விளையும். ரெயில்வே முதலிய சாதனங்களால் சுயராஜ்யமுடைய நாட்டுக்கே நலன் செய்தல் இயலும்; சுயராஜ்யமிழந்த நாட்டுக்கு நலன் செய்தல் இயலாது.

இந்தியாவில் லார்ட் டல்ஹௌஸி காலத்தில் ரெயில்வே அமைக்கப்பட்டது. ரெயில்வே அமைக்கப் புகுந்த லார்ட் டல்ஹௌஸி இந்திய இரும்புத் தொழிற் சாலைகளையும் உடன் அமைத்து, இந்திய இரும்புத்தொழில் வளர்ச்சிக்குப் பாடுபட்டிருத்தல் வேண்டும். அவர் அங்ஙனம் செய்திருந்தால் இந்தியா நலனுற்றிருக்கும். இந்தியாவில் ஓடும் ரெயிலுக்கு வேண்டப்படும் இரும்புப் பொருள்கள் வேறு நாட்டிலிருந்து ஏன் வருதல் வேண்டும்?

ரெயில்வேயால் இந்தியாவுக்குச் சில நலன் உண்டு. யாத்திரைக்கும், கடும்பஞ்சம் தோன்றுமிடங்களில் உணவுப் பொருள்களை விரைவில் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கும், கலகம் குழப்பம் முதலியவற்றை அடக்கப் போலிஸாரையும் சிப்பாய்களையும் ஏற்றிச் செல்வதற்கும், இன்ன பிறவற்றிற்கும் ரெயில்வே பயன்பட்டு வருகிறது. ஆனால் இந்தியாவின் நானுபக்கமுள்ள மூலப் பொருள்களைச் சேகரித்து அவற்றைப் பிற நாடுகளுக்கு அனுப்புதற்கும், அம்மூலப்பொருள்கள், பிறநாடுகளில் தொழிற்

பட்டு வாழ்வுக்குரிய பொருள்களாய்த் திரும்புங்கால் அவற்றை இந்தியாவில் நாளுபக்கம் பரப்புதற்கும் இந்திய ரெயில் பயன்படுவதையும் நேயர்கள் உன்னுவார் களாக. இந்திய ரெயில்வே சுரண்டலுக்கும் பயன்படுவது கருதற்பாலது. இந்தியா முழு விடுதலையடைந்தாலன்றி இந்திய ரெயில்வே முதலிய சாதனங்களால் பெருநலன் விளையாது.

இந்தியத் தொழின் முறைகள் பலவாறு அழிக்கப் பட்டமையால், அவ்வத் தொழிலில் ஈடுபட்டிருந்த மக்கள் கருத்துப் பெரிதும் விவசாயத்தின்மீது செலலலாயிற்று. அதனால் விவசாய மொன்றே இந்திய மக்களின் தொழின் முறையாயிற்று. விவசாயமும் மற்றத் தொழின் முறை களும் ஒழுங்காக நடைபெறல் வேண்டும்; அப்பொழுதே நாடு இன்புறும்.

இக்கால இந்திய விவசாய நிலைமை மேலே விளக் கப்பட்டது. விவசாயமாதல் இக்கால விஞ்ஞான முறை யால் நாட்டுக்குப் பயன்படுமாறு செய்யப் பிரிட்டிஷ் அர சாங்கம் முயன்றதா? பெரிதும் இல்லை என்றே சொல்ல லாம். ஆங்கோர் இலாகாவும் ஈங்கொரு பள்ளியும் பேருக்கு அமைக்கப்பட்டன.

இந்தியா காமதேனு. இந்தியாவில் பலவித மூலப் பொருள்கள் உண்டாகின்றன. அவை நாட்டிலேயே தொழிற்படாது பிற நாடுகளுக்குச் சென்று தொழிற் பட்டுத் திரும்பும் தீவினையைப் பெற்றுள்ளன. அதனால் இந்தியத் தொழின் முறைகள் மாய்ந்தன. செல்வம் சுருங்கிற்று. இவ்வளவில் சுரண்டல் நிற்கவில்லை. வேறு வழியிலும் சுரண்டல் இன்றும் நிகழ்கிறது. (நாடு

ஒருவித விடுதலை பெற்றுள்ள இந்நாளிலாதல் மக்கள் கருத்துச் சுரண்டலை நிறுத்துவதில் படிகிறதா ? இல்லையே. சாதி மதப் பூசல்களின்மீதே மக்கள் கருத்துப் படிகிறது. வெட்கம் ! வெட்கம் !)

## வரியும் செலவும்

இந்தியன் பலவித நெருக்கடியில் நின்று வரி செலுத்துகிறான். அவ்வரிப் பணமாதல் இந்தியாவில் சுழன்று இந்தியாவுக்கே பயன்படுகிறதா ? இல்லை. இந்தியாவில் ஐரோப்பியரும் வேலைசெய்கின்றனர் ; இந்தியரும் வேலை செய்கின்றனர். ஐரோப்பியர் இந்தியாவைத் தாய் நாடாகக் கொண்டவரல்லர். அவரிட்டும் பொருள்களெல்லாம் இந்நாட்டில் தங்குவதில்லை. இந்தியர் பெறும் சம்பளமாதல் இந்தியாவுக்கே பயன்படுகிறதா ? சிந்தியுங்கள். இந்தியன் தலை முதல் கால் வரை அணியும் உடையும், அவன் வீட்டை அணிசெய்து நிற்கும் பொருளும் இந்தியாவில் செய்யப்பட்டன அல்ல. அவை எங்கேயோ செய்யப்பட்டு, இந்தியர் பொருளை உறிஞ்சு, இந்தியர் உடலிலும் உறைவிடத்திலும் வாழ்வு பெறுகின்றன. மற்றும் பல வழியிலும் இந்தியாவின் செல்வம் பிற நாடுகளுக்குச் சென்றுகொண்டே யிருக்கிறது.

இந்தியாவின் வரிப்பணம் செலவாகும் முறைகள் முன்னர்க் குறிக்கப்பெற்ற தாதாபாய் முதலியோரால் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நாளில் அவற்றிற் பலவற்றை எடுத்துக்காட்ட வேண்டுவதில்லை. அம்முறைகள் பலவழியிலும் பிரசாரஞ் செய்யப்பட்டுள்ளன. இந்திய வரிப்பணத்தில் ஏறக்குறைய ஒரு பகுதி இராணு

வத்துக்கு நிவேதனமாதல் பத்திரிகை படிக்கும் ஒவ்வொரு வருக்குந் தெரியும். இராஜப்பிரதிநிதியின் சம்பளம், கவர்னர்களின் சம்பளம், கலெக்டர் டாக்டர் முதலியோர் சம்பளம், ஹைகோர்ட் ஜட்ஜ் ஜில்லா ஜட்ஜ் முதலியோர் சம்பளம் ஆதியன ஆயிரக்கணக்கிலிருந்ததை எவரே அறியார்? நூற்றுக் கணக்கில் ஊதியம் பெற்ரேர் தொகையும் பொதுமக்களுக்குத் தெரியும்; இங்கிலாந்திலிருந்து கொண்டே உதவி பெற்ரேர் இன்னுர் இன்னுரென்பதும் மக்களுக்குத் தெரியும். ஆகவே, இங்கே சுரண்டலைப் பற்றிய விளக்கவுரை வேண்டுவதில்லை.

'......1892-ல் காமன்ஸ் விரும்பியவாறு சம்பளப்பட்டி ஒன்று சமர்பபிக்கப்பட்டது. அதில் உத்தியோகஸ்தர் வருஷ வாரியில் பெறும் சம்பளம் குறிக்கப்பட்டுள்ளது. அதன்படி 13,178 ஐரோப்பியருக்கு ரூ. 8,77,14,431; 3,309 யூரேஷியருக்கு ரூ. 72,95,026; 11,554 இந்தியருக்கு ரூ. 2,55,54,313 - சம்பளம். இவரனைவரும் ஆயிரத்துக்குமேல் வாஙகுவோர். மற்றவர் சம்பளம் இக் கணக்கில் வரவில்லை. சம்பளமல்லாமல் ஓய்வு நாளுக்கு என்று படிகளும் உண்டு. அவையாவன; ஐரோப்பியருக்கு ரூ. 46,36,314; யூரேஷியருக்கு ரூ. 3,22,210; இந்தியருக்கு ரூ. 12,18,743. இந்திய வருவாயினின்றும் கொடுக்கப்பட்ட பென்ஷன் ஐரோப்பியருக்கும் யூரேஷியருக்குங் கலப்பாக ரூ. 23,28,882; இந்தியருக்கு ரூ. 59,81,824. இந்திய வரிப்பணத்திலிருந்து இங்கிலாந்திலுள்ள ஐரோப்பியருக்குப் பவுன் கணக்கில் 3,710,678 (ரூ. 5,66,60,173) தொகை அளிக்கப்படுகிறது.

இந்தியப் பணத்திலிருந்து மற்றுமோர் அநியாய வழியில் செலவு செய்யப்படுகிறது. அது கிறிஸ்துவச் சபைக்கு ஆண்டுதோறும் செலவு செய்யப்படுவது. கல்கத்தா பிஷப்

புக்கு ரூ. 45,980 ; சென்னை - பம்பாய் பிஷப்புக்கள் ஒவ்வொருவருக்கும் ரூ. 25,000 ; லாகூர், லட்சுமணபுரி, நாகப்பூர், இரங்கூன் ஆகிய இடங்களின் பிஷப்புமாருக்கு ரூ. 10,200 ; சீனியர் சாப்பிலெயின்கட்கு ரூ. 12,000. 134 ஆங்கிலிகன் சாப்பிலெயின்களும், 11 பிரஸ்பிடேரியன் சாப்பிலெயின்களும் இருக்கிறார்கள். கத்தோலிக்கியரும் வெஸ்லியன்களும் உதவிபெறுகிறார்கள். கோயில்கள் கட்டப்படுதற்கும் பழுது பார்த்தற்கும் அரசாங்கம் உதவி செய்கிறது.........

1913-14-ல் வருவாய் 82,000,000 பவுன் ; செலவு 81,000,000 பவுன். அரசாங்கம் இந்தியருடையதாயின் எவ்வளவு செலவு குறைக்கப்படலாம் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை......... '

சர்க்கார் சொல்வது :—

' இந்தியா பிரிட்டனின் சார்புநாடு. தனது சார்பு நிலைக் கேற்றபடி இந்தியா பெரிய ஆங்கிலேய உத்தியோகஸ்தரை அமர்த்தும் கட்டுப்பாடுடையதாகிறது. 1911-ல் 80591 பிரிட்டிஷாரைக் கொண்ட பட்டாளம் இந்தியாவிலிருந்தது. அவர்களின் கையிருப்பும், பென்ஷனும் இங்கிலாந்துக்கு அனுப்பப்படுகின்றன. அவர்தம் பிள்ளைகள் - நான்கு வயதுக்கு மேற்பட்டவர்கள் - கல்வி பெறுதற்கென்று தாய் நாட்டுக்கு அனுப்பப்படுகிறார்கள். அப்பிள்ளைகளின் செல வுக்கு இந்தியாவில் தந்தைமார் பெறும் இந்தியப் பணம் அனுப்பப்படுகிறது !

உயர்தரக் கல்விக்கென்று இங்கிலாந்துக்கு இந்திய மாணுக்கர் அனுப்பப்படுகின்றனர். ஒவ்வொருவரது ஆண்டுச் செலவு மூவாயிரமாகும் '

—அன்னிபெஸண்ட் (I. A. N.)

கோபாலகிருஷ்ண கோகுலே, 'ஆண்டுதோறும் பதினாயிர ரூபாவும் அதற்குமேலும் சம்பளம் பெறு வோர் 2,388 பேர். அவருள் இந்தியர் அறுபது பேரே' என்று ராயல் கமிஷன் முன்னர்ச் சான்று பகர்ந்துள்ளதும் ஈண்டுக் குறிக்கத்தக்கது.

## இந்தியாவின் நிலை

இப்புள்ளிக் கணக்குகளால் இந்தியாவின் செல்வம் உத்தியோக வழியில் செலவாகியது ஓரளவில் புலனாதல் காண்க. அயலவரின் வாணிபம், இந்தியாவின் செல் வத்தைச் சுரண்டுவதைப்பற்றிய சில குறிப்புக்கள் மேலே பொறிக்கப்பட்டன. பல வழியிலும் இந்தியாவின் செல்வம் பிற நாடுகளுக்குப் போவதால், இந்தியாவில் பட்டினியும் பஞ்சமும் நிலைத்து நிற்கலாயின.

இந்தியா காமதேனுவே. எதற்கும் ஓரளவு உண்டு. காமதேனு வற்றக் கறக்கப்பட்டால் ஓராண்டு தாங்கும்; ஈராண்டு தாங்கும்: பத்தாண்டு தாங்கும்; குறைந்தது ஐம்பதாண்டுந் தாங்கலாம். அதற்குமேல் காமதேனு என் செய்யும்? இரத்தஞ் சொரியும். இப்பொழுது அதற்கு இரத்தமுமில்லை. மயக்கததால் காமதேனு சாய்ந்து கிடக்கிறது.

பட்டினியும் பஞ்சமும் இந்தியாவை அரிக்கின்றன. இந்திய மக்கள், வாழ்வு நலமிழந்து கிடக்கிறார்கள். அவர் கள் வருவாய் சுருங்கிற்று; வயது சுருங்கிற்று. இந்தி யரின் சராசரி மாத வருவாய் இரண்டு ரூபா என்றும் அவர்தம் சராசரி வயது இருபத்திரண்டு என்றும் தாதாபாய் தம் நாளிற் குறித்துச் சென்றனர். அவரே இங்கிலாந்து மக்களின் சராசரி மாத வருவாய் அறுபது

ரூபா என்றும், அவர்களின் சராசரி வயது நாற்பது என்றும் விளக்கியுள்ளனர். சராசரியில் ஓர் இங்கிலீஷ் காரனது ஒரு நாள் வருவாய், ஓர் இந்தியனின் மாத வருவாயாதல் காண்க. உலகில் எந்த நாடும் வருவாயிலும் வயதிலும் இந்தியாவைக் காட்டிலும் சுருங்கி நிற்கவில்லை. காரணம் என்ன? இந்தியா தன்னாட்சி இழந்தமையே யாகும். இனி இந்தியர் வருவாயும் வயதும் பெருகலாம். இதற்குச் சாதி மதப் பூசல் அற்ற இந்தியா முகிழ்த்தல் வேண்டும்.

## கல்வி

வருவாய் குறைந்து பட்டினியாலும் பஞ்சத்தாலும் வாடி வதங்கும் இந்தியன் எக்கலையில் கருத்துச் செலுத்த வல்லவனாவன்! கலையின்பம் நுகர்தற்குப் பொருளாதாரச் செழுமை வேண்டும். இந்தியா பொருளாதாரச் செழுமை இழந்து நீண்ட காலமாகி விட்டது. இந்தியன் வயிற் றுக்கே வனவாசஞ் செய்கிறான்; அவன் பொறி புலன்கள் ஒடுங்கிக் கிடக்கின்றன. அவன் கண் எக்கலையைக் காணும்? அவன் காது எக்கலையைக் கேட்கும்? அவன் கை எக்கலையைத் தொடும்? அவன் கருத்தில் எக்கலை பதியும்? அவன் பட்டினிப் பஞ்சக்கலையன்றிப் பிறி தொரு கலையை அறியாத நிலையிலிருக்கிறான். அறுபத்து நான்கு கலைகளை ஈன்ற இந்தியன் நிலை இவ்வாறாயிற்று! சாதிமத வெறியும், வேற்றுமை யுணர்வும், பிறவும் தன்னாட்சியை வீழ்த்தின. என் செய்வது?

இவ்வுரையைக் காணுஞ் சிலர், 'என்ன! முன் னாளைவிட இந்நாளில் கல்வி பெருகவில்லையா' என்று கருதல் கூடும். இது வெறும் உருவெளித் தோற்றமே.

இந்நாளில் வளருங் கல்வி எத்தகையது ? இப்பொழுது கல்வி என்னுஞ் சொல் வளர்கிறதேயன்றி அதன் பொருள் வளர்வதில்லை: இக்காலக் கல்வியாளர் தொகையில் பெருகுகின்றனரா-குணத்தில் பெருகுகின்றனரா - என்பது ஆராயற்பாலது.

கல்வி எற்றுக்கு ? குணமென்னுங் குன்றேறி நின்று வாழ்வு நடாத்துதற்கென்க. இதற்குத் துணைசெய்வது கல்வி. கல்வி அறியாமையைக் கல்லுவது. அறியாமை அகல அகல அறிவு விளங்கிக்கொண்டே போகும்; அறிவு விளங்க விளங்கக் குணம் முகிழ்த்துக் கொண்டே போகும்; குணம் முகிழ்க்க முகிழ்க்கச் செயல் மலர்ந்து கொண்டே போகும். அறிவு குணம் செயல் என்னும் ஆட்சியை நோக்குக. குணம் சிங்கநோக்காக நிற்பதை ஓர்க. அறிவினின்றும் நற்குணம் முகிழ்த்தால், அதனின்றும் நற்செயல் தானே மலரும். இன்றியமையாதது குணம் குணமே. ஆதலின், கல்வி என்னும் பெயரால் வெறும் அறிவுமட்டும் விளங்கிக் குணம் விளங்காவிடின், அக்கல்வியால் என்ன பயன் விளையும் ?

கல்வி இயற்கை வழியே பெறுவதாயிருத்தல் வேண்டும். அதில் நல்லறிவு விளங்கும்; நல்லறிவில் நற்குணம் பொலியும். செயற்கைவழிப் பெறுங்கல்வியினின்றும் நல்லறிவே பிறவாது. நல்லறிவில்லாவிடத்தில் நற்குணம் எப்படிப் பொலிவதாகும் ?

இக்காலக் கல்வி எவ்வழியில் வளர்கிறது ? இயற்கை வழியிலா ? செயற்கை வழியிலா ? இக்காலக் கல்வியாளர் வாழ்க்கையை ஆராய்ந்து பார்த்தால் அவ்வாழ்க்கை பதிலிறுக்கும். முன்னாளில் மரத்தடியில்

மண்ணில் அமர்ந்து கல்வி பயின்றவர் குணமுடையவராக வாழ்வு நடாத்தினர்; இந்நாளில் கல்விக்கென்று பெரும் பெருங் கட்டடங்கள் நிற்கின்றன; மின் விசிறிகள் சுழல்கின்றன; உயர்ந்த பீடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் அமர்ந்து கல்வி பயில்வோர் பலர் குணமிலராய் வாழ்தல் வெள்ளிடைமலை. குறை மக்கள் மேலதா? கல்விமுறையின் மேலதா? கல்வி முறையின் மேலதே.

வாரன் ஹேஸ்டிங்ஸ் காலத்திலும், லார்ட் ஹேஸ்டிங்ஸ் காலத்திலும் மேல்நாட்டு முறையில் மிகச் சில பள்ளிகள் அமைக்கப்பட்டன. அவற்றில் ஆங்கிலம் கட்டாயப்படுத்தப்படவில்லை. ஆங்கிலக் கல்வி விதை லார்ட் பெண்டிக் காலத்திலேயே இந்தியாவில் விதைக்கப்பட்டது. அதற்கென்று முயன்றவர் இருவர். ஒருவர் ஆங்கிலேயர்; மற்றொருவர் இந்தியர். ஆங்கிலேயர் மெக்காலே; இந்தியர் ராஜாராம் மோஹன்ராய். ஆங்கிலக் கல்வியால் நலம் விளையுமென்றே மோஹன்ராய் கருதியிருப்பர்.

கல்கத்தா, சென்னை, பம்பாய் ஆகிய மூன்று பெரிய நகரங்களில் பல்கலைக் கழகங்கள் காணப்பட்டன. பின்னை தொடர்ந்து தொடர்ந்து ஆங்காங்கே பல கழகங்கள் அமைக்கப்பட்டன. கோகுலே முதலியோர் கட்டாய மூலாதாரக் கல்விக்கென்று செய்த முயற்சி அளவிடற்பாலதன்று. அவர்தம் முயற்சி அவர் காலத்தில் வெற்றியளிக்கவில்லை. பின்னை அம் முயற்சி ஓரோ வழியில் வெற்றியளித்தது.

ஆங்கிலப் பயிற்சி காட்டுத் தீப்போல் நாட்டில் பல பாகங்களில் பரவலாயிற்று. ஆங்கிலம் பயின்ற இந்தியர்

தொடக்கத்தில் பத்துக் கணக்கினராய், பின்னை நூற்றுக் கணக்கினராய், பின்னை ஆயிரக் கணக்கினராய், பின்னை இலட்சக் கணக்கினராய்ப் பெருகிப் பெருகி, இப்பொழுது கோடிக் கணக்கினராய்ப் பெருகி நிற்கின்றனர். இவ்வளவு பேரும் அடிமை வேலையைக் குறிக்கொண்டே ஆங்கிலம் பயின்றனர். அடிமை வேலைக்கென்று கல்வி பயில்வது எங்ஙனம் இயற்கையினதாகும்? ஆதலின், இக்காலக் கல்வி செயற்கையின்பாற்பட்டதென்பதில் என்ன ஐயம்? ஆங்கிலக் கல்வி செயற்கையினதன்று. அதைப் பயிலும் முறையிலேயே செயற்கை யிருக்கிறது. செயற்கைமுறை யில் ஆங்கிலம் பயில்வதால், அஃது அடிமை உணர்வை உண்டாக்குகிறது போலும்!

அறிவு விளக்கத்துக்கு எம்மொழி பயின்றாலென்ன? அதைத் தீய வழியில் பயன்படுத்துவது அறியாமை. ஒருவன் முதலில் தாய்மொழி பயில்வது சிறப்பு. பின்னை அவனுக்குப் போதிய வாய்ப்புக்களிருப்பின் அவன் பல மொழி பயிலலாம்.

'இப்போது ஆங்கிலம் பயின்றோர் தொகை அடிமை முறைகளை நிரப்பி மேலும் மேலுந் ததும்பி வழிகிறது. அம்முறைகளில் நுழைந்தோர் ஒழிய, எஞ்சி நிற்போர் விஞ்ஞான வழியில் தொழின் முறைகளை வளர்க்க ஏன் முயலுதல்கூடாது' என்று சிலர் கேட்கலாயினர். கேள்வி நன்றாயிருக்கிறது; பொருந்தியது போலவுந் தோன்றும். ஆனால் அதை ஊன்றி நோக்கினால் அது பொருந்திய தன்று என்று விளங்கும். 'பிரிட்டிஷ் ஆட்சிமுறை எத்தகையது?' என்று கேள்வி கேட்போர் கருதுவதில்லை போலும்! இந்தியாவில் விஞ்ஞான வழியில் தொழில்

வளரப் பிரிட்டிஷ் ஆட்சிமுறை இடந் தந்ததில்லை. பெய ருக்குச் சில தொழிற்பள்ளிகளை அமைக்கும் நிலையி லேயே அவ்வாட்சிமுறை நின்றது. இந்தியாவில் விஞ்ஞான வழியில் தொழின்முறைகள் வளர்ந்தால் மேல்நாட்டு வாணிபத்தில் முக்காலேயரைக்கால் பங்கு அற்றே போகும். அதனால் மேல்நாட்டுக்குப் பலதிற இடர்கள் உண்டாகும். இடர்களை உண்டாக்கப் பிரிட்டிஷ் ஆட்சி முறை முனைந்ததில்லை ; விரைந்ததில்லை. நிலைமை இவ்வா றிருந்தமையால் இந்தியக் கல்வியாளர் விஞ்ஞான வழி யில் தொழில்களை வளர்க்கப்புகுந்தாரில்லை. அவர் பிழைப் புக்கென்று திரியலாயினர் ; பற்பல இழி துறைகளிலும் இறங்கலாயினர் ; கிளர்ச்சிகளைத் தோற்றுவித்தனர் ; வகுப்புவாதங்களைக் கிளப்பினர் ; 'அந்த இயக்கம்' 'இந்த இயக்கம்' என்று ஆரவாரஞ் செய்தனர் ; எதைச் செய்தாலும் வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிந்த தில்லை. இப்பொழுது இந்தியா ஒருவித உரிமை பெற் றுள்ளது. விஞ்ஞானக் கலை நன்முறையில் பரவின், அஃது ஒருவாறு வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதாகும்.

இக்காலக் கல்வியின் அடிப்படையில் விதேசியம் ஊர்ந்துகொண்டிருத்தல் கருதற்பாலது. கல்வி பயிலும் பள்ளி முழுவதும் விதேசியமாயின், பிள்ளைகளிடம் சுதேசியம் எங்ஙனம் வளரும்? பிள்ளைகள் கற்பதும் கேட்பதும் காண்பதும் பிறவும் விதேசியம்! அவர்கள் படிக்கும் புத்தகம், எழுதும் காகிதம், விளையாடுங் கருவி கள் யாவும் விதேசியம்! விதேசியச் சூழலிடை நின்று வளரும் பிள்ளைகள் நெஞ்சில் என்ன வளரும்?

சுதேசியமா ? விதேசியமா ? இளமையிலேயே மக்களுக்கு விதேசிய விதை விதைக்கப்படுகிறது! 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்பது பழமொழி.

இந்தியப் பள்ளி மாணாக்கன் மேடைகளில் சுயராஜ்ய முழக்கஞ் செய்தான்; தேசபக்தர் வந்தால் அவர் ஏறிவந்த வண்டியை ஈர்த்தான்; வெறிபிடித்தவனைப்போல உழன்றான்; பின்னே அவனே போலிஸ் உத்தியோகஸ்தனாகித் தேசபக்தரைப் பிடித்தான். இந்திய மகனே மாஜிஸ்ட்ரேட்டாயமர்ந்து தேசபக்தரைத் தண்டித்தான். இச்செயல்கள் இக்காலக் கல்வியின் இயல்பைப் புலப்படுத்துவனவாம்.

## சுதேசியம்!

இக்காலக் கல்வி பயின்ற ஆண்களும் பெண்களும் காலையிலெழுந்ததும் எந்தச் சோப்பால் உடலைக் கழுவுகிறார்கள்? எந்த உடை உடுத்துகிறார்கள்? எந்த உணவு உண்கிறார்கள்? எந்த வண்டியில் ஏறுகிறார்கள்? அவர்கள் வீட்டில் எவ்விசிறி சுழல்கிறது? எவ்விளக்கு எரிகிறது? எக்கருவி பாடுகிறது? அவர்கள் இருக்கும் நாற்காலி எவ்விடத்தது? உறங்கும் கட்டில் எவ்விடத்தது? பார்க்கும் கண்ணாடி எவ்விடத்தது? க்ஷவரக் கத்தியும் கொல்லைத் தொட்டியும் எவ்விடத்தன? இவையின்றி இக்காலக் கல்வியாளன் வாழ்வு நடாத்தல் இயலாதவனாய் விட்டான்! அவனுக்குச் செயற்கை இயற்கையாய் விட்டது! விதேசியம் சுதேசியமாய்விட்டது! மைந்தன் என்ன செய்வான்! பாவம்!

ஆங்கிலம் பயின்றாலென்ன? பிற பயின்றாலென்ன? விதேசியத்தில் ஏன் விழுதல் வேண்டும்? ஓராளவிலாதல்

விழுதல் கூடாதா? முற்றுமா விழுதல் வேண்டும்? ஆங்கிலம் பயின்ற மக்கள் தொடக்கத்திலேயே விதேசியத்துக்கு இரையாகாது, சுதேசியத்தில் உறுதிகொண்டு, நின்றிருந்தால் நிலைமை இவ்வளவு கேடாயிராது.

இக்கால நாகரிகப் பொருள்களை வேண்டாமென்று எவ்வறிஞருங் கூறார். அப்பொருள்கள் நாட்டில் செய்யப்படுவனவா யிருத்தல்வேண்டும். அவை நாட்டில் செய்யப்படும் வரை சுதேசிய விரதம் பூண்டிருத்தலே அறிவுடைமை. அதனால் மேல்நாட்டு வாணிபத்துக்கு ஒருவித நெருக்கடி ஏற்படும். நெருக்கடி நிலைமையைச் சீர்செய்யும். அந்நிய வாணிபம் நுழைந்தபோதே - தொடக்கத்திலேயே - எச்சரிக்கையா யிருந்தால் விதேசியம் முற்றியிராது. அந்நாளில் வாழ்ந்த பெரியோர்கள் கருத்தில் சுதேசிய விரதம் தோன்றவில்லை போலும்! விதேசியம் முற்றி வளர்ந்த பின்னரே சுதேசிய விரதம் ஓரளவில் ஏற்கப்பட்டது. அந்நாளில் மகாத்மா காந்தி தோன்றாதது இந்தியாவின் தவக்குறைவே யாகும்.

பொதுவாகத் தற்காலக் கல்வியாளரால் விதேசியம் ஆக்கம் பெற்றுவருதல் கண்கூடு. அவருள் சிறப்பாகக் குறிக்கத் தக்கவர் சிலருளர். அவர் வக்கீல்கள், டாக்டர்கள், எஞ்சினியர்கள் முதலியோர். வக்கீல்கள் கிராமப் பொருளைச் சுரண்டித் தங்கள் வீட்டுக்கென்றும் வண்டிக்கென்றும் உடைக்கென்றும் பிறவற்றிற்கென்றும் அயல் நாட்டுக்கு அனுப்பும் புண்ணியவான்கள்; டாக்டர்கள் மருந்துக்கென்று நாட்டுச் செல்வத்தைப் பிறநாட்டுக்கு அனுப்பும் தருமவான்கள்; எஞ்சினியர்களைப் பற்றிச் சொல்லவேண்டுவதில்லை. இம்மூவர் தொழின் முறை

களும் அறத்தின் பாற்பட்டனவாகா. வக்கீல் மனம் என்ன நினைக்கிறது? 'எங்கே பிணக்குண்டாகும்' என்று நினைக்கிறது; டாக்டர் மனம் 'நாட்டில் நோய் பெருகாதா' என்று எண்ணுகிறது; எஞ்சினியர் மனம் 'எவ்வாராவதியாதல் உடையாதா' என்று கருதுகிறது. இத்தொழில் புரியும் மக்கள் என்செய்வார்கள்? தற்காலக் கல்விமுறையில் உள்ள குறைபாடுகள் இயற்கைக் குணங் களையும் கெடுக்கவல்ல தொழில்முறைகளைப் படைத்து விடுகின்றன. தற்காலக் கல்விமுறை மாறினால் அறத் தொழில்கள் பெருக இடமுண்டாகும்.

தேசபக்தர்கள் செய்த கிளர்ச்சியின் பயனாக ஒருவித விடுதலை கிடைத்தது என்றும், இனி முழு விடுதலை கிடைக்கும் என்றும் நாம் நினைந்து விடு கிறோம். விடுதலைக்குரிய அறிகுறி என்ன? தேர்தல் பெருக்கா? ஸ்தல ஸ்தாபனங்களிலும் பிற ஸ்தாபனங் களிலும் பீடங்கள் பெருகுவதா? அவையல்ல. விதேசியம் எவ்வளவு அருகிற்று - சுதேசியம் எவ் வளவு பெருகிற்று - சுரண்டல் எவ்வளவு ஒழிந்தது - என்று பார்த்தல் வேண்டும். ஸ்தாபனங்கள் பெருகப் பெருகச் சுரண்டல் அதிகமாகிறது. சிமிட்டியும், இரும் புத் தூண்களும், மின்சாரப் பொருள்களும், யந்திரங் களும், பிறவும் வெளிநாட்டிலிருந்தல்லவோ வருகின்றன? அவை நாட்டுச் செல்வத்தை எவ்வளவு கவர்கின்றன என்று ஆராய்தல் வேண்டும். அரசியல் விடுதலை மோகம் - தேர்தல் வேகம் - பதவி வேட்கை - நாட்டுச் செல்வம் சுரண்டப்படுவதையுங் கருதச் செய்வதில்லை. வாழ்வுக்கு வேண்டப்படும் பொருள்களை நாட்டில் உண்டு

பண்ணும் நிலைமையை உண்டாக்கவே முதலில் முயலல் வேண்டும். அதற்கு நாடு முழு விடுதலை பெற்றே தீர்தல் வேண்டும். முழு விடுதலை எது? அது பின்னே விளக்கப் படும்.

## குடும்பங்கள்

இக்காலக் கல்வி, குடும்பங்களின் ஒருமைப்பாட்டைக் குலைத்து வருதலும் கவனிக்கத்தக்கது. பெற்றோர்க்கும் பிள்ளைக்கும் பிணக்கு, அண்ணனுக்கும் தம்பிக்கும் பகைமை, தமக்கைக்கும் தங்கைக்கும் வேற்றுமை, கணவனுக்கும் மனைவிக்கும் பிரிவு முதலிய கேடுகளை விளைப்பதில் இக்காலக் கல்வி பேர்பெற்று விளங்குகிறது. இக்கல்வி இரக்கமற்றது; தன்னலத்தைப் பெருக்குவது.

## கிராமம்

நகரங்களில் இக்காலக் கல்வியாளர் புரியும் நாடகங்களெல்லாம் கிராமங்களுக்குச் சென்று பரவுகின்றன. அவையும் இக்கால நாடகம் நடிக்கத் தொடங்குகின்றன. நகரங்களைப்போலக் கிராமங்களும் விதேசிய மயமாகின்றன. நாடே விதேசியமாகி நிற்கிறது. தற்காலக் கல்வி முறையால் விளைந்துவருந் தீங்குகள் பலப்பல.

கிராமம் முற்கால இந்தியாவில் எப்படி இருந்தது? இப்பொழுது - தற்கால இந்தியாவில் - எப்படி இருக்கிறது? அக்காலக் கிராமம் குடியரசாயிருந்தது; பல்கலைக் கழகமாயிருந்தது. இக்காலக் கிராமம் மிடியரசாயிருக்கிறது; கொல்கலைக் கழகமா யிருக்கிறது. கிராமத் தொழில்கள், கிராமக் கலைகள், கிராமக் கட்டு, சகோதர

நேயம், ஒருமைப்பாடு முதலியன குலைந்தன. இக்காலக் கல்வி கிராமத்தின் இயற்கையையே மாற்றிவிட்டது.

ஆங்கிலம் பயின்ற இந்தியர் ஆங்கிலர்க்கும் இந்தியர்க்கும் தரகரேன நடுவில் நிற்பவர். அவர் ஆங்கிலருமல்லர்; இயற்கை இந்தியருமல்லர். அவர்க்கும் நாட்டு மக்களுக்கும் உறவு ஏற்படுவதில்லை. அவர் ஒரு தனி இனத்தவராக வாழ்கின்றனர். அவர் மற்றவரை அயலவராகவே நினைக்கின்றனர். அவரால் இந்தியா பல வழியிலுங் கேடுறுகிறது.

எதற்கும் புறனடையுண்டு. இக்காலக் கல்வியாளரிலும் நல்லோர் சிலர் இருப்பர். அவரையும் நன்முறையில் வாழ அவர் கற்ற கல்வி விடுவதில்லை. அவரது திண்டாட்டம் அவர்க்கே தெரியும்.

இக்காலக் கல்வியாளர் பலர் லஞ்சத்தைப் புண்ணியமென்று கருதி வாழ்வு நடாத்துகின்றனர். 'இந்தியாவில் உரிமை பெருகப் பெருக லஞ்சமும் உடன் பெருகும்' என்று சைமன் குழுவின் முன்னர் சிலர் சான்று கூறியது நினைவுக்கு வருகிறது. மெய்ம்மையும் ஒழுக்கமும் செறிந்த இந்தியா எந்நிலையுற்றது? முற்கால இந்தியர் நிலைமையை மெகஸ்தினிஸ் விளக்கியிருத்தல் முன்னே எடுத்துக் காட்டப்பட்டது. அதை நினைவூட்டி, இக்கால இந்தியாவை நோக்குக; உள்ளம் உருகும். இந்தியாவில் தோன்றிய பல குறைபாடுகள் இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணமாக நின்றன என்றும், அவை சாதிவேற்றுமை, மதவெறி, ஹிந்து-முஸ்லிம் வேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை, சகோதர நேயமின்மை, சமயத்தில் காட்டிக்கொடுத்தல் முதலியன என்றும்,

அவை அயலவராட்சியைக் கூவியழைத்தன என்றும் இந்நூற்கண் பலவிடங்களிற் சொல்லப்பட்டு வருகின்றன. இக்கால இந்தியா அக்குறைபாடுகளை நீக்கிக்கொள்ள முயன்றதா ? ஏறக்குறைய இருநூறாண்டு வாய்ப்புக் கிடைத்தது. வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்த இக்கால இந்தியா முனையவில்லை. சிற்சில சீர்திருத்த இயக்கங்களும் கழகங்களும் தோன்றின. அவற்றால் இந்தியாவின் குறைபாடுகளைப் போக்கல் இயலவில்லை. இந்தியப் புண்கள் அப்படியே இருக்கின்றன. புண்களை ஆற்ற இக்காலக் கல்வியாளர் மனமாரப் புகுவதில்லை.

## சாதி

இக்கால இந்தியாவில் சாதி வேற்றுமை எப்படி இருக்கிறது ? சாதி வேற்றுமை போதல்வேண்டுமென்ற பேச்சு அதிகம் பேசப்படுகிறது. செயலில் சாதி வேற்றுமை பாராட்டப்படுகிறது. இக்காலக் கல்வியாளர் அவ்வேற்றுமையைத் தமது நலத்துக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அவரால் சாதி சங்கங்கள் காணப்படுகின்றன. அரசியல் கழகங்களில் தாம் அமர்தற்பொருட்டு அவரால் வகுப்புரிமை பேசப்படுகிறது ; சாதிப்போர் கிளப்பப்படுகிறது. சாதி வேற்றுமை சிறிதும் நகரவில்லை. முற்காலத்தில் சாதி வேற்றுமை கொள்ளப்பட்ட முறைமைக்கும், இக்காலத்தில் அவ்வேற்றுமை கொள்ளப்படும் முறைமைக்கும் வேற்றுமை இருக்கிறது. அம்முறையால் சாதிகளுக்குள் பகைமை பெரிதும் எழவில்லை ; இம்முறையால் பகைமை கொழுந்துவிட் டெரிகிறது. ஆகவே, இந்நாளில் சாதி வேற்றுமை பெருந் தீங்கே விளைத்துக்

கொண்டிருக்கிறது. அதைப் போக்கும் முயற்சி போதிய அளவில் எழவில்லை.

## மதம்

மதவெறி இந்நாளில் இல்லை. மதப் பற்றிருந்தாலன்றோ மதவெறி எழும்? மதத்தின் சொரூபம் நாட்டில் உலவுவதில்லை; வேடமே யாண்டும் நிலவுகிறது. வேட மதத்தைத் தமது நலத்துக்கென்று இக்கால அறிஞர் பயன்படுத்துகின்றனர். அவ்வறிஞர் மக்களிடை வேண்டுமென்றே வேட மதவெறியை உண்டுபண்ணுகின்றனர். அறிஞர்க்கு மதப் பற்றுங் கிடையாது; வெறியுங் கிடையாது. அவர் மனத்தில் மதமே கிடையாது. ஆனால் அவர் மதப்பற்றுடையார்போல நடித்துப் பாமர மக்களை வஞ்சித்து மதத்தின் பெயரால் கலகமூட்டித் தாம் நலம் பெற முயல்கின்றனர். இந்நாளில் மதவெறி தன்னல வெறியாக மாறிவிட்டது. அறிஞர் தமது நலன் கருதாது தொண்டு செய்திருப்பாராயின், மக்களிடை வேட மத வெறி நிலவாதொழிந்திருக்கும். மக்களிடை ஏதோ ஒருவழியில் மதவெறி நிலவிக்கொண்டிருக்கிறது. அவ் வெறியைச் சமயம் வாய்க்கும்போதெல்லாம் எரியாக்க இக்காலக் கல்வியாளர் காத்துக்கொண்டிருக்கின்றனர்.

## ஹிந்து - முஸ்லிம்

ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையைப்பற்றி விரித்துக் கூறவேண்டுவதில்லை. அவுரங்கஜிப் காலத்தைவிட இக் காலத்தில் அவ்வேற்றுமை அதிகமாகப் பாராட்டப்படுகிறது. இக்கால இந்தியாவில் ஹிந்து - முஸ்லிம் வேற்றுமையை வளர்ப்பதற்கென்று இரண்டு பெரிய அமைப்புக்

கள் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்று ஹிந்து மகாசபை; மற்றொன்று முஸ்லிம் லீக். ஏறக்குறைய இருபதாண்டாக ஹிந்து-முஸ்லிம் வேற்றுமை வலுத்தே வருகிறது. பஞ்சாப், வங்காளம்,பம்பாய்,கான்பூர், அல்லகாபாத்,வேலூர், ஆம்பூர், வாணியம்பாடி முதலிய இடங்களில் நிகழ்ந்த ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் மனத்தில் புத்தம் புதியனவாக நின்றுகொண்டிருக்கின்றன. அத்தகைக் கலகங்கள் முஸ்லிம் ஆட்சியிலும் நடைபெற்றதில்லை. கலகங்கட்கெல்லாம் மூலகாரணரா யிருப்பவர் இக்காலக் கல்வியாளர் என்பதை நேயர்கள் மறத்தலாகாது. இக்காலக் கல்வியிலுள்ள நஞ்சு கொடியது; மிகக் கொடியது.

## தீண்டாமை

தீண்டாமை ஒரு நோயாக இந்தியாவைப் பிணித்திருக்கிறது. தீண்டாமையைப் போக்க முன்னாளில் சில அறிஞர் முயன்றனர்; இந்நாளில் காந்தியடிகள் முயன்று வருகிறார்; காங்கரஸ் முயன்று வருகிறது; வேறு சிலரும் முயன்று வருகின்றனர். இந்நாளிலும் சாதி மத வாதிகள் தீண்டாமையை ஒழிக்க விரும்புகிறார்களில்லை. காங்கரஸ் ஆட்சியில் இந்தியாவில் ஹிந்து மக்கள் அனைவர்க்கும் பொதுவில் பயன்படுமாறு கோயில்கள் திறந்துவிடப்பட்டன. சுயராஜ்யமிழந்து, நீண்டகாலம் அடிமைக்குழியில் துன்புற்று, ஒருவித சுயஆட்சி பெற்றுள்ள இந்நாளிலும், தீண்டாமை சாஸ்திர சம்மதம் பெற்றதென்றும், கோயில்களில் தீண்டாமை பாராட்டப்படல் வேண்டுமென்றும் சாதி மத வாதிகள் கிளர்ச்சி செய்கிறார்கள்; கோயில்

திறப்பை மறுக்கிறார்கள். உலகத்துடன் உறவு கொண்டுள்ள இக்கால இந்தியா, தீண்டாமையைப் போக்க இன்னும் ஒருமைப்பட்ட கருத்துடையதாகாதிருப்பது இழிவு இழிவேயாகும் ! தீண்டாமை, இந்தியாவை நரகக் குழியாக்கியதைச் சகோதரர்கள் உணர்ந்து நடப்பார்களாக.

## பெண்ணடிமை

பெண்ணடிமை ஒருவாறு ஒழிந்து வருகிறது ; இன்னும் முற்றும் ஒழியவில்லை ; ஒழியுங் குறி தோன்றி வருகிறது. இந்தியப் பெண்மக்கள் கல்வி பயின்று ஆண் மக்களினுஞ் சிறந்து விளங்குதல் கண்கூடு. இயற்கை, பெண் கல்வியைத் தடுக்கவில்லை. பெண்ணடிமை நீக்குவதில் இக்கால இந்தியா முனைந்து நிற்பது மகிழ்ச்சியூட்டுகிறது.

தற்கால இந்தியா பல வழியில் இன்னுந் திருந்தவில்லை. சாதிமத வேற்றுமை கடந்த அமைப்பென்று சொல்லப்படுங் காங்கரஸ் சார்பில் இந்தியாவின் ஆட்சி நடைபெறுகிறது. அவ்வாட்சியாலும் இக்கால இந்தியாவின் வேற்றுமைகளையொழித்தல் முடியாமற் போயிற்று. அவ்வாட்சியால் வேற்றுமைகள் சிறிது வளர்ந்தன என்றே கூறலாம். இது பின்னே விளக்கஞ் செய்யப்படும்.

இக்கால இந்தியா பலவழியிலும் துன்புறுகிறது. அத்னை ஒருபக்கம் பட்டினியும் பஞ்சமும் கோழைமையும் எரிக்கின்றன ; சாதிமதப் பூசல்கள் மற்றொரு பக்கம் அரிக்கின்றன ; தன்னலம் லஞ்சம் வரி முதலியன இன்

னொரு பக்கம் அலைக்கின்றன. இவற்றிடை இந்தியா முழுவிடுதலை யடைதல் வேண்டும். எப்படி ?

## பாரதக் கழகம்

இமயத்தடியில் ஒரு மாபெரும் பாரதக் கழகம் கூடியிருந்தது. அக்கழகத்தின் கிளைகள் ஒவ்வொரு கிராமத்திலும் நிலவியிருந்தன. அப்பெருங் கழகத்தில் உமை, திரு, வாணி, காளி, துர்க்கை, சூர் முதலியோர் வீற்றிருந்தனர். இக்கால இந்தியாவில் அப்பெருந்தெய்வக் கழகம் குலைந்து போயிற்று ; கிளைகளும் முறிந்தன. உமை ஓடிய இடந் தெரியவில்லை. திரு, வாணி, காளி முதலியோர் அமெரிக்கா, பிரிட்டன், ருஷ்யா, ஜெர்மெனி, பிரான்ஸ், ஜப்பான் முதலிய இடங்களுக்குச் சென்று விட்டனர். பாரதத்தில் அவர்தம் உருவங்கள் மட்டும் படமாய் - கல்லாய் - செம்பாய்ப் போயின. அவற்றுக்கு வந்தனை வழிபாடுகள் செய்யப்படுகின்றன. வெறும் வந்தனை வழிபாடுகளால் ஞானம், செல்வம், கல்வி, தொழில், வீரம், அறப்போர் முதலியன ஓங்கி வளருமோ? அவை மீண்டும் பழையபடி ஓங்கி வளரல் வேண்டும். இதற்கு நாடு இப்பொழுது அடைந்துள்ள விடுதலை போதாது ; முழு விடுதலை அடைதல் வேண்டும். பல திற இடுக்கண்கள் நாலு பக்கமுஞ் சூழ்ந்துள்ள இவ் வேளையில் நாடு எப்படி முழு விடுதலை அடையும் ?

# II. விடுதலை



நூலின் பெயர் 'இந்தியாவும் விடுதலையும்' என்பது. நூலின் குறிக்கோள் விடுதலையின் மேலதே. விடுதலை வேட்கை எழுதற்கும், அதற்குரிய வழி துறைகளைக் காண்டற்கும் முத்திற இந்தியாவின் நிலைமைகளைத் தெரிந்து கொள்வது அவசியம். அதுபற்றியே முதலில் முத்திற இந்தியாவின் நிலைமைகள் ஒருவாறு சொல்லப் பட்டன.

விடுதலை இருவிதம். ஒன்று அகவிடுதலை; மற் றொன்று புறவிடுதலை. அகவிடுதலைக்குரிய வழி துறைகள் வேறு. அவற்றை விரித்துக் கூறுவது நூலின் நோக்க மன்று. ஆகவே 'விடுதலை' என்னுந் தலைப்பு புற விடு தலையையே குறிக்கொண்டதென்க. அக விடுதலைக்கும் புறவிடுதலை வேண்டற்பாலது. புறவிடுதலை இல்லாத இடத்தில் அகவிடுதலையுறுதல் அரிது.

விடுதலை பலவகை. அவற்றுள் சிறந்தது அர சியல் விடுதலை. அரசியல் விடுதலையிலும் பல கூறுகள் உண்டு. அவற்றுள் தலையாயது பொருளாதார விடுதலை. அரசியல் - பொருளாதார விடுதலையுண்டானல் மற்றச் சமூக சமுதாயமாதி விடுதலைகள் தாமே நிகழும். முதலில் வேண்டற்பாலது அரசியல் - பொருளாதார விடுதலையே. மற்ற விடுதலைகளுக்குரிய முயற்சிகள் மட்டும் உடன் உடன் நடந்துகொண்டு வரலாம். இன்றியமையாத

அரசியல் - பொருளாதார விடுதலையைப் பற்றிச் சிறிது விரித்துக் கூற வேண்டுமாதலால் அதை இறுதியில் வைத்துக்கொள்ள விரும்புகிறேன். அதற்கு ஒருபுடை துணை செய்யவல்ல மற்ற மற்ற விடுதலைகளைப்பற்றிச் சிறிது சிறிது விரைந்து கூறப்புகுகிறேன்.

விடுதலை முயற்சியிலுங் கருத்து வேற்றுமையுண்டு. முதலில் சமூக சமுதாயம் ஆதியன விடுதலைபெற முயலல் வேண்டுமென்றும், பின்னை அரசியல் - பொருளாதார விடுதலைபெற முயலல் வேண்டுமென்றும் சிலர் கூறுப. இதற்கு மாறுபட்ட கருத்துடையாருமுளர். இவ்விவாதத்தில் தலைப்பட என் மனம் எழுந்ததில்லை; இனியும் எழாது. அரசியல் - பொருளாதார விடுதலையே முதலில் வேண்டற்பாலதென்று எனது கல்வி கேள்வி அநுபவம் முதலியன எனக்கு அறிவுறுத்துகின்றன. மற்ற மற்ற விடுதலைகளுக்குரிய முயற்சிகள் மட்டும் உடன் உடன் நடந்து வரலாமென்பது எனது கருத்து.

# க. கட்டுகள்

இந்தியாவைப் பிணித்துள்ள கட்டுகளெல்லாம் விரித்துப் போதல் அநாவசியம். சில பெருங் கட்டுகளை மட்டுங் குறிப்பிட்டு, அரசியல் - பொருளாதாரத்தின் மீது கருத்துச் செலுத்துவன். முதலாவதாகத் தனி வாழ்க்கையை எடுத்துக்கொள்கிறேன்.

## வாழ்க்கை

முற்கால இந்தியர் சேர்க்கை வாழ்க்கை நடாத்தி இயற்கை இன்பந் துய்த்தனர். அவர் தனித்த வாழ்க்கை நடாத்தினாரில்லை. பெண்ணும் ஆணும் கலந்து வாழ்வது இயற்கை என்பதும், தனி வாழ்க்கை செயற்கை என்பதும் 'முற்கால இந்தியா'வில் விளக்கப்பட்டன.

இயற்கைப் படைப்பில் பெண்மட்டும் அமையவில்லை; ஆண்மட்டும் அமையவில்லை. இரண்டும் அமைதல் கண்கூடு. இரண்டும் அமைவதன் நோக்கம் ஒன்றிருத்தல் வேண்டுமன்றோ? அஃதென்னை? இரண்டுஞ் சேர்ந்து வாழ்ந்து உலக வளர்ச்சிக்குத் துணை புரிதல் வேண்டுமென்பது. இயற்கை நோக்கு அங்ஙன மிருப்பப் பெண் ஆணையும் ஆண் பெண்ணையும் துறந்து வாழ்க்கை நடாத்துவது எற்றுக்கு? அஃது இயற்கைக்கு அரண் செய்வதாகுமா?

பெண் ஆணையும் ஆண் பெண்ணையும் வெறுத்துத் தனி வாழ்க்கை நடாத்தும் செயற்கைமுறை' எப்பொழுது உண்டாயிற்று? எப்படி வளர்ந்து சமூகத்தில் நுழைந்தது?

விருஷபதேவரால் காணப்பெற்ற ஜைனம், பின்னை திகம்பரமென்றும் சுவேதாம்பரமென்றும் இரண்டாகப் பிரிந்தது. திகம்பரம், பெண் ஆண் சேர்க்கை வாழ்க்கை, கட்டைப் பெருக்குவதென்றும், தனி வாழ்க்கையே கட்டை அறுக்கவல்லதென்றும் கூறுவது; இயற்கை இன்ப வாழ்வைத் துறந்தால் விடுதலை உண்டாகுமென்று அறிவுறுத்துவது; பெண்பிறவி இழிந்ததென்றும், அப் பிறவிக்கு வீடுபேறு இல்லையென்றும், பெண் தவங்கிடந்து ஆண்பிறவி தாங்கல் வேண்டுமென்றும், ஆண்பிறவிக்கே வீடுபெறும் வாய்ப்புண்டென்றுஞ் சொல்வது. இத் திகம்பரத்துக்கு மாறுபட்டது சுவேதாம்பரம்.

தனி வாழ்க்கை விதையை விதைத்தது திகம்பர ஜைனம். அதைத் தொடக்கத்தில் வளர்த்தது பௌத்தம்; பின்னை பெருக்கியது வேதாந்தம். இந்நாளில் சைவம் வைணவம் உள்ளிட்ட பல மதங்களும் 'தனி வாழ்க்கையே உய்வளிப்பது' என்னுங் கொள்கையுடையனவாயின.

புத்தர் பெருமான் தமது அறநெறியைப் பரப்புதற்குத் தனித்த வாழ்க்கையினரை (சந்நியாசிகளை)த் தொண்டராகக் கொண்டனர். பௌத்த தருமத்தை வளர்ப்பதற்கென்று புறப்பட்ட தொண்டர்கள் நாலு பக்கமும் பரவினார்கள். எங்கணும் தனி வாழ்க்கைக் கூட்டமும் மடங்களும் பெருகின. தனித்த வாழ்க்கையினர் அறத்தைப் போதித்தமையான், அவரை மக்கள் போற்றலானார்கள்; வணங்கலானார்கள்; வழிபடலானார்கள். அவ்வாழ்க்கையினர்க்கு மதிப்பு ஏற்பட்டது. மக்களிடை மதிப்புப் பெறும் எதுவும் விரைவில் ஆக்கம் பெறுதல் இயல்பு.

பௌத்தத்தை வீழ்த்த எழுந்த வேதாந்தக் கிளர்ச்சி பௌத்த வழக்க ஒழுக்கங்களிற் சிலவற்றை ஏற்றுக் கொண்டது. அவற்றுள் ஒன்று தனி வாழ்க்கை. மண்ணையும் பொன்னையும் பெண்ணையும் வெறுத்தால் விடுதலை உண்டாகும் என்ற கொள்கை வேதாந்தத்தில் குடிபுகுந்தது. வேதகால முனிவரர் பலரும் தனித்த வாழ்க்கை நடாத்தினவரல்லர். அவரனைவரும் பெண்ணுடன் வாழ்ந்து இயற்கை இன்பத்தை இறையின்பமாகத் துய்த்துப் பெரியவரானவர். வாழ்க்கை முறையில் வேத கால முனிவரர்க்கும் வேதாந்த கால முனிவரர்க்கும் வேற்றுமை தோன்றியது கருதத்தக்கது. வேதாந்தப் பெயரால் தனி வாழ்க்கைக்கு ஏற்பட்ட மதிப்பு, அவ்வாழ்க்கைக்கு மாறுபட்ட கொள்கையுடைய சைவர் வைணவர் முதலிய பலரையும் மயங்கச் செய்தது. அவரும், 'தனித்த வாழ்க்கை விழுப்பமுடையது; வீட்டுக்கு வழிகாட்டுவது' என்று கருதலாயினர்; நூல்களும் எழுதலாயினர். இவ்வாறு பலவழியிலும் இயற்கைக்கு மாறுபட்ட தனித்த வாழ்க்கை சமூகத்தில் நுழைந்து அரசு புரியலாயிற்று.

பொதுவாக மக்கள், உலக வாழ்க்கையை இழிவாகக் கருதலானார்கள்; 'உலகம் பொல்லாதது; இல் வாழ்க்கை கெட்டது; அது பந்தம் - பெரும் பந்தம்; அதை விடுத்தாலன்றி நிவர்த்தியில்லை' என்ற கொள்கையுடையவர்களானார்கள். அப்பொல்லாத கொள்கை மக்கள் இரத்தத்தில் ஊறி ஊறி ஒன்றியது.

தனி வாழ்க்கை நடத்தாது சேர்க்கை வாழ்க்கை நடாத்துவோரும், தனிவாழ்க்கை உணர்வுடையவராகவே

வாழலாயினர். நாடு அவ்வுணர்வுக்கு இரையாயிற்று. இந்தியாவை முதல் முதல் அடிமைக் குழியில் வீழ்த்தி யது தனி வாழ்க்கையுணர்வே. அவ்வுணர்வை மாற்றச் சில சீர்திருத்தக்காரர் தோன்றினர். மன்பதை அவர்தம் உருவத்துக்கு மட்டும் வணக்கஞ் செலுத்தி, அவர்தம் போதனைக்குச் செவி சாயாமல் விடுத்தது. இந்திய விடுதலைக்குத் தனிவாழ்க்கை யுணர்வு மாறுதல் துணை புரிவதாகும்.

தனி வாழ்க்கையர், 'உலகம் பொய்' என்னும் உணர்வை மக்களுக்குள் பதியவைக்கின்றனர். அதனால் மக்களுக்கு வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றுகிறது ; வாழ்க்கை துன்பமாகவே காணப்படுகிறது. அவர்க ளிடை உரிமையுணர்வு குன்றுகிறது ; முயற்சி ஊக்கம் முதலிய பண்புகள் அருகுகின்றன ; சோர்வும் சோம் பலும் சவலையும் பெருகுகின்றன. வாழ்க்கையில் உறுதி யும், உரிமை வேட்கையும், முயற்சியும், ஊக்கமும் இல்லாத நாடு - சோர்வும் சோம்பலும் சவலையும் செறியும் நாடு - எவ்வளவு பெரியதாயினும் - பழமை யுடையதாயினும் - சுதந்திரமிழந்து வாட்டமுறுதல் ஒருதலை. இதற்கு நமது நாடு ஓர் எடுத்துக் காட்டா யிலங்குகிறது. அது பற்றியே நாட்டின் விடுதலைக்குத் தனிவாழ்க்கை யுணர்வு மாய்தல் துணை செய்யுமென்று கருதுகிறேன்.

தனி வாழ்க்கையால் நாடு அடைந்த கேட்டை உன்னியே அவ்வாழ்க்கை வேண்டாமென்று கூறப் புகுந்தேனேயன்றி, அவ்வாழ்க்கை யுடையார் மீது காழ்ப்போ பகைமையோ கொண்டு அங்ஙனங் கூறப்

புகுந்தேனில்லை. வாழையடி வாழையென வந்துகொண்டிருக்கும் ஒரு பழக்கத்தை மறுப்பது, தெரிந்தோ தெரியாமலோ அப்பழக்கத்தில் தற்போது ஈடுபட்டுள்ளோரைக் குறை கூறுவதாகாது. எவர் மனத்தையும் புண்படுத்த வேண்டுமென்பது எனது நோக்கமன்று. தனி வாழ்க்கை நடாத்துவோர் அனைவரும் வெளிப்படையாகச் சேர்க்கை வாழ்வில் ஈடுபட்டு, நாட்டைத் தட்டி எழுப்பி, அதன் அடிமைத் தளையை அறுக்க முனைதல் வேண்டுமென்பது எனது வேட்கை. அச் சகோதரர் திருந்திவரின் நல்லதே. மற்றவரும், இனி வருவோரும் மாதல் தனி வாழ்க்கை என்னும் இருள் முழையில் நுழையாதிருந்தால் நாட்டுக்கு நலன் விளையும்.

தனித்த வாழ்க்கையிலுள்ள கேடுகளையும், சேர்க்கை வாழ்க்கையிலுள்ள நலன்களையும் என்னுடைய நூல்களிலெல்லாம் குறிப்பிட்டுள்ளேன்; சிறப்பாகப் 'பெண்ணின் பெருமை'யிலும், 'திருக்குறள் விரிவுரை'யிலும விளக்கியுள்ளேன். விளக்கம் விரும்புவோர் அந்நூல்களைப் பார்ப்பாராக. தனித்த வாழ்க்கை இயற்கைக்கு அரண் செய்வதன்று என்று இக்கால விஞ்ஞானிகள் அறிவுறுத்தி யிருக்கிறார்கள். சேர்க்கை வாழ்க்கை இயற்கைக்கு அரண் செய்வது என்று முற்கால மெய்ஞ்ஞானிகள் அறிவுறுத்திச் சென்றார்கள். ஆதிமநு, திருவள்ளுவர், மகமது நபி முதலிய பெரியோர் மெய்ம்மொழிகளை நோக்குக.

அப் பெரியோர் துறவைப் பேசவில்லையோ என்று சிலர் ஐயுறுதல்கூடும். அவர் துறவைப் பேசாமற் போகவில்லை; பேசியே போந்தனர். அவர் எத்துற

வைப் பேசினர்? மண்ணையும் பொன்னையும் பெண்ணை யும் வெறுக்கும் போலித் துறவையா அவர் பேசினர்? மன மாசுகளைத் துறக்குந் துறவை அவர் பேசியது உண்மையே. மனமாசுகளைத் துறப்பதற்குச் சேர்க்கை வாழ்க்கை என்னும் இயற்கை வாழ்க்கை ஏற்றல் வேண்டுமென்று அவர் வழியுங் காட்டிச் சென்றது உன்னற்பாலது.

தனித்த வாழ்க்கையருள் மெய்ம்மையாளரும் இருப்பர். அவர் இன்னார் என்று எப்படி உணர்வது? இயற்கைப் படைப்பிலேயே தனி வாழ்க்கைக்குரிய சில இயல்புகள் அமையும். அவற்றைக் கொண்டு உண் மைத் தனி வாழ்க்கையர் இன்னார் என்று உணர்தல் கூடும். கிறிஸ்து, மணிமேகலை முதலியோர் நேரிய தனி வாழ்க்கை நடாத்தியவர் என்பது உலகுக்குத் தெரியும். தனி வாழ்க்கைக்குரிய இயல்புகள் அமை யாதார் கிறிஸ்துவைப் போலவும் மணிமேகலையைப் போலவும் ஏன் நடித்தல்வேண்டும்? தனி வாழ்க் கைக்குரிய இயல்புடன் பிறப்பவர் மிகச் சிலராகவே இருப்பர். கோடி பேரில் ஒருவர் இருவர் இருத்தலும் அரிது. அவர்தந் தோற்றம் புறனடையின் பாற்பட்டது. அதைப் பொதுமையில் நுழைத்து நடிக்கப் புகுவது தவறு.

தனி. வாழ்க்கையரென்றதும் மொட்டையடித்துக் காவி அணிந்தவர்மீது பொதுவாக மக்கள் மனஞ் செல்வது வழக்கம். குறிப்பிட்ட கோலத்தார்மீது மட்டும் என் மனஞ் செல்வதில்லை. தனி வாழ்க்கை நடாத்தும் எல்லார்மீதும் என் மனஞ் செல்கிறது.

மொட்டை யடித்துக் காவி யணியாமல் தனி வாழ்க்கை நடாத்துவோரு முளர்; தொழில்செய்து பொருளீட்டிப் பிறர் உதவியை எதிர்பாராது வாழ்வோருள்ளுந் தனியர் இருக்கின்றனர். ஆகவே 'தனி வாழ்க்கையர்' என்பது குறிப்பிட்ட வேடத்தாரை மட்டும் உணர்த்துவதன்று; அவ்வாழ்க்கையுடைய மற்றவரையும் உணர்த்துவ தென்க. தனி வாழ்க்கையுடையாரைச் 'சாமியார்' என்று பெரிதும் உலகஞ் சொல்வது சம்பிரதாயமாகி விட்டது.

தனி வாழ்க்கை இயற்கைக்கு அரண் செய்வதன்றெனில் அவ் வாழ்க்கையினரைச் சேர்க்கையிற் படுத்த இயற்கை அவரைத் தூண்டல்வேண்டுமன்றோ? இயற்கை அவரைத் தூண்டுகிறதா? என்னுங் கேள்வி பிறப்பதற்கு இடமுண்டு. தனி வாழ்க்கையரை இயற்கை தூண்டாம லிருப்பதில்லை. இயற்கை அவரைத் தூண்டுகிறதா? இல்லையா? என்று அவரையே கேட்டல்வேண்டும். அவர் என்ன பதிலிறுப்பர்? பாவம்!

வல்லமை வாய்ந்த இயற்கைச் சோதனைக்கு முன்னே தனித்த வாழ்க்கையர் என்செய்தல் கூடும்? அதைத தடுக்கும் ஆற்றல் வேடத்துக்கு உண்டோ? கோலத்துக்கு உண்டோ? பிறவற்றிற்கு உண்டோ? இயற்கைச் சோதனைக்குத் தனி வாழ்க்கையர் எளியராகாது வேறு என் செய்வர்! எளியராகும் அன்னார் வெளிப் படையாகச் சேர்க்கை வாழ்வு நடாத்த ஏன் முன்வரலாகாது? அதற்கு ஆண்மை வேண்டும்; அஞ்சாமை வேண்டும். தனி வாழ்க்கைவேடம், புலி பசுத்தோல போர்த்த கதையாக முடிகிறது. காவு எற்றுக்கு?

தனி வாழ்க்கையிலுள்ள சிறுமைகள் பல; இடர்கள் பல. அவை தனித்த வாழ்க்கையினர்க்கு நன்கு தெரியும்.

தனி வாழ்க்கைக் கூட்டம் பலவகை. ஒன்றும் அறியாத கூட்டம் உண்டு; வயிற்றுக் கூட்டம் உண்டு; மறைமுகச் சேர்க்கையளவில் நிற்குங் கூட்டம் உண்டு; இவையல்லாத வேறு கூட்டமொன்றிருக்கிறது. அது கல்வி யறிவுடையது.

கல்வி யறிவுடைய சாமியார் ஞான நூல்களைப் போதித்துக் காலங் கழிப்பவராகின்றனர். மற்றுஞ் சிலர் தமது வித்தையால் உலகை மயக்க முற்படுகின்றனர். இவரால் விளையும் தீங்கே பெரிது.

சாமியார் என் செய்கிறார்? ஊருக்கு ஒதுக்கிலுள்ள ஒரு நல்ல இடத்தில் அமர்வார்? தமது சூழ்ச்சிக்குத் துணை போகவல்ல சீடர் சிலரைச் சேர்த்துக் கொள்வார். சீடர் தமது குருநாதரைப் போற்றுவர்; புகழ்வர்; 'அவதாரம்' என்பர்; 'அற்புதர்' என்பர்; 'எல்லாம் வல்லவர்' என்பர். அவர்தம் பிரசாரத்துக்கு எளிய உலகம் ஏமாந்து போகிறது; 'உலகம் பொய்' என்று கருதுகிறது; வாழ்க்கையை வெறுக்கிறது; குடும்பத்தை யமலோகமாகக் கொள்கிறது; உரிமையுணர்வை இழக்கிறது; சாமியாருக்கு அடிமையாகிறது. தீங்கு சாமியாரளவில் - சீடரளவில் - நிற்பதில்லை; பொது மக்களிடைப் பரவுகிறது; ஊர் ஊராகப் பரவுகிறது. இவ்வாறு நாடு பல வழியிலும் வாழ்க்கை நலமிழந்து, உரிமை யுணர்விழந்து, அடிமைத்தளை பூண்டுகொண்டது.

அத்தளையை உடைக்கும் முயற்சி எழுந்தே தீரல் வேண்டும்.

நாட்டு நிலையை நோக்கிச் சாமியாரெல்லாம் ஒன்று பட்டுத் தாமே தமது வாழ்க்கையை மாற்றிக் கொள்வது சிறப்பு. அம்முயற்சி கல்வியறிவுடையோரிடத் திருந்து எழுதல் வேண்டும். நாட்டிலுள்ள சாமியார் பலரும் மனந்திரும்பினால் விடுதலைக்கென்று ஓர் அறப்படை திரள்வதாகும். சாமியார் மனந்திரும்பினால் மக்களிடைத் தேசபக்தி மிகும்; வாழ்க்கையில் உறுதி உண்டாகும்; பொருளாதார முயற்சி எழும். இவ்வியல்புகள் முழு விடுதலையில் ஊக்கஞ் செலுத்தும்.

தனி வாழ்க்கையர் தாமே மனந்திருமபுதல் நல்லது; இல்லையேல் அவரைத் திருத்த அறிஞர் முயலல் வேண்டும்; தனி வாழ்க்கையின் உள்ளும் புறமும் உள்ள தீமைகளை விளக்கிப் பிரசாரஞ் செய்தல்வேண்டும். பிரசாரத்தால் தனி வாழ்க்கையருந் திருந்துதல் கூடும்; மக்களுந் திருந்துதல் கூடும். தனி வாழ்க்கைக்கு மக்களிடை ஏற்பட்டுள்ள மதிப்பு மாய்ந்தொழிந்தால் அவ்வாழ்க்கை தானே அருகிப் போகும். மதிப்பைப் போக்கவல்ல பிரசாரம் தேவை.

## சாதிப் பாகுபாடு

முழு விடுதலைக்குத் தடையாயிருப்பனவற்றுள் சாதிப் பாகுபாடும் ஒன்று. தொடக்கத்தில் சாதி, தொழிலையொட்டிக் கொள்ளப்பட்டது; பின்னை பிறப்பையொட்டிக் கொள்ளப்பட்டது; நாளடைவில் பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக்கப்பட்டன.

சாதியில் பலவகை மாறுதல் ஏற்பட்டமை கருதற்பாலது. ஒவ்வொரு காலத்தும் அவ்வக்காலத்துக்கேற்ற சாதி நூல்கள் எழுதப்பட்டன. அவை யாவும் மநு முத்திரை தாங்கியே வெளி வந்தன. அதனால் மநுவைப்பற்றிய ஐயப்பாடும் தோன்றலாயிற்று ; ஆராய்ச்சியும் பிறக்கலாயிற்று.

ஆராய்ச்சியால் ஐயப்பாட்டைக் களைதற்குரிய சரித்திரச் சான்றுகளோ பிற கருவிகளோ இன்னுங் கிடைக்கவில்லை. வெறுங்கதைகளைக் கொண்டு வாதமிடுவது நியாயமாகாது.

ஆதியில் மநு என்றொருவர் இருந்தனர். அவரால் 'தருமநூல்' இயற்றப்பெற்றது. அந்நூலை முதலாகக் கொண்டு பின் வந்த சிலர் காலத்துக்கேற்ற முறையில் 'மநுவின் பெயர்' சூட்டி, வழி நூல்களைப் பெருக்கியிருக்கின்றனர். காலத்துக்கேற்ற சட்டஞ் செய்வோர்க்கு முன்னாளில் 'மநு' என்றொரு பட்டப் பெயர் வழங்கப்பெற்றிருக்கலாம் என்று கருதுவோருமுளர்.

சமூகத்தில் இடையிடை நுழைந்த வழக்க ஒழுக்கங்களைச் சிலர் பழைய நூல்களிற் புகுத்திக் குழப்பம் விளைத்த காலத்தையும் இந்தியா கண்டதுண்டு. இடைச் செருகலில் இடைக்காலச் சாதி இந்தியா பேர்பெற்று விளங்கியது. இதுபற்றித் தென் மொழியிலும் வட மொழியிலும் பெரும் புலமை வாய்ந்த பாம்பன் குமர குருதாச சுவாமிகள் தமது 'குமாரசாமியம்' என்னும் நூலில் வருந்தி வருந்திப் பாடிய* பாடல்கள் நினைவுக்கு

*மெய்யொ டேபொய்யும் விரவிடு மாறுபன் னூலுட்
கைய ராயவர் பலநுழைத தாரவை கணித்தே
ஐய நீக்குத லரிதரி தேயத ளுல்லிவ்
வைய நாடுவ ரோவுரி யவரயின் மதனே.

வருகின்றன. சாதி இந்தியாவின் இடைச் செருகல் புரட்டை எடுத்துக்காட்ட ஈண்டொரு பழைய நூல் நிலைமையைக் குறிக்கிறேன்.

சுக்கிரநீதி என்றொரு நூல் வடமொழியில் யாக்கப்பட்டது. அதில் தொழிலையொட்டிய சாதிப்பாகுபாடுகளும், பிறப்பையொட்டிய சாதிப்பாகுபாடுகளும் பேசப்பட்டுள்ளன. ஒரே நூலில் முரண்பட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. ஒரே நூலில் முரண்பட்ட கருத்துக்கள் எப்படியிருத்தல் கூடும்? அதை இடைச் செருகல் திருவிளையாடலென்று சொல்லலும் வேண்டுமோ? அத்திருவிளையாடல், சுக்கிரநீதி தமிழ் மொழிபெயர்ப்பாசிரியர் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் தமது மொழிபெயர்ப்பு முகவுரையில் பொறித்துள்ள குறிப்புக்களால் நன்கு விளங்குகிறது.

---

பொய்யில் வேதவி யாசன துரையெனும் புராணத்
தெய்வம வாழ்தல மீதெனப் பலகதை தெரித்தே
உய்ய லாமெனச் செய்தசு வடிகளு முளவான்
மெய்ய ரிங்குறல் விழைவர்கொ லோவயில் வேந்தே.

தனது நூதனஞ் சிறந்திடற் கோதனைச் சார்ந்தோர்
தினமு நன்குணற் கோசில சுவடிகள் செய்தோன்
அனைக வீசுரன் மொழியிவை யென்றது மறிந்தேன்
இனைய பூம்மியை யுறனல ளேவயி லிறையே.

எந்த வானுட னெம்மட வாலும்வி ராயே
தந்த மானுட ருளரென லறிந்துமெஞ் சாதி
நந்து மோவெனும் படிறர்கள் சுவடிக ளைம்பும்
இந்த மாநில மினிவிழை யேனயி லிறையே.

பிறப்பில் உயர்வு தாழ்வு கருதப்பட்ட நாள்தொட்டுச் சாதிக்குறும்பு நாட்டை அரிக்கத்தொடங்கிற்று. சாதிக் குறும்பாலும் பிற கொடுமையாலும் நாட்டில் தொல்லை பெருகி வந்தது. அவ்வேளையில் புத்த ஞாயிறு எழுந்தது. அந்த ஞாயிற்றொளியால் தொல்லை இருள் ஓரளவில் ஒதுங்கிற்று. மீண்டும் இருள் புகுந்து கொண்டது. சாதியார் எச்சரிக்கை யுடையராயினர். புத்தர் போன்றார் மறுபடியுந் தோன்றுவரேல் சாதிக் கோட்டை அடியோடு தகர்க்கப்படும் என்ற அச்சம் அவர்க்கு உண்டாயிற்று. அச்சத்தால் அவர் தங் கோட்டையைப் புதுக்கினர். சாதிக்கோட்டை எளிதில் வீழ்ந்துபடாதவாறு புதுப் புதுப் பாறைகளால் நிருமிக்கப்பட்டது. இமயம் அசையினும் சாதிக்கோட்டை அசையாதவாறு அஃது அமைக்கப்பட்டது. புத்தருக்குப் பின்னரும் சில சீர்திருத்தக்காரர் தோன்றினர். அவரால் சாதிக்கோட்டை சிறிது சிறிதே பழுதுபட்டது; முற்றும் விழவில்லை. சாதியாரால் கோட்டை அவ்வப்போது பழுது பார்க்கப்பட்டது.

தொடக்கத்தில் நால்வகைச் சாதிகளே முளைத்தன. அவை நாளுக்கு நாள் மதர்த்தெழுந்தன; கொடிகள் விட்டன. ஒவ்வொரு கொடியிலும் கிளைகள் தளிர்த்துத் தளிர்த்து நீண்டன; பின்னை கிளைக்குள் கிளை, கிளைக்குள் கிளையாகக் கிளைகள் பெருகின; ஆயிரக் கணக்கில் பெருகின. சாதிக் கொடிகள் மலை மலையாய், தொடர் தொடராய் ஓங்கின; நீண்டு நீண்டு பெருகின. சாதி நாற்றம், மனத்தில் - ஊனில் - உடலில் - உடையில் - வீட்டில் - தெருவில் - ஊரில் - கேணியில் - குளத்தில் -

ஆற்றில் - மலையில் - காட்டில் - மதத்தில் - மடத்தில் - கோயிலில் - நூலில் - வாழ்வுத் துறையில் - பிணத்தில் - ஈமத்தில் - வீசலாயிற்று; எங்கணும் வீசலாயிற்று. அந்நாற்றம் வீசாத இடமேயில்லை. இந்தியாவில் சாதி அரசு புரிந்தது என்று சுருங்கச் சொல்லலாம்.

விளைந்த தென்னை? இந்தியத் தாய் உரிமை யிழந்து அடிமையானாள்; அவளுக்குச் சாதியும் ஒரு தளையா யிற்று.

தொழிலை யொட்டி நிலவி வந்த சாதிப்பாகுபாடு பிறப்பை யொட்டிக் கொள்ளப் பெற்றபோதும், பிறப் பால் உயர்வு தாழ்வு கருதப்பட்டபோதும் கற்றவரே சட்டங்கள் வகுத்துக் குறும்புகளை வளர்த்தனர். இந் நாளிலும் கற்றவரென்று சொல்லப் படுவோரே சாதி வேற்றுமையை வலுப்படுத்தி வருகின்றனர்.

இக்காலக் கல்வியாளரைப் பற்றித 'தற்கால இந்தியா'வில் சிறிது கூறியுள்ளேன். இக்கல்வியாளரின் வாய் சீர்திருத்தம் பேசும்; செயலோ சாதிச் சிறு மையை வளர்க்கும். இக்காலக் கலவி விநோதங்களில் இஃதும் ஒன்று.

உலக நிலையை உணர்ந்து நடப்பதற்குப பலவித வாய்ப்புககளை இக்கால தேவதை பெற்றிருக்கிறது. இந்நாளில் போக்குவரவுச் சாதனங்கள் விஞ்ஞான முறை யில் பெருகியுள்ளன. அச்சாதனங்கள், உலகிலுள்ள ஒவ்வொரு நாடும் ஒவ்வொன்றுடன் உறவு கொள்ளுதற்கு எளிதில் துணைசெய்வனவா யிருக்கின்றன. அன்றாட உலக நிகழ்ச்சிகளை வீடு தேடி அறிவிக்கும் தொண்டைப் பத்திரிகை யுலகம் செய்து வருகிறது. தற்கால இந்தியா

மற்ற நாடுகளுடன் தீண்டாமை கொண்டில்லை; அஃது உலகுடன் கூட்டுறவு பெற்றிருக்கிறது; உலகை நன்குணர்ந்திருக்கிறது. இக்காலத்தில் பிறப்பில் உயர்வு தாழ்வு கருதும் புன்மை, உலகில் யாண்டுமில்லை என்பது பொதுவாக இந்திய மக்கட்கும் சிறப்பாக ஹிந்துக்கட்கும் தெரியாமலா இருக்கிறது? அப்புன்மை யாண்டுமில்லை என்பது சகோதரர்கட்குத் தெரியும்; அதனால் நாடு அடிமையாகி அடைந்துவருந் துன்பமும் அவர்கட்கு நன்கு தெரியும்; தெரிந்தும் சகோதரர்கள் திருந்த முயல்கிறார்களில்லை; அறிந்தோ அறியாமலோ சாதிப் புன்மையை ஓம்பும் முயற்சிலேயே தலைப்படுகிறார்கள். அம்முயற்சியில் 'கற்றவர்' தலைப்படுவது வியப்பன்றோ?

பொதுவாகக் கற்றவர் - சிறப்பாக ஆங்கிலங் கற்றவர் - தமது நலங் கருதிச் சாதி வேற்றுமையைக் காத்து வருகின்றனர். இது கண்கூடு. அவர்தம் முயற்சியால் சாதி மகாநாடுகள் கூட்டப்படுகின்றன; சாதி முறையில் அரசாங்கத்தில் 'பிரதிநிதித்துவம்' வேண்டுமென்று தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன; சாதிப் பத்திரிகைகள் காணப்படுகின்றன; போராட்டங்கள் கிளப்பப்படுகின்றன. நாடு சாதி நோயால் பாழ்படுகிறது. இவ்வளவுக்குங் காரணர் யார்? ஆங்கிலம் பயின்ற அண்ணல்கள்!

வட இந்தியாவில் மதத்தை யொட்டியும், தென்னிந்தியாவில் சாதியை யொட்டியும் வகுப்பு வாதம் மூண்டு வருகிறது. மதத்தைப் பற்றிப் பின்னே கூறுவன். பிராமணர் பிராமணரல்லாதார் பிணக்குத் தென்னிந்தியாவை எரிக்கிறது. பிணக்கை வளர்க்க மகாநாடுகள்

கூடுகின்றன. வகுப்புணர்வை வளர்க்குந் தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன. ஏழை மக்களிடைச் சாதி வெறி ஏற்படுகிறது. ஏழை மக்கள் ஏமாற்றப்படு கிறார்கள். ஏமாற்று நாடகத்துக்குத் தற்காலக் கல்வி பேர் பெற்றதன்றோ?

சாதிப்பேய் நீண்டகாலமாக நாட்டில் வளர்ந்து வருகிறது. சிரஞ்சீவிகளெல்லாரும் இருந்தவிடந் தெரி யாமல் மறைந்து போயினர். சாதிப்பேய் இன்னுஞ் சாகவில்லை. அஃது என்றுஞ் சிரஞ்சீவியாக வாழும் வரம் பெற்றிருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. அப்பேய் கற்றவரை அலைக்கிறது; மேல்நாடு சென்று பெரும் பெரும் பட்டங்கள் தாங்கித் திரும்புவோரையும் மருட்டு கிறது; நாட்டின் உரிமைக்காகப் பாடுபடும் காங்கரஸை யும் - சாதிமதங் கடந்ததென்று சொல்லப்படும் அந்த அரசியற் பெருங்கழகத்தையும் - விடுவதில்லை; சாதியை மறந்து வதிவோரையுஞ் சீறுகிறது. சாதிப்பேயின் கொடுமை என்னே! என்னே!

நாட்டிற் பிறந்த பிராமணரைப் பிராமணரல்லாதார் ஐயுறுகிறார்; அவர் இவரை ஐயுறுகிறார். பிராமணர் ஆட்சியில் பிராமணரல்லாதார் கூக்குரல் எழுகிறது; இவர் ஆட்சியில் அவர்தம் கூக்குரல் எழுகிறது. கூக்குரல் கள் வானைப் பிளக்கின்றன. இருவரும் ஒரு தாய் வயிற்றில் உதித்தவர்; சகோதரர். சகோதரரிடைக் கூக்குரல்கள் எழுகின்றன. சாதியொழிந்தால் பிராமணர் பிராமணரல்லாதார் என்னும் வேற்றுமையுணர்வு தோன்று தற்கும் இடமிருக்குமா? செட்டியார் முதலியார் நாயகர் நாயுடு முதலியோர் வேற்றுமைகள் எங்கிருந்து எழும்?

எல்லாரும் மக்களாகவே காணப்படுவர். பிறப்பில் சாதி பாராட்டும் வரை - உயர்வு தாழ்வு கொள்ளும் வரை - வேற்றுமையுணர்வு தோற்றமுற்றுக் கொண்டேயிருக்கும். வேற்றுமையுணர்வு பிணக்கை வளர்க்குமென்று சொல்ல வேண்டுவதில்லை.

சாதிப்பேய் இந்தியாவைப்பற்றி நீண்டகாலமாயிற்று. புத்தர் உள்ளிட்ட சீர்திருத்தக்காரர் முயற்சிகளை யெல்லாம் சாதிப்பேய் விழுங்கி ஏப்பமிட்டது. அத்தகைய ஒன்றை எளிதில் ஓட்டுதல் இயலாதென்றே அறிஞர் பலருங் கருதுகின்றனர். காலப்போக்குமீது சிறிது கருத்தூன்றிப் பார்க்குமாறு அவரை வேண்டுகிறேன். சாதிப்பேயை ஓட்டும் முயற்சி இப்பொழுது நேரிய முறையில் எழுமாயின், அதற்குத் துணைபுரியக் கால தேவதை முனைந்தே நிற்றல் அவருக்குப் புலனாகும். முயற்சி மட்டும் நேரிய வழியில் எழுதல்வேண்டும்.

பிறப்பில் உயர்வு தாழ்வு கருதுவது இயற்கைக்கு இயைந்ததன்று. இயற்கை அதை விரும்புவதாயின், அது நாட்டை அடிமைப்படுத்தி இராது. நாட்டை இயற்கை அடிமைப்படுத்திய நுட்பத்தை உணர்ந்து, சாதிப்பேயை ஓட்ட அறிஞர் முயன்றால், அவர்தம் முயற்சிக்கு இயற்கை துணைபுரிதல் ஒருதலை. ‘இயற்கைத் துணை’ என்று அறிஞர் வாளா கிடத்தலாகாது. இயற்கைத் துணைக்கு முயற்சிவேண்டும். முயற்சியுள்ள இடத்திலேயே அத்துணை கூடும். மற்ற இடத்தில் அது கூடுவதில்லை. வேண்டற்பாலது முயற்சியே.

காலத்துக்குரிய முயற்சியால் அறப்புரட்சி எழும். அறப்புரட்சிக்குரிய முயற்சியே முதலில்எழுதல்வேண்டும்.

அதனால் பயன் விளையாவிடின் மறப்புரட்சி தானே எழும். மறப்புரட்சிக்கென்று வலிந்து முயன்றால் அதற்கு இயற்கை துணை புரியாது.

## கலப்பு மணம்

முயற்சித் துறைகளையும் முறைகளையும் பலபடக் கூறி நூலை நிரப்பலாம். அவற்றில் உயிர்ப்பாயுள்ள ஒன்றைமட்டும் ஈண்டுக் குறிக்க விரும்புகிறேன். அது கலப்பு மணம். கலப்பு மணம், சாதிவேற்றுமை யுணர்வை யொழிப்பதோடு சாதிப்பேயையும் நாளடைவில் சாய்ப்பதாகும். கலப்பு மணம் இயற்கைக்கு அரண் செய்வது; இறைவனுக்கு உடன்பாடானது. ஆதி சைவ வேதியராகிய சுந்தரமூர்த்தி நாயனார் சாதி மணம் புரியப் புகுந்த வேளையில், இறைவன் அம்மணத்தைத் தடுத்து அவருக்குக் கலப்புமணஞ் செய்வித்தது ஈண்டுக் குறிக்கற்பாலது. இந்தியத் தாயைப் பிணித்துள்ள தளைகளுள் சாதித் தளையை உடைப்பதற்குக் கலப்பு மணமே சிறந்த கருவியாகும். ஆகவே, இளம பெண்மணிகளே! ஆண் வீரர்களே! எழுங்கள்; எழுங்கள்; கலப்புமண வீறுகொண்டு எழுங்கள்; தாயைப் பாருங்கள்; தாயின் தளைகளை நோக்குங்கள்; சாதித்தளையைக் கூர்ந்து நோக்குங்கள்; அத்தளை யுடைந்தால் பல தளைகள் தாமே உடைந்து போகும்; அத்தளையை யுடைக்க உறுதிகொள்ளுங்கள்; அதற்கு என்னவேண்டும்? பொன் பொருள் வேண்டுமா? துப்பாக்கி பீரங்கி வேண்டுமா? வேண்டாம்; வேண்டாம்; மனம் வேண்டும்; அஞ்சாமை வேண்டும். தாயின் விடுதலைக்கு மறப் போர் புரிய இயற்கை அன்னை உங்களை

அழைக்கின்றாளில்லை ; கலப்பு மணத்தில் கருத்திருத்து மாறு அன்னை உங்களை அழைக்கிறாள் ; அவள் அழைப் புக்குச் செவி சாய்த்தலாகாதா ? இளைஞர்களே ! தாயின் விடுதலையைக் குறிக்கொண்டு எழுங்கள் ; அஞ்சா நெஞ் சுடன் எழுங்கள் ; கலப்பு மண உளங்கொண்டு எழுங்கள்; திரளுங்கள் ; படைகளாகத் திரளுங்கள் ; திரண்டு எழுங்கள். சாதிப்பேய் தலைவிரித்து ஓடும் ; சாதிப் பேயை ஓட்டுந்திறன் - ஆற்றல்-வல்லமை-உங்களிடத்தி லிருக்கிறது ; மனம் வேண்டும் ; மனங்கொள்ளுங்கள்.

கலப்பு மணம் கலப்பு மணம் என்று பொதுவாகச் சாதி ஹிந்துக்கள் அனைவரையும் அழைக்கிறேன் ; சிறப் பாக உயர்ந்த சாதியார் என்று தம்மைக் கருதுவோரை அழைக்கிறேன். உயர்ந்த சாதிப் பெண் மக்களே ! ஆண் மக்களே ! சாதி பெரிதா ? விடுதலை பெரிதா ? விடுதலை தெய்வலோகத்திலில்லை ; பிரிட்டனிலில்லை ; உங்களிடம் இருக்கிறது. ஜப்பானை நினையுங்கள் ; நாற்பதாண்டு முயற்சியால் தன் சிறுமை போக்கி அது பெருமை அடைந்ததை உன்னுங்கள் ; ஊக்கம் பிறக்கும் ; தாயின் சிறுமை போக்க உளங்கொள்ளுங்கள் ; உறுதிகொள்ளுங் கள் ; இயற்கை அன்னையின் துணை உங்களுக்கு வரும் ; இறை அப்பனின் ஆசி உங்களுக்குக் கிடைக்கும் ; தாய் - நம் அருமைத்தாய் - முழுவிடுதலையடைவாள். சகோதரர் களே ! உங்களைப் பணிவுடன் கேட்கிறேன் ; சாதித் தளையைத் தகர்ப்போம் என்று எழுங்கள் ; கலப்பு மணத்தால் தகர்ப்போம் என்று எழுங்கள்.

## மதம்

இந்திய மதங்களின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். இந்தியாவில் பல மதங்களிருக்கின்றன. அவை ஹிந்து, இஸ்லாம், கிறிஸ்துவம், ஜைனம், பௌத்தம் முதலியன. ஜைனமும் பௌத்தமும் ஹிந்து மதத்தில் ஒன்றியும் ஒன்றுமலும் இருப்பன.

ஜனத்தொகையில் பெருகி நிற்பது ஹிந்து மதம்; அதற்கு அடுத்தபடியில் நிற்பது இஸ்லாம்; அதற்கு அடுத்தபடியில் நிற்பது கிறிஸ்துவம்.

ஹிந்து மதம் இந்தியாவின் பழைய சித்தமார்க்கத்தினின்றும் விரிந்தது. பழைய சித்தமார்க்கம் பலப்பல வழியில் திரிவுற்று, ஜைனமாய், சைவமாய், வைணவமாய், பௌத்தமாய், சாக்தேயமாய், காணுபத்தியமாய், கௌமாரமாய், பிறவாய், ஹிந்து மதமாகி நிற்கிறது. ஹிந்துமதம், பரந்த கொள்கை யுடையது. உலகிலுள்ள கொள்கைகளை யெல்லாம் ஹிந்து மதத்தில் காணலாம். ஹிந்து மதம் சாதி நோய்க்குமட்டும் இரையாகாமலிருந்தால், அது உலக முழுவதும் பரவி மன்பதையைச் சமரச சன்மார்க்கத்தில் நிறுத்தியிருக்கும். அதைச் சிறைப்படுத்தியது சாதியே.

சாதி மதமாகிய ஹிந்து மதத்தைச் சீர்திருத்தத் தோன்றிய இயக்கங்கள் பல. அவற்றுள் அணித்தே தோன்றியவை சில. அவை பிரம சமாஜம், ஆரிய சமாஜம், இராமகிருஷ்ண சங்கம் முதலியன. தியோசாபிகல் சங்கமும் ஹிந்து மதத்தைச் சீர்திருத்த முயன்றது.

இஸ்லாமும் கிறிஸ்துவமும் வெளிநாட்டினின்றும் வந்தவை. இரண்டும் சாதியற்றவை.

ஹிந்து மதமும், இஸ்லாமும், கிறிஸ்துவமும் ஒன்றோடொன்று பிணங்குவதில்லை. ஹிந்துக்களும் இஸ்லாமானவரும் கிறிஸ்துவரும் பிணங்குவதுண்டு. மதங்களுக்குள் பிணக்கில்லை என்றும், மதத்தவருக்குள் பிணக்குண்டு என்றுங் கொள்க. மக்கள் தங்களுக்குள்ள பிணக்கை மதங்களின்மீது சுமத்தி வன்மம் தீர்க்க முயல்கிறார்களென்க.

*உண்மை ஒன்றே. அதை ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு விதமாகக் கூறும். ஓர் ஊருக்குப் பல வழிகள் இருப்பதுபோல ஓர் உண்மைப் பேற்றிற்கும் பல மத ஒழுக்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. எவ்வழிச் சென்றாலும் ஊரைச் சேரலாம்; அதே போல எம்மதத்தில் நின்றொழுகினாலும் உண்மைப் பேற்றை அடையலாம். வழியைப்பற்றிச் சண்டை செய்வோர் எங்ஙனம் ஊரைச் சேர்தல் கூடும்? அவ்வாறே மதத்தைப்பற்றிப் போர் புரிவோர் எங்ஙனம் உண்மைப் பேற்றை அடைதல்கூடும்? மதச் சண்டையைக் கடந்தவர்க்கே உண்மை விளங்கும். மதப்போர் புரியுமாறு எவ்வேதமுங் கூறவில்லை. மதப் போர் புரிவது மக்கள் குற்றம்; மதக்குற்றமன்று.

இந்தியாவில் ஹிந்து முஸ்லிம் பிணக்கு அடிக்கடி நிகழ்ந்து வருகிறது. இப்பிணக்கு எற்றுக்கு? அவரவர்

---

* 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'—திருமூலர்

'வேறுபடு சமயமெலாம் புகுந்து பார்க்கில்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடும் கருத்தில்லை'—தாயுமானார்

தத்தம் மதத்தில் நின்றெழுகி நாட்டின் முழு விடுதலைக்கு ஒரு முகமாக நின்று உழைப்பதே நன்று.

அவுரங்கஜீப் காலத்தில் நேர்ந்த ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை நாட்டை உரிமை இழக்கச் செய்தது. ஹிந்து மன்னர் துணைகொண்டு முஸ்லிம நவாப்புக்களையும், முஸ்லிம் நவாப்புக்கள் துணைகொண்டு ஹிந்து மன்னரை யும் தாக்கித் தாக்கியல்லவோ இந்தியாவில் வாணிபஞ் செய்ய வந்த பிரிட்டிஷார் இந்தியாவை ஆள்வோராயினர்? ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பயன்பட்டது. இதைச் சரித்திரம் விளக்கமாகத் தெரி விக்கிறது. இந்தியச் சரித்திரத்தைப் பள்ளிகளில் ஹிந்துக்களும் படிக்கிறார்கள்; முஸ்லிமகளும் படிக்கிறார் கள்; படித்தும் - பழைய நிலையை உணர்ந்தும் - இன்னும் சகோதரர்கள் வேற்றுமைப் பிணக்கில் கருத்தைச் செலுத்துவது வியப்பாயிருக்கிறது. அன்று இந்தியாவை அடிமைப் படுத்திய ஹிந்து - முஸ்லிம வேற்றுமையே இன்னும் இந்திய முழு விடுதலைக்குத் தடையாக நிற்கிறது. ஏறக்குறைய இருநூற்றாண்டு அயலவர் ஆட்சியின் அநு பவம்பெற்றும சகோதரர்களுக்குள் ஒற்றுமை உண்டாகா மலிருப்பது வெட்கம்! வெட்கம்! முழு விடுதலையின்றி நாடு பாழ்படுகிறது. பட்டினியும் பஞ்சமும் பிணியும் அகால மரணமும் நாட்டை அரிக்கின்றன. அக்காட்சி காணச் சகோதரர்கட்குக் கண்ணில்லையோ? அதைக் கேட்கக் காதில்லையோ!

இந்தியா என்னும ஓர் உணர்வே மக்களிடை நிலவு தல்வேண்டும. ஹிந்து இந்தியா என்றும், முஸ்லிம் இந்தியா என்றும் பிரிந்த உணர்வு இந்திய மக்களுக்குள் நிலவுவது

நாட்டைத் துன்புறுத்துவதாகும். ஹிந்து இந்தியாவுக்கென்று ஒரு 'சபை'யும், முஸ்லிம் இந்தியாவுக்கென்று ஒரு 'லீக்'கும் ஏற்பட்டிருக்கின்றன. இவை இரண்டும் ஒன்றுபட்டுத் தேசத்தொண்டு ஆற்றினாலன்றித் தேசம் முழுவிடுதலை பெறாது. ஹிந்து மகாசபை ஹிந்துமத நலங் கருதி உழைக்கலாம்; முஸ்லிம் லீக் இஸ்லாம் நலங் கருதி உழைக்கலாம். இரண்டுஞ் சேர்ந்து நாட்டின் முழு விடுதலைக்குப் பாடுபடலாம்.

ஹிந்து மகாசபையும் முஸ்லிம் லீக்கும் இப்பொழுது எந்நிலையிலிருக்கின்றன? இரண்டும் கீரியும் பாம்பும் போலிருக்கின்றன. இரண்டமைப்பும் வகுப்பு வாதத்தில் ஆக்கம் பெற்று ஓங்கி வளருமானால் காங்கரஸ் கதி என்னவாகும்? இரண்டு மரங்களின் நடுவில் வளரும் ஓர் அழகிய செடி எக்கதியை அடையுமோ அக்கதியைக் காங்கரஸ் அடையும்.

காங்கரஸ் நன்முறையில் தொண்டாற்றி, ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை காண முயன்றிருத்தல் வேண்டும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை நேராதிருப்பதற்குக் காரணம் காங்கரஸ் தலைவர்களின் ஊக்கக் குறைவேயாகும். காங்கரஸ் வகுப்புவாதங் கடந்த அமைப்பு. அவ்வமைப்பில் சேர்ந்து தொண்டுசெய்யப் புகுவோரும் வகுப்புவாதங் கடந்த மனமுடையவரா யிருத்தல் வேண்டும். வகுப்பு வாத மனமுடையார் காங்கரஸில் நுழைந்து, வகுப்பு வாதங் கடந்தவரைப் போல நடித்தால், ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை வலுத்துக்கொண்டே போகும்.

காங்கரஸும் முஸ்லிம் லீக்கும் ஒருகாலத்தில் ஒருமைப்பட்டுத் தேசத்தொண்டு செய்துவந்தன. ஐரோப்பா

யுத்தம் (1918) முடிந்ததும், அப்பொழுது இந்தியா மந்திரியாயிருந்த அறிஞர் மாண்டேகு இந்தியா போந்தனர். அவர் முன்னிலையில் காங்கரஸும் முஸ்லிம் லீக்கும் ஒன்றுபட்டு ஓர் அரிய கோரிக்கையைச் சமர்ப்பித்தன. அது, 'காங்கரஸ் - லீக் கோரிக்கை' என்று அழைக்கப்பட்டது. 'காங்கரஸ் - லீக்' என்று மக்கள் பேசுவார்கள். 'காங்கரஸ் - லீக்' என்ற ஆட்சி, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை வளர்த்து வந்தது. காங்கரஸ் எவ்விடத்தில் கூடுமோ அவ்விடத்தில் லீக்குங் கூடும். இரண்டுஞ் சேர்ந்து தீர்மானங்களைச் செப்பஞ்செய்யும். ஹிந்து தலைவர்கள் முஸ்லிம்களாலும், முஸ்லிம் தலைவர்கள் ஹிந்துக்களாலும் போற்றப்படுவார்கள். எல்லாரும் இந்தியரென்று கருதியே நாட்டின் விடுதலையைக் குறிக்கொண்டு சேவை செய்தனர். ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை கனிந்தே நின்றது. அத்தகைய ஒற்றுமை இந்நாளில் குலைந்ததற்குக் காரணம் என்ன ?

காங்கரஸ்மீது முஸ்லிம்களுக்கு ஐயம் தோன்றியது. காங்கரஸில் ஹிந்து வாடை அதிகம் வீசுகிறது என்று முஸ்லிம் தலைவர்கள் கருதலானார்கள். உலகம் தலைவர்களுக்கு அடிமையன்றோ ? தலைவர்கள் கருத்து முஸ்லிம் உலகில் பரவியது. முஸ்லிம் சகோதரர்களுக்கு ஐயம் பிறக்கும் முறையில் காங்கரஸ் தலைவர்கள் நடந்தார்களா இல்லையா என்பது ஆண்டவனுக்கே தெரியும். எப்படியோ ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை குலைந்து விட்டது. பெரும் பெரும் குழப்பங்கள் நாட்டில் பலவிடங்களில் நடைபெற்றன; நடைபெறுகின்றன. முன்னே பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்ப் பல மாகாணங்களில் காங்கரஸ் சார்பில் ஆட்சி

ஏற்ற மந்திரிமார் முஸ்லிம்களின் ஐயப்பாடு நீங்கும் முறை யில் நடந்திருக்கலாம். காங்கரஸ் ஆட்சியால் ஹிந்து-முஸ் லிம் பிளவு அதிகமேயாயிற்று. எவர்மீதுங் குற்றஞ் சுமத்த யான் முற்படுகிறேனில்லை. நிகழ்ச்சியை யான் வெளியிட்டுச் செல்கிறேன். மந்திரிமார் காங்கரஸ் சட் டளைப்படி (1939) பதவிகளினின்றும் நீங்கியதை முஸ்லிம களின் விடுதலையாகக் கொண்டாடுமாறு முஸ்லிம் லீக் தலைவர் ஓர் அறிக்கை வெளியிட்டனர். அவர் விருப்பப் படி எங்கணுங் கொண்டாட்டம் நிகழ்ந்தது. அறிக்கை யும் கொண்டாட்டமும் ஹிந்து - முஸ்லிம் நிலைமையை உணர்த்தின ! இன்னும் விரிவுரை எற்றுக்கு ?

ஹிந்துக்களும் இந்தியர் ; முஸ்லிம்களும் இந்தியர். இருவரும் இந்தியாவைத் தாய்நாடாகக் கொண்டவர். இருவரும் எங்கே செல்வர் ? ஆர்டிக் பிரதேசத்துக்கா ? அரேபியாவுக்கா ? இருவரும் இந்தியாவில் வாழ்வு நடாத்தியே தீர்தல்வேண்டும். இருவரும் வேற்றுமை யுணர்வுடன் வாழ்ந்தால் நாடு எரிந்து கரிந்து போகு மன்றோ ? இருவரும் ஒற்றுமையாக வாழ்தற்கு என் செய்தல் வேண்டும் ? ஹிந்து மகா சபையும் முஸ்லிம் லீக்கும் சமயப் பாதுகாப்புக் கழகங்களாகவும், காங்கரஸ் அரசியல் கழகமாகவும், அவை அரசியல் சீர்திருத்தங் களில் நுழையாமலும், இது சமயச் சீர்திருத்தங்களில் நுழையாமலும் நேரிய முறையில் கடனாற்றினால் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு வழி உண்டாகும். தலைவர்கள் மனம் மாறுதல் வேண்டும்.

இந்தியா சமய உணர்வு மிகுந்த நாடு. இந்தியாவில் தோன்றிய சமயங்கள் பல ; நுழைந்தன சில. எச்சம

பத்தையும் வரவேற்பது இந்தியாவின் இயற்கை. சமயங் களினூடேயுள்ள ஒருமைப்பாட்டையுணர்ந்தது பழைய இந்தியா. அதனால் எச்சமயத்துக்கும் வரவேற்புக் கூறு வது இந்தியாவின் இயற்கையாய் விட்டது.

பழைய இந்தியர் வெறும் புற நோக்குடையவராய் வாழ்ந்தாரில்லை. அவர் அகநோக் குடையவராகவும் வாழ்வு நடாத்தியவர்; அகநோக்கு விளங்கப் பெறுவதே வாழ்வின் நோக்கம் என்ற உணர்வு உடையவர். அகநோக்குக்குப் பன்மை புலனாகாது. அதற்கு ஒரு மையே புலனாகும்.

அகநோக்கில் கருத்துச் செலுத்தி வாழ்வதைத் தனது இயற்கையாக் கொண்ட பழைய இந்தியா, மேல் நாட்டுச் சார்புபெற்றுத் தனது இயற்கையினின்றும் வழுவிச் செயற்கையில் வீழ்ந்தது. அதனால் அதன் அகக் கண்ணில் திரை படரலாயிற்று. திரையால் நெறியல்லா நெறியில், இக்கால இந்தியா புகுந்து, புறப் பன்மைக்கு ஆளாகி இடர்ப்படுகிறது.

இந்தியாவில் வாழும் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பெரிதும் பழைய இந்தியர் வழி வழி வந்தவரேயாவர். எவர் எந்நிலை எய்தினும் அவர்தம இயற்கை அவரை விட்டு மறையாது. இந்தியர் எச்சமயம் பற்றி ஒழுகினா லென்ன? அவர் வேறு நாட்டவராகார். இக்கால இந்தியரை மூடியுள்ள செயற்கை மாறினால், அவர் பழைய இயற்கையுடையவராவர். பழைய இயற்கையொளியை மிளிரச் செய்தற்கு நன்மனமுடையார் பிரசாரந் தேவை. பிரசாரம் இருவழியில் நடைபெறுதல் வேண்டும். சமயப் பொதுமைப் பிரசாரமும் பொருளாதாரச் செம்மைப்

பிரசாரமும் கலப்பாக நடைபெற்றால் மக்களிடை வேற்றுமையுணர்வு ஒழிந்து ஒற்றுமையுணர்வு உண்டாகும். இரண்டைப்பற்றியும் 'சன்மார்க்க போதம்' என்னும் நூலில் என் கருத்துக்களை வெளியிட்டுள்ளேன். அந்நூலைப் பார்க்க.

## வகுப்பு வாதம்

இந்நாளில் சாதி வாயிலாகவும் சமய வாயிலாகவும் வகுப்பு வாதம் தோன்றி நாடு முழுவதும் மலிந்திருக்கிறது. இக்கால இந்தியா வகுப்புவாத மயமாயிருத்தல் கண்கூடு. வகுப்புவாதம் வெறுக்கற்பாலதே. வகுப்பு வாதத்தால் நாடு முழு விடுதலை யடையவே யடையாது. சாதியாரும் சமயத்தாரும் நாட்டின் முழு விடுதலை வேட்கை கொண்டு மனந்திரும்பி வகுப்புவாத உணர்வை அருகச் செய்வது நல்லது.

சட்டசபைகள் எக்காட்சி வழங்குகின்றன? வகுப்புக் காட்சி வழங்குகின்றன. சட்டசபை இருக்கைகள் முஸ்லிம்களுக்கென்றும், முஸ்லிம் அல்லாதவர்க்கென்றும் கிறிஸ்துவர்க்கென்றும், ஒடுக்கப் பட்டவர்க்கென்றும், தொழிலாளர்க்கென்றும், பெண்களுக்கென்றும், மற்ற மற்றவர்க்கென்றும் வகுப்பு முறையில் அமையுமாறு பிரிட்டிஷ் பார்லிமெண்ட் முன்னே ஏன் சட்டஞ் செய்தது? வகுப்புணர்வு அறும் முறையில் ஏன் சட்டஞ் செய்யாதொழிந்தது? இந்தியாவின் நிலைமைக்கேற்றபடி சட்டஞ் செய்யப்பட்டது என்று பிரிட்டிஷ் அரசாங்கம் கருதியது போலும்! இந்தியாவின் நிலைமை என்று வகுப்புணர்வை வளர்த்துக் கொண்டு போனது அறமா

என்று பிரிட்டிஷ் அரசாங்கம் எண்ணியதில்லை. வகுப்பு வாதத்தை ஒழிக்கப் பிரிட்டிஷ் அரசு முயன்றதில்லை. வகுப்புணர்வையூட்டும் முறையில் சட்டசபைகள் அமைந்தால் மக்களிடத்துள்ள வகுப்புணர்வு எப்படி நீங்கும்? வகுப்புணர்வை மாய்க்கும் முயற்சியில் இனியாதல் மக்களாட்சி முயல்வதாக.

## பத்திரிகை

வகுப்புணர்வை வளர்க்கும் பலவற்றுள் பத்திரிகையும் ஒன்று. பத்திரிகை நமது நாட்டுச் சரக்கன்று; அது மேல் நாட்டுச் சரக்கு. மேல் நாட்டுச் சரக்குகளில் எவ்வளவு நன்மையுண்டோ அவ்வளவு தீமையும் உண்டு.

இந்தியப் பத்திரிகை முதல் முதல் 1818-ம் ஆண்டில் வங்காளத்தில் தோன்றியது; பின்னை மற்ற மற்ற இடங்களில் தோன்றியது. தொடக்கத்தில் இந்தியப் பத்திரிகையுலகம் பெரிதும் நாட்டுணர்வு கொண்டு - சில சமயம் நாட்டுவெறி கொண்டும் - தொண்டு செய்தது. அரசியல் உரிமை பெருகப் பெருக அதைத் தொடர்ந்து தொடர்ந்து வகுப்புவாதமும் பெருகலாயிற்று. இந்தியப் பத்திரிகையுலகின் நாட்டம் பெரிதும் வகுப்பு வாதத்தில் சென்றது. வகுப்பு வாத நஞ்சு உமிழும் பத்திரிகைகள் பலவாயின; வகுப்பு வாதங் கடந்து தேசபக்தாமிர்தம் பொழியும் பத்திரிகைகள் சிலவாயின; மிகச் சிலவாயின.

பத்திரிகை யுலகம் சக்தி வாய்ந்தது. அது மனங் கொண்டால் வகுப்பு வாதத்தைப் பெருகவுஞ் செய்ய

லாம்; அருகவுஞ் செய்யலாம். எது நல்லது? வகுப்பு வாதத்தை அருகச் செய்வதே நல்லது. இந்தியப் பத்திரிகை யுலகம், 'வகுப்புணர்வைக் கிளப்புவதில்லை' என்று இன்று நோன்பு பூண்டால், நாளை நாட்டில் வகுப்பு வாதப் பேய் தலை விரித்தாடாது ஒடுக்கமுறும். நாட்டின் நிலை நோக்கிப் பத்திரிகை உலகம் திருந்தினால் நலன் விளையும்.

## மேல்நாட்டுப் பித்து

மேல்நாட்டுப் பித்து நம்மவர் தலைக்கேறியது. அப் பித்து இறங்குதல் வேண்டும். அப்பித்தும் நந் தாய்க்கு ஒரு விலங்காயிற்று. மேல்நாட்டுக் கல்வி, உடை, வழக்க ஒழுக்கம் முதலியன நம்மவர்க்குப் பித்தூட்டின. அப் பித்து இந்தியத் தாயின் பித்தச் சுரப்புக்குரிய ஈரலை ஊறுபடுத்தியது.

நகர மக்களின் நடை உடை பாவனைகள் கிராம மக்களையுங் கெடுக்கின்றன. நகர மக்களின் மேல்நாட்டுப் பித்து, கிராமங்களிலும் பரவி இன்றும் நிற்கிறது. மேல் நாடு தெய்வலோகமாகக் கருதப்பட்டது; அந்நாடு சென்று திரும்பியவர் தேவராகக் கருதப்பட்டனர். அந்நாட்டுக்கே பெருமையெல்லாம் வழங்கப்பட்டன. பிணி தீர்த்துக்கொள்ளவும் பித்தர் மேல்நாடு நோக்கிச் செத்ததை என்னென்று சொல்வது? மேல்நாட்டுப் பித்தர், காளிதாசனை இந்திய ஷேக்ஸ்பியர் என்றும், சுரேந்திரநாதரை இந்திய கிளாட்ஸ்டன் என்றும், இராம மூர்த்தியை இந்திய ஸாண்டோ என்றும் கூறி மகிழ்ந்ததை என்னென்று கருதுவது? மேல்நாட்டுப் பித்தேறிய

மூளைக்கு எல்லாம் மேல்நாடாகத் தோன்றின! அப் பித்து, தாய்நாட்டை இழிவாக நினைக்கச் செய்தது; மறக்கவுஞ் செய்தது.

மேல்நாட்டுக் கல்வி, செலவு முதலியன வேண்டா மென்பது எனது கருத்தன்று. அவைகளிடம் பித்துக் கொள்ளலாகாதென்பது எனது கருத்து. மேல்நாட்டுக் கல்வியால் நலனில்லை என்றோ, அந்நாட்டுச் செலவால் நலனில்லை என்றோ யான் கருதுவோனல்லன். அங்ஙனங் கருதும் பித்தோ வெறியோ எனக்கில்லை.

மேல்நாட்டுப் பித்து இன்னும் நாட்டவரை விட வில்லை. அப் பித்தால் பல தீங்குகளுண்டு. அவற்றைத் திரட்டி இரண்டில் அடக்கலாம். ஒன்று சுதேசிய அழிவு; மற்றொன்று பேராசை அலைவு.

சுதேசிய அழிவால் நாட்டுச் செல்வம் பிறநாடு களுக்குச் செல்வதாகிறது. அச்செலவால் நாட்டில் வறுமை மீக்கூர்கிறது; பட்டினியும் பஞ்சமும் மக்களை வாட்டுகின்றன.

பேராசை மன்பதையை அரிப்பது. அதை வளர்ப் பது மேல்நாட்டு நாகரிகம்; அதை அன்பால் தேய்ப்பது கீழ்நாட்டு நாகரிகம். இருநாட்டு நாகரிகங்களின் அடிப் படையிலுள்ள வேற்றுமையை ஊன்றிப் பார்க்க. அதனடியில் ஆசையும், இதனடியில் அன்பும் இருத்தல் விளங்கும்.

ஆசை வேண்டாமென்பது உலகைத் துறக்கச் சொல்வது என்று எவரும் நினைக்க வேண்டுவதில்லை. உலகைத் துறத்தலாகாதென்பதும், பெண் ஆண் சேர்க்கை இயற்கையறமென்பதும், இயற்கையின்பந்

துய்க்கவே உலக வாழ்வு ஆண்டவனால் அருளப்பட்ட தென்பதும் எனது கொள்கை. இக்கொள்கையை எனது நூல்களிலெல்லாம் விளக்கியுள்ளேன். இந்நூற்கண்ணும் முன்னே சிலவிடங்களில் 'தனி வாழ்க்கை' செயற்கை என்று யான் விளக்கியுள்ளதை நேயர்கள் நினைவூட்டிக் கொள்வார்களாக.

ஆசை, நாகரிகத்தின் குறி என்று சிலர் கூறுகின்றனர். ஆசை, நாகரிகத்தின் குறியாயின் அதன் வாய்ப் படும் உரிமை எல்லார்க்கும் உண்டாகும். அதனையடைய ஒவ்வொருவரும் முந்துவர். ஒருவரிடம் எழும் ஆசை மற்றவரிடமும் எழுமன்றோ? ஆசைக்கு ஓர் அளவுண்டோ? *ஒவ்வொருவரும் அகிலமெல்லாங் கட்டியாளவேண்டுமென்னும் ஆசை மேற்கொண்டெழுந்தால் உலகம் என்னவாகும்? உலகம் யுத்தகளமே யாகும். மேல்நாட்டின் பேராசை நாகரிகம் உலகை இரண்டுமுறை யுத்தகளமாக்கிற்று. அன்பு அங்ஙனஞ் செய்யாது.

ஒவ்வொரு நாடும் தன்னைப் பெருக்கவும், பிறநாடுகளைப் பற்றவும் ஆசைப்படுகிறது. ஆசை, உலகை யுத்தகளமாக்குகிறது. இது மேல்நாட்டு நாகரிகத்தின் விளைவு. கீழ்நாட்டு நாகரிகம் உலகை யுத்தகளமாக்குவதன்று; அஃது அன்பால் அமைதியை நிலைபெறுத்துவது.

---

*தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப் பொருளென்று மிகவுன்னி மதியா லிந்த, அனைத்துலகும் ஆளலாமென்று பேசும் ஆங்காரந் தவிர்நெஞ்சே யமரர்க் காக, முனைத்துவரு மதில்மூன்றும் பொன்ற அன்று முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீ மூழ்க, நினைத்தபெருங் கருணையன்நெய்த் தானமென்று நினையுமா நினைந்தக்கா லுய்ய லாமே.—அப்பர்

ஆசைப்பேய் தன் முயற்சியில் விரைவில் வெற்றி பெறும். அதன் ஆக்கமும் விரைந்தே பெருகும். அழி வும் அப்படியே. ஆசை நாகரிகம் இயற்கையுடன் இயைந்து செல்லாததாகலின், அது வீழ்ந்துபடும். மேல்நாட்டு நாகரிகம் வீழ்ந்துபடும் குறிகள் தோன்றியே வருகின்றன. உலக யுத்தம் ஓர் அறிகுறி. கீழ்நாட்டு நாகரிகம் அமைதி விளைக்குந் தன்மையதாயினும், அஃது இப்பொழுது மேல்நாட்டு ஆசை நாகரிகத்தால் தாக் குண்டு கிடக்கிறது. இன்னுமோர் (மூன்றாவது) உலக யுத்தத்தின் பின்னரே கீழ்நாட்டு அன்பு நாகரிகத்தின் மாண்பு உலகுக்கு விளங்குவதாகும்.

மேல்நாட்டு ஆசைநாகரிகம் உலகைப் போர்க்கள மாக்கி வருதல் கண்ட இயற்கை அன்னை, அந்நாட்டில் சமதர்ம விதை விதைத்துள்ளாள். காரல் மார்க்ஸ் முதலியோர் எழுதியுள்ள நூல்களை ஆராய்ந்தால் உண்மை விளங்கும். அந்நூல்கள், பேராசையால் உலகம் யுத்த களமாதலைத் தடுக்கவும், பொருளாதாரச் செம்மையால் ஆசைப் பேயையோட்டி அமைதியை நிலைபெறுத்தவும் வழிதுறைகளைக் காட்டுகின்றன. மேல்நாட்டு நாகரிகம் பேராசையற்றதாயின், இயற்கை அன்னை காரல் மார்க்ஸ் முதலியோரைப் பிறப்பித்தேயிராள். மேல்நாட்டு ஆசை நாகரிகத்தால் விளைந்துள்ள தீமையை, அந்நாட்டுப் பித்துக்கொண்டு திரியும் இந்திய மக்கள் ஆராய்ச்சியால் தெளிந்து நடப்பார்களாக.

பேராசை மன்பதையை நாசப்படுத்துமென்றுணர்ந்த இந்திய முனிவரர்கள், காரல் மார்க்ஸ் இந்நாளில் சொல் லியதை, அந்நாளிலேயே (அக்காலத்துக்கேற்ற முறையில்)

சொல்லி, அதற்குமேலுஞ் சில அறங்களையும் அறிவுறுத்தினார்கள். பேராசையைக் கடிந்த முற்கால இந்திய முனிவரர் உலகைத் துறக்குமாறு யாண்டுங் கூறினாரில்லை. அவர் பேராசையைத் துறக்குமாறு கூறியிருத்தல் உண்மை. அதைத் துறக்கும் இடத்திலேயே அறம் கால்கொள்ளும்.

பண்டை முனிவரர் பலரும் பெண்ணுடன் வாழ்ந்து இயற்கை இன்பந் துய்த்தவரேயாவர். பேராசையின் கொடுமை யுணர்த்தும் இக்கால மார்க்ஸீயமும் உலகைத் துறக்குமாறு அறிவுறுத்தவில்லை. இயற்கை விளைவை எல்லாரும் பெற்று, இன்பம் நுகருமாறு மார்க்ஸீயம் அறிவுறுத்துகிறது.

மேல்நாட்டுப் பித்திலுள்ள பேராசையை விரிக்கின் நூல் பெருகும். நம்மவர் மேல்நாட்டுப் பித்தினின்றும் விடுதலையடைவதும் தாயின் ஒரு விலங்கையறுப்பதாகும்.

## தலைவர்

தலைவர் நிலைமையைப் பற்றியுஞ் சிறிது கூறுவது நலன். அதுவும் முழு விடுதலைக்குத் துணைசெய்யுமென்று கருதுகிறேன். ஒவ்வோர் இயக்கத்துக்கும் ஒவ்வொரு தலைவர் இருத்தல் இயல்பு. எவ்வியக்கத்துக்குந் தலைவராக வருவோர் நல்லியல்புடையவரா யிருத்தல் வேண்டும். அவர் கல்வி அறிவு ஒழுக்கம் உடையவராய், உலக அநுபவத்தில் பண்பட்டவராய், முனைப்பற்றவராய், பரநல நோக்குடையவராய், பொறுமையாளராய், கருத்து வேற்றுமை காரணமாக எரியுளங் கொள்ளாதவராய், வன்மங்கொண்டு பகைமை மூட்டாதவராய் இருத்தல்

சிறப்பு. இன்னோரன்ன இயல்புகள் பொதுவாக எல்லா ரிடத்தும், சிறப்பாகத் தலைவரிடத்தும் சிறந்து விளங்கின் மன்பதைக்கு நலன் விளையும். விடுதலைக்கு நல்லியல்புகளுந் தேவை.

இந்நாளில் எத்துணையோ இயக்கங்கள் தோன்றுகின்றன. அவற்றுள் அரசியல் இயக்கமே செல்வாக்குப் பெறுவதாகிறது. அரசியலில் அதிகாரமும் உண்டு; விளம்பரமும் உண்டு. இரண்டும் மக்கள் கூட்டத்தை எளிதில் ஈர்ப்பன.

அரசியல் இயக்கத்துக்குத் தலைவராக வருவோர் மிக எச்சரிக்கையாக நடத்தல் வேண்டும். அவர் மயிர்ப் பாலத்தின்மீது நடப்பவராகிறார். அவர்க்குச் சோதனை அதிகம்; அதிலும் முழுவிடுதலைபெறாத இந்தியநாட்டு அரசியலியக்கத் தலைவர்க்குச் சோதனை ஏராளம். அரசியல் இயக்கத்தைத் தூய்மை வழியில் நடத்துவது அருமை. அவ்வருமையை எளிமையாக்குவோரே சிறந்த தலைவராவர். அதற்குரியவர் குணமென்னுங் குன்றேறி நிற்பவரேயாவர். அவர் அரசியற்றலைவராக வரின், உலகம் தூய்மையுறும். அத்தகைய பண்பினரைத் தலைவராக அரசியல் உலகம் ஏற்குமா என்பது ஐயம்.

பலவகை அரசியல் அமைப்புக்களிருக்கின்றன. அவற்றைப் பற்றி அதிகாரம்பெறக் கட்சித் தலைவர் முயல்கிறார்; தேர்தலில் ஈடுபடுகிறார். தேர்தலில் வெற்றி பெறுதற்குப் பலவிதப் பிரசாரம் தேவை. தேர்தல் பிரசாரத்தில் அறத்தை - உண்மையை - நேர்மையை - எதிர்பார்த்தல் இயலுமா? அப்பிரசார இயலை - படலத்தை - விரித்துக் கூற நா எழவில்லை. பொய்மை,

பழி, பாவம், நிந்தனை, தூற்றல், வசை முதலிய 'செம் பொருள்கள்' பிரசார வெள்ளத்தில் மிதந்து கொண்டே போகும். அத்தகைய பிரசாரஞ் செய்யப் பழகியவரைத் தலைவர் தேடிப் பிடிக்கிறார். அக்கூட்டத்தவர் உதவியும், அக்கூட்டத்தவரால் நடத்தப்படும் பத்திரிகை உதவியும் தலைவர் வெற்றிக்குத் தேவையாகின்றன. என் செய்வது? தேர்தல் வெற்றிக்கென்று எவ்வளவு இழி துறையில் இறங்கவேண்டுமோ அவ்வளவும் தலைவர் இறங்குகிறார். தலைமைக் காப்புக்குப் போக்கிலி கூட்டத்தின் தயவு தேவையாகிறது; இன்றியமையாததாகிறது. பட்டினியும் பஞ்சமும் அரிக்கும் நாட்டுமக்கள் வயிற்றின் பொருட்டு என்ன செய்யவுஞ் சித்தமாயிருப்பார்கள். ஈனப் பிரசாரத் தால் நாடு கெட்டழிவதைத் தலைவர் உளங்கொள்வதில்லை. அவர் விரும்புவது வெற்றியொன்றே. தமது நலனுக்குப் போக்கிலி கூட்டத்தைப் பயன்படுத்தி நாட்டை நாசப் படுத்துவது தலைவர்க்கழகன்று. இத் தீமையினின்றும் தலைவர் விடுதலையடைவது நாட்டு விடுதலைக்குத் துணை செய்வதாகும். மற்றுமொரு குற்றத்தினின்றும் தலைவர் விடுதலை யடைவது நல்லது. அஃது எது?

ஆயிரக்கணக்கான கூட்டத்தினிடையில் தலைவர் கடவுளென்றும் அவதாரமென்றும் போற்றப்படுகிறார். அவரைச் சார்ந்த பத்திரிகைகளும் அங்ஙனே போற்றி எழுதுகின்றன. பொதுமக்கள் மயக்குற்றுப் பிரசார வலையில் சிக்கி, நாட்டை மறந்து, விடுதலை யுணர்விழந்து, தலைவரின் படங்களை வைத்துப் பூசிக்கத் தொடங்குகிறார் கள். தலைவரைப் பூசித்தால் எல்லா நலன்களும் உண்டா கும் என்பது மக்களின் நம்பிக்கை.

நமது நாடு அவதார நம்பிக்கையுடையது; அவதாரக் கதைகளில் உறுதியுடையது; கண்மூடி வழக்க ஒழுக்கங்களில் தோய்ந்து கிடப்பது; பூமாலை தூங்கும் எவ்வுருவைக் காணினும் தலை சாய்க்கும் இயல்பு வாய்ந்தது. அத்தகைய நாட்டில் அவதாரப் பிரசாரம் நடைபெற்றால், நாடு என்நிலை எய்தும்? ஆகவே, தலைவர் சாதாரண மக்களின் புகழ்ச்சிக்கு எளியராவதினின்றும் விடுதலையடைவது நாட்டுக்கு நல்வழி காட்டுவதாகும்.

பொதுவாக எல்லா நாட்டுத்தலைவரும் தமது நலத்தை உண்மையாகத் தியாகஞ் செய்ய உறுதி கொள்ளல் வேண்டும். தம்மை மக்கள் வழிபடுதலை வெறுக்கும் உள்ளத்தைத் தலைவர் பெறுதல் வேண்டும். ஊர்வலமும், படப் பிரதிஷ்டையும், உருவச்சிலை நாட்டலும், இன்ன பிறவும் அநாவசியம்.

அணித்தே நடைபெற்ற ஐரோப்பிய யுத்தத்தில் ருஷ்யா, போலந்தின் ஒரு பகுதியைப் பற்றிக் கொண்டது. உடனே போலந்து மக்களுக்கு ருஷ்யத் தலைவர் ஸ்டாலின் படங்கள் இலட்சக்கணக்கில் வழங்கப்பட்டன. ஸ்டாலின் சமதர்ம வீரர்; கடவுள் வழிபாட்டையும் மறுக்குந் தீரர். அவர் படம் மக்களுக்கு வழங்கப்பட்டதன் நோக்கமென்ன? ஸ்டாலின் நோக்கம் எவ்விதமாயினுமாக. மக்கள் ஸ்டாலினை ஒரு கிறிஸ்துவாகப் போற்றுவரல்லரோ?

இந்தியாவின் மாபெருந் தலைவராகிய காந்தியடிகள தம்மை அவதாரமென்று மக்கள் பேசுவதையும் தம் படங்களை வழிபடுவதையும், அவற்றைத் தேர்களில் வைத்து விழாக் கொண்டாடுவதையும் கேள்வியுற்றுப்

பலமுறை மறுத்துள்ளனர். அவர் மறுத்தும், மக்கள் அறியாமையால் மூடச் செயல்களினின்றும் போதிய அளவு திரும்பவில்லை. காந்தியடிகள் பெயரால் அவர் தங் கொள்கைக்கு மாறுபாட்ட செயல்கள் சில நாட்டில் நடந்து வருகின்றன. அவைகளுக்கு அவர் பொறுப்பாளரல்லர் ; மற்றத் தலைவர்களே பொறுப்பாளர்கள். அவர்கள், காந்தியடிகளை மக்கள் அவதாரமெனக்கொண்டு போற்றினால், அப்போற்றலையொட்டித் தங்களுக்குத் தேர்தலில் வெற்றி கிடைக்குமென்று கருதி மக்களைக் கெடுக்கிறார்கள். அதற்குக் காந்தியடிகள் என் செய்வர் ? அவர் மறுப்புரை வழங்கியதையே நாம் கொள்ளுதல் வேண்டும்.

## கருத்து வேற்றுமை

கருத்து வேற்றுமை மக்களிடத் தெழுவது இயற்கை. அவ்வேற்றுமை எழுதற்கென்றே மக்கட் பிறவியில் பகுத்தறிவு அமைந்திருக்கிறது. அவ்வேற்றுமை எழாத கூட்டம் விலங்கினமாகும். கருத்து வேற்றுமை எழ எழ அறிவு சிறைப்படாது தெளிவடைந்து கொண்டே போகும். ஆதலின், அதற்கு மதிப்பளித்தல் நாகரிகமென்க.

கருத்து வேற்றுமை காரணமாக உள்ளே எரி கொண்டு, வன்மம் பூண்டு, ஒருவரை ஒருவர் தாக்கிக் கொள்வது இழிவு. அவ்விழிவுடைய நாடு வளர்ச்சி யடையாது. நமது நாட்டில் அக்குற்றம் சிறிது உண்டு. வேதத்தின் முதற்பகுதியில் தஸ்யூக்கள் எப்படிப் பேசப் பட்டுள்ளார்கள் ? மத்துவாச்சாரியரால் சங்கராச்சாரி யார் எங்ஙனம் தூற்றப்பட்டுள்ளனர் ? ஜைன பௌத்தர்,

சைவராலும் வைணவராலும் எவ்வாறு தாக்கப்பட்டுள்ளனர்? மதத்தை யொட்டிய கருத்து வேற்றுமை காரணமாக நேர்ந்த பிணக்கும் நாட்டை அடிமைப்படுத்தியது! இந்நாளில் நாட்டு விடுதலைக்கென்று முயன்று வந்த பழைய காங்கரஸிலாதல் கருத்து வேற்றுமைக்கு மதிப்பு ஏற்பட்டதா? கரே, நரிமன், சுபாஷ் சந்திர போஸ் முதலிய தேசபக்தர்கள் காங்கரஸ் நிர்வாகத்தினின்றும் ஏன் துரத்தப்பட்டார்கள்? கருத்து வேற்றுமையே அடிப்படையான காரணம். கருத்து வேற்றுமை காரணமாக உட்பகை கொண்டு, ஒருவரை ஒருவர் தாக்குஞ் சிறுமை நாட்டின் முழுவிடுதலைக்கு ஒருவிதத் தடையென்றுஞ் சொல்லலாம். அத்தடையும் நீக்கப்படல் வேண்டும்.

கருத்து வேற்றுமைக்கு மதிப்பளிப்பதில் மேல்நாடு பண்பட்டிருக்கிறது. அவ்வேற்றுமையால் அங்கே மக்களுக்குள் தனித்தனியே பிணக்குப் பெரிதும் நேர்வதில்லை. கருத்து வேற்றுமைக்கு மதிப்பளிக்குங் கலையை நம் நாட்டவர் மேல்நாட்டவரிடமிருந்து பயின்று கொள்வது நலம். இளம் பிள்ளைகள் ஒருவாறு பண்பட்டு வருதல் மகிழ்ச்சி யூட்டுகிறது.

## தன்னலம்

தன்னல நாட்டம் நமது நாட்டில் அதிகம். அஃதும் ஒரு கட்டே. அக் கட்டறுந்தால் நாட்டுக்குப் பல திற நலன் விளையும். தன்னலம் நாட்டில் பெருகியதற்கு அடிப்படையான காரணம் மக்களிடைத் தனித்த வாழ்க்கைக்கு ஏற்பட்ட மதிப்பாகும். தனி வாழ்க்கை யுணர்வு தன்னலத்தை நாடாது பிறர் நலத்தை எங்ஙனம்

நாடுவதாகும்? தனித்த வாழ்க்கையின் நோக்கமென்ன? தன் உயிர்மட்டும் கட்டற்று விடுதலை யடைதல் வேண்டும் என்பது. இவ்விழிந்த நோக்கைக் குறிக்கோளாகக் கொண்டு வாழ்க்கை நடாத்தும் மக்களிடைத் தன்னலம் பெருகுதல் இயல்பே. நாட்டில் தனித்த வாழ்க்கைக்கு ஏற்பட்ட மதிப்பு, தன்னல வாழ்க்கையைப் பெருகச் செய்தது. அப் பெருக்கம் சுருங்கி அருகுதல் வேண்டும்.

## வகுப்பன்பு

தன்னலப் பெரும்பான்மைக் கூட்டத்துக்கு அடுத்த படியில் நமது நாட்டில் ஒரு கூட்டம் இருக்கிறது. அக் கூட்டத்தின் அன்பு, வகுப்பு வரை செல்கிறது; அதற்குமேல் செல்வதில்லை. வகுப்பன்பில் 'நாடு' தோற்றமுறுமோ?

## நாட்டன்பு

வகுப்புக் கூட்டத்துக்கு அடுத்தபடியில் வேறு ஒரு சிறு கூட்டம் - மிகச் சிறு கூட்டம் - நாட்டிடை நிற்கிறது. அக் கூட்டத்தின் அன்பு வகுப்பைக் கடந்து நாடு வரை செல்கிறது. அச்சிறு கூட்டத்தின் அன்பு கடலில் கரைத்த பெருங்காயம் போன்றதாகிறது. பெரும் பான்மையோர் அன்பு, தம்மைக் கடந்து, வகுப்பைக் கடந்து, நாட்டினிடஞ் செல்லும் நிலைமை யுண்டாதல் வேண்டும்.

## உலக சகோதர நேயம்

நாட்டையுங் கடந்து செல்லும் பேரன்பே உலக சகோதர நேயம் என்பது. அந்நேயத்துக்கு நாட்டு நேயம்

இன்றியமையாதது. நாட்டை நேசியாது, உலகை நேசிப்ப தென்பது போலியே. நாட்டு நேயம் தானே உலக நேயத்தைப் பெருக்கும் பண்புடையது.

நம்முன்னோர் பலரும் உலக சகோதர நேயத்தை அறிவுறுத்திச் சென்றனர். இடைக்காலத்திற் புகுந்த அன்பற்ற தனி வாழ்க்கை, தன்னலத்தை வளர்த்து நாட்டன்பை வளரவொண்ணுதவாறு தடை செய்தமை யால், முன்னோர் அறிவுறுத்திய உலக நேயம் மக்கள் வாழ்வில் கால்கொள்ளாது வெறும் பேச்சாகிவிட்டது.

மேல் நாட்டவருள் பெரும்பான்மையோர் நாட்டுப் பற்றுடையவராகவே வாழ்கின்றனர். நாட்டின் பொருட்டு உயிரை விடவும் அவர் விரைந்து நிற்றல் வெள்ளிடை மலை. அவர் தம்மினும் நாட்டை அதிகமாக நேசிக் கின்றனர்; நாட்டன்பையே தமது வாழ்வாக - மதமாக - உயிராகக் கருதி வாழ்கின்றனர். அவர்தம் போதனையும் சாதனையும் நாட்டன்பே.

மேல்நாட்டவர் அன்பு, 'தமமை'க் கடந்து, வகுப் பைக் கடந்து, நாட்டு வரை சென்றிருத்தலால், அவ் வன்பு உலக சகோதர நேயமாகப் பெருகும். அதற்குரிய குறிகள் தோன்றி வருகின்றன. மேல்நாட்டில் தற்போது வளர்ந்து வரும் சமதர்ம உணர்வின் நோக்கமென்ன?

நம் நாட்டவர், ஏட்டிலுள்ள உலக நேயத்தைப் பாராயணஞ் செய்வதால் பயன் விளையாது. அவர் தனி வாழ்க்கைக் கேற்பட்டுள்ள மதிப்பை யொழித் துத், தன்னலப் பேயையோட்டி, வகுப்புணர்வையுங் கடந்து, நாட்டு நேயத்தை வளர்க்க முந்துவாராக.

## பிடிவாதப் பேய்

நமது நாட்டில் இன்னொரு பேய் இருக்கிறது. அப்பேயும் தாயை அலைத்து வருகிறது. அஃது எது? அது பிடிவாதப் பேய்.

நம நாட்டில் பல வகுப்பார் குடி புகுந்தனர். அவரவருடன் அவரவர் வழக்க ஒழுக்கங்களும் வந்தன. பலதிற வழக்க ஒழுக்கங்கள் நாட்டில் நிலைத்து நாட்டைப் பலவாகப் பிரித்து நிற்கின்றன. சில வழக்க ஒழுக்கங்கள் நாட்டின் இயற்கைக்குப் பொருந்தாது நஞ்சாகி நாட்டை எரிக்கின்றன. நஞ்சைக் களைந்தாலன்றோ நாடு நலமுறும்?

வழக்க ஒழுக்கங்களில் நாட்டின் இயற்கைக்குப் பொருந்துவனவுமிருக்கும்; பொருந்தாதனவுமிருக்கும். ஆராய்ச்சியும் அநுபவமும் பொருந்துவன இன்ன பொருந்தாதன இன்ன என்று அறிவுறுத்தும். உண்மை விளங்கியதும் பொருந்துவனவற்றைக் கொண்டு, பொருந் தாதனவற்றை விடுவது நாட்டு நலனை நாடுவதாகும். 'இவை எங்கள் வழக்க ஒழுக்கங்கள்; இவற்றை நாங்கள் விடோம்' என்று பொருந்தாதனவற்றையும் பாதுகாத்து வளர்ப்பது நாட்டு நலனை நாடுவதாகாது. இயற்கைக்குப் பொருந்தாத கண்மூடி வழக்க ஒழுக்கங் களை மண்மூடச் செய்யாமல், அவற்றை உடும்புப் பிடி யாகப் பிடித்துக்கொண்டிருப்பது தவறு.

சிலரிடம், 'பிடிவாதம் தவறு; அதனால் நாட்டின் விடுதலைக்கு இடர் விளைந்து வருகிறது' என்னும் அறிவு விளங்குகிறது; 'பிடிவாதத்தை விடவேண்டும்'

என்னும் உணர்வும் பிறக்கிறது ; ஆனால் 'பழமையை எப்படி விடுவது' என்று மனமெழுவதில்லை ; செயலும் பிறப்பதில்லை.

*'பழமை' என்று ஒன்றில் பிடிவாதஞ் செலுத்துவதும், 'புதுமை' என்று ஒன்றைக் கடிவதும் அறிவுடைமையாகா. 'பழமை' நாட்டின் விடுதலைக்குத் துணை செய்வதாயின் அதைக் கொள்ளலாம் ; 'புதுமை' நாட்டின் விடுதலைக்குத் துணை செய்யாததாயின் அதைத் தள்ளலாம். இஃது அறிவுக்கழகு. 'பழமை' தற்போது நாட்டின் விடுதலைக்கு இடர் செய்வதாயின் அதைத் தள்ளியே தீர்தல் வேண்டும். அதை வலிந்து பிடித்து மல்லாடலாகாது. 'புதுமை' ஒன்று நாட்டு விடுதலைக்குத் துணை செய்வதாயின் அதைக்கொண்டே தீர்தல் வேண்டும். 'பழமை' 'புதுமை' என்னுங் காரணத்தால் ஒன்றைத் தள்ளல் கொள்ளல் தவறு ; 'நல்லதா' 'தீயதா' என்று ஒன்றைப் பகுத்தறிந்து, அதனிடம் தள்ளல் கொள்ளல் செலுத்துவது அறம்.

---

* 'தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினோர் நலங்கொள்மணி பொதியும்அதன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினோர் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினோர் பலர்புகழில் ஏத்துவர்ஏ திலருற்
றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றிலரே'

—உமாபதிசிவம் (சிவப்பிரகாசம்)

'ஒன்று பொருந்தாது' என்று ஆராய்ச்சியால் — அறிவால் - அநுபவத்தால் - உணர்ந்து தெளிந்ததும், அதை விட்டொழிக்க முயல்வது முன்னேற்றத்துக்கு அறிகுறியாகும். அம்முயற்சி எழாத இடம் பாழ்படுதல் ஒருதலை. இங்கிலாந்தைப் பாருங்கள். அங்கே பலர் குடி புகுந்து நிலைத்தனர்; அவரவருடன் அவரவர் வழக்க ஒழுக்கங்களுங் குடி புகுந்தன. அவரவர் தத்தம் வழக்க ஒழுக்கங்களென்று அவற்றைப் பொன்னே போல் போற்றி வழிபட்டாரில்லை. நாட்டின் ஒருமைப் பாட்டுக்கு இடர் செய்வனவாயிருந்தனவற்றை அவ்வப் போது ஒழிக்கவே இங்கிலாந்து மக்கள் முனைந்தார்கள். அவர்கள் பிடிவாதப் பேயால் அலைவுண்டார்களில்லை. பிடிவாதப் பேய் அவர்களிடம் அணுகவும் அஞ்சிற்று. இங்கிலாந்துடன் நாம் ஏறக்குறைய இருநூற்றாண்டு கூட்டுறவு பெற்றோம். பெற்றும், பிடிவாதப் பேயை விடுதற்கு மனங் கொண்டோமா? கொள்கிறோமா?

மேல்நாட்டு வழக்க ஒழுக்கங்களில் நாட்டுக்கு நலன் செய்வனவற்றை ஏற்று நடக்க நம்மவர் முந்துகிறாரில்லை; தீங்கு செய்வனவற்றை ஏற்று நடப்பதில் முந்துகிறார். இவ்வறியாமை என்று தொலையுமோ?

மேல்நாட்டார் பெரிதும் பிடிவாதப் பேயை வளர்ப் பதில்லை. அதை அவர் ஓட்டி நலமுற்றே வருகின்றனர். நாமும் பிடிவாதப் பேயை ஓட்ட முந்துவோமாக; முனை வோமாக; விரைவோமாக. அறிஞர்கள் வழிகாட்டுவார் களாக; இளைஞர்கள் வீறுகொண்டெழுவார்களாக. இளை ஞர்களே! ஜப்பானைப் பாருங்கள்; துருக்கியை நோக்குங் கள். அவை பிடிவாதப் பேயைத் துரத்தித் துரத்தி

அடித்துக் கொன்று முன்னேற்றம் அடைந்ததை உன்னுங்கள் ; உங்களுக்கு ஊக்கம் பிறக்கும்.

இன்னுங் கட்டுகளை முறை முறையே குறித்துச் செல்லலாம். விரிவஞ்சி இவ்வளவுடன் நின்று விடுகிறேன். எல்லாக் கட்டுகளுஞ் சேர்ந்து நாட்டை அடிமைப்படுத்தின. கட்டுகளினின்றும் எப்படி விடுதலை அடைவது ? ஒவ்வொரு கட்டினின்றும் விடுதலை அடையத் தனித்தனி முயற்சி செய்வோர் செய்க. அம்முயற்சிகளெல்லாம் ஒன்றுபட்டுத் திரண்டு வெற்றி யளித்தற்கு நீண்ட காலமாகும். அதற்குள் நாடு பலதிற அடிமைத் துன்பங்களில் மூழ்கி மூழ்கி மறையினும் மறையும். இதையுணர்ந்த அறிஞர் அரசியல் - பொருளாதார விடுதலையே முதன்மை என்றும், அம்முயற்சியே காலத்துக்குரியதென்றும், தலையாயதென்றும், மற்ற முயற்சிகள் பக்கத் துணையாக உடன் உடன் நடைபெற்று வரலாமென்றும் உணர்ந்தனர். அவ்வுணர்ச்சி சில அமைப்புக்களாக உருக்கொண்டது. அவ்வமைப்புக்கள்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம்.

## உ. அரசியல் - பொருளாதாரம்

வெறும் அரசியல் விடுதலையால் மட்டும் நாட்டின் அடிமைத் துன்பம் நீங்காது. பொருளாதார விடுதலையும் உடன் வேண்டும். இதுபற்றியே அரசியல் - பொருளாதார விடுதலை என்று குறிக்கலானேன். முழு விடுதலை என்பது அரசியல் விடுதலையுடன் பொருளாதார விடுதலையையும் உடன்கொண்டதென்க.

தனித்த அரசியல் விடுதலையால் அந்நிய ஆதிக்கம் நீங்கும். அதுமட்டும் போதாது. அதனுடன் பொருளாதார விடுதலையும் வேண்டும். இல்லையேல் வெளிநாட்டு அதிகாரவர்க்க இயந்திரமுள்ள இடத்தில், உள்நாட்டு அதிகாரவர்க்க இயந்திரம் நின்று, ஏழை மக்களின் இரத்தத்தைப் பிழிந்துகொண் டிருக்கும்.

இந்தியாவுக்கு முழுஅரசியல் விடுதலையும் வேண்டும் ; முழுப் பொருளாதார விடுதலையும் வேண்டும். இரண்டையும் வேறுபடுத்திப் பிரித்துக் கூறாது ஒன்றுபடுத்தியே அரசியல் பொருளாதார விடுதலை என்று கூறலானேன்.

ஒவ்வொரு கட்டு நீக்கத்துக்கென்று தனித் தனியே முயல்வோர் உழைப்பெல்லாம் முழுஅரசியல் - பொருளாதார முயற்சிக்குத் துணைபோவனவா யிருத்தல்வேண்டும். இல்லையேல் அவர்தம் முயற்சிகளெல்லாம் பாழாகும் ; அரசியல் பொருளாதார விடுதலை முயற்சிக்கும் இடர் விளைத்துக்கொண்டே போகும். அரசியல் பொருளாதார விடுதலையே நாட்டின் முழு விடுதலையாகும். ஆகவே, நாட்டின் விடுதலை - முழுவிடுதலை - என்பது அரசியல் பொருளாதார விடுதலையை உணர்த்துவதென்று கொள்க.

## முன்னணி

நாட்டின் விடுதலைக்கென்று எழுந்த இயக்கங்கள் பல; தோன்றிய அமைப்புக்கள் பல. அவையெல்லாந் திரண்டு ஒரு பெரும் இந்திய நாட்டியக்கமாய் - அமைப்பாய் - மாறின. ஒரு பெரும் இயக்கத்தில் ஈடுபட்டுள்ள அமைப்பின்மீது (காங்கரஸ்மீது) கருத்துச் செலுத்துதற்கு முன்னர், அவ்வமைப்பின் தோற்றத்துக்கு மூலங்களாயிருந்த சிலவற்றைச் சுருங்கிய முறையில் எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சியில் ஒரு பெருங் கலகம் வீறிட்டெழுந்தது. அது சிப்பாய் கலகம் எனப்படும். பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சியால் சாதிமத ஒழுக்கங்கட்குக் கெடுதி நேர்ந்ததென்று சிப்பாய்களிடைத் தோன்றிய உணர்ச்சி ஆவேசமாகிக் கலகமாக மூண்டெழுந்தது. அதனால் விளைந்ததென்னை ? பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சி, பிரிட்டிஷ் அரசியின் ஆட்சியாக மாறியதே விளைந்த விளைவாகும். சிப்பாய் கலகம் ஓர் ஆவேச மறக்கிளர்ச்சி. அது நாட்டின் விடுதலையைக் குறிக்கொண்ட அறக் கிளர்ச்சியாகாது. ஆகவே, அதை விடுதலைக் கிளர்ச்சியில் சேர்த்துச் சொல்வது பொருத்தமன்று.

பிரிட்டிஷ் வாணிபர் ஆட்சி ஆக்கம் பெற்றுவந்த வேளையில், ஆங்காங்கிருந்த அறிஞர்க்கு நாட்டின் குறைபாடுகள் நன்கு புலனாகியிருக்கும். அவற்றைக் களைதற்குரிய முயற்சிகளும் அவர்பால் தோன்றியிருக்கும். அவருள் சரித்திர உலகறிந்தவர் ஒருவர். அவரே ராஜாராம் மோஹன் ராய் என்பவர். அவர் ஹிந்து

சமூகத்தைப் பலவழியிலுஞ் சீர்திருத்தஞ் செய்ய முயன்றவர். அவர்தம் முயற்சி, உடன் கட்டை ஏறுதலை நிறுத்துமாறு அந்நாளில் கவர்னர் ஜெனரலாயிருந்த லார்ட் வில்லியம் பெண்டிக்கை உந்தியதெனில், அவர்தஞ் சீர்திருத்த வேட்கையை என்னென்று கூறுவது ? ராஜா ராம் மோஹன் ராயின் முயற்சிகளுள் தலையாயது பிரம சமாஜ அமைப்பேயாகும் (1828). அச்சமாஜம் உபநிடதக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது ; சாதி வேற்றுமையைக் கருதாதது ; உருவ வழிபாட்டைக் கடிவது. பிரம சமாஜம் காலத்துக்கேற்ற தொண்டை ஒருவாறு ஆற்றியதென்றே சொல்லலாம். ஆனந்த மோஹன் போஸ், விபின சந்திர பாலர் முதலிய தேச பக்தர் பிரம சமாஜத்தின் செல்வங்களாவர்.

பிரம சமாஜம் காணப்பட்ட பின்னர் நாட்டில் சில நறுந்தொண்டுகள் நிகழ்ந்தன. அவற்றுள் சில போற்றற் குரியன.

ஸர் கங்காராம் பொதுவாகப் பெண்ணுலகுக்கும்— சிறப்பாகக் கைம்பெண்ணுலகுக்கும் செய்த சேவை என்றும் மறக்கற்பாலதன்று. அவர் பாஞ்சாலர். கைம் பெண் வாழ்வு கருதி அவரால் தானஞ் செய்யப்பெற்ற தொகை அரை கோடி ரூபா. அவர்தம் தொண்டின் சிறப்பை நினைவூட்டுஞ் சட்டங்கள் சில உண்டு. ஈசுர சந்திர வித்தியா சேகரர் உழைப்பும் ஈண்டு குறிக்கற் பாலதே.

பம்பாய் அரசாங்கம் 1858-ல் தீண்டாமை விலக்க லில் கருத்துச் செலுத்தியது. எல்லா வகுப்பார்க்கும் பொதுவாகப் பள்ளிகள் அமைக்கப்பட்டன. மறுப்பெழும்

இடங்களில் அரசாங்க உதவி நிறுத்தப்பட்டது. அச் செயலும் அந்நாளில் சீர்திருத்த முயற்சிக்குத் துணை புரிந்து நின்றது.

பம்பாய் பிரார்த்தனை சபையும் (1867), பூனா சத்திய சமாஜமும் (1873) சிறந்த தொண்டாற்றின. அலிகர் கல்லூரி நல்ல சமயத்தில் (1875) காணப்பட்டது.

ஆரிய சமாஜமும் (1875) ஒரு சிறந்த சீர்திருத்த அமைப்பே. அதைக் கண்டவர் தயானந்த சரஸ்வதி. ஆரிய சமாஜம் பழைய வேதத்தையே பிரமாணமாகக் கொண்டது ; பின்னே தோன்றிய உபநிடதம், வேதாந்த சூத்திரம், பகவத்கீதை முதலியவற்றையும் பிரமாண மாகக் கொள்ளாதது ; பிறப்பில் உயர்வு தாழ்வு கருதா தது ; உருவ வழிபாட்டை ஏலாதது. ஆரிய சமாஜம், ஹிந்து மதத்தில் இடைக்காலத்தில் நுழைந்த கறைகளைக் கழுவ வந்ததென்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. அச்சமாஜம் நாளுக்குநாள் வளர்ந்தே வருகிறது. ஆரிய சமாஜம் அளித்த தேசபக்தர் லாலா லஜபதி ராய்.

தியோசாபிகல் சங்கம் பலவழியிலும் தொண்டு செய்து நாட்டுக்கு நல்லுணர்ச்சி யூட்டியது. அச்சங்கம் அமெரிக்காவில் (1875) தோன்றியது ; இந்தியாவில் வந்து நிலைத்தது (1882). அதன் தலைமை அமைப்பு, சென்னைக்கு அருகேயுள்ள அழகிய அடையாற்றில் இருக்கிறது. 'தியோசாபிகல்' சங்கம் பிளவட்ஸ்கி அம்மையாராலும் கர்னல் ஆள்காட்டாலும் காணப் பட்டது. முன்னவர் ருஷ்யர் ; பின்னவர் அமெரிக்கர். அச்சங்கம், உண்மை ஒன்றே என்றும், அவ்வோர் உண்மையே எல்லாச் சமயங்களிலும் வெவ்வேறு பெயர்

பெற்றுத் திகழ்கிறதென்றும், எவர்க்கு எச்சமயத்தில் விருப்பம் உண்டாகிறதோ அவர் அச்சமயத்தில் நின்றொழுகி உண்மை காணலாமென்றும், எச்சமயத்தையும் குறை கூறலாகாதென்றும் அறிவுறுத்துவது; சாதி மதம் நாடு நிறம் முதலியவற்றையெல்லாங் கடந்த அகில சகோதரநேயம் அச்சங்கத்தின் உயிர்க்கொள்கை. தியோசாபிகல் சங்கத்தை வளர்த்தவர் டாக்டர் அன்னி பெஸண்ட் அம்மையார். இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட பெருந்தலைவருள் அம்மையாரும் ஒருவர்.

மற்றுமொரு சங்கம் குறிக்கற்பாலது. அஃது இராமகிருஷ்ண சங்கம். அச்சங்க முதல்வர் இராமகிருஷ்ண பரமஹம்ஸர் (1834-1886). அவருக்கு மாணக்கர் பலர் இருந்தனர். அவருள் சிறந்தவர் விவேகானந்தர். விவேகானந்தரின் வேதாந்த ஞானமும், அநுபவமும், வீரமும், நாவன்மையும் பொதுவாக உலகுக்கு ஒளி வழங்கின என்றும், சிறப்பாக இந்தியாவைத் தட்டி எழுப்பின என்றும் கூறலாம்.

பண்டைநாளில் வேதாந்த உலகம் வீரஞ்செறிந்ததாயிருந்தது; இடைநாளில் அதனிடைக்கோழைமை புகுந்தது. கோழைமை புகுந்த வேதாந்த உலகில் பழைய வீரத்தை நுழைத்த பெருமை விவேகானந்தருக்கு உண்டு. பலவித மூடப் பழக்க ஒழுக்கங்களில் மதிபிழந்து சோம்பலால் மயங்கி மாசுணம் போல் திமிர் விட்டுக் கிடந்த இந்தியாவுக்கு வேதாந்தத்தால் புத்துயிர் வழங்கிய ஞானபானு விவேகானந்தராவர்.

விவேகானந்தரின் வேதாந்தம், வெறும் நிலையாமையைக் கூறி மக்களிடைச் சோம்பலை எழுப்புவதன்று.

அவர்தம் வேதாந்தம் இந்திய மக்களின் நாடி நரம்புக ளெல்லாம் எஃகாக்கும் ஆற்றல் வாய்ந்தது ; விடுதலை வேட்கை கொண்டு வீரத்துடன் எழுந்து தேசத் தொண் டாற்றுமாறு மக்களைத் தூண்டுவது ; உந்துவது. விவேகானந்தர் பேச்சிலே தேசபக்தி ததும்பி வழிதல் கண்கூடு. இலட்சம் பேர் சிறை சென்று எழுப்பும் தேசபக்தியை, விவேகானந்தரின் ஒரு பேச்சு எழுப்பி விடும். அவர் பெரிய தேசபக்தர்.

கிறிஸ்துவ சபைகளும், முஸ்லிம் கழகங்களும், பௌத்த சங்கங்களும், வேறு சில கூட்டங்களும் நாட் டின் கண்மூடி வழக்க ஒழுக்கங்களைப் போக்கப் பல வழியிலும் பாடுபட்டு வந்தன ; வருகின்றன.

இச்சங்கங்கள் யாவும் பெரிதும் சமயத் துறையி லிறங்கியே தேச சேவை செய்தன. வேறு துறைகளில் சேவை செய்யவும் சில சங்கங்கள் தோன்றின. அவை : வங்காள பிரிட்டிஷ் இந்திய சங்கம், பம்பாய் சங்கம், சென்னை சுதேசி சங்கம், பூனா சர்வஜன சங்கம் முதலியன.

## வங்காளம்

பிரிட்டிஷ் ஆட்சியில் எழுந்த இந்தியச் சுயராஜ்யக் கிளர்ச்சியை ஆராய்ந்தால், அதனை நாட்டில் எழுப்பி, நாட்டுக்கு வழிகாட்டிய மாகாணம் வங்காளம் என்று சரித்திர உலகம் கூறும். நாட்டு உணர்ச்சி, சுதேசிய எழுச்சி, சுயராஜ்யக் கிளர்ச்சி முதலியன முதல் முதல் தோன்றிய இடம் வங்காளம என்று எவருங் கூறுவர். விடுதலைக்கு உழைத்துவரூஉங் காங்கரஸ் விதை விழுந்த இடம் வேறாயினும், அதற்குரிய முயற்சி அரும்பிய இடம் வங்காளமாகும். பலவற்றிற்கும் வங்காளம் முன்னிற்க

நேர்ந்தமைக்கு என்ன காரணம் கூறலாம்? வங்காளத் தலைநகராகிய கல்கத்தா, முன்னாளில் நாட்டின் தலைநகராக விளங்கியதைச் சிறந்த காரணமாகக் கூறலாம். இந்திய அரசாங்கத்தின் தலைமைப்பீடம் கல்கத்தாவிலிருந்தமை யால், எதிலும் வங்காளம் முன்னிற்க நேர்ந்திருக்கலாம். தொடக்கத்தில் ஆங்கில மயக்கில் வங்காளிகளைப்போல விழுந்தவர்கள் இல்லை; பின்னை அம்மயக்கத்தினின்றும் விடுதலையடைய அவர்களைப்போல முனைந்தவர்களும் இல்லை. நன்மையோ தீமையோ எதுவும் தலைநகரத்தில்வேர் கொள்வது இக்கால நாகரிகத்தின் முறைமை போலும்!

வங்காளத்தில் நாட்டுணர்ச்சிக் காற்று மிக மென்மை யாக வீசியபோது நாட்டில் சில நிகழ்ச்சிகள் உற்றன. அவை முல்ஹூர ராவ் கயிக்வார் தள்ளப்பட்டமை, வாபி தலைவர் அமீர் அலி விசாரணை, கல்கத்தாவில் ஜஸ்டிஸ் நார்மேன் கொலை, சுரேந்திரநாத் பானர்ஜி வேலையி னின்றும் விலக்கப்பட்டமை முதலியன. அந்நிகழ்ச்சிகள் வங்காளத்தைத் தட்டி எழுப்பின; வங்காளம் நாட்டைத் தட்டி எழுப்பியது.

சுரேந்திரநாத் பானர்ஜி விலக்கல் ஆண்டவன் அரு ளால் நிகழ்ந்ததென்றே நாட்டவர் கொண்டனர். சிலர் வாழ்க்கையில் முதலில் மாறுபாடு நிகழ்ந்து பின்னை ஒழுங்கு ஏற்படுவதுண்டு. அதற்குச் சுரேந்திரநாதர் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டு. சுரேந்திரர் கல்வி அறி வுடையவர்; அரசியல் ஞானி; தேசபக்தர்; நாவன்மை யுடையவர். இத்தகைய ஒருவர் அரசாங்க ஊழியம் என்ற வலையில் ஏன் சிக்குறல் வேண்டும்? பானர்ஜி தமது இயல்புக்கு மாறுபட்ட துறையிலிறங்கினர். இயற்கை

அவரை எடுத்து அவர்தம் இயல்புக்குரிய துறையில் இறங்கச் செய்தது. சுரேந்திரர் விலக்கல் நாட்டுக்கு நன்மையாக முடிந்தது. அவர் பேச்சாலும் உழைப்பாலும் இந்திய நாடு அடைந்த முன்னேற்றத்தை இமயம் அறியும் ; விந்தியம் அறியும். அது கங்கைக்குத் தெரியும் ; கோதாவரிக்குத் தெரியும்.

சுரேந்திரநாதர் காங்கரஸ் மேடை சென்று அமர்ந்ததும் மக்களின் கண்ணும் கருத்தும் அவர் மீதே படியும். அவர் வாய் பொழிந்த சொல்லருவிகளிற் பிறந்த மின்னொளிகள் பன்முகங்கொண்டு நாட்டின் நாலுபக்கமும் விளங்கிக் கான்றிக் கான்றி அடிமை இருளைப் போக்கிய மாண்பை என்னென்று வருணிப்பது ? சுரேந்திரநாதரைப் போன்ற நாவலரை இனி இந்தியா மட்டும் அன்று - உலகம் காணுமா என்பது ஐயம்.

பொதுக்கூட்டத்தில் சுரேந்திரநாத் பானர்ஜி முதல் முதல் ‘ சீக்கியர் எழுச்சி ’, ‘ இதலி - அயர்லந்து இளைஞர் இயக்கங்கள் ’ முதலிய பொருள்களைப்பற்றிப் பேசி, இந்தியாவின் விடுதலையைக் குறித்து இளைஞர்கள் உள்ளத்தில் வேட்கைத்தீ மூட்டினர். வங்க நாவலரின் வீரப் பேச்சை - கோடையிடியும் நடுக்குறும் முழக்கத்தைக் கேட்க இளைஞர்கள் ஆயிரக்கணக்கில் திரண்டு ஈண்டுவார்கள். இளைஞர்களிடைப் புத்துணர்ச்சி பிறந்தது ; சுயராஜ்யக் காதல் எழுந்தது. சுரேந்திரர் பேச்சும், இளைஞர்கள் ஊக்கமும் பெருகி வளர்ந்து இந்தியச் சங்க அமைப்பாக உருக்கொள்ளலாயின.

இந்தியச் சங்கத் திறப்பு விழா நிகழ்த்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அதற்கெனக் குறிப்பிட்ட நாளில்

சுரேந்திரரின் அருமைப் புதல்வர் இன்னுயிர் துறந்தார். உறவினர் பலரும் மற்றவரும் கண்ணீருங் கம்பலையுமாகத் துக்கத்தில் மூழ்கிக் கிடந்தனர். அந்நிலையில் இந்தியச் சங்கத் திறப்பு விழாவுக்கென்று கூட்டம் கூடிவிட்டது. அப்பொழுது விழா நடாத்தும் கூட்டத்தாரிடமிருந்து சுரேந்திர நாதருக்கு ஒரு செய்தி வந்தது. அதில், 'சுரேந்திரர் வருகை அவசியம்; இல்லையேல் சங்கம் அமையாது; இடர் நேரும்' என்று குறிக்கப்பட்டிருந்தது. அதைக் கண்ட வங்க நாவலர், மக்கள் வேண்டுதலுக்கு இணங்கிச் சங்கத் திறப்பு விழா நடாத்தினர். பானர்ஜியின் தேசபக்தியை என்னென்று கூறுவது ?

வங்கச் சிங்கம் தன் மாகாணத்தளவில் நிற்கவில்லை. அது மற்ற மாகாணங்களிலும் பாய்ந்தது; இந்தியாவின் வடக்கு, மேற்கு, தெற்குப் பகுதிகளிலெல்லாம் சென்று சென்று கர்ச்சித்தது. நாடு விழித்தது; நாட்டில் பேரூக்கம் எழுந்தது. சென்னையில் 'மகாஜன சபை' தோன்றிற்று; பம்பாயில் 'மாகாண சபை' தோன்றிற்று; வங்காளத்தில் அரசியல் மகாநாடுங் கூடிற்று.

## தேசீய சங்கம்

இன்னோரன்ன முயற்சிகளெல்லாம் திரண்டு 'இந்தியத் தேசீய சங்கம்' (இந்தியன் நேஷனல் யூனியன்) ஆகி 1884-ல் உருக்கொண்டன. அதற்கென்று சில நோக்கங்கள் தற்காலிகமாகச் செப்பஞ் செய்யப்பட்டன. அந்நாளில் சிறந்து விளங்கிய ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு துணைக்கூட்டம் அமைக்கப்பட்டது. அகில இந்தியாவுக்கென்று ஒரு பெரும் அரசியல் அமைப்பிருத்தல்

வேண்டுமென்று இந்தியாவிலும் இங்கிலாந்திலும் முயன்றவர் அறிஞர் ஹியூம் என்பவர்.

அச்சமயம் 1884-ல் அடையாற்றில் தியோசாபிகல் சங்கச் சார்பில் நடைபெற்ற மகாநாட்டுக்கு இந்தியாவின் நாலு பக்கங்களினின்றும் போந்த பிரதிநிதிகளிற் சிலர், திவான் பஹதூர் ரகுநாத ராவ் வீட்டில் அகில இந்தியாவுக்கென்று ஒரு பெரும் அரசியல் கழகந் தேவை என்று ஆலோசித்தனரென்றுந் தெரிகிறது.

## காங்கரஸ்

ஹியூம் முயற்சியுடன் வேறு சிலர் ஊக்கமுஞ் சேர்ந்தது. அச்சேர்க்கையின் பயனாக 1885-ம் ஆண்டில் பம்பாயில் உமேச சந்திர பானாஜியின் தலைமையில், 'இந்திய நாஷனல் யூனியன்' என்ற பெயரால் கூட விருந்த 'கான்பரன்ஸ்', 'இந்திய நாஷனல் காங்கரஸ்' என்ற பெயரால் கூடிற்று. நோக்கங்களும அமைப்பு முறைகளும் ஒழுங்கு செய்யப்பட்டன. சில தீர்மானங் களும் நிறைவேற்றப்பட்டன. இரண்டாவது காங்கரஸ் 1886-ல் கல்கத்தாவில் தாதாபாய் நௌரோஜியின் தலைமையில் நடைபெற்றது. மூன்றாவது காங்கரஸ் 1887-ல் சென்னையில் பத்ருடீன் தயாப்ஜியின் தலைமை யில் கூடிற்று. மூன்று தலைநகரங்களில் நடைபெற்ற காங்கரஸ் நிகழ்ச்சிகள் இந்திய மக்களின் உணர்ச்சியை எழுப்பிவிட்டன. ஆண்டுதோறும் காங்கரஸ் ஒவ்வொரு நகரிலே கூடிக்கூடி இந்தியாவில் அரசியல் ஞானத்தையும், விடுதலை வேட்கையையும் பெருக்கி வந்தது. இப்பொழுது

சில ஆண்டாகக் கிராமங்களில் காங்கரஸ் கூடிவருகிறது. நகரங்கள் கிராமங்கட்குச் செல்வதால் முன்னே இழந்த பழைய உரிமைமீது மக்களின் கருத்துப் படியலாம்.

## காங்கரஸின் பொதுமை

காங்கரஸ் ஒரு சாதிக்கோ ஒரு மதத்துக்கோ ஒரு மாகாணத்துக்கோ உரியதன்று. அது சாதிமதம் முதலியவற்றைக் கடந்தது; இந்தியர் அனைவர்க்கும் உரியது; இந்தியாவின் விடுதலைக்கு உழைப்பது. முழு உரிமைப்பேறு அதன் குறிக்கோள். காங்கரஸின் தோற்றுவாயை உன்னுங்கள். உண்மை விளங்கும். முதல் காங்கரஸ் தலைவர் ஒரு கிறிஸ்துவர்; இரண்டாவது காங்கரஸ் தலைவர் ஒரு பாரஸீகர்; மூன்றாவது காங்கரஸ் தலைவர் ஒரு முஸ்லிம். காங்கரஸில் ஹிந்துக்களும் தலைமை வகித்திருக்கிறார்கள். கருணை மேலீட்டால் இந்தியாவின் உரிமை நாடிக் காங்கரஸ் சேவைசெய்த ஐரோப்பிய சகோதரருமுளர். காங்கரஸ் தந்தை என்று போற்றப்படும்ஹியூம் ஓர் ஐரோப்பியரே. யூல், காட்டன், வெடர்பர்ன், அன்னிபெஸண்ட் ஆகியவர் தலைமையிலும் காங்கரஸ் நடைபெற்ற காலமுண்டு. பிராட்லா, நார்டன் முதலியோர் செய்த சேவை என்றும் மறக்கற்பாலதன்று. காங்கரஸ் வகுப்புணர்வு கடந்த ஓர் அரசியல் கழகமாகவே தொண்டாற்றி வந்தது. வகுப்புணர்வு கடந்த அரசியல் கழகமாகிய காங்கரஸில் சில ஆண்டாக வகுப்பு நாற்றம் வீசி வருகிறது. அதனால் காங்கரஸுக்குக் கேடே விளையும்; அதை நீக்கத் தேச பக்தர்கள் உடனே முயலல் வேண்டும்.

## ஓரினம்!

தொடக்கத்தில் இந்திய மக்கள் தங்கள் தங்கள் சாதி மத வேற்றுமை யுணர்வை மறந்து ' இந்தியர் ஓர் இனத்தவர் ' என்ற உணர்வுடையவர்களாய்க் காங்கரஸில் நின்று விடுதலைக்கு உழைக்க முன்வந்ததைக் கருதி இந்தியப் பத்திரிகைகள் பலவும் மகிழ்ச்சியுற்றன ; மற்றப் பத்திரிகைகள் பலவும் வயிறெரிந்தன. ' லண்டன் டைம்ஸி'ன் பம்பாய் நிருபர் தந்திரமாக, 'உலகம் தோன்றிய நாள் முதல் இந்தியர் ஓரினத்தவராகக் கூடி உறவு கொண்டதுண்டோ? இப்பொழுது ஓரினத்தவராகக் கூடியுள்ளனர் ' என்னுங் கருத்துப்பட எழுதி விடுத்தனர். அவர் தங் கருத்தென்ன? பிரிட்டிஷ் ஆட்சியின் மாண்பு என்பது அவர் தங் கருத்து. பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் இருந்த ஆட்சி நாட்டவரால் நடத்தப்பட்டது. அது நாட்டாட்சி ; சுயராஜ்யம்; சுயராஜ்யத்தில் சுயராஜ்யக் கிளர்ச்சி எற்றுக்கு எழும்? அந்நாளில் காங்கரஸ் போன்றதோர் அமைப்புத் தேவையில்லாமலுமிருந்தது. அவ்வாட்சியில் நாட்டுப் பொருள் பிறநாட்டவரால் சுரண்டப்படவில்லை ; மக்கள் பட்டினிக்கும் பஞ்சத்துக்கும் இரையாகவில்லை. இவை ' டைம்ஸ் ' நிருபருக்குத் தெரியாதிருந்தன போலும்! குறைபாடு உள்ள இடத்தில் முறையீட்டுக்காக மக்கள் ஒருமைப்படுதல் இயல்பே.

## ஆங்கில மொழி

ஆங்கில ஆட்சியில் உற்ற குறைபாடுகள் மக்களின் முறையீட்டைக் கிளப்பின. குறைபாடுகளையும் விடுதலை வேட்கையையும் ஒன்றிய குரலில் முறையிடத் துணை புரிந்தது ஆங்கில மொழி என்று யான் கூறுவேன்.

ஆங்கிலக் கல்வி இந்தியாவின் மக்களைக் காங்கரஸ் மேடையில் ஒன்றுபடச் செய்தது. இவ்வொருமைப்பாட்டை உட்கொண்டே ராஜாராம் மோஹன்ராய், மெக்காலேயுடன் கலந்து கட்டாய ஆங்கிலத்தை முன்னரே வலியுறுத்தினர் போலும்.

'இந்திய நாஷனல் காங்கரஸ்' என்பது ஆங்கிலப் பெயர். அந்நாளில் ஆங்கிலத்திலேயே நாட்டமைப்பின் பெயர் சூட்டப்பட்டது. அப்பொழுது காங்கரஸ் மேடையில் காந்தியடிகள வீற்றிருந்தால் 'ஹிந்தி'ப் பெயர் சூட்ட முயன்றிருப்பர்; வேறு ஒருவர் 'சமஸ்கிருதம்' என்றிருப்பர்; இன்னொருவர் 'அராபி' என்றிருப்பர். பெயர்ப் போரே பெரும்போராய் மூண்டிருக்கும். 'காங்கரஸ்' தந்தை ஆங்கிலர். அதனால் காங்கரஸ் பெயர் ஆங்கிலத்தில் அமைய நேர்ந்ததோ என்னவோ தெரியவில்லை. இனிக் கூடுங் காங்கரஸ்களில் 'காங்கரஸ்' பெயரை மாற்றவும் சில இளைஞர் முற்படினும் படுவர். காளை நாகரிகம் வாளா கிடக்குமோ? அதன் இயல் கலகம் எழுப்புவதன்றோ? இப்பொழுது உலகில் இயங்குவது எந்நாகரிகம்? காளை நாகரிகமென்பது கண்கூடு. பண்டை இந்தியருடையது குழந்தை நாகரிகம். அதை அழிக்க இடைக்கால இந்தியா முயன்றது. அதனால் என்ன விளைந்தது? தற்கால இந்தியா காளை நாகரிகத்தால் மோதுண்டு இடர்ப்படுவதேயாகும். இது பற்றிய விரிவுரை இங்கே வேண்டுவதில்லை.

## அரசாங்கம்

காங்கரஸ் உருக்கொள்ளுதற்கு முன்னரே அதன் தந்தையாகிய ஹியூம், அதன் நோக்கங்களைப்பற்றி இந்தி

யாவிலும் பிரசாரஞ் செய்தார்; இங்கிலாந்திலும் பிரசாரஞ் செய்தார். அவர் அப்பொழுது இராஜப்பிரதிநிதியாயிருந்த லார்ட் டப்ரினைக் கண்டு, காங்கரஸ் நோக்கங்களை விளக்கி, மாகாண கவர்னர்களைத் தலைமை வகிக்குமாறு செய்தால் நலன் விளையும் என்று ஆலோசனை கூறினராம். லார்ட் டப்ரின், இந்தியப் பிரதிநிதிகளால் தெரிந்தெடுக்கப்படுவோர் தலைமை வகிப்பதே நியாயம் என்று பதிலிறுத்தனராம். லார்ட் டப்ரின் ஒரு போது காங்கரஸுக்கு ஆசி கூறினர்; மற்றொருபோது அதன் நிலைமையை வெளியிடுங்கால் 'மிகச் சிறுபான்மையோர் இயக்கம்' என்று எள்ளினர். காங்கரஸைப்பற்றிப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஒவ்வொரு போது ஒவ்வொரு விதக் கருத்துடையதாயிற்று. அது காலநிலை தேசநிலை முதலியவற்றைப் பொறுத்தது.

1886-ல் கல்கத்தாவில் கூடிய காங்கரஸ் பிரதிநிதிகளை, லார்ட் டப்ரின் 'தலைநகரத்துக்கு வந்த பெரிய மனிதர்கள்' என்ற முறையில் தமது மாளிகையில் வரவேற்றனர். காங்கரஸ் முதல் முறை 1887-ல் சென்னையில் கூடியபோது, அப்பொழுது சென்னைக் கவர்னராயிருந்த லார்ட் கன்னிமரா, பிரதிநிதிகட்கு ஒரு பெரிய விருந்தளித்தனர். 1888-ல் அலகபாத்தில் காங்கரஸ் சேர்தற்கே இடம்பெறாது தவிக்கும்படி அதிகாரவர்க்கம் சூழ்ச்சி செய்தது. 'காங்கரஸ் அநாதையைப்போலத் தெருவில் அலைகிறது' என்று 'பயோனியர்' எழுதி நகைத்தது. 1914-ல் சென்னையில் நடைபெற்ற இருபத்தொன்பதாவது காங்கரஸ் மேடையில் கவர்னர் லார்ட்பெண்ட்லண்ட் வரவேற்கப்பட்டனர். 1915-ல் பம்பாயில் அரசாங்க

ஊழியர் எவரும் காங்கரஸ் பந்தருக்குள்ளும் போதலாகா தென்ற கட்டளை பிறந்தது. லார்ட் கர்ஸனுக்குக் காங்கரஸ் நஞ்சாகத் தோன்றியது. லார்ட் இர்வினும் லார்ட் வில்லிங்டனும் காங்கரஸ் கிளைகள் பலவற்றைச் சட்ட வரம்பு மீறிய அமைப்புக்களென்று அறிக்கை பிறப்பித்ததை உலகறியும். இன்னுஞ் சில நிகழ்ச்சிகளுண்டு.

## வளர்ச்சி

பலதிற இடுக்கண்களிடைக் காங்கரஸ் வளர்ந்தே வந்தது. அது மணி விழாவையுங் கண்டது. காங்கரஸ் வளர்ச்சித் திறங்களைக் காங்கரஸ் வரலாறுகளிற் பார்க்க. அன்னிபெஸண்ட் அம்மையாரால் ஒரு நூல் (How India wrought for freedom) தொகுக்கப்பட்டது. அதன்கண் காங்கரஸ் வளர்ச்சித் திறங்கள் நிரலே விளங்கக் கூறப்பட்டுள்ளன.

காங்கரஸின் பாங்கு என்றும் ஒரு பெற்றியதா யிருந்ததில்லை. அரசியல் அமைப்பு எங்ஙனம் என்றும் ஒரு பெற்றியதா யிலங்கும்? அரசியல் சதுரங்கம் போன்றது; காலத்துக்குக் காலம் மாறுந் தன்மையது. காங்கரஸ் ஓர் அரசியல் அமைப்பாதலின், அது தொடுத்த விடுதலைப் போர்முறை என்றும் ஒரு தன்மையதா யிருத்தல் அரிதாயிற்று. முறையில் இடையிடை மாறுதலுற்றே வந்தது. அம் மாறுதல்களை வகைப்படுத்திக் கூறவேண்டுவதில்லை; தொகைப்படுத்திச் சில கூறுதல் சாலும். முதலாவது சில படிகளைக் குறித்துக்கொள்வது நல்லது.

முதல் காங்கரஸ் தொட்டுப் பதினெட்டாவதுவரை பெரிதும் ஒரே முறை கொள்ளப்பட்டது; பத்தொன்பது

தொட்டு இருபத்து மூன்றுவரை முறையில் மாறுதல் ஏற்பட்டே வந்தது ; இருபத்துமூன்று - நான்கு முதல் இருபத்தெட்டுவரை ஏறக்குறைய பழைய முறையே கையாளப்பட்டது ; இருபத்தொன்பது முதல் முப்பத்து நான்குவரை பழையமுறை ஒதுங்கியே நின்றது ; முப்பத்துநான்கிலிருந்து நாற்பத்தைந்துவரை ஏற்கப் பட்ட முறை வேறு ; நாற்பத்தைந்திலிருந்து இன்றுவரை பிறிதொருமுறை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. இம் முறைப்பாடுகளை உளங்கொண்டு விடுதலைப் போர் எப்படிப் படிப்படியே வளர்ந்தது என்பதன்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம்.

## 1—18

### தலைவர்கள் கருத்துக்கள்

முதல் காங்கரஸ் தொட்டுப் பதினெட்டாவது வரை காங்கரஸில் என்னென்ன நிகழ்ந்தன ? ஒவ்வோராண்டும் ஒவ்வோரிடத்தில் கூடிய காங்ரஸுக்கு நாட்டின் நாலு பக்கங்களிலிருந்தும் பிரதிநிதிகளும் மற்றவர்களும் வருவதும் போவதும், தலைவர் முன்னுரை முடிவுரை களும், தீர்மானங்கள் நிறைவேற்றமும், அவற்றை யொட்டித் தலைவர்கள் பேசிய பேச்சுக்களும், நிகழ்ச்சி களைப் பத்திரிகைகள் பரப்புவதும், இன்ன பிறவும் நாட்டுக்குப் புத்துணர்ச்சியை ஊட்டி வந்தன. அரசாங்க மும் காங்கரஸ் நடைமுறைகளைக் கவனித்தே வந்தது. ஆங்கிலோ இந்தியப் பத்திரிகைகள் காங்கரஸைத் தாக்கியே வந்தன.

ஒவ்வோராண்டும் பலவகைத் தீர்மானங்கள் நிறை வேற்றப்படும். அவற்றுள் சிறந்தன சட்டசபையைப்

பெருக்கல், அச்சபை இல்லாத இடங்களில் அதை உண்டாக்குதல், இராணுவச் செலவைக் குறைத்தல், ஆயுதச் சட்ட விலக்கல், நீதி நிர்வாகத்தைப் பிரித்தல் முதலியவற்றைப் பற்றியவை. அத்தீர்மானங்கள் பெரிதும் ஒவ்வொரு காங்கரஸிலும் வலியுறுத்தப்பட்டவை. அவற்றுள் தலையாயது சட்டசபைத் தீர்மானம். சட்டசபையில் ஜனப்பிரதிநிதிகள் தொகை பெருகினால் மற்றக் குறைபாடுகளையெல்லாம் எளிதில் போக்கலாமென்பது அந்நாளைய தலைவர்களின் நம்பிக்கை. அத்தலைவர்கள் கருத்துக்களில் இரண்டொரு குறிப்பு வருமாறு :—

'......பிரிட்டன் சுதந்திரத்துக்கும் ஜனநாயக ஆட்சிக்கும் தாயகம் என்ற உண்மை உணர்ந்தே நாம் பிரிட்டிஷ் குடிமக்கள் என்று பெருமை பேசியும், நமது பழைய சுதேச ஆட்சியினிடத்துப் பூண்டிருந்த அன்பைக் காட்டிலும் இந்த அந்நிய ஆட்சியினிடத்தில் ஆழ்ந்த அன்பு பூண்டும் வருகிறோம். நாம் பிரிட்டனின் குடிமக்களாக இருத்தலால் அதன் சுதந்திரத்திலும் ஜனநாயகத்திலும் நமக்கும உரிமை உண்டு. அவ்வுரிமையையே நாம் கேட்கிறோம். அரச அறிக்கையின்படி நாம பிரிட்டிஷ் குடிமக்களே. பிரிட்டிஷ் குடிமக்களுக்குரிய உரிமையை விழைகிறோம்...........'

'நமது விழுமிய குறிக்கோள் என்ன என்பதை அச்சமின்றித் தெளிவுசெய்து காட்டவேண்டுவது இந்தியக் காஙகரஸின் கடமை. நம் விருப்பம் உடனே நிறைவேறுகிறதோ இல்லையோ அதைப்பற்றிய கவலை வேண்டுவதில்லை. நமது வேட்கை என்ன என்பதை ஆள்வோர் உணர்வாராக. இந்திய ஆட்சி இங்கிலாந்தினின்றும் இந்தியாவுக்கு மாற்றப் பெறல் வேண்டும். இந்தியா மந்திரியும் பார்லிமெண்டும் மேற்பார்வை செலுத்தி வரலாம். இந்திய ஜனப்பிரதிநிதிச்

சபையால் வரி ... பெறல் வேண்டும்; சட்டஞ் செய்யப்பெறல் ... இது நமது குறிக்கோள்' — தாதாபாய் (மு... காங்கரஸ்)

'நமக்குத் ... உண்டு; மனக்குறைகள் உண்டு. அவற்றை எ... க்கொள்வது? நாம் விரும்பும் முறையில் சட்ட... மைப்பு மாறினலன்றி எத்துன்பத்தையும் எக்குறை... போக்கிக்கொள்ளல் இயலாது... இதாலியின் உரி... ரீஸின் உரிமைக்கும்இங்கிலாந்து அநுதாபங் கா... டுபட்டது. நாம் இதாலியரு மல்லர்; கிரேக்கரு... ர். நாம் அவர்களினும் உறவு உடையவா; ... ஷ் குடிமக்கள்.........ஆதலால் பிரதிநிதித்துவ ... நமக்கு நல்குமாறு பிரிட்டனைக் கேட்கிறோம.'

...ரந்திரநாதர் (மூன்றாங் காங்கரஸ்)

இப்பேச்சுக்... ங்குவதென்னை? அந்நாளைய காங்கரஸ், சட்ட... நின்றே கிளர்ச்சி செய்த தென்பதும், பிரிட்... டர்புகொண்ட விடுதலையையே வேட்டு நின்றதென்... விளங்குதல் காண்க.

## அடக்குமுறை

அடிமை நாட்டில் ... றுந் தீர்மானங்கள் விடுதலை வேட்கையை ஓரள... ப எழுப்பும். அவ்வேட்கையை வீறுடன் எழுப்ப... வேறொன்றுண்டு. அஃது அடக்குமுறை. ப... ண்டுக்குள் ஏதேனும் அடக்கு முறை நிகழ்ந்த... என்று பார்த்தல் வேண்டும். அடக்குமுறை அ... முமில்லை. மஹாராஷ்டிரத்தில் அடக்குமுறை ... ந்தது. மஹாராஷ்டிரத்தைப் 'பிளேக்' துன்புறுத்... து, அங்கே அதிகாரிகளின்

நடைமுறை வரம்புமீறிச் சென்றதென்று மக்களால் கருதப்பட்டது. மக்களிடைக் கொதிப்புண்டாயிற்று. 'பிளேக் கமிட்டி'த் தலைவர் கொல்லப்பட்டனர். கொலை செய்தவர் எவரோ? குழப்பத்தை முன்னிட்டுப் பால கங்காதர திலகரும் மற்றுஞ் சிலரும் சிறைத் தண்டனை விதிக்கப்பெற்றனர். தண்டப் போலீஸ் நிறுத்தப்பட்டது. பாலகங்காதர திலகர் சிறைத்தண்டனை மஹாராஷ்டிரத்தை எழுப்பியது. அது காங்கரஸை ஒருபடி ஏறச்செய்தது. திலகர் பெருமானது சிறைத் தண்டனை விடுதலைப் போருக்குக் கால்கொண்டதென்க.

## 19—23

### லார்ட் கர்ஸன்

காங்கரஸ் பதினெட்டாண்டாகப் பள்ளிப் பிள்ளை போல விடுதலைக் கல்வியைப் பயின்று வந்தது; பத்தொன் பதில் உற்ற வயதடைந்தது; விடுதலைக் கல்வியின் பயனை உணரலாயிற்று; தன்னாட்சியே நாட்டுக்கு விடு தலை நல்குவது என்ற தெளிவு பெற்றது; அதற்கென்று உழைக்கவும் புகுந்தது.

காங்கரஸ் உழைப்பால் நான்காண்டில் அதனிடை ஒரு பெரும் புரட்சி உண்டாயிற்று. எங்கணும் தேச பக்தி கொழுந்துவிட் டெரிந்தது; நாடு புத்துயிர் பெற் றெழுந்தது. காங்கிரஸில் ஒரு புது யுகம் பிறந்ததென்றே கூறலாம்.

விடுதலைப் போருக்கு மஹாராஷ்டிர அடக்குமுறை கால்கொண்டது; வங்காள அடக்குமுறை கோட்டை எழுப்பிற்று. இதற்குத் துணை புரிந்த லார்ட் கர்ஸனை

நாடு என்றும் மறத்தலாகாது. லார்ட் கர்ஸன் என்ற ஒருவர் பிரிட்டனில் பிறந்து வளர்ந்து இந்தியாவில் இராஜப்பிரதிநிதியாக வாராதிருப்பரேல் காங்கரஸ் விடுதலைப் போருக்குரிய கோட்டையாய் விரைந்து எழும்பி இராது.

அடிமை நாட்டுக்கு அடக்குமுறை வேண்டும் என்று மேலே கூறினேன். அவ்வடக்கு முறையைக் கையாள்வதற்குக் கர்ஸன் போன்றார் தேவை என்று இங்கே சொல்கிறேன். லார்ட் பேண்டிக், லார்ட் ரிப்பன் முதலியோர் இந்திய நண்பரென்று போற்றப்படுகின்றனர். அவரெல்லாரும் அமைதி நேயர். அவரால் நாட்டுக்கு விளைந்த நலன்கள் சிலவே. லார்ட் லிட்டன், லார்ட் கர்ஸன், லார்ட் சேம்ஸ்பர்ட், லார்ட் வில்லிங்டன் முதலியோர் அடக்குமுறை நேயர். அவரால் இந்தியாவுக்கு விளைந்த நலன்கள் பல. அடிமை நாட்டில் முன்னவர் போன்றார் செயலால் விடுதலை யுணர்வு எழாது; பின்னவர் போன்றார் செயலால் விடுதலை யுணர்வு எழும். அடிமை நாட்டை அடக்குமுறையால் ஆளப்புகுவோரே அந்நாட்டுக்கு விடுதலை வேட்கையை எழுப்புவோராகிறார். ஆதலின், அவரும் நன்றிக்கு உரியர் என்க.

லார்ட் கர்ஸன் ஆட்சி ஜனநாயகத்துக்கு மாறுபட்டது. அவர்தம் ஆட்சியில் எதேச்சாதிகாரமே மிகுந்திருந்தது. பொதுஜன நோக்கத்தைப் பொருட்படுத்தி நடக்கும் பிரிட்டிஷார் இயல்பு லார்ட் கர்ஸனிடத்திலில்லை. அவர்தம் எதேச்சாதிகாரச் செயல்கள் அவ்வப்போது ஜனத்தலைவர்களால் மறுக்கப்பட்டே வந்தன. மறுப்புக்களை மதித்து நடக்க அவர் மனங்கொண்டாரில்லை.

லார்ட் கர்ஸன் தொடக்கத்திலேயே கல்கத்தா கார்ப்பரேஷன் அமைப்பில் கைவைத்தனர்; கல்விப் பெருக்கைக் குறைக்கும் நோக்குடன் சர்வகலாசாலைச் சட்டஞ் செய்தனர்; உத்தியோகஸ்தர் இரகசியச் சட்டம் நிறுவினர்; இந்திய மக்கள் வாய்மை நலம் உணராதவர் என்று பல்கலைக்கழக விழாவில் அவதூறு பேசினர்; விக்டோரியா மகாராணியாரின் அறிக்கைக்கு வெவ்வேறு பொருள் கூறினர். இவை யாவும் இந்தியர் உள்ளத்தைப் புண்படுத்தின. இப் புண்ணில் வங்காளப் பிரிவினை என்னும் புளி அவராலேயே பெய்யப்பட்டது. அப்'பிரிவினை' இந்தியாவைக் கலக்கிக் கலக்கிவிட்டது; எங்கணும் ஒரே கூக்குரலை எழுப்பியது. பெரும்புயல் வீசிற்று. லார்ட் கர்ஸன் காது செவிடுபட்டது; மூளை கலங்கிற்று. அந்நிலையில் 1905-ல் லார்ட் கர்ஸன் தமது பதவியினின்றும் விலகி இங்கிலாந்துக்கு ஓடினர்.

### வங்காளப் பிரிவினை நோக்கம்?

லார்ட் கர்ஸனின் எதேச்சாதிகாரச் செயல்களுள் தலையாயது வங்காளப் பிரிவினை. அப்பிரிவினையில் அவர் தலையிட்டபோதே இந்தியத் தலைவர் பலர் அவருக்கு எச்சரிக்கை வழங்கினர்; காங்கரஸும் எச்சரிக்கை செய்தது. எச்சரிக்கைகளை லார்ட் கர்ஸன் பொருட்படுத்தாமல் தாம் நினைந்ததைச் செய்தே முடித்தனர். லார்ட் கர்ஸன் வங்காளப் பிரிவினையைப் பிடிவாதமாக நிறைவேற்றியதன் உள்ளக்கிடக்கை என்னை? வங்காள ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுபட்டுச் சுயராஜ்யக் கிளர்ச்சி செய்துவருவதற்குக் கேடுசூழ வேண்டுமென்பது லார்ட் கர்ஸன் உள்ளக்கிடக்கை. இதற்கு அவர் பேச்சே

சான்றாக நிற்கிறது. கிழக்கு வங்காள முஸ்லிம்களிடை லார்ட் கர்ஸன் நிகழ்த்திய ஒரு சொற்பொழிவில், அவர் பிரிவினைத் திட்டம் முஸ்லிம் மாகாணம் ஒன்றை உண்டு பண்ணும் நோக்குடையதென்றும், அங்கே முஸ்லிம் களுக்கென்று நலன்கள் செய்யப்படுமென்றும், அவற்றால் இஸ்லாம் சிறக்க வழியுண்டாகுமென்றும் குறிப்பிட்டனர். இதைவிட வேறு சான்று வேண்டுவதில்லை.

## சுயராஜ்யக் கிளர்ச்சி

காங்கரஸ் சுயராஜ்யத்துக்கென்று பாடுபடுவது. சுயராஜ்யத்துக்குத் தூண்போன்றது ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை. அவ்வொற்றுமை குலையக் காங்கரஸ் பார்க் குமா? விடுமா? காங்கரஸ் கிளர்ச்சியிலிறங்கியது. கிளர்ச்சி வளர்ந்த விததைப் பார்ப்போம்.

1903-ல் சென்னையில் லால் மோஹன் கோஷ் தலை மையில் கூடிய பத்தொன்பதாங் காங்கரஸிலேயே லார்ட் கர்ஸன் எதேச்சாதிகாரம் மறுக்கப்பட்டது. தீர்மானத் தளவில் மறுப்பு நிகழ்த்துவது பிரதிநிதிகள் சிலருக்குப் பிடியாமற் போயிற்று. 'என்ன! வெறுந் தீர்மானம்; வெறும் பேச்சு' என்று அவர்கள் முணுமுணுத்தார்கள். அவர்களிடைக் காங்கரஸ் கொள்கையில் சில மாறுதல் நிகழ்தல் வேண்டுமென்ற வேட்கை எழுந்தது. அது வெள்ளிடைமலையெனத் தலைவர்கட்கு விளங்கலாயிற்று. அவ்வேட்கை 1904-ல் பம்பாயில் ஸர் ஹென்றி காட் டன் தலைமையில் கூடிய காங்கரஸில் பெருகியே நின்றது. காங்கரஸில் புத்துணர்வும் புதுச்சக்தியும் பிறந்து வளர்ந்து வருதல் உலகுக்கு நன்கு புலனாயிற்று.

காங்கரஸுக்குள் பழங்கட்சி புதுக்கட்சி என்ற இரண்டு தோன்றுதற்குரிய குறிகளும் புலப்பட்டன.

கிளர்ச்சிக்கு வங்காளப் பிரிவினையே முதன்மையாகக் கொள்ளப்பட்டது. வங்கம் பலவழியிலும் ஒற்றுமைப்பட்டது. 'பிரிவினை வேண்டாம் வேண்டாம்' என்பது வங்கத்தின் மந்திர மொழியாகி விட்டது. 'பிரிவினை' வேண்டாமென்று ஹிந்துக்கள் மட்டும் பேசினார்களில்லை; முஸ்லிம்களும் பேசினார்கள்; செல்வர்கள் மட்டுங் கூறினார்களில்லை; ஏழைகளுங் கூறினார்கள்; கற்றவர் மட்டுங் கூக்குரலிட்டாரில்லை; கல்லாதாருங் கூக்குரலிட்டனர்; தலைவர்கள் மட்டும் முழங்கினார்களில்லை; தொண்டர்களும் முழங்கினார்கள்; ஆண்மக்கள் மட்டும் அறைந்தார்களில்லை; பெண்மக்களும் அறைந்தார்கள்; கிழவர் மட்டும் உறுதிகொண்டாரில்லை; இளைஞரும் உறுதி கொண்டனர். எல்லாரும் - எல்லா வகையினரும் - ஒன்றுபட்டனர். வங்கக் கிளர்ச்சி வங்கத்தளவில் நிற்கவில்லை; அஃது இந்தியக் கிளர்ச்சியாய் விட்டது; மாகாண நிகழ்ச்சி நாட்டு நிகழ்ச்சியாய் விட்டது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை வங்கத்தளவில் நிற்பதா? அஃது இந்தியாவுக்குரிய ஒன்று; இந்திய விடுதலைக்குரிய ஒன்று.

வங்கத்தில் கூட்டங்கள் கூடின; பெருங்கூட்டங்கள் கூடின; எங்குங் கூடின. 1903 டிசம்பரிலிருந்து 1905 அக்டோபர் வரை இரண்டாயிரம் பொதுக்கூட்டங்கள் கூடின. ஒவ்வொரு கூட்டத்திலும் மக்கள் கூட்டம் ஆயிரக்கணக்கில் திரண்டது; ஈண்டியது; செறிந்தது. எங்கணும் சுரேந்திரர்; எங்கணும் அவரது இடிமுழக்கம். வங்கச் சுவாலை நாடு முழுவதும் வீசிற்று.

## சுதேசிய விரதம்

வங்காளத் தேசபக்தர்கள் தங்கள் மாகாணப் பிரிவை முன்னிட்டு வெறும் பேச்சுப் பேசிக் காலங்கழித்தல் கூடாதென்றும், பேச்சைச் செயலாக மாற்றல் வேண்டுமென்றும் உறுதிகொண்டு சுதேசிய விரதம் பூண்டார்கள்; கங்கணமுங் கட்டிக்கொண்டார்கள். கிருஷ்ண குமார தத்தர், அசுவினி குமார தத்தர் உள்ளிட்ட பெரியோர்கள் வெளிப்படையாக அயல் நாட்டுப் பொருள்களைப் பகிஷ்கரிக்கப் பிரசாரஞ் செய்தார்கள். சுதேசிய உணர்வு வங்காள முழுவதும் தோன்றிற்று. அவ்வுணர்வை ஒடுக்கப் பலதிற அடக்குமுறைகளும் எழுந்தன. அவ்வுணர்வுக்கும் இவ்வடக்குமுறைக்கும் பெரும்போர் நிகழ்ந்தது என்று சொல்லுதல் மிகையாகாது. அந்நிலையில 1905-ல் காசியில் இருபத்தோராவது காங்கரஸ் கூடிற்று. தலைவர் கோபாலகிருஷ்ண கோகுலே. கூட்டம் எப்படித் திரண்டிருக்கும் என்று சொல்லலும் வேண்டுமோ ?

## புத்துணர்வு

நாட்டிடை ஒருவிதப் புத்துணர்வு தோன்றியிருத்தலைக் கடந்த பம்பாய் காங்கரஸ் புலப்படுத்தியது. அவ்வுணர்வை வளர்ப்பதற்கென்று ஒரு கூட்டம் திரண்டது. அதற்குத் தலைவர் பாலகங்காதர திலகர். அவர் காசியம்பதி நண்ணியபோது தேசபக்தர்களால் அவருக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. அவ்வரவேற்பு, காங்கரஸ் புதுமையை ஏற்க விரும்பியதை வெளியாக்கிற்று.

காசிக் காங்கரஸில் தலைமை வகித்த கோபால கிருஷ்ண கோகுலே மிதவாத மதத்தர்; பிரிட்டிஷ் ஆட்சியில் நம்பிக்கையுடையவர். அவர் காசியில் இருதலைக் கொள்ளி எறும்பு ஆனார். கோகுலே தமது மிதவாதத்தைச் சிறிது மறந்தே பேசினர் என்று கூறலாம். அவர் தமது தலைமையுரையில் கால நிகழ்ச்சிகள் பலவற்றை விரித்துரைத்து, அதில் 'லார்ட் லிட்டன் காலத்து இருளைப் பார்க்கினும் அதிக இருள் இப்பொழுது சூழ்ந்து நிற்கிறது; நியாய முறையில் செய்யப்பெறும் விண்ணப்பங்களும் செவிடன் காதில் சங்கு ஊதிய நிலைமையை அடைகின்றன; இனி விண்ணப்பங்கள் பயன்படாவிடின் அதிகாரவர்க்கத்துடன் ஒத்துழைப்பே அசாத்தியமாகும். அடிமைத் தன்மையால் மக்களுக்கு ஆண்மைத் திறன் அற்றுப்போகும்; நாட்டில் வறுமை மலியும்' என்று குறிப்பிட்டு, லார்ட் கர்ஸன் ஆட்சி ஔரங்கஜீப் ஆட்சியை ஒத்தது என்று விளக்கி, வங்காளப் பிரிவினையை மிக உரமாக மறுத்து, பகிஷ்காரத்தை ஒரு வழியில் ஆதரித்துப் பேசினர்.

'வங்காளப் பிரிவினைத் தீர்மானம் எப்பொழுது வரும் வரும்' என்று காங்கரஸ் மாளிகை முழுவதும் மேடையைப் பார்த்தவண்ணம் இருந்தது. அத்தீர்மானம் வந்தது; சுரேந்திரக் கொண்டல் எழுந்தது; மின்னியது; இடித்தது; மழை பொழிந்தது. அவ்வெள்ளத்தை இந்நூல் தாங்காது. சில திவலைகளைக் காண்க.

'... ...வங்காளப் பிரிவினை எங்கும் பேசப்படவில்லை? எங்குப் பாடப்படவில்லை? சங்கங்களில் அப்பேச்சு; குடும்பங்களில் அப்பேச்சு; நாவலர் உதடுகளில் அப்பேச்சு; பஜனைக் கூடங்களில் - நாடக மேடைகளில் - அப்பாட்டு.

இவை யாவும் லார்ட் கர்ஸன் செயலுக்கு இயற்கை இறுக்கும் பதில்களாகும். அவர் நமது இனத்தைப் பின்னப்படுத்த முயன்றார்; நமது ஒருமைப் பாட்டைச் சிதைக்க முயன்றார். விளைந்ததென்ன? கிழக்கு வங்காள சகோதரர்களே! உன்னுங்கள்; நம்மை இயற்கை ஒன்றுபடுத்தியுள்ளது; அதை உடைத்தல் எவரால் இயலும்? அரசாங்கத்தின் சர்வ வல்லமை - சர்வாதிகாரம் - இயற்கைக்கு முன்னே என் செய்யும்? வாடும் - வதங்கும் - ஓடும் - ஒதுங்கும் - பதுங்கும். தோழர்களே! விண்ணப்பங்கள் விடுத்தோம்; முறையிட்டோம்; ஒன்றும் விளையவில்லை. நிலைமை, இயற்கை அரசியற் போக்கினின்றும் நம்மை விலகுமாறும் - பகிஷ்காரத்திலும் பொறுமை எதிர்ப்பிலும் இறங்குமாறும் - நெருக்குகிறது. என் செய்வோம்!'

சுரேந்திரர் மழை வெள்ளம் காங்கரஸ் மாளிகையிலே தண்மைக் கனலைக் கான்றது.

வங்காள அடக்குமுறையைப் பற்றிய தீர்மானம் பண்டித மதன்மோஹன் மாளவியரால் கொண்டுவரப்பட்டது. அவர் தமது பேச்சின் இடையில் பகிஷ்காரத்தை நுழைத்து, அதை வங்காளத் தளவிலேயே நிகழ்த்தல் வேண்டுமென்றும், அதைத் தேச நிகழ்ச்சியாகக் கொள்ளுதல் கூடாதென்றும், கொள்ளின் மெல்ல மெல்ல வளர்ந்துவருஞ் சுதேசியத்துக்கு இடர் நேருமென்றும் பேசினார். மாளவியர் பேச்சைக் காங்கரஸ் மாளிகை ஊக்கத்துடன் வரவேற்கவில்லை. வேறு சில தீர்மானங்களும் நிறைவேறின.

## முன்னேற்றம்

சென்னையினும் பம்பாய் முன்னேறி நின்றது; பம்பாயினும் காசி முன்னேறி நின்றது. அம் முன்னேற்றங்கள் கல்கத்தா புரட்சிக்குப் படிகளாக நின்றன.

காங்கரஸில் கருவுற்ற முன்னேற்றக் கட்சி - தீவிரக் கட்சி - திலகர் பெருமான் தலைமையில் உருப்பெற்று வளர்ந்து வந்தது. அக்கட்சி பழைய விண்ணப்ப முறையை - வேண்டுதல் முறையை - வெறுத்தது; சட்டசபைத் தீர்மானத்தை வெறுத்தது; பதவி மோகத்தை வெறுத்தது; சுயராஜ்யத் தீர்மானத்தை விழைந்தது. சுயராஜ்யப் பிரசாரம் எங்கணும் நடை பெற்றது.

காசிக் காங்கரஸ் வங்காளத்தில் ஒரு பெரும் மாறுதல் நிகழ்த்தியது. பொதுவாக மக்கள் பலரும், சிறப்பாக இளைஞரும் தீவிரக்கட்சிக்கு ஆக்கந் தேடலாயினர். எங்கும் வந்தேமாதரப் பாடல்; வந்தேமாதர முழக்கம்; சுயராஜ்ய வேட்கை; சுதேசியக் கிளர்ச்சி; பகிஷ்கார வேகம் - .......இவற்றைக் கண்டு அதிகார வர்க்கம் வாளா கிடக்குமோ? அது தன் கடனாற்றப் புகுந்தது. பேச்சுரிமைக்கும் எழுத்துரிமைக்கும் கேடு சூழப்பட்டது; ஊர்வலங்களும் கூட்டங்களும் தடுக்கப் பட்டன: மகாநாடுகள் தகையப்பட்டன. போலீஸுக்கும் இராணுவத்துக்கும் ஓய்வுகிடையாது. துப்பாக்கி, பீரங்கிகள் காத்துக் கொண்டிருந்தன. வந்தேமாதர முழக்கமும் குற்றமாகக் கருதப்பட்ட காலத்தைக் கல்கத்தா கண்டது!

லார்ட் கர்ஸனுக்குப் பின்னே இராஜப் பிரதிநிதியாக வந்தவர் லார்ட் மிண்டோ; அதுபோழ்து இந்தியா மந்திரியாக இருநதவர் லார்ட் மார்லி. இருவரும் 'லிபரல்கள்.' இருவரும் மனங்கொண்டிருந்தால் வங்காளப் பிரிவினையை ஒழித்திருக்கலாம். லார்டு மார்லி, ' வங்கா

னப் பிரிவினையைப் பற்றிய பேச்சே இனி வேண்டுவ தில்லை. அது முடிந்த விஷயம்' என்று சொல்லி வந்த னர். அங்ஙனம் லார்டு மார்லி சொல்லி வந்தது நெருப் பில் நெய் பெய்வதாயிற்று.

'1906-ம் ஆண்டு - டிசம்பர் இறுதிவாரம் - எப்பொ ழுது வரப்போகிறது? எப்பொழுது வரப்போகிறது?'' என்று நாடு பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தது. அவ் வாரம் வந்தது. கல்கத்தாவில் காங்கரஸ் கூடிற்று. தலை வர் யார்? பெருங்கிழவர் - தேசபக்தர்-அரசியல் ஞானி- முன்னே இரண்டு முறை காங்கரஸில் தலைமை வகித்து அநுபவம் பெற்றவர் - தாதாபாய் நௌரோஜி-தலைவராக அமர்ந்தார். பொருந்திய இடம்! பொருந்திய தலைமை!

ஹுக்லி நதிக்கரையில் இந்தியமக்கள் திரண்டார் கள். அவர்களில் பிரதிநிதிகள் தொகை 1653; மற்றவர் வர் தொகை 20,000. காங்கரஸ் பந்தர் நிரம்பி விட் டது. மேலும் மேலுங் குவிந்தவர்க்கு இடமில்லாமற் போயிற்று. அவரெல்லாம் பந்தரின் நாலுபக்கமும் சூழ்ந்து சூழ்ந்து நின்றனர். அக்காங்ரஸை 500 இந்தி யப் பெண்மணிகள் அணிசெய்தது குறிக்கற் பாலது. அந்நாளில் காங்கரஸ் நடைமுறையைக் காண அத்துணைப் பெண்மணிகள் மனங்கொண்டது சிறப்பன்றோ? வங்காள எழுச்சி பெண்ணுலகையும் விழிக்கச் செய்தது.

தலைமை வகித்த தாதாபாய் நாட்டு நிலையை நன் குணர்ந்தே முன்னுரை முடிவுரை நிகழ்த்தினர். அவர் முன்னே இரண்டு காங்கரஸ்களில் தலைமை வகிததும் பல காங்கரஸ்களில் பிரதிநிதியாயிருந்தும் பேசிய பேச்சுக்கட்கும், 1906-ல் கல்கத்தாவில் பேசிய பேச்சுக்

கும் வேற்றுமை காணப்பட்டது ; பெரும் வேற்றுமை காணப்பட்டது.

## சுயராஜ்ய ஒலி

தாதாபாயின் வயது மட்டும் வளர்ந்து வந்ததில்லை. வயதுடன் அவர்தம் மனமும் உணர்வும் வளர்ந்தே வந்தன. கிழவரின் மனமும் உணர்வும் நாட்டு நிலைமையுடன் கலந்து கலந்து வளர்ந்து வந்தன என்பது அவர் தம் பேச்சால் தெரிகிறது. காலதேச வர்த்தமான நிலைமைக்கேற்ற வண்ணம் அப்பெரியாரிடமிருந்து முன்னுரையும் முடிவுரையும் பிறந்தன. அவரால் புதுவழி காட்டப்பட்டது. அஃதென்னை? 'சுயராஜ்யம் ஒன்றே இந்திய நோய்க்குரிய மருந்து' என்பது. அவ்வாறு முன்னே நடைபெற்ற எக்காங்கரஸிலும் எவரும் குறிக்கவில்லை. சட்டசபைப் பெருக்கமென்றும், பாதிப் பிரதிநிதித்துவமென்றும் பெரிதும் பேசப்பட்டு வந்தன. பச்சையாக - வெளிப்படையாக - சுயராஜ்யம் என்று பேசப்பட்டதில்லை. கால நிலைமை, சுரேந்திர நாதரையும் 'நமது இயற்கை அரசியல் போக்கினின்றும் விலகிப் போதலும் நேர்ந்தது' என்ற கருத்துப்படக் காங்கரஸில் பேசச் செய்தது. அவ்வாறு அவர் பேசியதற்குக் காரணங்கள் உண்டு. அவை : விண்ணப்பங்கட்கும் முறையீடுகட்கும் அதிகார வர்க்கம் செவி சாயாமை, 'வங்காளப் பிரிவினை முடிந்த விஷயம்' என்று சொல்லப்பட்டமை முதலியன. மேலே என்ன செய்வது ? பழைய வழியினின்றும் விலகிப் புது வழி காணவேண்டுவதன்றி வேறென் செய்வது ? அநுபவம் முதிர்ந்த பெருங் கிழவ

ரால் புதுவழி காட்டப்பட்டது. அன்று ஹூக்லி நதிக் கரையில் எழுந்த ஒலி - சுயராஜ்ய ஒலி, மிண்டோ-மார்லி சீர்திருத்தமாய், தொடர்ந்து மாண்டேகு - செம்ஸ்பர்ட் சீர்திருத்தம் என்ற இரட்டையாட்சியாய், பின்னை மாகாண சுய ஆட்சியாய், இப்பொழுது ஒருவித விடுதலை யாய், இன்று முழு விடுதலை - முழு விடுதலை - என்று கிளர்ச்சி செய்துகொண்டிருக்கிறது. அன்று அச்சுய ராஜ்ய ஒலி பெருக்கிய சுயராஜ்யத் தந்தை தாதாபாய்க்கு வணக்கம் ; வாழ்த்து.

தாதாபாய் தலைமை புரையில் பல பொருள்கள் செறிந்து விளங்கின. அவை ஒவ்வொன்றிலும் உயிர் நாடியாக விளங்கியது சுயராஜ்யமே. சுயராஜ்யத்தைப் பற்றி அவர் அருளிய செம்மொழிகளின் சாரம் வருமாறு :—

'...இந்தியா நூற்றைம்பது ஆண்டுகளாகப் பிரிட்டிஷாரால் ஆளப்பட்டு வருகிறது. இத்துணை ஆண்டுகளாக அதன்மீது சுமத்தப்பட்டுள்ள ஆட்சிமுறை இயற்கையானதா ? இயற்கையற்ற ஓர் ஆட்சி முறையைப் பிரிட்டன் ஒரு நாளாவது சகிக்குமா ? இந்தியா புதிதாக ஒன்றுங் கேட்க வில்லை. அஃது அரசின் சார்பாக வெளிவந்த அறிக்கைகளி லுள்ள உரிமைகளைக் கேட்கிறது. இந்தியா தன்னைத்தான் ஆண்டுகொள்ள விரும்புகிறது. இதில என்ன தவறு இருக் கிறது ? மற்ற நாடுகள் தம்மைத் தாம் ஆண்டு கொள்ள வில்லையா ? ஆதலின் பலபடக் கூறவேண்டுவதில்லை. எல் லாம் ஒரே சொல்லில் அடங்குமாறு கூறலாம். அது 'சுயராஜ் யம்' என்பது. அது பிரிட்டிஷ் ராஜ்யம் அல்லது குடியேற்ற நாடுகள் பெற்றுள்ள சுயராஜ்யம் போன்றது. சுயராஜ்யமின்றி எவ்வளவு நாள் பொறுத்திருப்பது ? அதற்குரிய காலம் வந்

தது. அது வந்து நீண்டகாலமாயிற்று. சுயராஜ்ய மொன்றே நாட்டின் நோய் தீர்க்கவல்லது. அதிலிருந்தே வல்லமை - திறமை - பெருமை - முதலியன பிறக்கும். எனக்கு வயதாகி விட்டது. என் நாட்டு மக்களுக்கு யான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அது, 'ஒற்றுமையா யிருங்கள்; விடா முயற்சி செய்யுங்கள்; சுயராஜ்யம் அடையுங்கள்; அப்பொழுதே கோடிக்கணக்கான மக்களின் வறுமை - பட்டினி - பஞ்சம் - நோய் - முதலியன நீங்கும். இந்தியா பழைய பெருமை எய்தும் என்பதே.'

சுயஆட்சி, சுதேசியம், பகிஷ்காரம், நாட்டுக் கல்வி, வங்காளப் பிரிவினை முதலியவற்றைப்பற்றித் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டன. அவை தீவிர வாதிகள் விரும்பிய முறையில் செப்பஞ் செய்யப்பட வில்லை. அவற்றின் கைகால்கள் மிதவாதிகளால் முறிக்கப்பட்டன. ஆனாலும் புதுப்புது முறைகளில் தீர்மானங்கள் தலை காட்டியது ஒருவித முன்னேற்றமே யாகும்.

கைகால்கள் எப்படி முறிக்கப்பட்டன என்பதற்கு ஒன்றை எடுத்துக் காட்டுதல் பொருத்தமாகும். சுய ஆட்சியைப் பற்றிய தீர்மானத்தை நோக்குவோம். அதைச் சிதைவு செய்யாமலும், அதில் படித்தாங்கள் கோலாமலும் கொண்டுவர வேண்டுமென்று தீவிரவாதிகள் விரும்பினார்கள். மிதவாதிகள் தீர்மானத்தில் மாற்றஞ்செய்யப் புறப்பட்டார்கள். எப்படி? அவர்கள் புதிய சொற்களில் பழம் பொருளைப் புகுத்தினார்கள். பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் பெற்றுள்ள சுயராஜ்யத்தையொத்த ஒன்றை இந்தியா பெற விரும்புகிறதென்றும், அதற்கும்

படிகளாக நிற்கவல்ல சில சீர்திருத்தங்கள் இப்பொழுது வழங்கப்பெறல் வேண்டுமென்றும் தீர்மானஞ் செய்யப்பட்டது. கைகால்கள் முறிக்கப்பட்ட விதத்தைப் பாருங்கள்! பகிஷ்காரம் இந்தியா முழுவதும் நிகழப்பெறல்வேண்டுமென்றும், அதனுடன் பொதுமை எதிர்ப்பும் தொடர்ந்து நிற்றல் வேண்டுமென்றும், இரண்டாலும் அரசாங்கத்துக்கு நெருக்கடி உண்டு பண்ணல் வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றத் தீவிரவாதிகள் முயன்றார்கள். மிதவாதிகள் முயற்சியால் அம்முறையில் தீர்மானம் நிறைவேறவில்லை. இவ்வாறே பிறவும்.

ஊக்கம் ஊட்டக் கூடிய வங்கப் பிரிவினைத் தீர்மானம் வழக்கம்போல ஒரே மனதாக எல்லோராலும் நிறைவேற்றப் பெற்றது.

தீவிரவாதிகளிற் சிலர் பந்தரை விடுத்து வெளியேறினர். அது மக்களுக்குள் கிளர்ச்சியை உண்டு பண்ணிற்று.

'இளைஞர்களே! கிளர்ச்சி செய்யுங்கள்; கிளர்ச்சி செய்யுங்கள்; சுயராஜ்யத்துக்காகக் கிளர்ச்சி செய்யுங்கள்' என்று தலைவர் இறுதியில் முழங்க இருபத்திரண்டாங் காங்கரஸ் முற்றுப்பெற்றது.

## புரட்சி

இருபத்திரண்டாங் காங்கரஸ் நடைமுறை இந்தியச் சரித்திரத்தில் பொன்னெழுத்தால் எழுதப் பெறுந் தகைமையது. காங்கரஸுக்குள் புரட்சியைப் புகுத்தியது 1906-ம் ஆண்டே.

தீவிரவாதிகள் விரும்பிய முறையில் தீர்மானங்கள் நிறைவேறாமற் போயினும், தலைவரின் முன்னுரையும் முடிவுரையும் அவர்கட்கு ஊக்கமூட்டின. '1907-ல் நாகபுரியில் கூடப்போகும் இருபத்துமூன்றாவது காங்கரஸில் பார்த்துக்கொள்ளலாம்' என்று அவர்கள் தங்கள் தங்கள் மாகாணந் திரும்பினார்கள்.

கல்கத்தா அநுபவம் மிதவாதிகளுக்கு நடுக்கத்தை உண்டுபண்ணியது. 1907-ல் காங்கரஸ் தீவிரவாதிகளின் உடைமையாகும் என்று அவர்கள் நம்பினார்கள்; நம்பிப் பலவகைச் சூழ்ச்சிகள் செய்தார்கள்.

சுயராஜ்யத்தைப்பற்றிய பிரசாரம் இருசாரிலும் நடைபெற்றது. பால கங்காதர திலகர், விபினசந்திர பாலர், அரவிந்தகோஷ் முதலியோர் தீவிரப் பிரசாரஞ் செய்யத் தொடங்கினர். ராஷ்பிஹாரிகோஷ், மேட்டா, கோகுலே முதலியோர் மிதவாதப் பிரசாரத்தில் தலைப்பட்டனர். இருவருக்கும் இடையில் நின்று கருத்து வேற்றுமையை வளர்த்து வந்தது, சுயராஜ்யத்தைப் பற்றிய வியாக்கியானமேயாகும். சுயராஜ்ய விருப்பத்தில் இருசாரார்க்கும் கருத்துவேற்றுமை இல்லை. அதைப் பெறும் முறையிலும் காலத்திலும் கருத்து வேற்றுமை மலையெனத் திரண்டது.

தீவிரவாதிகள், 'சுயராஜ்யம் இப்பொழுதே வேண்டும்; படித்தரங்கள் வேண்டுவதில்லை' என்று பொதுவாகப் பிரசாரஞ் செய்தார்கள். அவர்களுள் சிலர், 'பார்லிமெண்ட் தொடர்புடைய சுயராஜ்யம் வேண்டும்' என்று சொல்லிவந்தனர்; வேறு சிலர், 'எவ்விதத் தொடர்புங் கூடாது' என்ற கருத்தினராயினர். தலை

வர் திலகர், ' குடியேற்ற நாட்டு முறையிலாதல் இப்பொழுது சுயராஜ்யம் வழங்கப்பெற்ருல் யான் உள்ள நிறைகொள்வேன் ' என்று பேசியும் எழுதியும் வந்தனர். திலகரும், பாலரும், அரவிந்தரும் தீவிரக் கட்சிக்கு ஆக்கந் தேடிவந்தனர்.

மிதவாதிகள் தீவிரவாதிகளுக்கு மாறுபட்டுப் பிரசாரஞ் செய்தார்கள். அவர்களுள் கருத்து வேற்றுமை எழவில்லை. மிதவாதத் தலைவருள் ஒருவராகிய கோபால கிருஷ்ண கோகுலே, அல்லகபாத்தில் பேச நேர்ந்தபோது, ' சுயராஜ்ய வேட்கையில் யான் எவருக்குங் குறைந்தவனல்லன் ; அது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள் நிற்பதாயிருத்தல் வேண்டும் ; அதையும் இப்பொழுதே பெறுதல் வேண்டும் என்று சொல்ல 'யான் முனையமாட்டேன். நம்பால் சில குறைபாடுகள் உண்டு. பொறுத்தல் வேண்டும் ' என்ற கருத்தை வெளியிட்டனர். அதை ராஷ் பிஹாரி கோஷ், மேட்டா முதலியோர் ஆதரிக்கலாயினர். மிதவாதிகள் வெளியிட்டு வந்த கருத்து, கல்கத்தாவில் பெருங்கிழவர் வாயினின்றும் பிறந்த பெருமொழிக்கு மாறுபட்டதேயாகும். ' சுயராஜ்யத் தகுதிக்குரிய நாள் பிறந்து நீண்டகாலமாயிற்று ' என்று முதியவர் அருளியது கருதற்பாலது.

தீவிரவாதப் பிரசாரத்தால் கனென்றெழுந்த கிளர்ச்சியை மாய்க்க அதிகார வர்க்கம் உறுத்தெழுந்தது. அடக்குமுறை வீறிட்டது. ராவல் பிண்டியில் குழப்பம் நிகழ்ந்தது. அது காரணமாகச் சிலர் தண்டிக்கப்பட்டனர். லாலா லஜபதிராய் நாடு கடத்தப்பட்டார். வங்காளத்தில் அடக்குமுறை பன்முகங் கொண்டு சண்ட

தாண்டவம் புரிந்தது. வங்க இளைஞர் அடிக்கப்பட்டனர்; சிறையில் அடைக்கப்பட்டனர்; ஊர்வலங்கள் தடுக்கப் பட்டன; கூட்டங்கள் தகையப்பட்டன; கொடுஞ் சட் டங்கள் நிறுவப்பட்டன. வங்காளம் வரம்பு மீறிய செயல்களிலும் தலைப்படலாயிற்று. தலைவர்களால் ஒன் றுஞ் செய்தல் இயலாமற் போயிற்று. சில பத்திரிகைகள் அராஜகப் பிரசாரஞ் செய்யத்துவங்கின. அதில் பெண் மணிகளும் கலந்து கொண்டார்கள். வங்க அடக்கு முறை இந்தியா முழுவதும் கிளர்ச்சியை உண்டு பண்ணிற்று.

நமது மாகாணத்தில் சிதம்பரம் பிள்ளை, சுப்பிர மணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார், சுரேந்திரநாத் ஆரியா, ஹரிசர்வோத்தம் ராவ் முதலியோர் திலகர் கொள்கையை ஆதரிக்க முற்பட்டனர். நம் மாகாண மும் விழித்தது. விபின சந்திரபாலர் சென்னைக்கு வரவழைக்கப்பட்டனர். அவர் சென்னைக் கடற்கரை யில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் சென்னையை வங்காளமாக்கின என்று சொல்லலாம்.

1907-ம் ஆண்டுக் காங்கரஸ் தீவிரவாதிகள் வழி நடைபெறாதவாறு செய்ய மிதவாதிகள் சூழ்ச்சியில் இறங்கினார்கள். இருபத்து மூன்றாவது காங்கரஸ் நாகபுரியில் கூட்ட ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன. அவ்விடம், திலகருக்குச் செல்வாக்கு மிகுந்ததென்று கருதிய மிதவாதிகள், சில காரணங்கூறி, மேட்டாவின் செல்வாக்கு நிறைந்த சூரத்தை இடமாகக்கொண்டார் கள். பின்னை தலைவர் தேர்தல் வந்தது. அவ்வேளை யில் லாலா லஜபதிராய் விடுதலை அடைந்தனர். அவ

ருக்குத் தலைமைப் பதவி வழங்கப்படவேண்டுமென்று திலகர் முயன்றனர். மேட்டா - கோகுலே கூட்டம் ஒரு மிதவாதிக்கு அப்பதவி வழங்கப்படவேண்டுமென்று முயன்றது. லாலா லஜபதிராய் பெருந்தகைமையுடன் போட்டியில் தலையிடாது விலகிக்கொண்டனர். ராஷ் பிஹாரிகோஷ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். டிசம்பர் இறுதியில் இருபத்துமூன்றாவது காங்கரஸ் சூரத்தில் கூடிற்று. சூரத் காங்கரஸைக் காணத் திரண்ட கூட்டங்கட்கு அளவேயில்லை. நாட்டில் நடைபெற்ற தீவிரவாதப் பிரசாரமும், மிதவாதப் பிர சாரமும் சூரத்தில் மக்கள் கூட்டத்தைப் பெருக்கின.

பம்பாய் மாகாண மகாநாட்டில் மேட்டா - கோகுலே கூட்டத்தின் சூழ்ச்சியால் கல்கத்தா தீர்மானங் களுள் உயிர் போன்றன விடப்பட்டமை தீவிரவாதி கட்கு ஐயமூட்டிக் கொண்டேயிருந்தது. அவ்வையம் சூரத்தில் வலுப்பட்டது. அதனால் தீவிரவாதிகள் கல்கத்தா தீர்மானங்களின் தொனியை மேலும் ஏற்ற வெளிப்படையாக முயன்றார்கள். மிதவாதிகள் அத் தீர்மானங்களின் தொனியை இறக்க மறைமுகமாய் முயன்றார்கள். இருவர் நிலைமைகளையுங் கண்ட திலகர் பெருமான் இருவரிடையும் ஒருவிதச் சமாதானங்கண்டு, காங்கரஸை அமைதியாக நடாத்த எண்ணி, வரவேற்புக் கூட்டத்தார் செப்பஞ் செய்து வைத்திருந்த தீர்மானங் களில் ஒரு படி (நகல்) அனுப்புமாறு அக்கூட்டத் தலை வருக்கு ஒருகடிதம் விடுத்தனர். தப்புறவாள் உத்தமி யையும் தன்னைப்போல் கருதுவது இயல்பன்றோ? வரவேற்புத் தலைவரிடமிருந்து பதில் வரும் வரும் என்று

திலகர் நீண்ட நேரம் எதிர்பார்த்தனர். பதில் வரவே யில்லை. முதல்நாள் கூட்டத்தை நிறுத்தி நிலைமையை ஒழுங்குபடுத்திக் கொள்வது நல்லது என்று திலகர் ஆழச் சிந்தித்துத் தங்கருத்தை ஒரு பிரேரணையாக எழுதி வரவேற்புத் தலைவருக் கனுப்பினர். அதற்கும் பதில் கிடைக்கவில்லை. தலைவர் ஆரவாரத்துடன் மேடைக்கு அழைத்து வரப்பட்ட பதிலையே திலகர் பெருமான் கண்டார். தீவிரக்கூட்டத்தார் ஐயப்பாட்டுக்கு இட மிருத்தல் திலகருக்கு நன்கு விளங்கிற்று. தம் தலைவர் கடிதங்கட்குப் பதில் வாராத செய்தி தீவிரவாதிகளிடைக் காட்டுத் தீப்போல் பரவிற்று.

ராஷ் பிஹாரிகோஷ் தலைமை வகிக்கவேண்டு மென்று பேச ஒருவர் எழுந்தார். ஓரே கூக்குரல் கிளம்பிற்று. சுரேந்திரநாதர் எழுப்பப்பட்டார். அவா தம் நாவன்மை-இடிமுழக்கம் - காங்கரஸ் மாளிகையில் அமைதியை நிலைபெறுத்தும் என்று எதிர்பார்க்கப் பட்டது. வங்க நாவலர் வாய் திறந்தார். கூச்சல் வானைப் பிளந்தது. கூட்டம் அடுத்த நாளைக்கு ஒத்தி வைக்கப்பட்டது. லாலா லஜபதிராய் உள்ளிட்ட பெரியோர் பலர் இருவரிடையுஞ் சமாதானங் காண விண்ணும் மண்ணுஞ் சுழல முயன்றனர். மேட்டா - கோகுலே கூட்டம் வழிபட்டுவரவில்லை. மறுநாள் காங்கரஸ் மாளிகையில் கூட்டம் செறிந்து மிடைந்து துதைந்திருந்தது. சுரேந்திரர் நேற்று விட்ட இடத்தி லிருந்து தமது பேச்சைத் தொடங்கிமுடித்தார். ராஷ் பிஹாரி கோஷ் தலைமைப் பீடத்தில் அமர்ந்தார்.

மேட்டாவின் எதேச்சாதிகாரமும், பணத்திமிரும், காங்கரஸ் சூரத்தில் கூட்டப் பெற்றதன் நோக்கமும் (காங்கரஸ்) பந்தரில் நன்கு புலனாயின; திலகருக்கும் புலனாயின. அவை திலகருக்கு அச்சமூட்டவில்லை. திலகர் யார்? மஹாராஷ்டிரச் சிங்கம்; சிவாஜி வழிவழி வந்த வீரச்செல்வம். அவர் 'எதேச்சாதிகாரத்துக்கா அஞ்சுவது? பணத்திமிருக்கா அஞ்சுவது?' என்று உயிரைத் திரணமாகக் கருதிப் பாய்ந்தார் மேடைமீது; சிங்க ஏறெனை நின்றார்; நோக்கினார்; தாம் வரவேற்புக் கழகத்தவருக்கு எழுதி விடுத்த பிரேரணையை யொட்டிப் பேச வாய் திறந்தார். தலைவர் தடை கிளத்தினார். திலகர் தடைக்கு அடங்கவில்லை. மூர்க்கசக்திகள் அவரைத் தடுக்க எழுந்தன. 'என்னைத் தூக்கி எறிந்தாலன்றி யான் இவ்விடத்தை விடுத்து அகலேன்; அகலேன்' என்று மஹாராஷ்டிர சிங்கம் கர்ச்சித்தது. அதிர்ந்தது பந்தர்; வீசியது சூறாவளி; பொங்கியது கடல்; மோதின அலைகள்; சுழன்றன தடிகள்; எழும்பின செருப்புகள்; பறந்தன நாற்காலிகள்; ஒரே குழப்பம்! திலகர் விக்கிரகம்போல் நின்றார். தலைவரால் ஒன்றுஞ் செய்தல் இயலவில்லை. அவர் மருண்டு, காலவரை குறிப்பிடாது, 'காங்கரஸ் ஒத்திவைக்கப்பட்டது' என்று அலறிக் கூவி ஒதுங்கினார்.

'தீவிரவாதிகள் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்தார்கள். திலகர், அவர்களிடைப் போந்து நிலைமையை விளக்கி, 'விடுதலைப் போருக்குச் சித்தமாயிருங்கள்; தியாகத்துக்குச் சித்தமாயிருங்கள்; சுயராஜ்யம் மலரும்' என்று பேசிப் பூஜை நோக்கினார்.

மிதவாதிகள் வேறோரிடத்தில் சேர்ந்து, வேனிற் காலத்தில் அலகபாத்தில் ஒரு மகாநாடு கூட்டிச் சில கட்டுப்பாடுகள் விதித்துக்கொள்ளல் வேண்டுமென்று தீர்மானித்துச் சென்றார்கள். சூரத் சூறையாயிற்று.

திலகர் செய்தது நியாயமா என்று சிலர் எண்ணலாம். நியாயமே என்று நடுநிலையாளர் எவருங் கூறுவர். திலகர், நிலைமையை ஒழுங்குபடுத்தப் பல வழியிலும் முயன்றார். மிதவாதக் கூட்டம் இணங்கி வரவில்லை; பிடிவாதமாகவே இருந்தது. அதற்குமேல் என் செய்வது? வேறு வழி இல்லை. திலகர் புரட்சியிலிறங்கினார்; மேடை மீதேறினார்; தங்கடனாற்றினார். அந்நிலைமையை உண்டாக்கித் தீவிரவாதிகள்மீது பழி சுமத்தவே மிதவாதக் கூட்டம் முயன்றது. தீவிரவாதிகளைக் காங்கரஸினின்றும் ஓட்டித் தாங்களே காங்கரஸை ஆளுதல் வேண்டுமென்பது மிதவாதக் கூட்டத்தின் உள்ளக் கிடக்கை. திலகர் - பாலர் - அரவிந்தர் - மூவரும் ஜனநாயக வழியில் நின்று கடனாற்றினர். மேட்டா - கோகுலே - கோஷ் - மூவரும் எதேச்சாதிகார வழியில் நின்று கடனாற்றினர். திலகர் மீதோ அவர் கூட்டத்தார் மீதோ எத்தகைக் குற்றத்தையுஞ் சுமத்த இடமில்லை. அவர் வெளிப்படையாக - தேசபக்தியுடன் - வீரத்துடன் - ஆண்டகைமையுடன் - சேவை செய்தனர்; கரவு சூழ்ச்சி முதலிய இழி துறைகளில் அவர் இறங்கவில்லை; இறங்குதலும் அவருக்குத் தெரியாது.

ஒன்றில் ஒழுங்கீனம் உற்றால் அதைச் செம்மை செய்ய வீரர் அறத்துறையிலிறங்கிப் பாடுபடுவர். அதனால் பயன் விளையாவிடின், அவர் ஒதுங்கிச் செல்லார்;

ஒதுங்குவது கோழமை. அறப் போர் புரிந்து நிலை மையை ஒழுங்குபடுத்த அவர் உறுதிகொள்வர். அதுவே க்ஷத்திரிய தருமம். திலகர் அத் தருமவழி நின்று நேரிய முறையில் கடனாற்றினர். அவர் பகவத்கீதை பயின்று தெளிவடைந்தவர் ; நிஷ்காமிய கர்மயோகி.

## அடக்குமுறை

மிதவாதிகள் மேலே என் செய்தார்கள்? அதிகார வர்க்கத்துக்குத் துணைபோனார்கள். தீவிர வாதிகளை அடக்க அவர்கட்கு வேறு வழி புலனாகவில்லை. அவர் கள் என் செய்வார்கள் பாவம் !

அதிகார வர்க்கம் தனது முழுப் பலத்தைக் கொண்டு தேசபக்தர்களை எதிர்த்தது ; திலகரை நாடு கடத்தியது ; பாலரைச் சிறையிலடைத்தது ; அரவிந்தர் மீது ஒரு பெரும் அராஜக வழக்குத் தொடர்ந்தது. வங்க இளைஞர் பட்டபாட்டை ஆண்டவனே அறிவன். அவரை நல்வழியில் நிறுத்தி ஆளவல்ல தலைவர்கள் தண் டிக்கப்பட்டார்கள். இளைஞர் வெறியராயினர் ; வரம்பு மீறிய மறச்செயலில் தலைப்பட்டனர் ; எரிகுண்டு தாங்கினர் ; துப்பாக்கி தாங்கினர் ; கொலைஞராயினர். அவரிற் பலர் சிறையிலடைக்கப்பட்டனர் ; நாடு கடத் தப்பட்டனர் ; சிலர் தூக்கிலும் இடப்பட்டனர். வங் காளம் அடக்குமுறைக்கு இரையாயிற்று ; சிறைக் கோட்டமாயிற்று.

நமது மாகாணத்தில் சிதம்பரம்பிள்ளை, சுப்பிரமணிய சிவா, சுரேந்திரநாத் ஆரியா, ஹரி சர்வோத்தம ராவ் முதலியோர் சிறைக்கோட்டம் நண்ணினர் ; சுப்பிர

மணிய பாரதியார் உள்ளிட்ட சிலர் புதுவை புகுந்தனர். அரவிந்தர் வழக்கில் விடுதலையடைந்து புதுவை சேர்ந்து தவயோகத்தில் மூழ்கினர்.

சூரத்தில் தடை நேராதிருப்பின் திலகர்பெருமான் காங்கரஸ் கோட்டையில் நின்று விடுதலைப் போர் தொடுத்திருப்பர். நாடு விடுதலை அடைந்திருக்கும். சூரத்தில் நேர்ந்த தடையால் அணித்தே வந்த சுயராஜ்யம் சேய்த்தே ஓடிப்போயிற்று. உரிமை இழந்த நாட்டில் பணக்காரரும் முதலாளிகளும் அதிகாரவர்க்கமும் ஒன்றுபட்டு உண்மைத் தேசபக்தர் முயற்சிக்குப் பல வழியிலுங் கேடு சூழ்ந்துவருதல் இயற்கையாய்விட்டது. பணக்காரரும் முதலாளிகளும் தேசபக்தர் வேடம் பூண்டு, நன்கு நடித்து, உலகை ஏமாற்றுவது வழக்கம். ஏமாறுவதில் நமது நாடு முதன்மையாக நிற்பது.

பத்தொன்பதாம் ஆண்டு முதல் இருபத்து மூன்றும் ஆண்டுவரை காங்கரஸ் பல படி ஏறி ஏறி விடுதலைப் போருக்குரிய கோட்டையாயிற்று. ஆனால் அறப்போர் நிகழவில்லை. சூரத்தில் தடைநேர்ந்தது. படைத்தலைவரும், இளம் வீரரும சிறையிலடைக்கப்பட்டனர். காங்கரஸ் கோட்டை துரிஞ்சில், சிலந்தி, பல்லி, பூச்சி, புழு, பாம்பு முதலியவற்றிற்கு உறைவிடமாயிற்று. அதில் புற்றும் தூறும் துதைந்தன.

## 23, 24—28

சூரத்தில் மிதவாதிகள் கூடிச் செய்த ஏற்பாட்டின் படி 1908 ஏப்ரலில் அலகபாத்தில் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. அதில் தீவிரவாதிகள் காங்கரஸில் நுழை

யாதவாறு சட்ட திட்டங்கள் கோலப்பட்டன. சூரத்தில் கூடிக் கலைந்த இருபத்துமூன்றும் காங்கரஸையே தொடர்ந்து நடத்துவதென்று உறுதி செய்யப்பட்டது. அந்நாளில் சந்தடியற்றுக் கிடந்த சென்னையில் டிஸம்பரில் ராஷ்பிஹாரி கோஷ் தலைமையிலேயே காங்கரஸ் கூடிற்று. மேட்டா வெற்றிச் சின்னம் பிடித்துக் கொண்டே வந்தார்; வெற்றி யாருக்கு என்பதைத் தெரிந்து கொள்ளாமலே இறுமாப்புடன் சென்னை நோக்கினார். வெற்றி அதிகாரவர்க்கத்துக்கென்றும், தோல்வி காங்கரஸுக்கென்றும் நாடு உணர்ந்தது; உலகம் உணர்ந்தது. 1908 முதல் 1913 வரை காங்கரஸ் பெயரளவில் கூடிக் கூடிக் கலைந்தது. ஆயிரக் கணக்கில் கூடிய பிரதிநிதிகள் பழையபடி நூற்றுக்கணக்கில் கூடலானார்கள். நாட்டில் ஊக்கமில்லை. பழைய முறையில் தீர்மானங்கள் எழுத்தளவில் நிறைவேறி வந்தன.

ஐந்தாண்டில் என்னென்ன நிகழ்ந்தன? மிண்டோ - மார்லி சீர்திருத்தமென்று ஒன்று தலை காட்டிற்று. 1911-ம் ஆண்டில் நடைபெற்ற டெல்லி தர்பாரில் வங்காளப் பிரிவினை நீக்கப்பட்டது என்றோர் அறிக்கை அரசர் பெருமானிடத்திருந்து பிறந்தது. முன்னையதைக் காட்டினும் பின்னையது நாட்டில் ஒருவித மகிழ்ச்சியூட்டிற்று. அதே சமயத்தில் வங்காளம் ஒரு பெரும்பேற்றை இழந்தது. அஃதென்னை? அரசர் பெருமான் அறிக்கையில் குறிப்பிட்டவாறு இந்தியத் தலைமைப்பீடம் கல்கத்தாவினின்றும் டெல்லிக்கு மாற்றப்பட்டது. வங்காளம் இந்தியத் தலைமைப் பீடத்தை இழந்தது.

தென்னுப்பிரிக்கா இந்தியர்மீது கருத்துச்செலுத்த இந்திய அரசாங்கம் ஒருப்பட்டமை குறிக்கத்தக்கது. மற்ருெரு நன்மை முஸ்லிம் லீக் காங்கரஸுடன் கலந்து தொண்டாற்ற உடன்பட்டது.

## 29—34

1914-ம் ஆண்டில் இருபத்தொன்பதாவது காங்கரஸ் சென்னையில் பூபேந்திரநாத் போஸ் தலைமையில் கூடியது. அதிலிருந்து காங்கரஸில் நுழைந்த ஐந்தாண்டு மந்தம் நீங்கிவரலாயிற்று. காரணம் அவ்வாண்டு ஆகஸ்ட் மாதம் பிரிட்டன் ஜெர்மனியுடன் போர் தொடுத்தமையாகும். ஐரோப்பாப் போர் இந்தியாவுக்குப் பல வழியிலும் ஊக்கம் அளித்தது. 1914-ம் ஆண்டில் அன்னி பெஸண்ட் அம்மையார் காங்கரஸில் சேர்ந்து, இந்திய விடுதலைப் போரில் கலந்து கொண்டது சிறப்பாகக் குறிக்கற்பாலது. காலப்போக்குக் கேற்பச் சுயஆட்சித் தீர்மானத்தில் மாறுதல் செய்யச் சில தலைவர் முயன்றனர். மாறுதல் நிகழவில்லை. அல்லகபாத் மிதவாத மகாநாட்டின் முடிவுப்படியே தீர்மானம் நிறைவேறியது. ஆனல் அத்தீர்மானத்தை ஒட்டிப் பேசிய சுரேந்திரநாதரும், அன்னிபெஸண்ட் அம்மையாரும் கல்கத்தா காங்கரஸ் **(1906)** தோனிகோண்டு பேசி மக்களுக்கு எழுச்சியூட்டினர். அடுத்த ஆண்டில் சுயஆட்சித் தீர்மானத்திலுள்ள மிதவாதம் மாண்டு விடுமென்று மக்கள் பேசிக்கொண்டார்கள். சென்னையில் 1908-ம் ஆண்டுக் காங்கரஸில் மறைந்த தீவிர ஞாயிறு, அதே இடத்தில் 1914-ம் ஆண்டில் மீண்டும் தோன்றியது.

## புரட்சியின் வெற்றி

முப்பதாம் ஆண்டுக் காங்கரஸ் பம்பாயில் கூடுவதற்குள் உலகிலும் நாட்டிலும் பலவித மாறுதல்கள் உற்றன. அவை காங்கரஸுக்குப் பலவழியிலும் ஆக்கந் தேடின. 1915-ம் ஆண்டு தொடங்கிய ஒரு திங்களுக்குள் கோகுலே இவ்வுலக வாழ்வை நீத்தார். அவரைத் தொடர்ந்து மேட்டாவுஞ் சென்றார். கோகுலே-மேட்டா மரணத்துக்கு வருந்தவும், 1907-ம் ஆண்டில் விடுத்துச் சென்ற விடுதலைப் போரை மீண்டும் நடாத்தவும் தீவிரத் தலைவர் பாலகங்காதர திலகர் ஆறாண்டு சிறைக்கோட்டத்தில் வதிந்து விடுதலை அடைந்தார். இஃது ஒரு நற்குறியாயிற்று. அன்னிபெஸண்ட் அம்மையார் 'காமன் வீல்' 'நியூ இந்தியா' என்ற இரண்டு பத்திரிகைகளாலும், சுயஆட்சிச் சங்கத்தாலும், பிறவகையாலும் இந்தியாவில் பெருங் கிளர்ச்சி செய்தனர். அக்கிளர்ச்சி வருணிக்கற்பாலதன்று. காங்கரஸுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் ஏற்பட்ட ஒருமைப்பாடு வளர்ந்தே வந்தது. பிளாண்டர்ஸ், கலிபோலி, மெஸபெட்டோமியா முதலிய இடங்களில் இந்திய வீரர்கள் பிரிட்டன் சார்பில் புரிந்த போர்த்திறமும் - இந்தியர் பிரிட்டனிடம் அன்பு கொண்டு மக்களைக் கூட்டங் கூட்டமாக அனுப்பியும் பணத்தைக் கோடி கோடியாக வாரிவாரிச் சொரிந்தும் மன்னருக்கு வெற்றி தேட முயன்றதும் - பிரிட்டன் கருத்தை இந்தியாமீது திருப்பின. பிரிட்டிஷ் மக்கள் இந்தியாவுக்குச் சாம்ராஜ்யத்தில் சம உரிமை கொடுக்க வேண்டுமென்று பேசத் தொடங்கினார்கள் ; பத்திரிகை

களும் அவ்வாறே எழுதத் தொடங்கின. மற்றுஞ் சில நிகழ்ச்சிகளும் இந்தியாவுக்குச் சாதகமாகவே விளைந்தன.

அவ்வேளையில் பம்பாயில் முப்பதாவது காங்கரஸ் ஸர். சத்தியேந்திரநாத் சின்ஹ தலைமையில் கூடியது. அக்காங்கரஸ் இந்திய அரசியல் நிலையில் ஒரு பெரும் மாறுதலை உண்டுபண்ணியது. காங்கரஸில் பிரதிநிதிகள் தொகை மீண்டும் பெருகியது. மற்றவர் தொகையும் பெருகியது.

அன்னிபெஸண்ட் அம்மையார், 'பிரிட்டிஷ் சாம் ராஜ்யத்துக்குள் சுயஆட்சி பெற இந்தியா எல்லா வழி யிலுந் தகுதியுடையதாயிருக்கிறது ; அதைப் பெறுதற்கு இதுவே காலம் ; நாம் நியாய வரம்பில் நின்று கிளர்ச்சி செய்தல் வேண்டும்' என்று நாடு முழுவதும் பிரசாரஞ் செய்து வந்தனர். அதனால் பம்பாய் காங்கரஸ் பெரிதும் அம்மையார் வழியே நடைபெற்றது. காலத்துக்கேற்ற முறையில் சுயஆட்சித் தீர்மானத்தைக் காங்கரஸ் ஏலா தொழியின், அதைச் சுயஆட்சிச் சங்கத்தின் வாயிலாக நிறைவேற்றி, நாட்டில் கிளர்ச்சி செய்வதாக அன்னி பெஸண்ட் அம்மையார் சொல்லிவந்தது மிதவாதிகளின் பிடிவாதத்தைத் தளர்த்திவிட்டது. பம்பாய் காங்கரஸில் நிறைவேறிய சுய ஆட்சித் தீர்மானம், காங்கரஸின் மிதவாதக் கொள்கையை மாற்றுதற்குத் தூண்டு கருவி யாகப் பயன்பட்டது. சுயஆட்சித் தீர்மானத்தைப்பற்றிப் பலர் பேசினர். அப்பேச்சுக்களின் சாரம் வருமாறு :—

"சுய ஆட்சி என்பது இயற்கை அமைப்பு ; கடவுளின் கொடை. ஒவ்வொரு நாடும் அவ்வந்நாட்டார் வழியே ஆளப் பெறல் வேண்டும்.

ரோம், பாபிலோன் முதலிய நாடுகள் சரித்திர உலகில் புகுதற்கு முன்னரே நம் முன்னோர் கிராமங்களைக் கண்டு அவற்றை ஜனநாயக முறையில் பாதுகாத்து வந்தனர். சுய ஆட்சி என்பதற்குக் கால்கொண்டது நமது நாடேயாகும். ஸ்தல ஸ்தாபனங்களிலும் சட்டசபைகளிலும் நமது திறமை வெளிப்பட்டே நிற்கிறது. இப்பெரிய காங்கரஸ் நடாத்தப் படுகிறது. இதன்கண் எத்துணையோ சிக்கலான பொருள்கள் ஆராயப்படவில்லையா? இவை யாவும் நாம் சுயஆட்சி நடாத்தும் திறமை வாய்ந்தவர் என்பதைப் புலப்படுத்துவன அல்லவோ? 'சுதந்திரம்' என்பது, உரிமை அமைப்புக்களை நடாத்துதற்கு மக்களைப் பண்படுத்தும்; உரிமை அமைப்புக்கள், சுயஆட்சிக்கு மக்களைப் பண்படுத்தும்" என்று கிளாட்ஸன் சொல்லியிருக் கிறார்.

"முஸ்லிம் லீக்குடன் கலந்து ஒரு கோரிக்கை செபபஞ் செய்ய வேண்டுமென்னுங் கருத்து இத்தீர்மானத்தி லிருக் கிறது. முஸ்லிம் லீக்கும் இங்கே கூடப்போவது குறித்துக் கழிபேருவகை எய்துகிறேன். நாம் சகோதரர்; நாம் ஒன்று பட்டே தாயின் விடுதலைக்காகப் பாடுபடுகிறோம். இரண்டு அமைப்புஞ் சேர்ந்து ஒரு கோரிக்கையைச் செப்பஞ் செய்து விடுமாயின், அஃது இந்தியாவின் ஒருமுக விருப்பம் என்பதை உலகம் உணரும். ஆகவே, நாம் ஒருமைப்பட்டு உழைப் போமாக; சுயஆட்சிக் கொடியின் கீழ் நிற்போமாக.

காலநிலை மாறி வருகிறது. நாகரிக நாடுகளின் அநு தாபம் நம் பக்கம் திரும்பி யிருக்கிறது. கடவுள் அருளும் நமக் குத் துணை நிற்கிறது. இச்சமயத்தில் நாம் பிரிட்டிஷ் தொடர் புடைய சுயஆட்சி பெறமுயல்வோமாக." —சுரேந்திரநாதர்

"யான் இத்தீர்மானத்தை ஆமோதிக்க முன்வந்திருக் கிறேன். இத்தீர்மானம் இம்மேடையில் இன்று கொண்டு

வரப்பட்டதன்று ; முப்பது ஆண்டாகப் பேசப்படுவது. இப்பொழுது சுயஆட்சி சேய்மையில் நிற்கவில்லை ; அணிமையிலேயே நிற்கிறது. நமது வாழ்விலேயே நாம் அதை அடைவோம் ; பெறுவோம். சுயஆட்சிக் காலத்தில் ஒரு சட்டத்தால், ஆயுதச்சட்டம், அச்சுச்சட்டம் முதலிய கொடுஞ் சட்டங்களைத் தொலைத்து விடலாம். இக்காங்கரஸ் நமது பார்லிமெண்டாயின், மக்களின் வறுமைப் பிணி ஒழிந்தே போகும். 'இந்திய மக்களில் பாதிப்பேர் ஒருவேளை உண்பவராயிருக்கிறார்' என்று ஸர் ஹண்டரும் ஸர் எல்லியட்டும் சொல்லியுள்ளனர். அவர் வெறும் வருணனைக்காரரல்லர். அவர் சரித்திரக்காரர். வறுமைப் பிணியின் கொடுமையை நீங்கள் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். அக்கொடுமை - அத்துன்பம் - உங்களுக்கு நன்கு தெரியும். தாங்கொணாத அக்கொடுமை - அத்துன்பம் - என்ன செய்யும் ? பசி பலவுஞ் செய்யும். இளம்பிள்ளைகள், ஆவேசத்தால் - வெறியால் - பிறர் தூண்டுதலால் - நெறியல்லா நெறி செல்கின்றார்களில்லை. அவர்கள்மீது பழி சுமத்துவது தவறு.

ஐயாயிரம் ஆண்டுக்கு முன்னே இந்தியா தன்னைத்தான் ஆண்டு கொண்டதென்று சரித்திரம் அறைகூவுகிறது. பழைய பாபிலோனுடன் இந்தியா வாணிபஞ் செய்திருக்கிறது. இந்தியா தொழிலிலும் வாணிபத்திலுஞ் செல்வாக்குப் பெற்றிருந்தது. * * * இந்திய உட் சண்டைகள் சிலரால் எடுத்துக்காட்டப்படுகின்றன. எங்கே சண்டை நிகழவில்லை ? இங்கிலாந்திலும் போர்கள் மூண்டன. சூரத்தில் பிரிட்டிஷ் வாணிபம் தொடங்கப்பட்டதிலிருந்து ஓர் அரசரின் தலை போயிற்று ; மற்றோர் அரசர் நாட்டினின்றும் துரத்தப்பட்டார் ; இரண்டு முறை உட்குழப்பங்கள் நிகழ்ந்தன. இந்தியாவில் சண்டைக் காலங்களிலும் கிராம மக்களின் வாழ்க்கை குலைந்ததில்லை.

போருக்குப் பட்டாளங்கள் போதலைக் கண்ணால் பார்த்துக் கொண்டே இந்தியக் கிராம மக்கள் ஏர் உழுது செல்வார்கள்.

இந்தியா நோயாளியன்று. இந்தியா ஆண்டகைமை யுடையது ; ஆனால் உறங்கிவிட்டது ; இப்பொழுது விழித்து வருகிறது. 'அடிமைத் தன்மை மக்களின் ஒழுக்கத்தைக் கெடுப்பது. சுயஆட்சி ஒன்றே உரிய மருந்து' என்று கோகுலே கூறியுள்ளனர். நீங்கள் நாட்டின் பல பாகங்களி லிருந்து இங்கே வந்து ஈண்டியிருக்கிறீர்கள். நீங்கள் காட்டு மிராண்டிகளின் வழிவழி வந்தவர்களல்ல. சுயஆட்சிக்கு உங் களைப் பண்படுத்த மேல் நாட்டார் தேவையில்லை. நீங்கள் வீரர்களின் மரபில் தோன்றியவர்கள் ; நாட்டாட்சி நடாத்திப் பேரும் புகழும் பெற்று ஆண்டகைமை வாய்ந்தவர்களின் வழித்தோன்றல்கள். உங்களுக்குள் தன்னம்பிக்கை எழுமா னால், உங்கள் சக்தியை – உங்கள் திறத்தை - உங்கள் அறிவை – நீங்கள் உணர்வீர்களானால், நீங்கள் சுயஆட்சி செலுத்த வல்ல வர்களாவீர்கள். இதோ ஸர் சத்யேந்திரநாதர் இருக்கிறார். இவர் இராஜப்பிரதிநிதியுடன் சமமாக நின்றே அவர்தஞ் சபையில் சேவை செய்தவர். இவரைப் போன்றவர் பலருளர். அவர்தந் திறம் உலகுக்குப் புலனாக வாய்ப்பு அளிக்கப்படவில்லை. ஆகவே, இந்தியர் சுயஆட்சிக்கு அருகரல்லர் என்று நினைப் பதும் சொல்வதும் தவறு. நீங்கள் உங்கள் பழமையைத் தெளிந்து உங்கள் காலால் நீங்கள் நிற்கவே உறுதி கொள்ளுங் கள்.''

—அன்னிபெஸண்ட்

"சுயஆட்சிக்கு நாம் அருகரா அல்லரா என்று ஆராய்ச்சி செய்ய வேண்டுவதில்லை. இந்தியாவில் மூன்றிலொரு பங்கு, சுதேச மன்னர்களால் ஆளப்படுவது கண் கூடாகக் காட்சி யளிப்பது. * * * *

'மனிதன், எதை நினைக்கிறானோ அவன் அதுவாவன்' என்று வேதம் முழங்குகிறது. ஆதலின், சகோதரிகளே! சகோதரர்களே! உரிமை மக்களாக நீங்கள் நினையுங்கள்; அடிமை என்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள்; சுயஆட்சிக்குத் திறமையற்றவர்கள் என்ற நினைவை ஒழியுங்கள்; 'குறையுடையேம் குறையுடையேம்' என்ற கருத்தையே களைந்து விடுங்கள். கடவுள் துணை உங்களுக்குக் கிடைக்கும்.''—மாளவியர்

"பல நூறு ஆண்டுகளாகப் பல காரணம்பற்றிப் பலவிதக் குழப்பங்கள் நேர்ந்தன. அவையெல்லாம் போயின. சமரசம் பூத்துள்ள இந்தப் பெரிய நகரில் ஹிந்துக்களும் முஸ்லிம்களுமாகச் சகோதரநேயத்துடன் நீங்கள் கூடியிருக்கிறீர்கள்; உங்கள் ஒற்றுமை இன்றியமையாதது. அவ்வொற்றுமை யின்றி எதிர்கால இந்தியாவே அரும்பாது.''—சரோஜினி

## சுய ஆட்சி

பம்பாய் காங்கரஸிலே, சுயஆட்சித் தீர்மானம், மிதவாதக் கட்டினின்றும் ஓரளவு விடுதலையடைந்தது. அவ்விடுதலை தலைவர்களின் பேச்சில் நன்கு விளங்குதல் காண்க. காலநிலையை ஒட்டிக் காங்கரஸின் மூல விதியிலும் மாற்றஞ்செய்யப்பட்டது. கல்கத்தா காங்கரஸ் (1906) உணர்வு மீண்டும் உயிர்த்தெழுந்தது. திலகர் கூட்டம் செய்த தியாகம் பயன்தந்தது. 'அலகபாத் மகாநாட்டில் (1908) திருத்தப் பெற்றுச் சென்னைக் காங்கரஸில் ஏற்கப்பெற்ற சுயஆட்சியைப் பற்றிய மிதக் கொள்கை பம்பாயில் வீழ்ந்தது; தீவிரக்கொள்கை மீண்டும் எழுந்தது' என்று சுருங்கச் சொல்லலாம். காங்கரஸுக்குள் நேர்ந்த பிளவு ஒழிந்தது. திலகர்

கூட்டம் காங்கரஸில் பழையபடி சேர்ந்து தொண்டாற்றத் தலைப்பட்டது.

## காங்கரஸ் - லீக்

பம்பாயில் காங்கரஸ் கூடிய இடத்திலேயே முஸ்லிம் லீக்கும் கூடிற்று. லீக், காங்கரஸுடன் உறவுபூண்டது; சுய ஆட்சிக் கோரிக்கையைச் செப்பஞ் செய்யக் காங்கரஸுடன் ஒத்துழைக்க உறுதிகொண்டது. காங்கரஸும் லீக்கும் ஒன்றுபட்டால் நாட்டில் முடியாத தொன்றிருக்குமோ ? அவ்வொற்றுமையே சுயராஜ்யம். பம்பாய் நிகழ்ச்சிகளிற் சிறந்தது காங்கரஸ் - லீக் ஒற்றுமை.

காங்கரஸ் - லீக் ஒற்றுமை சுயராஜ்யமென்பது அதிகாரவர்க்கத்துக்கு நன்கு தெரியும். அதிகாரவர்க்கம் அடக்குமுறைமீது கருத்துச் செலுத்தியது ; அடக்குமுறைப் பாணம் பூட்டிற்று. 'நியூ இந்தியா' பத்திரிகையின் இரண்டாயிரம் ரூபா ஈடுகாணம் பறிமுதல் செய்யப்பட்டது. அன்னிபெஸண்ட் அம்மையார் பம்பாய் போதல் கூடாது என்று அரசாங்கம் கட்டளை பிறப்பித்தது. அரசியல் நன்னடக்கைக்கென்று திலகர் பெருமானிடம் ரூ. 40,000 ஈடுகாணம் கேட்கப்பட்டது. அதைப் பம்பாய் ஹைகோர்ட் தடுத்துவிட்டது.

முன்னேற்பாட்டின்படி 1916-ல் காங்கரஸ் கூடுதற்குள் காங்கரஸாலும் முஸ்லிம் லீக்காலும் முறையே தெரிந்தெடுக்கப்பட்ட இரண்டு அரசியல் நிபுணர் கூட்டமும் ஒன்றி ஒரு கோரிக்கையைச் செப்பஞ் செய்தது.

அது ' காங்கரஸ் - லீக் ' கோரிக்கை என்று அழைக்கப்பட்டது.

## காங்கரஸுக்குள் ஒற்றுமை

பலப்பல நிகழ்ச்சிகளிடை 1916-ம் ஆண்டில் இலட்சுமணபுரியில் பாபு அம்பிகாசரண்முஜும்தார் தலைமையில் முப்பத்தோராவது காங்கரஸ் கூடியது. அது, சரித்திர உலகேறிய காங்கரஸ்களுக்குள் ஒன்று.

அன்னிபெஸண்ட் அம்மையார் முயற்சிகளெல்லாம் திரண்டு பயனளித்த இடம் இலட்சுமணபுரி என்று கூறலாம். அம்மையார் முயற்சிகளுள் சிறந்தது, காங்கரஸுக்குள் தோன்றிய மிதவாத - தீவிரவாத வேற்றுமையைப் போக்கித் திலகர் கூட்டத்தைப் பழையபடி காங்கரஸில் கொண்டுவந்து சேர்த்ததாகும். பயன் கருதாத முயற்சி எப்பொழுதும் வெற்றியளித்தல் இயல்பு.

திலகரும் அவரைச் சேர்ந்தவரும் எப்பொழுது காங்கரஸில் சேரப்போகின்றனர் என்று நாடு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. இடையில் நாட்டுக்கும் காங்கரஸுக்கும் பெரிதும் தொடர்பில்லாமலே போயிற்று. அத்தொடர்பு சென்னையில் (1914) ஒருவிதமாகவும், பம்பாயில் (1915) ஒருவிதமாகவும் ஏற்பட்டது. இலட்சுமணபுரியில் அது முற்றுப்பெற்றது.

இலட்சுமணபுரி திலகருக்கும் பாலருக்கும் அகமலர்ச்சியுடன் வரவேற்பளித்தது. அந்நேரத்தில் அரவிந்தர் நினைவும் லஜபதி நினைவும் பலருக்குத் தோன்றின. அரவிந்தர் இந்தியாவிலேயே ஓரிடத்தில் தவங்கிடக்கலா

யினர். லஜபதி தாய்நாட்டை விடுத்து மேல்நாடு சென்ற னர். அங்கே அவர் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய எல்லைக்குள் நுழைதலாகாது என்று ஒரு கட்டளைபெற்று அமெரிக் காவில் காலங்கழித்து வந்தனர். இலட்சுமணபுரிக் காங்கரஸ் திலகரைக் கண்டு கண்டு மகிழ்ச்சியுற்றது; தாய்கண்ட சேய்போலாயிற்று.

வழக்கம்போலப் பல தீர்மானங்கள் நிறைவேறின. அவற்றுள் சிறந்தன சுயஆட்சித் தீர்மானமும், காங்கரஸ் - லீக் கோரிக்கைத் தீர்மானமுமாகும்.

காங்கரஸில் திலகர் சொரிந்த மணிமொழிகளின் சுருக்கம் வருமாறு :—

" சுய ஆட்சியைப்பற்றி நாம் எல்லோரும் ஒருமுகமாக அறைகூவுதலைக் கேட்க நான் பத்தாண்டாக வாழ்ந்தமை குறித்து மகிழ்வெய்துகிறேன். நமக்குள் அரசியலில் தோன் றிய கருத்து வேற்றுமை ஒழிந்ததைக் கண்டு மகிழ்ச்சி யுறு தற்கு மட்டும் ஆண்டவன் எனக்கு வாழ்வளித்தானில்லை; ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை யொழிந்து ஒற்றுமை விளைந்த தைக் காணவும் ஆண்டவன் எனக்கு வாழ்வளித்தனன். ஐக் கிய மாகாணம் நம்மை ஐக்கியப் படுத்தியது.........

கோரிக்கையை எப்பெயரிட்டு அழைப்பினும் அழைக்க. பெயரைப்பற்றிய கவலை எனக்கில்லை. ஒருமைப்பட்ட ஒரு கோரிக்கையை வெளியிட வேண்டுமென்று நீங்கள் உணர்ந்து உழைத்ததைப் பாராட்டுகிறேன். அதன்கண் முழு சுய ஆட்சி ஒளிராமலிருக்கலாம். ஆனால் அது கரு நிலையிலில்லை; அந்நிலையைக் கடந்ததாகவே இருக்கிறது. அது ஸ்தல ஸ்தாபன அமைப்பைவிடச் சிறந்ததாகவே இருக்கிறது. அது விரிந்த நோக்கில் சுயராஜ்யப்பொருள் பெறுததாயிருக்கலாம்; ஆனால் 'சுதேசிய'த்தைக் காட்டிலும், 'பகிஷ்கார'த்தைக் காட்டி

லும் பெரியதாயிருக்கிறது. முப்பதாண்டாகக் காங்கரஸ் நிறைவேற்றிய தீர்மானங்களின் சாரம், காங்கரஸ் - லீக் கோரிக்கையாக உருக்கொண்டு நிற்கிறது............

கடந்த முபபதாண்டாக நாம் சுயஆட்சியைக் குறிக் கொண்டே போராடி வருகிறோம். பத்தாண்டுக்கு முன்னே ஹூக்லியில் சுயஆட்சி முழக்கத்தை முதல் முதல் கேட்டோம். அம்முழக்கஞ் செய்தவர் யார் ? பெருங்கிழவர் - பார்ஸி தேசபக்தர் - தாதாபாய். முஸ்லிம் சகோதரர்களுக்கு நாம் பெரிதும் விட்டுக்கொடுத்து இணங்கினோம் என்று சொல்லப் படுகிறது. அது தவறு. முஸ்லிம்களுக்குமட்டும் இப்பொழுது சுயஆட்சி உரிமை வழங்கப்படினும் யான் கவலையுறேன். அவ் வுரிமை இராஜபுத்திரர்க்குக் கொடுக்கப்பட்டாலும் என் மனம் துன்புறாது. அது, ஹிந்துக்களில் ஒடுக்கப்பட்டவர் என்று கருதப்படுவோர்க்கு அளிக்கப்படினும் என்னுள்ளத்தில் வருத் தம் தோன்றாது. சுயஆட்சி உரிமையை இந்திய மக்களுக்குள் எப்பகுதியினர் பெறினும் பெறுக. அதைப்பற்றிய கவலை வேண்டா... .....

மிதவாதி - தீவிரவாதி ஒற்றுமையைப்பற்றியும், ஹிந்து-முஸ்லிம் ஒறறுமையைப்பற்றியும் தீர்மானம் மட்டும் நிறை வேற்றிச் செல்வதால் பயன் விளையாது. ஒற்றுமையா லாய பயன் விளைதல் வேண்டும். நமக்குள் ஒருமைப்பட்ட சக்தி பிறத்தல் வேண்டும். அச்சக்தி கொண்டு மேலும் போருக்கு நம்மைப் பண்படுத்த உழைத்தல் வேண்டும்."

இலட்சுமணபுரியில் திலகர்பெருமானும் அவரைச் சார்ந்தவரும் காங்கரஸில் கலந்துகொண்டதும், அவர் அன்னிபெஸண்ட் அம்மையார் புரிந்துவந்த அறக்கிளர்ச் சிக்குத் துணைநிற்க உறுதிகொண்டதும் நாட்டிற்கு உயிர்ப்பளித்தன. நாடு முழுவதும் ஒன்றுபட்டது. மக்கள்

நெஞ்சில் சாதிமத வேற்றுமைகள் படியவில்லை ; நாடே படிந்தது. அன்னிபெஸண்ட் அம்மையார் நாட்டின் நாலு பக்கமும் பறந்து பறந்து பிரசாரஞ் செய்தனர். எங்கணும் சுயஆட்சி வேட்கை எழுந்தது. அதற்குரிய அறக்கிளர்ச்சி ஓங்கிநின்றது.

## அடக்குமுறை

அன்னிபெஸண்ட் அம்மையார் சட்ட மறுப்பையோ மூர்க்கநெறியையோ மனத்தாலும நாடுவோரல்லர். அவர் சட்ட வரம்பில் நின்றே கிளர்ச்சிசெய்யும் மனப் பான்மையுடையவர். அத்தகைய ஒருவரது அறக்கிளர்ச்சி யும் அந்நாளைய சென்னை அரசாங்கத்துக்குப் பிடியாமற் போயிற்று. அக் கிளர்ச்சியை ஒடுக்கச் சென்னை அரசாங்கம் முற்பட்டது. பெண்ட்லண்ட் அரசாங்கம் 1917-ம் ஆண்டில் ஜூன்மதியில் அன்னிபெஸண்ட் அம்மையாரைக் காப்பில் (Internment) வைத்தது.

அம்மையார் காப்பில் வைக்கப்பட்ட நாள் ஒவ்வொரு மாதமும் இந்தியா எங்கணும் கொண்டாடப்பட்டது நாடு முழுவதும் ஊர்வலங்களும் கூட்டங்களும் இலட்சக் கணக்கில் நடைபெற்றன. ஓர் ஊர்வலத்திலாவது, ஒரு கூட்டத்திலாவது மூர்க்கம் எழுந்ததில்லை. எக்காரணம் பற்றியும் எவ்விடத்தும் ஒரு துளி இரத்தமும் சிந்தப் படவில்லை. அமைதியாக - மிக அமைதியாக - ஊர் வலங்களும் கூட்டங்களும் நடைபெற்றன. அஃது இயக்கத் தலைவரின் மனப்பான்மையைப் புலப்படுத்துவ தென்க.

அக்காலத்தில் சென்னை ஹைகோர்ட் நீதிபதியா யிருந்து ஆறுதல் பெற்றுவந்த டாக்டர் சுப்பிரமணிய ஐயர் குகையிலிருந்து புறப்பட்ட சிங்கமென வெளிக் கிளம்பி நிகழ்த்திய கிளர்ச்சி சொல்லால் சொல்லுந்தகைய தன்று. முதுமை அவரைவிட்டு ஓடியது. இளம் வீரம் அவரிடை மதர்த்தது.

டாக்டர் சுப்பிரமணிய ஐயர், 'சுய ஆட்சிக் கிளர்ச் சியை விடேன் விடேன்' என்று சிங்கநாதஞ் செய் தார்; 'ஸர்' பட்டத்தை வீசி எறிந்தார்; அந்நாளில் அமெரிக்கப் பிரஸிடெண்டாயிருந்த வில்ஸனுக்கு ஒரு முடங்கல் தீட்டினர். அம்முடங்கல் பிரிட்டனையும் பார்லிமெண்டையும் கலக்கிவிட்டது.

விளைந்த பயன் என்ன? மூன்று மாதத்துக்குள் அம்மையார் விடுதலையடைந்தார். அம்மையார் விரும்பிய பொறுப்பாட்சி உறுதிமொழி அரசாங்கச் சார்பில் பார்லிமெண்டில் பிறந்தது. அதுபோழ்து இந்திய அமைச்சராயிருந்த திரு. மாண்டேகு இந்திய நிலைமையை நேரில் உணர்தற்கு இந்தியா போந்தனர்.

அந்நிலையில் முப்பத்திரண்டாவது காங்கரஸ் கல்கத்தாவில் அன்னிபெஸண்ட் அம்மையார் தலைமை யில் கூடிற்று. ஐயாயிரம் பிரதிநிதிகள் குழுமினர்கள். தீர்மானங்கள் பல நிறைவேறின. அவற்றுள் பொறுப் பாட்சித் தீர்மானமும், அலி சகோதரரின் விடுதலையைப் பற்றிய தீர்மானமும் மக்கள் நெஞ்சைக் கவர்ந்தன.

1918-ம் ஆண்டில் மாண்டேகுவின் அறிக்கை வெளிவந்தது; ஐரோப்பா யுத்தம் முற்றுப்பெற்றது;

டெல்லியில் பண்டித மாளவியர் தலைமையில் காங்கரஸ் நடைபெற்றது.

## ரௌலட் சட்டம்

பார்லிமெண்டில் மாண்டேகு அறிக்கையை ஒட்டி இந்திய அரசியல் சீர்திருத்தச்சட்டம் உருக்கொண்டு வந்த வேளையில், யுத்தத்தில் பொன்னையும் பொருளையும் உயிரையும் வாரி வாரி இறைத்துப் பிரிட்டனுக்கு வெற்றி தேடிய இந்தியாவை ஒறுக்க அரசாங்கம் உளங்கொண்டது. இந்தியாவில் மூர்க்க - அராஜக - சதியாலோசனைக் கூட்டம் திரண்டிருந்ததென்று கருதி, அதை ஆராய்ந்து உண்மை காண, ரௌலட் என்பவர் தலைமையில் ஒரு விசாரணைக் கூட்டம் அரசாங்கத்தால் அமைக்கப்பட்டது. அக்கூட்டம் விசாரித்து வெளியிட்ட அறிக்கையை அடிப்படையாக்கொண்டு இந்தியச் சட்டசபையில் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது. அதைச் சட்டசபைப் பிரதிநிதிகள் மறுத்தார்கள்; நாடே மறுத்தது. அரசாங்கம் பிடிவாதத்தில் நின்று மசோதாவைச் சட்டமாக நிறைவேறச் செய்தது.

மகாத்மா காந்தி, இராஜப் பிரதிநிதி லார்ட் செம்ஸ்பர்டைக் கண்டு, சட்டத்தில் ' இராஜப் பிரதிநிதி இலச்சினை பொறியாது விடுதல் நல்லது' என்று விண்ணப்பித்தனர். லார்ட் செம்ஸ்பர்ட் மகாத்மாவின் விண்ணப்பத்துக்குச் செவிசாய்த்தாரில்லை. மகாத்மாவின் சிந்தை நாட்டின்மீது நடந்தது. அவர் நாடு முழுவதுஞ் சுற்றிச் சுற்றிச் சத்தியாக்கிரகத்துக்கு நாட்டைப் பண்படுத்த முயன்றனர். சத்தியாக்கிரகம் தொடங்குதற்கு

முன்னர், நாட்டின் நிலையைச் சோதிக்கவேண்டி, சத்தியாக்கிரக முறையில் ஒருநாள் கொண்டாடப்பட வேண்டுமென்று காந்தியடிகள் விரும்பினர். அதற்கென ஓர் அறிக்கை அவரால் விடுக்கப்பட்டது. அது வருமாறு :—

'பல கூட்டங்களில் யான் விளக்கிக் கூறியபடி சக்தியாகிரகம் ஒரு சமய சம்பந்தமான இயக்கமே. அது தூய்மைக்கும் கழுவாய்க்கும் உரிய முறையாகும். தனக்குத்தானே வருந்துவது, சீர்திருத்தத்தையோ அல்லது துக்க நிவர்த்தியையோ நல்கும். ஆதலால், இராஜப்பிரதிநிதி (1919 - ம் ஆண்டு எண் 2) சட்டத்துக்குச் சம்மத மளிக்கும் வாரத்தில் வரும் ஞாயிற்றுக்கிழமைக்கு அடுத்த ஞாயிற்றுக்கிழமையை (அதாவது ஏப்ரல் 6) நம்மை இழிவு படுத்திய நாளாகவும், அது குறித்து ஆண்டவனை வேண்டும் நாளாகவும் கொள்ளுமாறு சொல்லத் துணிகிறேன். நமது மனோநிலையைத் திறம்பட வெளியிடும் வழியில் செவ்வனே ஒழுங்காக அந்நாளைக் கொண்டாடச் சில முறைகளை ஈண்டுக் குறிப்பிடுகிறேன்.

(க) சமயக் கொள்கை காரணமாகவாதல், உடல்நிலை காரணமாகவாதல் நேரும் முட்டுக்கு உட்படுவோர் தவிர மற்ற வயதுற்ற அனைவரும் முன்னாள் இரவு உணவுகொண்ட நேரத்திலிருந்து இருபத்து நான்கு மணிநேரம் நோன்பிருத்தல் வேண்டும். பட்டினி குறிக்கும் முறையிலாவது, அரசாங்கத்தை வருத்தும் நோக்குடனாவது இந்த நோன்பை ஏற்றலாகாது. சத்தியாக்கிரக அறிக்கையில் கையெழுத்திட்ட சத்தியாக்கிரகிகளால் இந் நோன்பு தங்களைச் சட்ட மறுப்புக்குத் தக்கவர்களாக்க ஒழுங்கு படுத்துங் கருவியாகக் கொள்ளப்படல் வேண்டும்; மற்றவர்களால் இது தங்கள் மனவருத்தத்தை வெளியிடுவதாகக் கொள்ளப்படல் வேண்டும்.

(உ) பொது நலத்துக்கு இன்றியமையாத சில வேலைகள் தவிர மற்றவேலைகளெல்லாம் அன்று நிறுத்தப்படல் வேண்டும். சந்தையும், மற்ற வாணிப நிலையங்களும் மூடப்படல் வேண்டும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் வேலை செய்வோர் முன்னரே ஓய்வு கேட்டுப் பெற்று வேலை செய்யாமலிருக்கலாம்.

இவ்விரண்டும் அரசாங்க ஊழியராலும் கொள்ளப் படலா மென்று தயங்காது கூறுவேன். அரசியல் வாதங்களிலும் கூட்டங்களிலும் அவர்கள் வெளிப்படையாகத் தலையிட முடியாமற் போயினும், முக்கியமான சிலவற்றில் ஒரு வரம்புக்குள் நின்று தங்கள் மனோநிலையை வெளிப் படுத்தலாமென்று யான் கருதுகிறேன்.

(ங) அன்று இந்தியா முழுவதும், கிராமங்களிலும் பொதுக் கூட்டங்கள் கூடி கொடுஞ்சட்டங்கள் திரும்ப வாங்கப் படல் வேண்டுமெனத் தீர்மானங்கள் நிறைவேற்றல் வேண்டும்.

இவை அங்கீகரிக்கக் கூடியனவாயின், ஆங்காங் குள்ள சத்தியாக்கிரக சங்கத்தார் தக்க ஏற்பாடு செய்யும் பொறுப்புடையவராகிறார். மற்ற மற்ற சங்கத்தாரும் இம் முயற்சியில் தலைப்பட்டுழைப்பாரென நம்புகிறேன்.'

## பஞ்சாப் படுகொலை

காந்தியடிகள் விரும்பியவாறு சத்தியாக்கிரக நாள் யாண்டுங் கொண்டாடப்பட்டது. அத்திருநாளைப் பாஞ் சாலம் மிகச் சிறப்பாகக் கொண்டாடியது; அதன் பயனாகப் பாஞ்சாலம் என்ன கண்டது? அடக்குமுறை கண்டது; இராணுவ ஆட்சி கண்டது; ஜாலியன் வாலாபாக் கொலை கண்டது. ரௌலட் சட்டத்தால் கனன்று கொண்டிருந்த நாடு, பஞ்சாப் படுகொலையால் எழுநாவிட்டு எரியலாயிற்று. அச்சமயத்தில் பிரிட்டிஷ்

அரசாங்கத்தால் கிலாபத்துக்கு நியாயம் பிறவியாமை யும் உடன் கலந்தது. ரௌலட் சட்டமும், பஞ்சாப் படுகொலையும், கிலாபத் கிளர்ச்சியும் ஒன்றுபட்டுச் சுயராஜ்ய வேட்கையை எழுப்பின.

## நாட்டு வாரம்

பஞ்சாப் படுகொலை, நாட்டிடைச் சுயராஜ்ய வேட் கையை எழுப்புதற்கு ஓர் ஏதுவாக நின்றமையால், அது நிகழ்ந்த வாரத்தை ஒவ்வோராண்டும் நாட்டு வாரமாகக் கொண்டாடுதல் வேண்டுமென்று மகாத்மா காந்தி நாட்டைக் கேட்டுக்கொண்டனர். நாடும் அவ்வாறே கொண்டாடி வருகிறது. நாட்டு வாரக் கொண்டாட்டத் தைக் குறித்து ஏறக்குறைய ஒவ்வோர் ஆண்டும் காந்தி யடிகள் ஒவ்வொருவித அறிக்கை விடுப்பது வழக்கம். முதலிரண்டாண்டின் அறிக்கைகள் வருமாறு :—

### I

### (10—3—1920)

'ரௌலட் சட்டத்தின் ஆற்றலை வீழ்த்தி அதைத் திருப் பிடிக்கச் செய்த நாள் **ஏப்ரல் ஆறும்** நாளாகும். **ஏப்ரல் பதின்மூன்று** அஞ்சத்தக்க கொலைக்காட்சியையும், ஹிந்து முஸ்லிம் இரத்தம் ஆறாக ஓடியதையுங் கண்டு ஒற்றுமையை உறுப்படுத்திய நாள்'

'இவ்விரு நிகழ்ச்சிகளையும் எவ்வாறு நினைந்து கொண் டாடுவது? ஏப்ரல் ஆறும்நாள் இருபத்து நான்கு மணி நேரம் நோன்பிருந்து, மாலை எழு மணிக்கு ஆங்காங்கே நாட்டார் கூட்டங் கூட்டமாகக்கூடி, ரௌலட் சட்டம் உள்ளவரை நாட்டில் அமைதி நிலவுதல் அரிதென்றும், அச்சட்டம் அழிக்கப்

படல் வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றல் வேண்டும். 'ரௌலட் சட்டம் செயலின்றித் துருப்பிடித்துக் கிடந்தாலும், அது சட்டமாக உறங்கலால் அஃது அழிக்கப்படல் வேண்டும்'

'வாரமுழுவதும் அதாவது பதின்மூன்று நாள்வரை ஜாலியன் வாலாபாக் நினைவுக் குறிக்காகப் பொருள் திரட்டல் வேண்டும்; இது பன்னிரண்டாம் நாளுக்குள் முற்றுப்பெறல் வேண்டும்'

'பதின்மூன்றாம் நாள் - நாட்களிற் சிறந்த நாள் - விரதத்தாலும் ஜெபத்தாலும் கழிக்கப்படல் நலலது. அந்நாளில் மக்கள் உள்ளத்தில் பகைமையாதல் சினமாதல் ஊர்தலாகாது. அன்று உயிர் துறந்த ஒன்று மறியா நம் மக்களை நினைந்து சீராட்டல் அறம்; அன்று நிகழ்ந்த கொடுஞ் செயல்களை நினைத்தல் கூடாது. நாடு தியாகத்துக்குச் சித்தமாக எழ வேண்டுமேயன்றிப் பகைமை பாராட்டிப் பழிக்குப் பழி வாங்க இகல்கொள்ளலாகாது. அன்றுங் கூட்டங் கூடிப் பஞ்சாப் படுகொலை போன்ற நிகழ்ச்சி மீண்டும் உறாதவாறு நடக்க இந்திய அரசாங்கத்தையும், ஏகாதிபத்திய அரசையும் கேட்டுக் கொள்வது ஒழுங்கு'

'ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையை வலியுறுத்தும் பொருட்டு ஏப்ரல் பன்னிரண்டில் வெள்ளிக்கிழமையில் மாலை ஏழு மணிக்கு இரு வகுப்பாருங் கலந்த கூட்டங் கூடி முஸ்லிம்கள் விருப்பப்படி கிலாபத்துக்கு நியாயம் பிறப்பிக்கக் கேட்குமாறு சொல்வேன்'

'இவ்வாறு இந்நாட்டு வாரம் தூய்மைக்கும், தற்சோதனைக்கும், தியாகத்துக்கும், முழு ஒழுங்குக்கும், நாட்டு விருப்ப வெளியீட்டுக்கும் உரியதா யிருத்தல்வேண்டும். காழ்ப்பு, இன்னச்சொல் சிறிதுந் தலைகாட்டலாகாது. ஆனல் அஞ்சாமையும் உறுதியும் நிலைத்து நிற்றல் வேண்டும்.'

## II

## (23—3—1921)

'ஏப்ரல் ஆறும் பதின்மூன்றும் வரப்போகின்றன. ஆறு, இந்தியாவின் விழிப்பைக் கண்டநாள். பதின்மூன்று துன்பங் கண்டநாள். இவ்விரண்டுநாளையும் சென்ற ஆண்டு இந்தியா ஊக்கத்தோடு கொண்டாடிற்று. * * * சென்ற ஆண்டு நம்மக்கள் இரத்தஞ் சிந்திய இடத்தை விலைக்கு வாங்கும் பொருட்டு நிதி திரட்டுவதில் கருத்துச் செலுத்தினோம். பின்னே பெருநிகழ்ச்சி நேர்ந்திருக்கிறது. இப்பொழுது கிலாபத்துக்கும் பஞ்சாப்புக்கும் நியாயம் பிறப்பிக்கவும், சுயராஜ்யத்தை நிலைபெறுத்தவும் நாடு உறுதிகொண்டு நிற்கிறது. டிசம்பர் காங்கரஸ், ஓராண்டிற்குள் சுயராஜ்யம்பெறத் தான் கொண்ட விருப்பத்தை வெளியிட்டிருக்கிறது. * * * * (இம்முறை) ஆறுவித கருமங்கள் ஆற்றப் பெறல்வேண்டும்.

(க) நம்மை நாம் அடக்கி ஆளுந்திறன் பெறல்வேண்டும் ; சாந்தமும் அமைதியும் தயையும் முற்றும் அலாந்து நிற்குந் தன்மையுடையவராதல் வேண்டும் ; ஒருவர்மீது நாம் வழங்கியுள்ள அன்பில்லாத ஒவ்வொரு மொழியையோ அல்லது நிகழ்த்தியுள்ள ஒவ்வொரு வினையையோ குறித்து மன்னிப்புக் கேட்டல் வேண்டும்.

(உ) நாம் இன்னும் நமது உள்ளத்தைத் தூய்மைப் படுத்தல் வேண்டும். ஹிந்து - முஸ்லிம்களாகிய நாம் ஒருவரை ஒருவர் ஐயுறுவதை அறவே ஒழித்தல் வேண்டும். நமக்குள் ஒருவருக்கொருவர் பிழைபாடு நிகழ்த்திக் கொள்ள இயலாதவர் என்னும் உறுதிபெறல் வேண்டும்.

(ங) ஹிந்துக்களாகிய நாம் நம்மினும் தூய்மையில்லாதவன் அல்லது இழிவானவன் அல்லது தாழ்ந்தவன் என்று ஒருவரை

யும் நினைத்தலாகாது. ஆதலால் 'பறையர்' வகுப்பினரைத் தீண்டாதாரெனக் கருதுவதை அறவே விட்டொழித்தல் வேண்டும். நம்முடன் பிறந்த ஒருவனைத் தீண்டாதானென எண்ணுவது பாவமென்று கொள்ளல் வேண்டும்.

(இவை மூன்றும் அகநிலை மாற்றத்துக் குரியன. இவைகளின் பயனை நமது நித்திய நடைமுறையில் காணலாம்).

(ச) குடியை நிறுத்த ஒவ்வொருவரும் இவ்வாரத்தில் பெருமுயற்சி செய்தல் சிறப்பு. * * * * எதற்கும் மூர்க்கத்துறை நண்ணுதல் கூடாது. உறுதிகொண்ட அமைதியான முயற்சி வெற்றியளிக்கும்.

(ரு) ஒவ்வொரு வீட்டிலும் இராட்டை சுழற்றலும், கதராடை பெருக்கலும் அணிதலும், அந்நிய ஆடையை அறவே தொலைத்தலும் நிகழல் நேர்மை.

(சு) இடையீடின்றித் திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பொருள் திரட்டல் வேண்டும்.

ஜனப்பிரதிநிதிகளும் நாடும் ஒருமுகமாக எதிர்த்தும் அரசாங்கம் ரௌலட் சட்டத்தை நிறைவேற்றியே தீர்த்தது. ஆனால் அச்சட்டம் நாட்டின்மீது பாயவே இல்லை. அஃது அரசாங்கத்தின் அம்பறாத்தூணியில் கிடந்து துருப்பிடித்தே ஒழிந்தது. எதிர்ப்புக்கிடை - அம்பறாத் தூணியில் கிடக்குமாறு - ஒரு சட்டத்தை ஏன் நிறைவேற்றல் வேண்டும்? பிடிவாதம்! ஜனநாயக உணர்வின்மை! ஜனநாயக உணர்வுக்குச் சுயராஜ்யம் தேவை. ஆகவே ரௌலட் சட்டமும், பஞ்சாப் படுகொலையும், கிலாபத் கிளர்ச்சியும் சுயராஜ்ய வேட்கையை எழுப்பின என்க.

## இரட்டை ஆட்சி

1919-ம் ஆண்டிலேயே மாண்டேகு - செம்ஸ்பார்ட் சீர்திருத்தம் பார்லிமெண்டில் நிறைவேறியது. அதில் இரட்டை ஆட்சி முறை அமைந்திருந்தது. அஃது இந்தியாவில் எழுந்த எரியைத் தணிக்குமென்று பிரிட்டனில் எதிர்பார்க்கப்பட்டது. பிரிட்டன் ஏமாற்றமடைந்தது. அவ்வுண்மை, அவ்வாண்டில் பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் ஜாலியன் வாலாபாக் படுகொலையைக் கண்ட அமிர்தசரஸில் கூடிய முப்பத்து நான்காவது காங்கரஸில் நன்குவிளங்கலாயிற்று. அக்காங்கரஸில் திலகர் பெருமான் வீறுகொண்டு கர்ச்சித்த கர்ச்சனை, மாண்ட் - போர்டு சீர்திருத்தத்துக்கு வரவேற்பும் நன்றியுங் கூற முயன்றவர் தீர்மானங்களெல்லாம் தூகள் தூகளாயின. 'ஜாலியன் வாலாவில் பாரதமக்களைச் சுட்டுச்சுட்டுக் கொன்ற டையர் முதலியோரை அவ்விடத்திலேயே பழி தீர்க்கவன்றோ தீர்மானம் நிறைவேற்றல்வேண்டும்' என்று திலகர் பெருமான் பேசிய பேச்சைக் கேட்ட மக்கள் எங்ஙனம் மாண்ட் - போர்டு சீர்திருத்தத்தை ஏற்க உளங்கொள்வர்? 'ஒருபக்கம் துப்பாக்கி; மற்றொரு பக்கம் சீர்திருத்தமா' என்று மக்கள் பேசலானார்கள். மக்களிடைச் சுயராஜ்ய வேட்கையே முருகி எழுந்து நின்றது.

## 35—45

சுயராஜ்யத் திலகர் 1920-ம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தனர். அவ்வாண்டு முப்பத்தைந்தாவது காங்கரஸ் நாகபுரியில் ஸி. விஜயராகவாச்சாரியார் தலை

மையில் கூடியது. அன்று முதல் இன்றுவரை காங்கரஸ் காந்தியடிகள் வழியே நடைபெற்று வருகிறது.

## சத்தியாக்கிரகம்

காந்தியடிகள் பலமுறை பல காரணம்பற்றிச் சத்தியாக்கிரகப்போர் நடாத்தியுள்ளனர். அவற்றுள் சிறந்தன இரண்டு. ஒன்று 1921-ல் தொடங்கப் பெற்றது; மற்றொன்று 1930-ல் துவங்கப்பெற்றது. இரண்டும் நாட்டின் விடுதலையைக் குறிக்கொண்டு நிகழ்ந்தவை. இரண்டு முறையும் பல்லாயிரக்கணக்கான மக்கள் சிறைபுகுந்தார்கள். சத்தியாக்கிரகப் போரால் நாடு முழுவதும் விழிப்புற்றது. காந்தியடிகளின் ஒவ்வொரு செயலும் அச்சத்தை அகற்றுவதென்பது உலகறிந்ததொன்று. முதல் சத்தியாக்கிரகப் போரிடை மாண்ட் - போர்டு சீர்திருத்தப்படி அமைந்த சட்டசபைகட்குத் திறப்புவிழா நிகழ்த்தப் போந்த கன்ஞட்பிரபுவையும், இந்தியாவைக் காணப்போந்த வேல்ஸ் இளங்கோவையும் இந்தியமக்கள் வரவேற்றலாகாதென்று அடிகளிட்ட கட்டளைகள் இந்தியாவின் அச்சத்தைப் போக்கிய திறத்தை என்னென்று கூறுவது ?

## சுயராஜ்யக் கட்சி

காந்தியடிகளின் அறக்கிளர்ச்சியால், மாண்ட் - போர்ட் சீர்திருத்தம் காங்கரஸின் ஒத்துழைப்பைப் பெரிதும் பெறவில்லை. இடையில் 1923-ல் காங்கரஸுக்குள் தேசபந்து தாஸ் தலைமையில் சுயராஜ்யக்கட்சி என்றொரு கிளை பிரிந்து சட்ட சபைகளைப் பற்றலாயிற்று. அதனல் எதிர்பார்த்த பயன் விளையவில்லை.

காங்கரஸுக்குள் சுயராஜ்யக்கட்சி என்று ஒன்று தோன்றியதற்குக் காரணம் சத்தியாக்கிரகப் போருக்குப் பின்னே நாட்டிடைத்தோன்றிய சோர்வேயாகும். ஆக்கவேலையில் மக்களுக்கு ஊக்கம் பிறக்கவில்லை. அது கண்ட ஸி. ஆர். தாஸ், சுயராஜ்யக்கட்சியைத் தோற்றுவித்து, நாட்டிடை ஊக்கமூட்டினார். அவ்வூக்கமும் நிலையாக நிற்கவில்லை. அதனால் காங்கரஸ் தலைவர் சிலரிடைச் சுத்த சுயராஜ்ய (சுயேச்சை) உணர்ச்சி தோன்றியது.

## சுத்த சுயராஜ்யக் கட்சி

1927-ம் ஆண்டில் சென்னையில் டாக்டர் அன்சாரியின் தலைமையில் நடந்த நாற்பத்திரண்டாவது காங்கரஸ் சுத்த சுயராஜ்யத் தீர்மானத்தை நிறைவேற்றியது. அது குறித்து முயன்றவர் திரு. எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார் உள்ளிட்ட சிலர். சுத்த சுயராஜ்யத் தீர்மானத்தைக் காந்தியடிகள் ஏற்க ஒருப்படவில்லை.

சுத்த சுயராஜ்யத் தீர்மானத்தை ஒட்டிக் கல்கத்தாவில் 1928-ல் பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் கூடிய நாற்பத்து மூன்றாவது காங்கரஸிலே கருத்து வேற்றுமை எழுந்தது. வேற்றுமையுணர்வு பெருகிப் புயலாகாதவாறு ஒருவித முடிவு காணப்பட்டது. சுயராஜ்யம் வழங்குதலைப்பற்றி அரசாங்கத்துக்கு ஓராண்டுக் காலவரை கொடுத்துப் பார்த்தல் வேண்டுமென்றும், அதற்குள் அரசாங்கம் காங்கரஸ் விருப்பத்துக்கு இணங்கி வாராவிடின் சுத்த சுயராஜ்யத்தை முன்னிட்டு அறப்போர் தொடுத்தல் வேண்டுமென்றும் சமாதானஞ் செய்யப்பட்டது. காங்கரஸ் எதிர்பார்த்தபடி அரசாங்கத்தினிடமிருந்து பதில் கிடைக்கவில்லை. 1929-ல்

லாகூரில் பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையிலே கூடிய நாற்பத்துநான்காவது காங்கரஸ், சுத்த சுய ராஜ்யங் குறித்துச் சத்தியாக்கிரகப் போர் துவங்கத் தீர்மானித்து அப்போரில் தலைப்பட்டது.

பின்னே காந்தி - இர்வின் உடன்படிக்கை காரணமாகப் போர் ஓரளவில் நின்றது. நாற்பத்தைந்தாங் காங்கரஸ் வல்லபாய் படேல் தலைமையில் கராச்சியில் கூடியது. லார்ட் வில்லிங்டன் ஆட்சியில் அடக்குமுறை மீண்டும் சண்டதாண்டவம் புரிந்தது.

நாற்பத்தாறுவது காங்கரஸ் பாபு இராஜேந்திர பிரஸாத் தலைமையில் பம்பாயில் நடைபெற்றது. அன்று முதல் இன்றுவரை காங்கரஸ் நிலைமை மாறி வரலாயிற்று.

## மாகாண சுயஆட்சி

மாண்டேகு - செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தை இந்தியா பயன்படுத்திய முறையை ஆராய்ந்து மேலே என் செய்வதென்று தெரிந்துகொள்ளப் பார்லிமெண்டினின்றும் ஸர் ஜான் சைமன் தலைமையில் ஒரு விசாரணைக் கூட்டம் திரட்டப்பட்டது. அக்கூட்டம், இந்தியா போந்து விசாரணை தொடங்கியபோது, அதனுடன் காங்கரஸ் கலந்து கொள்ளவில்லை. காங்கரஸ் விலகியே நின்றது. சைமன் குழு தனது கடனை ஒருவாறு ஆற்றிப் பார்லிமெண்டுக்கு அறிக்கை செலுத்தியது. அதனை யொட்டி, ஒரு 'வெள்ளை முடங்கல்' பார்லிமெண்ட் சார்பில் வெளி வந்தது. இரண்டுமுறை வட்டமேஜை மகாநாடு கூடிற்று. இரண்டாம் முறை மகாநாடு கூடுவதற்குள் காந்தி - இர்வின் உடன்படிக்கை நிறைவேறினமையால், அம்மகாநாட்டில் காந்தியடிகளும் மற்றுஞ் சில காங்கரஸாரும்

கலந்துகொண்டனர். வட்டமேஜை மகாநாட்டின் பயனாகப் பார்லிமெண்டில் 1935-ம் ஆண்டு இந்திய அரசியல் சீர் திருத்தம் சட்டமாக நிறைவேறியது. அதில் ஒருவித மாகாண சுயஆட்சி வழங்கப்பட்டது.

## பதவி ஏற்பு

1937-ல் புதிய அரசியல் சீர்திருத்தத்தை யொட்டித் தேர்தல் நடைபெற்றது. அதில் காங்கரஸ் கலந்து கொண்டது. வெற்றி காங்கரஸுக்குப் பெருமிதமாக விளைந்தது. நாடு காங்கரஸ் பக்கம் நிற்றல் வெள்ளிடை மலையெனப் பிரிட்டனுக்கு விளங்கலாயிற்று.

பதவி ஏற்றல் ஏலாமையைப் பற்றிக் காங்கரஸ் விரைந்து ஒரு முடிவிற்கு வரவில்லை; சின்னாள் தயங்கித் தயங்கி நின்றது; பின்னை தற்போதைய அரசியல் சட்டத்தின் நாற்பாங்கு எல்லைக்குள் நின்று, மந்திரிமார் கடனாற்றும்போது, அவர்தஞ் செயலில் கவர்னர் குறுக்கிட்டுத் தொல்லை விளைத்தலாகாது என்ற நிபந்தனைமீது காங்கரஸ் பதவி ஏற்க ஒருப்பட்டது. காங்கரஸ் சார்பில் முதன் முறையாகப் பதவி ஏற்கப்பட்டது. நாடு அமராவதி யாகுமென்று மக்கள் கருதலானார்கள். நாளடைவில் எல்லாம் உருவெளியாயின.

இரண்டரை ஆண்டு பல மாகாணங்களில் காங்கரஸ் சார்பில் ஆட்சிமுறை நடைபெற்றது. நாடு எதிர்பார்த்த படி ஆட்சி நடைபெறவில்லை. காரணம் பலபடக் கூறலாம். சிலவற்றை ஈண்டுக் குறிப்பிட்டு மேற்செல்கிறேன்.

## சில குறிப்புக்கள்

அபேட்சகரை தேர்ந்தெடுத்ததில் காங்கரஸ் பார்லிமெண்ட் போர்டு நேரிய முறையில் கவலை செலுத்தவில்லை.

அது, சட்டசபையின் பொறுப்புணராமலே தன் கடனை ஆற்றியது என்று கூறல் மிகையாகாது. போரில் தலைப் பட்டுச் சிறை புகுந்தவர்க்குச் சிறப்பளிக்க வேண்டித் தகுதியில்லாதாரையும் சட்டசபையில் அமர்த்தப் பார்லி மெண்டரி போர்டு கருத்துச் செலுத்தியது தவறு. சிறைபுகும் இயல் மட்டும் சட்டசபை அமர்வுக்குரிய தகுதி ஆகாது. அதற்கு வேறுபல இயல்களுந் தேவை. சிறைபுகுந்தோருள்ளும் தகுதியுடைவர் சிலர் இருப்பர். சிறை புகுந்தோரென்றும் - தியாகிகளென்றும் காட்டாளி கள் பலர் தெரிந்தெடுக்கப்பட்டனர். மிகச் சில அரசியல் ஞானிகளுந் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். பெரும்பான்மை யோர் காட்டாளிகளாயிருந்தமையால், அவர் சில அரசியல் ஞானிகளின் உதைப்பந்தாயினர். சட்டசபையில் ஜன நாயகம் ஓடியொளித்தது. சிலரது எதேச்சாதிகாரமும், அதிகாரவர்க்கமுமே தாண்டவம் புரிந்தன. காட்டாளி கள் தங்கட்கென ஒரு கொள்கை இல்லாதவர்கள். அவர் கள், காதுமுறைத்தால் ஒழுங்குமுறை தவறி நடப்பார் கள்; மற்ற வேளைகளில் அறிஞர்க்கு அடிமையாயிருப்பார் கள். அக்கூட்டத்தைச் சட்டசபைக்குப் பயன்படுத் தியது அறியாமை.

காங்கரஸ் வகுப்புவாதம் கடந்த அமைப்பு. ஆனால் காங்கரஸ் தலைவர்கள், தேர்தலில் வகுப்புவாத உளங் கொண்டே கடனாற்றினார்கள். அதனால் ஜனநாயக அமைப்புக்களில் வகுப்புவாதம் நுழைந்து குடையலா யிற்று. காங்கரஸ் சார்பில் எப்பொழுதும் தகுதியுடைய வரே தெரிந்தெடுக்கப்படல்வேண்டும். இதற்கு மாறாகக் காங்கரஸ் பார்லிமெண்டரி போர்டு நடந்தமையால் இடர் விளைந்தது.

காங்கரஸ் சார்பில் பதவியேற்ற மந்திரிமார் சம்பளத்தைக் குறைத்துக்கொண்டது போற்றத்தக்கது. அதே சமயத்தில் சட்டசபை அங்கத்தவர்க்குச் சம்பளம் அளிக்கத் தீர்மானித்தது முறைமையாகத் தோன்றவில்லை. பணம் பலரை வசப்படுத்தும் தன்மையுடையதன்றோ ?

தேர்தலின்போது போராட்டத்தைக் குறிக்கொண்டே காங்கரஸ் சட்டசபையில் நோக்கஞ் செலுத்தியது என்று பிரசாரஞ் செய்யப்பட்டது. சட்டசபை பற்றப்பட்ட பின்னைப் போராட்டம் காங்கரஸ் பேரேட்டினின்றும் மறைந்து போயிற்று. போராட்டத்துக்குப் பதிலாக ஒத்துழைப்பு மிகச் சிறப்பாக நடைபெற்றது. அதனால் அதிகாரவர்க்கம் மதங்கொள்ளலாயிற்று.

மந்திரிமாரும், காரியதரிசிகளும், மற்றச் சட்டசபை அங்கத்தவரும் காங்கரஸில் சாதாரண அங்கத்தவராயிருக்கலாம். அவர்கள் அகில இந்திய காங்கரஸ் கூட்டத்தில் அங்கத்தவரா யிருத்தலாகாது. அப்பொழுதே மந்திரிமார் பொறுப்புடனும் எச்சரிக்கையுடனும் சேவை செய்வர். அகில இந்திய காங்கரஸ் கூட்டத்தை மந்திரிமாரும், காரியதரிசிகளும், சட்டசபை அங்கத்தவர் சிலரும், மந்திரிமார் தயவை நாடிய ஸ்தல ஸ்தாபனங்களின் தலைவர் முதலியோரும் நிரப்பி நின்றதை நாடு வெறுத்தே வந்தது. பதவியிலிருப்போரும், அவரை மேற்பார்வையிடுவோரும் ஒரே கூட்டத்தவராயின் நீதி எங்ஙனம் விளையும் ? எங்ஙனம் வளரும் ?

காங்கரஸ் ஆட்சிக்கு உட்பட்ட மாகாணங்களுக்குள் கட்டுப்பாடு ஏற்படவே இல்லை. ஒவ்வொரு மாகாணமும் ஒவ்வொரு வழியில் நிற்கலாயிற்று. ஓரிடத்தில் துப்பறி

தல் நிறுத்தப்பட்டது ; மற்றோரிடத்தில் அஃது ஆக்கம் பெற்றது. ஓரிடம் நீதியையும் நிர்வாகத்தையும் பிரிக்க முனைந்தது ; இன்னோரிடம் இரண்டையும் பிரிக்க முனைய வேயில்லை. கிரிமினல் சீர்திருத்தச் சட்டம் ஆளப்பட்ட இடமுமுண்டு ; ஆளப்படாத இடமுமுண்டு.

காங்கரஸ் தோன்றிய நாள்முதல் நீதியும் நிர்வாகமும் ஒன்றாயிருத்தலாகாதென்று அறைகூவி வந்தது. அவ் வறைகூவல் காங்கரஸ் பதவியேற்ற பின்னுதல் செயலில் வந்ததா ? அதுபோழ்து நமது மாகாண முதல் மந்திரியா யிருநத சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் நீதியும் நிர்வாகமும் ஒன்றுபட்டேயிருத்தல் வேண்டுமென்று வலியுறுத்திச் சட்டசபையில் பேசியது அச்சபைப் புத்தகத்தில் படிந்து கிடக்கிறது. கிரிமினல் சீர்திருத் தச் சட்டத்தைக் குறித்துக் காங்கரஸ் சார்பில் பிறந்த மறுப்புக்கட்கு அளவேயில்லை. நம் மாகாணத்தில் காங் கரஸ் ஆட்சியில் (ஹிந்தி கிளர்ச்சியின் போது) அச்சட் டம் பிரயோகிக்கப்பட்டது. அது கொண்டு ஆயிரக்கணக் கான மக்கள் சிறைக்கனுப்பப்பட்டார்கள். காங்கரஸ் ஆட்சி யில் காங்கரஸ் கொள்கைக்கு மதிப்பளிக்கப்படவில்லை.

அதிகாரவர்க்க ஆட்சிமுறையில் போலீஸ் தடியடி, துப்பாக்கிப் பிரயோகம் முதலியன நடைபெற்றபோது காங்கரஸ் அக்கொடுமைகளை மறுத்த வண்ணமிருந்தது. காங்கரஸ் ஆட்சியில் அவை விடப்பட்டனவா ? ஒரு கூட்டம் அமைத்து விசாரணை புரிந்தால் உண்மை விளங்கும்.

திரு. வல்லபாய் படேல் தலைமையில் காங்கரஸ் கராச்சியில் கூடியபோது தொழிலாளரது அடிப்படையான உரிமை குறித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அவை தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்பட்டனவே யன்றித் தொழிலாளர் நலத்துக்குப் பயன்படவே இல்லை. காங்கரஸ் மந்திரிமார் பதவியில் வீற்றிருந்தபோது அவர் தொழிலாளரைக் கொண்டே தொழிலாளர் இயக்கத்தை நசுக்க முயன்றதை ஆண்டவன் அறிவன். பம்பாயில் தொழிலாளர் உரிமையைப் பறிக்கும் முறையில் ஒரு சட்டம் நிறுவப்பட்டது. அதை மறுப்பதற்கென்று கொண்டாடப்பெற்ற நாளன்று பம்பாயில் தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்டது. காங்கரஸ் ஆட்சியில் பல இடங்களில் தொழிலாளர் இயக்கம் குன்ற லாயிற்று. காங்கரஸ் பதவி ஏற்க ஒருப்பட்டநாள் முதல் அதன்கண் முதலாளி செல்வாக்குப் புகுந்து கொண்டது. காங்கரஸ் பம்பாய் முதலாளிகள் வயப்பட்டது. இது வெள்ளிடைமலை.

காங்கரஸ் ஆட்சியில் வகுப்புவாதம் மலிந்து நின்றது. மந்திரிமார் பலர் நெஞ்சில் நீண்ட நாளாகக் கரந்து விளங்கிய வகுப்புணர்வு, அவர் அதிகாரத்தில் அமர்ந்த காலத்தில் பொங்கித் ததும்பி வழிந்தது.

தென்னாட்டில் 1926-ம் ஆண்டில் வகுப்புவாத இயக்கத்தின் உயிர்நாடி விழுந்தது. காங்கரஸ் ஆட்சியில் மீண்டும் அந்நாடி உரம்பெற்றெழுந்தது. காங்கரஸ் ஆட்சியில் வகுப்புவாதம் பிராமணர் பிராமணரல்லாதாரளவில் நிற்கவில்லை. அது பிராமணர்க்குள்ளும் புகுந்தது. ஐயர்-ஐயங்கார் காழ்ப்புக்கனன்றது. வடகலை - தென்கலைப் பிணக்கு மூண்டது. 'காங்கரஸ் பெயரால் வடகலை ஆட்சி ஓங்கித் தென்கலைக்குத் தொல்லை விளைக்கிறது' என்ற கூக்குரல் ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் வெளிப்படையாக எழுந்தது.

ஹிந்து - முஸ்லிம் பிணக்கை என்னென்று சொல்வது ? அப்பிணக்கு நாடு முழுவதும் காட்டுத் தீப்போல் பரவிற்று. (இதுபற்றி முன்னரும் சுருங்கச் சொல்லியுள்ளேன்). ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை என்பது சுயராஜ்யத் தூண் என்று அடிக்கடி மகாத்மா காந்தி சொல்வது வழக்கம். காங்கரஸ் ஆட்சியில் அத்தூண் என்னவாயிற்று ? பரிதாபப்படுவதா ? வெட்கப்படுவதா ?

காங்கரஸும் முஸ்லிம் லீக்கும் ஒன்றிச் சுயராஜ்ய வேட்கையை எழுப்பிய காலம் நினைவுக்கு வருகிறது. இரண்டமைப்பும் ஒருமைப்பட்டு உழைத்த உழைப்பெல்லாம் பாழாயினவே. ஏ! காங்கரஸே! நீ எற்றுக்குப் பதவியேற்க ஒருப்பட்டனை ! வகுப்பு வாதிகள் நாட்டைப் பாழ்படுத்தினரே !

அவுரங்கஜீப் காலத்தில் ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை என்ற நச்சு விதை விதைக்கப்பட்டது. அது மரமாகி நச்சுக் கனியை ஈன்று, சுயஆட்சியை மாய்த்துத் தானும் மாண்டது. 'ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை சுயஆட்சியை வீழ்த்தியது. சுயஆட்சிக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை அவசியம்' என்ற உணர்வு இந்திய மக்களிடை ஊர்ந்து எழலாயிற்று. அவ்வுணர்வை ஒடுக்க லார்ட் கர்ஸன் முயன்றார். எப்படி முயன்றார் ? வங்காளத்தை இரண்டாக்கிய வழியில் முயன்றார். அம் முயற்சிக்கு முஸ்லிம்கள் துணை போகவில்லை. ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை வங்காளப் பிரிவினையை நீக்கி ஒன்றுபடுத்தியது. வங்காளப் பிரிவினையை ஒரு பாடமாகக் கொண்டு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒன்றுபட்டே வாழலானார்கள். அவுரங்கஜீப் காலத்தில் தோன்றிய வேற்றுமை அற்றே போயிற்று.

வங்காளப் பிரிவினையால் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்பாட்டிராவிடின், காங்கரஸ் எப்பொழுதோ மறைந்து போயிருக்கும்; காங்கரஸ் சார்பில் பெரும் பெரும் போர்கள் நடைபெற்றிரா. விடுதலைப் போருக்கு ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை இன்றியமையாதது என்பதை நாடு மறத்தலாகாது. ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை என்பது, 'சுயஆட்சி வேண்டா; அந்நிய ஆட்சியே வேண்டும்' என்று சொல்வதாகும். அந்நிய ஆட்சி எவ்வளவு நலனுடையதாயினும் அதனால் நாடு நாடாக விளங்குமா? விளங்காது. சுயஆட்சியே நாட்டை நாடாகச் செய்ய வல்லது. இந்நுட்பத்தை உணர்ந்தே முன்னாளில் தேச பக்தர்கள் விடுதலை குறித்து ஒற்றுமையுடன் உழைத்து வந்தார்கள்.

1911-ம் ஆண்டிலே வங்காளப் பிரிவினை நீக்கப் பட்டது. அது ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையால் விளைந்த வெற்றி என்றுணர்ந்த முஸ்லிம் அறிஞர்கள் மேலும் மேலும் அவ்வொற்றுமையை வளர்க்கவே முயன்றார்கள். கல்கத்தாவில் கூடிய இரண்டாவது காங்கரஸ் வரவேற்புக் கூட்டத்தின் தலைவராயிருந்த டாக்டர் ராஜேந்திர லால் மித்திரர், 'ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையற்ற காங்கரஸ் மணமகள் இல்லாத கல்யாணம் போன்றது' என்று கூறியது ஈண்டு நினைவுக்கு வருகிறது. 1912-ல் பாங்கி பூரில் நடைபெற்ற இருபத்தேழாவது காங்கரஸில் வரவேற்புக்கூட்டத் தலைவராயிருந்த தேசபக்தர் முஜ்ருல் ஹேக், ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமையின் இன்றியமை யாமையை வலியுறுத்தி விளக்கினர். காங்கரஸின் சுய ஆட்சிக் கொள்கையை முஸ்லிம் லீக் ஏற்று நடக்குமாறு அறிஞர் இப்ரஹிம் ரஹிமதுலா முயன்றனர். அடுத்த

ஆண்டு, கராச்சியில் நவாப் சையத் மகம்மத் தலைமையில் கூடிய காங்கரஸ் மேடையிலே, முஸ்லிம் லீக், காங்கரஸ் கொள்கையை ஏற்றுச் சுய ஆட்சிக்குப் பாடுபட உறுதி கொண்ட செய்தி அறிவிக்கப்பட்டது. அதுபோழ்து தலைவர்கள் பேசிய பேச்சுக்களும், நிறைவேறிய தீர்மானங் களும் சுய ஆட்சியை நுண்மையில் தோற்றுவித்த காட்சியைப் புலப்படுத்தின. அன்று தொட்டுப் பல ஆண்டு காங்கரஸ் கூடிய இடத்திலேயே முஸ்லிம் லீக்கும் கூடிக் கூடி ஒற்றுமையுடன் தீர்மானங்களை நிறைவேற்றி வந்தது. காங்கரஸ் தலைவர் வரவேற்பிலும் முஸ்லிம் லீக் தலைவர் வரவேற்பிலும், ஹிந்து தலைவர் களும் தொண்டர்களும், முஸ்லிம் தலைவர்களும் தொண் டர்களும் அகமலர்ச்சியுடன் கலந்து கொள்வார்கள். திரு. மாண்டேகு இந்தியா போந்தபோது காங் கரஸும் முஸ்லிம் லீக்கும் ஒன்றுபட்டே கோரிக் கையைச் செலுத்தியது. இது முன்னரும் எடுத்துக் காட்டப்பட்டது.

காந்தியடிகள் 1921-ல் தொடங்கிய சத்தியாக்கிரகப் போரில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இந்தியர்களாய் ஒருமைப்பட்டு நிகழ்த்திய அருஞ்செயல்கள் கண் முன்னே உலவுகின்றன. அலி சகோதரர்கள் காந்தியடி களின் இரு கைகளாகப் பொலிந்து ஆற்றிய தேசத் தொண்டை எவ்வெழுத்தால் எழுதிக் காட்டுதல் கூடும்? அலி சகோதரர்கள் ஆன் ஊன் தின்பதில்லை என்று உறுதி கொண்டதும், பாஞ்சாலத்தில் ஸ்ரீ ராமநவமி விழா வில் முஸ்லிம்கள் கலந்து கொண்டதும் என்றும் மறக்கற்

பாலனவல்ல. அவ்வாறு உரம் பெற்ற ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை இப்பொழுது எங்கே போயிற்று ?

காங்கரஸுடன் ஒத்துழைத்த முஸ்லிம் லீக்கின் தலைமை ஜின்னாவை அணுகியது. அறிஞர் ஜின்னா காங்கரஸ் பக்தராயிருந்தவர் ; ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபட்டவர். அவர் தலைமையில் நடைபெற்ற முஸ்லிம் லீக், காங்கரஸுடன் கலந்து பழையபடி தொண்டாற்ற மனங்கொண்டதில்லை. காரணம் என்ன ? உண்மைக் காரணம் வெளியாதல் அருமையே.

தீண்டாமை விலக்கைப்பற்றி நீண்ட காலமாகக் காந்தியடிகள் பேசியும் எழுதியும் வந்தது உலகறிந்த ஒன்று. முதல் சத்தியாக்கிரகப் போர் நிறுத்தப்பட்ட போது, மகாத்மா காந்தி தீண்டாமை விலக்குதற்குரிய முயற்சியில் தலைப்பட்டனர். இது முஸ்லிம் தலைவர் பலர்க்கு ஐயமூட்டிற்று. ஐயப்பாட்டை முதல் முதல் வெளியிட்டவர் மௌலானா ஷௌக்கத் அலி. காந்தியடிகள் தீண்டாமை விலக்கலில் தலைப்பட்டது ஹிந்துமத ஆக்கத்துக்கென்றும், இஸ்லாத்தின் கேட்டுக்கென்றும் முஸ்லிம் உலகம் கருதுமாறு பிரசாரஞ் செய்யப்பட்டது. 'அரசியல் விடுதலைப் போர்த் தலைவராகக் காந்தியடிகளை மனமாரக் கொண்டோம். அவர் ஹிந்துவாக நின்றே எங்கள் இஸ்லாத்துக்குக் கேடுசூழ இப்பொழுது முற்பட்டுள்ளனர். ஏமாந்தோம்' என்று இந்திய முஸ்லிம் உலகம் எண்ணிற்று. அவ்வெண்ணம் படிப்படியே வளர்ந்து வளர்ந்து, ஹிந்து - முஸ்லிம் பிணக்காய்க் குழப்பமாய்ப் போராய்க் கொலையாய் முடிந்தது. காந்தியடிகள் மீது ஐயம், பிறக்கலாயிற்று ! என்ன சொல்வது ! மக்களால்

உண்மைகாண்டல் இயலாது. இதை ஆண்டவனுக்கே விடுத்தல் வேண்டும்.

காந்தியடிகள்மீது ஐயம் தோன்றிய நாள்முதல் முஸ்லிம் தலைவர் பலர் காங்கரஸ் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதில்லை. காங்கரஸுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் உற்றிருந்த தொடர்பு அறுந்துவிட்டது. இரண்டையும் பழையபடி ஒன்றுபடுத்தச் செய்யப்பெற்ற முயற்சிக ளெல்லாம் பாழாயின.

காங்கரஸ் ஆட்சியிலேயாதல் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை உண்டாயிற்றா? வேற்றுமையே பன்மடங்கு அதிகமாயிற்று. வந்தேமாதரப் பாடல், காங்கரஸ் கொடி முதலியன இஸ்லாத்துக்கு மாறுபட்டன என்றும், அவற்றை நாட்டுக்குரிய பொதுமைகளாகக் கொள்ளலாகா தென்றும் கிளர்ச்சி செய்யப்பட்டது. சட்டசபை முதலிய இடங்களில் வந்தேமாதரம் பாடுவது நிறுத்தப் பட்டது. ஒருவர் தடை செய்யுமிடத்திலும் காங்கரஸ் கொடியைப் பறக்கவிடலாகாதென்று காந்தியடிகளால் கட்டளையிடப்பட்டது. காங்கரஸ், 'ஹிந்தி பொதுமொழி' என்றால், முஸ்லிம் லீக் 'உருது பொதுமொழி' என்னும்; காங்கரஸ் 'பாரத மாதா' என்றால், லீக் 'அப்படிச் சொல்லல் கூடாது' என்னும். வார்தா கல்வித் திட்டங் கோலப்பட்டதும், அது முஸ்லிம்களுக்கு மாறு பட்டது என்றார் ஜனப் ஜின்னா. நாடு இந்நிலையை அடைந்தது!

'காங்கரஸ் முஸ்லிம்களுக்கு விட்டுக்கொடுத்துக் கொண்டே போகிறது. ஹிந்து மதத்துக்கு ஆபத்து வந்துவிட்டது' என்று ஹிந்து மகாசபை இன்னொரு

பக்கம் வீறிட்டது. இரண்டுக்கும் இடையில் காங்கரஸ் திண்டாடியது ; இருதலைக் கொள்ளி எறும்புபோல் துன்புற்றது.

'காங்கரஸ் ஆட்சி இஸ்லாத்துக்குச் சனி' என்று முஸ்லிம் உலகம் கருதி அஞ்சியது. மந்திரிமார் பதவியினின்றும் விலகியதையொட்டி ஒருநாள், முஸ்லிம் உலகால் கொண்டாடப் பட்டதெனில், அவ்வுலகின் கொதிப்பை என்னென்று அளவிட்டுக் கூறுவது ?

ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை போக்கியபின் காங்கரஸ் பதவி ஏற்க ஒருப்பட்டிருக்கலாம். காங்கரஸ் பதவி ஏலாதிருப்பின் நிலைமை இவ்வளவு கேடுற்றிராது.

ஆகவே, காங்கரஸ் ஆட்சியில் வகுப்புவாதம் ஓங்கி வளர்ந்ததென்க.

காங்கரஸ் ஆட்சியில் குடி நிறுத்தம், கடன் நிவாரணம், திருக்கோயில் திறப்பு முதலிய நல்லனவும் நிகழ்ந்தன. மரமேறிகள் பிழைப்பதற்கென்று தொழிற்சாலைகளை அமைத்துக் கொடுத்த பின்னர்க் குடி நிறுத்தத்தில் மந்திரிசபை தலைப்பட்டிருந்தால் நலன் விளைந்திருக்கும். கடன் நிவாரண சட்டத்தை இன்னும் உரப் படுத்தியிருக்கலாம். தீண்டாமை விலக்குக்கென்று எல்லா ஹிந்து கோயில்களும் ஒரே காலத்தில் திறக்கப் படும் முறையில் சட்டம் கோலப் பெற்றிருத்தல் வேண்டும்.

விற்பனைவரி வெறுக்கத்தக்கது. சில சட்டங்கள் தீயொழுக்கம் வளரும் வழியில் பயன்படுவது முண்டு.

காங்கரஸ், தான் ஆட்சி ஏற்ற காலத்தில் எவ்வளவோ நலன் செய்திருக்கலாம். நல்ல வாய்ப்பு வீணாயிற்று.

மந்திரிமார் வேறு துறைகளில் கருத்தைச் செலுத்ாது, நாட்டின் வறுமை போக்குந் துறையில் கருத்தைச் செலுத்தியிருத்தல் வேண்டும். அத்துறை நண்ணி மந்திரிமார் தொண்டாற்றி இருந்தால் வகுப்புவாதங்கள் மடிந்துபோயிருக்கும்; வகுப்புவாதத் தலைவர்கள் செய லற்று ஒழிந்திருப்பார்கள். முதலாளி மனங்கொண்ட காங்கரஸ் மந்திரிமார் வறுமையைப் போக்க எங்ஙனம் முயல்வர் ?

## தற்காலக் காங்கரஸ் நிலை

காங்கரஸ் காரியக் கூட்டமும், பார்லிமெண்டரி போர்டும், மந்திரிசபைகளும் கட்டாக நிகழ்த்திவந்த அடாத செயல்களைக் கண்ட சில தேசபக்தர் 'காங்கரஸ் மூலக் கொள்கைக்கு இடர் விளையுமே' என்று கருதிக் கருதி வருந்தினர். பண்டித ஜவஹார்லால் நேரு உள் ளிட்ட சிலர் அவ்வினத்தைச் சேர்ந்தவர்.

காங்கரஸைச் செம்மை செய்யவேண்டுமென்று வெளிப்படையாகப் பேசினோர்மீது நடவடிக்கையெடுத்து, அவரைக் காங்கரஸ் நிர்வாகத்தினின்றும் தூரத்திவிடுவது படேல் கூட்டத்தின் வழக்கமாயிற்று. வங்கச் சிங்கம் சுபாஷ் சந்திர போஸ் காங்கரஸ் தலைவராயபோது (1938) காங்கரஸுக்குள் நிறைந்துள்ள ஆபாசங்களை ஒழிக்க முயன்றனர். அதை உணர்ந்த காரியக் கூட்டம் தொடர்ந்த ஆண்டில் (1939) தனது செயல்களுக்குத் துணைபோகும் ஒருவரைத் தலைவராகத் தெரிந்தெடுக்க வெளிப்படை யாகச் சூழ்ச்சி செய்தது. அதை அறிந்த சுபாஷ் போஸ் தாமே மீண்டும் தலைமையேற்கத் தேர்தலில் நின்றனர்.

திரு. போஸே வெற்றி பெற்றனர். அவ்வெற்றி காரியக் கூட்டத்துக்கு - படேல் கூட்டத்துக்கு - பிடிக்கவில்லை. அன்று முதல் படேல் கூட்டம் சூழ்ச்சி செய்து செய்து திரு. போஸைக் காங்கரஸ் நிர்வாகத்தினின்றும் ஓட்டியது. படேல் கூட்டம் காங்கரஸைத் தனது உடைமையாகக் கருதிக் காத்து வந்தது; வருகிறது. அதனால் நாட்டில் பிளவுகளும் பிணக்குகளும் பெருகியே வந்தன; வருகின்றன.

படேல் கூட்டத்தால் அநியாயமாகத் துரத்தப்பட்ட வீரர் சுபாஷ் போஸ் காங்கரஸுக்குள்ளாகவே 'முன்னேற்றக் கட்சி' என்றொன்று அமைத்துத் தேசத்தொண்டுசெய்து வந்தனர். திடீரென்று ஐரோப்பா யுத்தம் (1939) தோன்றியதால் திரு. போஸ் எண்ணிய வழியில் தமது கட்சியை நடாத்திக் காங்கரஸின் மூலக் கொள்கையைக் காக்க இயலாது வருந்தி நின்றனர்.

ஐரோப்பாப் போரில் பிரிட்டன் தலைப்பட்டமையால் இந்தியாவுக்கும் அதில் பொறுப்புண்டு என்பதை விளக்க வேண்டுவதில்லை. எவ்வித நிபந்தனையுமின்றிப் பிரிட்டனுக்குத் துணைசெய்யவேண்டுமென்று காந்தியடிகளின் நெஞ்சம் கருதியது. அதை, அடிகள் போரைப் பற்றி முதல்முதல் இராஜப் பிரதிநிதியுடன் பேசித் திரும்பியதும் அறிக்கை வாயிலாக வெளியிட்டனர். அடிகள் கருத்தைக் காங்கரஸ் காரியக்கூட்டம் ஏற்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் காரியக்கூட்டம் பிரிட்டனுக்குத் துணைபுரிதற்கு முன்னர், பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்து சுத்த சுயராஜ்யத்துக்கும், அதை நிர்ணயிக்கும் உரிமை இந்தியருடையதா யிருத்தற்கும்

உறுதிமொழி பெறல்வேண்டுமென்றும், அதுவரை மந்திரிமார் பதவி வகித்தலாகாதென்றும் தீர்மானஞ் செய்தது. அத்தீர்மானத்தைப்பற்றி அடிக்கடி அடிகள் இராஜப்பிரதிநிதியைக் கண்டு கண்டு பேசினர். ஒவ்வொரு போதும் ஜனுப் ஜின்னுவும் இராஜப் பிரதிநிதியைக் கண்டே வந்தனர். முடிவில் இராஜப் பிரதிநிதி, பிரிட்டிஷ் அரசாங்கம் காங்கரஸ் காரியக் கூட்டம் விரும்பிய முறையில் உறுதிகூற இயலாமையைத் தெரிவித்தனர். காங்கரஸில் உள்ளும் புறமும் குழப்பமிராவிடின், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் விடை வேறுவிதமாகப் பிறந்திருக்கும்.

## போரும் விடுதலையும்

ஐரோப்பாவில் மூண்ட போர் உலகப் போராகியது. காங்கரஸினின்றும் விலகிய சுபாஷ் சந்திர போஸ் காந்தியடிகளைக் கண்டு பேசினர். இருவரும் ஒத்த முடிவிற்கு வந்தாரில்லை. சுபாஷ் போஸின் வீரம், காங்கரஸ் வாயிலாக விடுதலைப் போர் நிகழ்த்த இயலாமையை உணர்ந்தது; தெளிந்தது; பறந்தது ஜப்பானுக்கு. வீரப் பறவை எப்படிப் பறந்து சென்றதோ தெரியவில்லை. இந்திய அரசாங்கம் திடுக்கிட்டது; கலங்கியது; விழித்தது. இந்திய உண்மை வீரம் என் செய்தது? படை திரட்டியது; பிரிட்டனுடன் போர் தொடுத்தது.

சில நாள் கடந்து காந்தியடிகள் ஓர் அறிக்கை விடுத்தனர். அதில் நிகழ்ந்த '(பிரிட்டிஷ் ஆட்சியே) இந்தியாவை விடுத்து விலகு' என்ற குறிப்பு இந்தியா

வைத் தட்டி எழுப்பியது. அது 'வெள்ளையனே போ' என்றும் மருவியது. அவ்வேளையில் நாட்டில் ஒருவித மூர்க்க இயக்கமும் தோன்றியது. இரண்டுங் கலந்து 1942 குழப்பமாயின. காந்தியடிகட்கும் காங்கரஸுக்கும் மூர்க்க இயக்கத்துக்கும் தொடர்பு உண்டு என்றும், இல்லை என்றும் பேசப்பட்டன. குழப்பம் காந்தியடிகளையும், பிற காங்கரஸ் தலைவர்களையும், தொண்டர்களையும், மற்றவர்களையும் சிறைக்குச் செலுத்தியது.

நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ் தொடுத்த போர் பிரிட்டிஷாரைக் கலக்கியது. அக்கலக்கம் காந்தியடிகளையும், மற்றத் தலைவர்களையும் விடுதலை செய்யுமாறு பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தூண்டியது. வெளிவந்த அடிகள் தமக்கோ காங்கரஸுக்கோ மூர்க்க இயக்கத்துடன் எவ்விதத் தொடர்புமில்லை என்றும், அஹிம்சையில் தமக்குள்ள உறுதி மாறவில்லை என்றும் பேசியும் எழுதியும் வந்தனர்.

அச்சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியத் தலைவர்களுடன் ஒருவித ஒப்பந்தஞ் செய்துகொள்ள, ஸர் ஸ்டாபர்ட் கிரிப்ஸ் என்னும் இராஜ தந்திர நிபுணரை இந்தியாவுக்கு அனுப்பியது. காங்கரஸுக்கும் - லீக்குக்கும் நேர்ந்த ஒத்துழையாமை கிரிப்ஸ் திட்டத்தை மறுக்கச் செய்தது. பின்னை ஐரோப்பா போர் முடிந்தது. பிரிட்டனில் முதல் ஆட்சி விழுந்தது; தொழில் ஆட்சி எழுந்தது.

1946-ல் நமது நாட்டில் தேர்தல் நடைபெற்றது. வெற்றி பெரிதும் காங்கரஸுக்கே விளைந்தது. பல இடங்களில் காங்கரஸ் ஆட்சி (இரண்டாம் முறையாக)

நடைபெறலாயிற்று. காங்கரஸ் ஆட்சி முதலாளியை முன்னினும் பன்மடங்கு அதிகமாக ஆதரித்தது. அவ்வாட்சிச் சார்பில் தொழில் இயக்கத்தை ஒடுக்கக் கொடுஞ் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. தென்னாட்டில் பொன்மலை, கோவை, சென்னை முதலிய இடங்களில் போலீஸ் துப்பாக்கிகள் வீறின; தடிகள் சுழன்றன.

பார்லிமெண்ட் குழுவும், அதைத் தொடர்ந்து லாரன்ஸ் (இந்தியா மந்திரி), அலெக்ஸாண்டர், பழைய கிரிப்ஸ் ஆகியவரும் இந்தியா போந்தனர். என்னென்னவோ நடந்தன. முடிவு என்ன ஆயிற்று? காங்கரஸ் தலைவர், லீக் தலைவருக்கு விட்டுக் கொடுத்தனர். வட இந்தியாவில் பலவிடங்களில் மூண்ட ஹிந்து - முஸ்லிம் போர்கள் காங்கரஸ் தலைவர்களின் உறுதியைத் தளர்த்தின. லீக் தலைவர்களின் பிடிவாதத்தைப் பெருக்கின. அதுவும் இதுவும் 1947 - ஆகஸ்ட் - 15ல் ஒருவித விடுதலையை நல்கின. 'பாக்கிஸ்தான்' இந்தியாவினின்றும் பிரிந்தது. பிரிட்டிஷ் இராஜ தந்திரத்துக்கு வெற்றி விளைந்தது.

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் உள்ளிட்ட சிலர் காங்கரஸ் ஆட்சியில் வீற்றிருந்தபோது, அவர் சார்பில் 'நாட்டை இரண்டாக்குவது பசுவை வெட்டி இரு கூறுபடுத்துவதை ஒக்கும்' என்று பேசப்பட்டது. 1942-ல் அவர் காங்கரஸினின்றும் விலக நேர்ந்தபோது, அவர் சார்பில் 'பாகிஸ்தான் நல்கப்பட்டால் நாட்டில் ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை தொலையும்' என்று பேசப்பட்டது. இம்மாறுபட்ட கூற்றுக்களின் உட்கிடக்கை

என்ன? * * * காலத்தின் கோலமோ? இராஜதந்திரத்தின் திருவிளையாடலோ? * * * * இப்பொழுது நாடு எப்படி இருக்கிறது? சொல்லலும் வேண்டுமோ? ஹிந்து முஸ்லிம் குழப்பம் நாட்டில் பெருகியே நிற்கிறது.

போர்க் காலத்தில் கிரிப்ஸ் இந்தியா போந்து கிடத்திய திட்டத்தை அப்பொழுதே தலைவர்கள் ஏற்க ஒருப்பட்டிருந்தால் பாக்கிஸ்தான் பிரிந்திராது. வங்காளம், பீஹார், பஞ்சாப் முதலிய இடங்களில் இரத்த ஆறுகள் ஓடியிரா. நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் போன்றார் நாட்டில் இல்லாத குறைபாடு நாட்டுக்குக் கேடு விளைத்தது. கேட்டை நீக்க வழி காண்டல் வேண்டும்.

நமது நாடு சுயஆட்சி இழந்தமைக்குக் காரணங்கள் சாதிமதப் பூசல் முதலியன என்று இந்நூற்கண் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளன. பன்னெடுநாள் கடந்து இந்நாளில் ஒருவித விடுதலை கிடைத்துள்ளது. இப்பொழுதாதல் சாதிமதப் பூசல் முதலியன மறைந்தனவா? விடை என்ன? நாடு என்னவிடை இறுக்கும்? விடுதலைக்கு முன்னே மாகாண சுயஆட்சியில் நாடு என்ன கண்டது? வகுப்புப் பூசல்களை நாடு கண்டது என்று சரித்திரம் கூறும். மந்திரிமார் (1939) பதவியினின்றும் விலகியதைத் தமது விடுதலையாகக் கொண்டு ஆண்டவனுக்கு நன்றி செலுத்தும்பொருட்டு ஒருநாள் முஸ்லிம்களால் கொண்டாடப்பட்டது. இது முஸ்லிம் உலகின் கொதிப்பைப் புலப்படுத்துவது. அந்நிலை இன்றுதல் மாறியுள்ளதா? ஹிந்து முஸ்லிம் குழப்பத்தால் வடநாட்டு மக்கள் இலட்சக்கணக்கில் தங்கள் தங்கள் இருக்கைகளை விடுத்து, அங்கும் இங்கும் ஓடி

ஓடிப் பட்டினியாலும் கொள்ளை நோயினாலும் வருந்தி வருந்தி மடியும் காட்சி நாட்டின் தற்கால நிலைமைக்குச் சான்று கூறும். பழைய கறுப்பன் கறுப்பனாகவே இருக்கிறான்!

சாதிமதம் முதலியன அழிந்தால் பூசலும் உடன் ஒழியும் என்று சிலர் கூறுப. சாதிமதம் முதலியன எப்பொழுது அழிவது? பூசல் எப்பொழுது ஒழிவது? கடலில் அலை எப்பொழுது ஓய்வது? அதில் எப்பொழுது நீராடுவது? சாதிமதம் முதலியன ஒழிவதற்குள் இந்தியா, வகுப்புப்போர்-உட்குழப்பம் - பட்டினி - பசி - பிணி முதலியவற்றால் தாக்குண்டு எரிந்து கரிந்து நீறாகுமே. சுவரை வைத்தன்றோ சித்திரம் எழுதல் வேண்டும்? என் செய்வது? இப்பொழுது நாட்டுக்குக் கிடைத்துள்ள ஒருவித விடுதலையை முழுவிடுதலையாக்குதல் வேண்டும். வழி என்ன?

## தொழில் இயக்கம்

அரசியல் விடுதலை மட்டும் மக்களுக்குப் பொருளின்பம் வழங்காது. அரசியல் விடுதலையால் பணக்காரர் ஆட்சி வலுத்தே நிற்கும். பணக்காரர் தமது நலங்கருதி மக்களிடைச் சாதிமதப் பூசல் முதலியவற்றை மூட்டி மூட்டிப் பிணக்கை வளர்த்தே வருவர். ஆதலின், அரசியல் விடுதலையுடன் பொருளாதார விடுதலையும் பெறுதல் வேண்டும். பொருளாதார உரிமை, தொழிலரசு என்றோ தொழிலாளர் சுயராஜ்யம் என்றோ சமதர்ம ஆட்சி என்றோ சொல்லப்படும்.

## பணமும் படிப்பும்

சாதிமதப் பூசல் முதலியன எங்கிருந்து எழு கின்றன? அவற்றை எழுப்புவோர் யார்? அவை பொதுமக்களிடமிருந்து எழுவதில்லை. அவர்களால் அவை எழுப்பப்படுவதுமில்லை. பூசல்கள் எப்பொழு தும் பணக்காரரிடமிருந்தும் படிப்பாளிகளிடமிருந்தும் எழுவது வழக்கம். அவற்றை எழுப்புவோர் அவர் களே. பூசல்களைத் தூண்டுவது பணம்; அவற்றைத் திறம்பட நடாத்துவது படிப்பு.

பொதுமக்கள் நல்லவர்கள். அவர்கட்கு ஒன்றுந் தெரியாது. அவர்களிடை வேற்றுமைகளை நுழைத்து, அவர்களைப் பிரித்து, அவர்களுக்குள் எரிமூட்டுவோர் பணக்காரரும் படிப்பாளிகளுமேயாவர். இக்காலப் பணக் காரரும் இக்காலப் படிப்பாளிகளும் மக்களுக்குள் பிணக் கையும் பிரிவையும் உண்டுபண்ணும் கலைகளை நன்கு பயின்று தெளிவடைந்தவர்கள். ஆகவே, பொதுமக்கள் சாதிமதப் பூசல் முதலிய சிறுமைகட்கு இரையாகாத வாறு காக்கப்படல்வேண்டும். வழி என்ன? பொருளா தார விடுதலை முயற்சியே உரிய வழியென்க.

பொருளாதார உரிமையின்றிப் பெறும் அரசியல் உரிமையால் நலன் விளையாது. வெறும் அரசியல் உரிமை யால் சாதிமதப் பூசல் முதலிய புலி கரடிகளே பெருகி நாட்டைப் பாழ்படுத்தும். மந்திரிமார் ஆட்சியின் விளைவு நமக்கு எடுத்துக் காட்டாக நம்முன் நிற் கிறது. பொருளாதார உரிமையற்ற வெறும் அரசியல் உரிமை என்பது பணக்காரர் ஆட்சியாய்ச் சாதிமதப்

பூசல்களைப் பெருக்கி விரிப்பதாகும். அரசியல் விடுதலை யினூடே பொருளாதார விடுதலையும் விரவி நிற்றல் வேண்டும்.

இதுகாறும் காங்கரஸ் பெரிதும் அரசியல் விடுதலை குறித்தே கிளர்ச்சிசெய்து ஒருவித விடுதலை பெற்றது. இவ் விடுதலையால் சாதிமதப் பூசல்கள் பெருகுவதை நாடு காணாமலில்லை; உணராமலில்லை. இனி நாடு சாதி மதப்பூசல் முதலிய கொடுமைகளைக் காணாதிருக்க வேண்டுமானால் - உணராதிருக்க வேண்டுமானால் - அது பொருளாதார உரிமையைக் குறிக்கொண்டு கிளர்ச்சி செய்தல் வேண்டும்.

யான் காங்கரஸில் ஈடுபட்டுத் தமிழ் நாட்டில் தொண்டாற்றி வந்தபோது பல அரசியல் மகாநாடு களில் தலைமை வகிக்கும் பேறு பெற்றேன். அவற்றில் யான் சுயராஜ்யத்தைப் பற்றிப் பேசியபோதெல்லாம் மக்களுக்கு எச்சரிக்கை வழங்கிச் சுயராஜ்யமென்பது பொருளாதார விடுதலை என்னும் தொழில் சுயராஜ்ய மென்று வலியுறுத்துவது வழக்கம். அதைத் தென்னார்க் காடு ஜில்லா மூன்றாவது அரசியல் மகாநாட்டில் (15-10-1921) பெரிதும் வலியுறுத்தியுள்ளேன். அது வருமாறு:—

‘ காங்கரஸ்காரர் இப்பொழுது ‘சுயராஜ்யம்’ ‘சுயராஜ்யம்’ என்று பேசுகிறார்; எழுதுகிறார். ஆனால் எவ்வித சுயராஜ்ய மென்று இதுகாறும் அவர் விளங்க உரைத்தாரில்லை; அது பற்றி ஈண்டு எனது கருத்தைச் சிறிது வெளியிடுகிறேன்.

இப்பொழுது உலகம் பெரிதும் முதலாளிகள் வசம் கட்டுப்பட்டுக் கிடக்கிறது. இராஜ்யம் முதலாளிகள் வசமிருக்

கிறது; சபைகள் அவர்கள் வசமிருக்கின்றன; பத்திரிகைகள் அவ்வகுப்பாரிட மிருக்கின்றன; தொழிற்சாலைகளும் அக்கூட்டத்தாரிடமிருக்கின்றன. உலகத்தில் குடியாட்சி கோனாட்சி குடிக்கோனாட்சி முதலிய பல ஆட்சிகளிருக்கின்றன. இவ்வெல்லா ஆட்சிகளும் முதலாளிகள் வயப்பட்டு ஆடுகின்றன. முதலாளிகள் ஆட்சியால் சண்டை கலகம குழப்பம் முதலிய கொடுமைகளுக்கு உலகம் இரையாகிக்கொண்டு வருகிறது. முதலாளிகள் தங்கள் நலங்கருதி, பொருளாசை கொண்டு பெரும் போர்களை அடிக்கடி கிளப்பி விடுகிறார்கள். இதன் பொருட்டே முதலாளிகள் பத்திரிகைகளையும் நடாத்துகிறார்கள். முதலாளிகள் வழி உலக ஆட்சி நடைபெறும் வரை உலகத்தில் அமைதி நிலவாது. முதலாளிகள் இலாபங்கருதி அடிக்கடி சண்டைகளைக் கிளப்பி வந்தால் அமைதி எவ்வாறு நிலவும்? பொருளாசையுள்ள மட்டும் - பொறாமையுள்ள மட்டும் - போர்கள் நடந்துகொண்டே போகும்.

முதலாளி கூட்டம் சீவித்திருக்கும்வரை செல்வம் ஒருவர்பால் பெருகியும் மற்றொருவர்பால் அருகியும் நிற்கும். குறைந்த செல்வமோ நாடோ எதுவோ உடையவன் தன் செல்வத்தையோ நாட்டையோ பெருக்கிக்கொள்ள முயல்கிறான். இதனால் போர்கள் நிகழ்கின்றன. முதலாளிகள் தூண்டுதல் காரணமாக நிகழும சண்டைகளில் போர் புரிவோர் யாவர்? போர்க் கருவிகள செய்வோர் யாவர்? முதலாளிகளின் தொழிற்சாலைகளில் வேலை செய்வோர் யாவர்? எல்லாம் தொழிலாளரே. தொழிலாளா துணைகொண்டு - தொழிலாளர் இரத்தஞ் சிந்தி - தொழிலாளர் உழைபபால் - முதலாளி செல்வம் பெறுகிறான்; நாடு பெறுகிறான்; தொழிற்சாலை பெறுகிறான். இஃதென்ன கொடுமை? உழைப்பு ஒருவருடையது; பயன் மற்றவருடையது. முதலாளிகள் நலத்தால் உலகில் அமைதி

நிலவவில்லை. அவர்கள் ஆக்கத்துக்குக் காரணராயுள்ள தொழிலாளர்வழி ராஜ்யம் அரும்பின் உலகத்தில் அமைதி நிலவும்.

முதலாளி வகுப்பென்று ஒன்று உண்மையால் தொழிலாளி என்று வேறொரு வகுப்புப் பிரிந்துநிற்கிறது. இப்பிரிவை உண்டாக்குவது பொருட்செல்வம். அப்பொருட் செல்வம் எல்லார்க்கும் பொதுவாக வகுக்கப்படின், முதலாளி தொழிலாளி என்னும் வேற்றுமையே ஒழிந்துபோகும். உலகத்திலுள்ள அசையும் பொருள் அசையாப பொருள் எல்லாம் மனிதருக்குப் பொதுவாகப் பகிர்ந்து விடப்படல் வேண்டும். கடவுள் படைப்புக்குட்பட்ட பொருளெல்லாம் மக்களுக்குப் பொதுவாகப் பயன்படல் வேண்டும. சமத்துவத்தால் சண்டையாவது, நீதி ஸ்தல வழக்காவது நடைபெறாது; தீயொழுக்கங்களுக்கே இடமிராது. ஒவ்வொரு கிராமமும் அவ்வக்கிராமத்தார் வழி நடைபெறும். கிராமத்துக்குத் தேவையான சிறப்புக்களை அக்கிராம வாசிகளே தேடிக்கொள்வார்கள். பத்தெட்டுக் கிராமத் தலைவர்கள் சேர்ந்து மனிதசாதிக்கு வேண்டிய பொது முறைகளைக் கண்டு அறிவு வளர்ச்சிக்குரிய பலதிற வழிகளைக கோலிக்கொள்வார்கள. கிராமம் கிராமத்தார்வழி நடப்பதால் மனித வகுப்பே தூய்மையுறும் என்று உறுதி கூறுகிறேன். எல்லாரும் ஒருவகை இன்பத்தையோ துன்பத்தையோ பொதுப்பட அனுபவிப்பர். இம்முறை உலகத்தில் நிலவுமாயின் உலகததிலுள்ள அனைவரும் ஒவ்வொருவிதத தொழிலாளராகி வாழ்க்கையில் சுறுசுறுப்பாக இருப்பர்.

காங்கரஸ், எல்லா மக்களுக்கும் ஒரேவித இன்பத்தை அளிக்கவல்ல தொழிலாளர் சுயராஜ்யத்தை நாடி உழைக்குமென்று நம்புகிறேன். ஒருவேளை காங்கரஸ், முதலாளி சுயராஜ்யம் பெறினும், அந்த ராஜ்யம் மீண்டும் தொழிலாளர் வசம் விரைவில் வந்துவிடும். உலகத்திலுள்ள சொததுக்களெல்லாம் பொதுவாகப் பயன்படுங் காலமே சுயராஜ்யக்

காலமாகும். தொழிலாளர் ராஜ்யத்தில் தேசத்தோடு தேசம் சண்டை செய்யும் கொடுமையே ஒழிந்துவிடும். யானை சேனை கப்பல் பீரங்கி குண்டு முதலியன எல்லாம் ஒழியும். உலகத்தில் ஆத்மஞானம் ஓங்கும். சகோதரத்துவம் சமத்துவம் சுதந்திரம் எல்லாரிடத்திலும் பொலியும். தொழிலாளர் ராஜ்யமே சுயராஜ்யம்; சுகராஜ்யம். அது கருதியே யான் காங்கரஸ் கட்சியில் சேர்ந்து தொழிலாளர்க்காக உழைத்து வருகிறேன்.

## மார்க்ஸியம்

இப்பொழுது காங்கரஸ் எந்தச் சுயராஜ்யம் பெற்றுள்ளது? காங்கரஸ், முதலாளி சுயராஜ்யம் பெற்றுள்ளது. இது மாறுதல் வேண்டும். மாற்றம் பொருளாதார உரிமையை நல்கும். பொருளாதார உரிமை என்றதும், 'அப்பா! அது மார்க்ஸியம் - நாஸ்திகம்' என்று பொதுமக்களிடை அச்சம் எழுப்பப்படுகிறது. இது முதலாளியின் பிரசாரத்தால் விளைந்த கேடு. ஏழைத் தொழிலாளியின் பிரசாரம் அவன் இனத்தளவிலும் இன்னும் பரவவில்லை.

மார்க்ஸியம் உள்ளவாறே நமது நாட்டில் நுழைந்து நின்று வளராது என்று முன்னர்ச் சிறிது விளக்கியுள்ளேன். மார்க்ஸியம் திடீரெனப் புதிதாகப் பிறந்த ஒன்றன்று. அஃது எத்துணையோ ஆயிரம் ஆயிரம் ஆண்டு ஆராய்ச்சி அநுபவங்களினின்றும் பிறந்தது. நீண்ட நாளாக உலகில் காலத்துக்குக் காலம் ஒவ்வொரு விதமாக நிலவிவந்த சமதர்மத்தை அடிப்படையாக் கொண்டு எழுந்தது மார்க்ஸியம். பழைய சமதர்ம முறைகளையெல்லாம் ஒழுங்குபடுத்தி, இக்கால விஞ்ஞான முறையில்

போந்திருந்தனர். 6 மணிக்கு மந்திரிமார் வலது பக்கமும் நிர்வாக அங்கத்தவர்கள் இடது பக்கமும் இருப்ப, லார்ட் வில்லிங்டன் நடுவிலே அமர்ந்தார். மேல்நாட்டு முறைப்படி மரியாதைகள் நடந்தன. எங்கள் ஐவரையும் லார்ட் வில்லிங்டன் பார்த்து, 'தொழிலாளர் வேலைநிறுத் தங் காரணமாகச் சென்னையில் வெட்டுக் குத்துக்களும் வெடிகளும் வீடுகளில் தீவைப்பும் நடந்து வருகின்றன. அவைகட்கெல்லாம் மூலகாரணர் நீங்கள் என்று அறி கிறேன். அமைதி காக்கும் பொறுப்பு அரசாங்கத்துக் குண்டு......' என்று கூறினர். எங்களில் ஒருவர் 'நாங்கள் காரணரல்லர்' என்றனர்; மற்றொருவர் 'நீதிமன்றம் இருக்கிறதே' என்றனர்; இன்னொருவர் 'விசாரணை வேண்டும்' என்றனர்; வேறொருவர் 'தொழிலாளர் சங்கத்துக்கும் எனக்குஞ் சம்பந்தமே இல்லை. யான் தவறாக அழைக்கப்பட்டேன்' என்றனர்; யான், 'எல் லார்க்கும் நியாயத் தீர்ப்புநாள் இருக்கிறது' என்றேன். 'நியாயத் தீர்ப்பு நாள்' என்றது லார்ட் வில்லிங்டனை உறுத்தியது போலும். லார்ட் வில்லிங்டன் ஏற இறங்கப் பார்த்து, 'பொழுதாகிறது; யான் உங்களை எச்சரிக்கை செய்யவே அழைத்தேன். இனித் தீவைப்பு முதலிய மூர்க்கச் செயல்கள் நடக்குமானால் நீங்கள் நாடு கடத்தப் படுவீர்கள்' என்று அழுத்தமாக அறைந்தார். நாங்கள் விடைபெற்று வீடுபோய்ச் சேர்ந்தோம்.

அன்றிரவு, டாக்டர் நடேச முதலியார் என்னைக் கண்டு, லார்ட் வில்லிங்டன் எங்களை நாடுகடத்த உறுதி கொண்டே சென்னை நோக்கினரென்றும், அவர் ஸர். பி. தியாகராஜ செட்டியாரையும் தலைமை அமைச்சர் பனகல்

ராஜாஜாவையும் கலந்து ஆலோசித்தபோது, அவ்விருவரும் நாடுகடத்துஞ் செயலால் தமது கட்சிக்குக் கெட்ட பெயர் உண்டாகுமென்றும், ஒத்துழையாமையும் மலையாளக் குழப்பமும் கனன்று கொதித்துவரும் வேளையில் நாடு கடத்தலும் நிகழுமாயின் நகரத்தில் குழப்பம் பெருகு மென்றும், தாம் (பனகல்) பதவியினின்றும் விலகலும் நேரலாமென்றும் நிலைமையை விளக்கிய பின்னர் எங்களை எச்சரிக்கை செய்துவிடக் கவர்னர் எண்ணலாயின ரென்றும் உரைத்தார். 'செட்டியாரும் பனகலும் எனக்கு நன்மை செய்யவில்லை; தீமை செய்தனர்' என்று சொல்லி டாக்டரை அனுப்பினேன்.

## வழக்குகள்

தொழிலாளர்மீது போலிஸாரால் தொடரப்பெற்ற வழக்குகளையெல்லாம் விரித்துக் கூறுதல் அநாவசியம். இரண்டு வழக்குக்களின் தீர்ப்புக்கள் (2, 5—8—1921) பத்திரிகைகளில் விரிவாக வெளிவந்தன. அத்தீர்ப்புக்கள் பொதுமக்களின் அநுதாபத்தைத் தொழிலாளர்மீது திருப்பின. அநியாயம் மக்களுக்கு நன்கு விளங்கிற்று.

## எயிலிங் கூட்ட விசாரணை

தீ வைப்பு முதலிய மூர்க்கச் செயல்களை விசாரணை புரிய அரசாங்கத்தால் ஒரு கூட்டம் அமைக்கப்பட்டது. தலைவர் ஜஸ்டிஸ் எயிலிங்; அங்கத்தவர் இருவர். அவர் ஸர் வேங்கடரத்தினமும் கர்நூல் வக்கீல் நரசிம்மாச் சாரியாருமாவர். விசாரணை (10—8—1921ல்) தொடங் கப்பட்டது. சங்கத் தலைவன் என்ற முறையில் சான்று

கூற யான் அழைக்கப்பட்டேன். அவ்வழைப்புக்கு யான் இணங்கவில்லை. இணங்கல் இயலாதென்று பதில் விடுத்தேன். அதில் கலக நிகழ்ச்சி பொதுமக்களைப் பொறுத்ததென்றும், அதற்கும் சென்னைத் தொழிலாளர் சங்கத்துக்கும் எவ்வித தொடர்பும் இல்லை என்றும், பிரதம பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்டால் அளிக்கப்பெற்ற இரண்டு தீர்ப்புக்களால் கலக மூலம் நன்கு விளங்குகிறதென்றும், இன்னும் சில வழக்குகள் நீதிமன்றத்தில் விசாரணையிலிருந்துவருகின்றன என்றும், எயிலிங் கூட்ட விசாரணையில் கலந்துகொள்ளச் சங்கம் விரும்பவில்லை என்றும் குறிக்கப்பெற்றன. †எயிலிங் கமிட்டியார் தமது அறிக்கையின் தோற்றுவாயில் ஒரு சிறு குறிப்புப் பொறித்து எனது கடிதத்தையும் வெளியிட்டனர்.

---

† " * * All these parties were present on the 10th August except the Madras Labour Union President who addressed the Committee the following letter :—

' Sir,

I have the honour to acknowledge the receipt of your letter dated the 6th inst. relating to the sittings of the committee of inquiry into the Madras Disturbances of June and July 1921 and to thank you for inviting me to be present at the said inquiry.

In reply I am desired by the Madras Labour Union to inform you that the Madras Labour Union as such does not propose to participate in the inquiry which, as the Government order

## துப்பாக்கி முழக்கம்

*சென்னை அரசாங்கத்தின் ஏவுதற் கிணங்கப் போலிஸ் கமிஷ்னர் ஒரு கட்டளை பிறப்பித்தனர். அது வருமாறு :—*

*‘ ஜி. அல்லது வேப்பேரி போலிஸ் ஸ்டேஷன், எச். போலிஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த மூலக்கொத்தளம், வியாசர்*

---

points out, will not extend to the merits and to any disputes between the managements of the Buckingham and Carnatic Mills and their employees. The inquiry into the disturbances which took place in the Perambur division on and after the 29th June, is a matter of concern to the general public and not to the Members of the Union as such, and it affects the peace and order of northern parts of the city. The Labour Union repudiates any manner of connection with such disturbances as have taken place. They have since been in part at least a matter of adjudication before the Magisterial Courts in Madras and evidence has been adduced before these courts at the instance of the police as well as the parties aggrieved and judgements have been pronounced by the Chief Presidency Magistrate of the city in two cases which show clearly the origin of the disturbance and the persons involved in provoking them as well as the conduct of the police in dealing with them. There are still a number of police proceedings pending before stipendiary and honorary magistrates in respect of this matter, in

பாடி அல்லது வண்ணாரப்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் ஆகிய இவ்வெல்லைக்குள் அடங்கியிருக்கும் ஜனங்களுக்குத் தெரிவிப்பது என்னவென்றால் :—

சமீபத்தில் நடைபெற்ற தீ விபத்துக்களைப் பற்றியும், அமைதியின்மையைப் பற்றியும் அரசாங்கத்தார் பெரிதும்

---

which Members of the Union are being needlessly harassed and put to great hardship. In the circumstances, the Union is unable to furnish the Committee with a list of persons who might be examined as witnesses by your Committee and I regret very much to find myself unable to supply you now or later with a list of persons whom I could in the existing state of things suggest for examination as witnesses.

Yours truly,
T. V. KALYANASUNDARAM,
*President, Madras Labour Uniou.'*

In consequence of this refusal on the part of the Labour Union to participate in the inquiry which was much regretted by the committee, the committee announced at the first meeting that they desired it to be known that any accredited representatives of the strikers would be afforded the same facilities in regard to this inquiry, as would have been given to the Madras Labour Union. The representatives of the Press were asked to give every possible publicity to this announcement. But unfortunately no representative of the strikers or any section of them appeared during the inquiry * * * "

—" *Hindu* " (14-10-1921)
(*G. O. No.* 671, ' '' *October* 1921 *Madras Disturbances July*-1921)

கவனித்து வருகின்றனர். அரசாங்கத்தார் இம்மாதிரியான குழப்பங்களெல்லாம் நின்று விடுதற்குரிய காரியங்களையும் செய்துவருகின்றனர். சட்டத்தையும் அமைதியையும் நிலை பெறுத்துதற்காக அரசாங்கத்தார் அவசியமாய்ச் செய்யத் தக்கனவற்றைச் செய்வர்.

சட்ட விரோதமான எல்லாக் கூட்டங்களும் கலைக்கப் படும். கலகத்தை உண்டாக்க முயல்கிறவர்மீதும், ஆயுதங் கள் வைத்திருக்கிறவர்மீதும், கோபத்தை யுண்டாக்கக்கூடிய செய்கைகளைச் செய்கிறவர்மீதும், அரசாங்கத்தார் கடுமை யான முறைகளைக் கையாள்வர். அரசாங்கத்தார் தம்மால் கூடியவரை அமைதியாயிருக்கும் ஜனங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பர். அவசியம் ஏற்பட்டால் பாதுகாப்புக்காக அவ் விடத்தில் போலிஸ் படை நிறுத்தப்படும். அதன் செலவை அவ்விடத்திலுள்ளவர் கொடுத்தல் வேண்டும்.'

இக்கட்டளையின் உள்ளக் கிடக்கை உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்குகிறது.

உணவின்றிப் பட்டினியால் வாட்டமுற்றுக் கிடந்த தொழிலாளர்க்குத் துப்பாக்கி உணவு - குண்டு உணவு - அளிக்கப்பட்டது. (29-8-1921) ஏழைத் தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்டது. எழுவர் இறந்தனர்; நூற்றுக்கணக்கானவர் காயமுற்றனர். இறந் தவருள் ஒருவர் பெண்மணி. துப்பாக்கி வேட்டினிடை அவர் புரிந்த வீரச் செயலுக்குரிய நினைவுக்குறி என்று சென்னை அமைக்குமோ அறிகிலேன். ஏழைமக்கள் தியாகம் மறக்கப்படுகிறது. ஏழு பிணங்களும் சென்னை யில் ஊர்வலம் வந்த காட்சியைத் தோழர் சிங்காரவேல் செட்டியார் வருணித்து எழுதிய கட்டுரை சரித்திர

உலகுக்குரியது. மேலும் துப்பாக்கிப் பிரயோகங்கள் அக்டோபர் 15லும், செப்டம்பர் 19லும் நிகழ்ந்தன இருவர் மாண்டனர்; சிலர் காய முற்றனர்.

போலிஸார் சார்பில் உயிர் துறந்தவர் இருவர். ஒருவர் ஹெட்கான்ஸ்டேபில்; மற்றொருவர் சார்ஜெண்ட். அவ்விருவரும் தொழிலாளர் எறிகுண்டால் கொல்லப் பட்டனர் என்று சொல்லப்பட்டது. அச்செய்தி உறுதிப் படவில்லை.

குழப்ப நிகழ்ச்சிகள் பல என்னுள்ளத்தினின்றும் மூண்டெழுந்து வருகின்றன. அவைகட்கென ஒரு தனி நூல் எழுதுதல் வேண்டும். குழப்பத்தைப் பற்றி நகர பரிபாலன சபையிலும், சட்ட சபையிலும் விவாதங்கள் நடந்தன. அவைகளில் திரு. ஒ. தணிகாசலம் செட்டியார் பேசிய *பேச்சுக்களில் பல உண்மைகள் சுருங்கிய முறையில் விளங்கிக்கொண்டிருக்கின்றன.

## முடிவு

வேலை நிறுத்தம் எப்படி முடிந்தது? ராஜா ஸர். இராமசாமி முதலியார் பங்களா வெளியில் கூடிய கூட்டத்தில் ஸர். பி. தியாகராஜ செட்டியார் நிகழ்த்திய இராஜ தந்திரச் சொற்பெருக்கில் மூழ்கித் தொழிலாளர் பலர் வேலைக்குத் திரும்பினர். ஸர். பி. செட்டியார், 'மாதங்கள் ஆறாயின. இனிப் பிடிவாதம் வேண்டா. உங்களுக்கு இராஜ தந்திரம் வேண்டும். மில்களில் புது ஆட்கள் நிரப்பப்படுகிறார்கள். புது ஆட்கள் தொழிலைப்

---

* 'நவசக்தி' சிலம்பு 1 - பரல் 51 - பார்க்க.

பயின்று விடுவார்களாயின் உங்களுக்குக் கஷ்டம் விளையும். போலீஸ் காவலையும், இராணுவக் காவலையுங் கடந்து அவர்களைத் தடுத்தல் இயலாது. ஆனால் அவர்களை ஒரு வழியில் அப்புறப் படுத்தல் கூடும். நீங்களெல்லாரும் வேலைக்குச் செல்ல உறுதிகொண்டால் அவர்கள் வீட்டுக் கனுப்பப்படுவார்கள். ஆதலால், நீங்கள் உள்ளே போங்கள். நன்மையே விளையும். சங்கம் சாகாது' என்று பேசிய பேச்சு அவ்வேளையில் தொழிலாளர்க்கு உசிதமாகத் தோன்றிற்று. ஸர். பி. செட்டியார் ஜோசியம் பெரிதும் பலித்தது.

## இரண்டு

தொழிலாளர் இயக்கத்தை முளையிலேயே கிள்ளி எறியச் செய்யப்பெற்ற சூழ்ச்சிகளுள் சிறந்தனவாக உள்ள இரண்டு இங்குக் குறிக்கப்பெற்றன. ஒன்று வழக்கு; மற்றொன்று நாடு கடத்தும் எச்சரிக்கை. பின்னையதின் அடிப்படை இலாபத்தில் மிகச் சிறு உரிமை தொழிலாளர்க்கு வேண்டுமென்று பேசப்பட்டமை; முயன்றமை அன்று. வெறும் பேச்சுக்கு எத்துணை எத்துணை எதிர்ப்பு! எதிர்ப்பால் விதை பட்டுப்போய் விட்டதா? விதை முளைவிட்டே வருகிறது. அதற்குரிய ஒளியும் காற்றும் நீரும் படர்ந்து, வீசி, பாய்ந்தே வருகின்றன. அவ்வொளியையும் காற்றையும் நீரையும் வற்றச் செய்யும் ஆற்றல் எதற்கு மில்லை; எவர்க்கு மில்லை.

இந்தியாவில் முதல் முதல் தோன்றிய சென்னைத் தொழிலாளர் சங்க நிகழ்ச்சிகள் இன்னுஞ் சில உள.

அவற்றை இந்நூற்கண் விரிப்பது பொருத்தமாகாது. அவற்றை என்னுல் இயற்றப் பெற்ற 'திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள்' என்னும் நூலிற் காண்க. 1947-ம் ஆண்டு நிகழ்ச்சி சரித்திரத்தில் பதியத் தக்கது. அதற்கென ஒரு தனி நூல் எழுதப்படலாம்.

## தொழிற் காங்கரஸ்

சிறு சிறு முயற்சிகள் ஒன்றுபட்டு அரசியல் விடுதலைக்குக் காங்கரஸாக முகிழ்த்தமைபோலத் தொழிற் சங்கங்களின் சிறு சிறு முயற்சிகள் ஒன்றி ஒன்றி அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கரஸாக முகிழ்த்தன. முதல் காங்கரஸ் (31-10-1920) லாலா லஜபதிராய் தலைமையில் பமபாயில் கூடியது.

1929-ம் ஆண்டில் தொழிற் சங்கக் காங்கரஸ் பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையில் கூடிற்று. அக் கூட்டத்தில் பிளவு ஏற்பட்டது. ஒரு கூட்டம் மிதவாதத் தில் சிக்குண்டது. மற்றென்று சமதர்மத்தின் வயப் பட்டது. இப்பொழுது மிதவாதம் குறைந்தும் குலைந் தும் வருகிறது.

## தற்கால நிலை

தொழிற்சங்க இயக்கம் தோன்றி ஏறக்குறைய முப் பது ஆண்டுகளாகின்றன. இத்துணை நாள் எவ்வளவோ காரியங்களைச் சாதித்திருக்கலாம். இயக்கம் தொடக் கத்தில் நன்னிலையிலிருந்தது; பின்னை நாளுக்கு நாள் இறுகலாயிற்று. அந்நாளில் தலைவர்களுக்குள் ஒற்றுமை நிலவியது; அவர்களால் நடத்தப்பெற்ற சங்கங்

களுக்குள்ளும் ஒற்றுமை நிலவியது. பின்னே தலைவர்களுக்குள் பிணக்கு எழுந்தது; சங்கங்களிலும் பிணக்கு எழுந்தது.

அரசியல் அமைப்புக்களில் தொழிற்சங்கங்களுக்கென்றும் தொழிலாளர்க்கென்றும் சில பீடங்கள் ஒதுக்கப்பட்டன. அவற்றில் தலைவர்கள் அமர்தற்குச் செய்யப்படும் முயற்சிகளில் அவர்களுக்குள் பிணக்கு நேரும். அப்பிணக்குச் சங்கங்களிலும் புகுந்து அவற்றை நாசப்படுத்தும்.

பதவி மாயை சங்கங்களின் ஒற்றுமையைக் குலைத்ததோடு மற்றொரு மாயையும் அவற்றின் ஒற்றுமையைக் குலைத்தது. அது ஜினிவா மாயை. ஜினிவா செல்லத் தலைவர்களுக்குள் போட்டி எழும். அப்போட்டியால் விளையும் மனத்தாங்கல்கள் சங்கங்களைத் தாக்கும்.

தொழிலாளர் சங்கங்கள் பெரிதும் பதவி மாயைக்கும் ஜினிவா மாயைக்கும் இரையாயின. அம்மாயைகளின் பொருட்டுச் சங்கங்கள் ஓம்பப்பட்டன. தொழிலாளர் நலனுக்கென்று சங்கங்கள் ஓம்பப்படுவது அருமையாகியது.

தலைவர்கள் ஒருவரோடொருவர் கலந்து வாழ விரும்புகின்றாரில்லை; தனித்தனியே வாழ விரும்புகின்றனர். இத் தலைவர்களைக் கொண்ட சங்கங்களுக்குள் எங்ஙனம் ஒற்றுமை உண்டாகும்? முதலாளிகள் கொடுமையாலும் - அரசாங்க அடக்கு முறையாலும் - குலையாத சங்கங்களும், தலைவர்கள் பிணக்கால் குலையுங் காட்சியை வழங்குகின்றன.

### காங்கரஸ் ஆட்சி

காங்கரஸ் ஆட்சி தொழிற் காங்கரஸுக்கு ஆக்கந் தேடவில்லை; அதை ஒடுக்கவே முயல்கிறது என்று தெரிகிறது. இப்பொழுது அகில இந்திய தேசிய காங்கரஸ் என்ற அமைப்பு வல்லபாய் பட்டேல் ஆசி பெற்றுத் தோன்றியுள்ளது. அது பழைய தொழிற் காங்கரஸை அழிப்பதற்கென்று தோன்றியதென்பது படேலின் பேச்சால் உணரலாகும். பழைய தொழிற் காங்கரஸில் பொது உடைமைக் கட்சி ஆக்கம் பெற்றுள்ளமையால், புதுத் தொழிற் காங்கரஸ் தோற்றத்துக்கு அவசியம் நேர்ந்ததென்று படேல் பேசினர். புதிய அமைப்பு, காங்கரஸ் காரியக் கூட்டத்தின் ஆதரவையும் பெற்றுவிட்டது. காங்கரஸ்காரர் பழைய அமைப்பை வேட்டையாடத் துவங்கியுள்ளனர். புது அமைப்பு, முதலாளிகள் சார்பில் தோற்றுவிக்கப்பட்டதென்று நாடு முழுவதும் பேசப்படுகிறது.

### இளைஞர்

இந்நெருக்கடியான நேரத்தில் பொருளாதார நுட்பத்தை நன்கு உணர்ந்த இளைஞர்கள் தொழிற் சங்கங்களில் சேர்ந்துவருகிறார்கள். அவர்களால் பொருளாதார நுட்பம் பிரசாரஞ் செய்யப்படுகிறது. இனித் தொழிலாளர்கள் நல்லுணர்வு பெற்று ஒற்றுமையுடையவர்களாகலாம்.

### விவசாயச் சங்கம்

தொழிலாளர் இயக்கம் இன்னும் நாட்டில் நன்கு பரவவில்லை. அஃது இப்பொழுது தொழிற்சாலைகளில்

வேலை செய்வோரைக்கொண்ட சங்க அளவில் நிற்கிறது. அது மேலும் மற்ற மற்றத் தொழிலாளரிடங்களிலும் ஊடுருவிப் பாய்தல் வேண்டும்; சிறப்பாக விவசாயிக ளிடத்தில் புகுவது நல்லது.

நமது நாட்டில் பெரும்பான்மையோர் விவசாயிகள். அவர்களே நாட்டின் முதுகெலும்பாயிருப்பவர்கள். அவர்களை மிகச் சிலர் ஒடுக்கி ஆண்டு வருகின்றனர். அவர்கள் விடுதலை, நாட்டின் விடுதலையாகும்; பொருளா தார விடுதலையாகும். ஆகவே பொருளாதாரப் பிர சாரம் பெரிதும் விவசாயிகளிடைப் பரவுதல் வேண் டும். விவசாயிகளிடைப் பொருளாதார ஞானம் பெருகும் நாளே நாட்டுக்குரிய நன்னாளென்க. விவ சாயிகளுக்குப் பொருளாதார ஞானத்தை யூட்டாது, அவர்களிடை அதையும் இதையும் பேசி, வெறும் அறிவற்ற ஆவேசத்தை எழுப்புவது அவர்களை ஏமாற் றுவதாகும்.

இந்நாளில் வடஇந்தியாவில் உழவர் சங்கங்கள் ஆக்கம் பெற்று வருகின்றன. தென்னிந்தியாவிலும் அச்சங்கங்கள் தோன்றிவருகின்றன. நாடு முழுவதும் உழவர் சங்கம் பெருகுவது சிறப்பு. உழவர் இயக்கத்தை ஒடுக்க நாட்டுக் காங்கரஸ் அரசு முனைந்து நிற்கிறது. பொதுஜனப் பாதுகாப்புச் சட்டமென்று ஒன்று நிறுவப்பெற்றுள்ளது. அது ரௌலட் சட்டத்தினுங் கொடியது. அச்சட்டம் தொழிலியக்கத் தலைவர்களை விழுங்கி வருகிறது. காங்கரஸ் ஆட்சி முதலாளி ஆட்சி யாகி வருதல் வருந்தத் தக்கது.

## காங்கரஸில் தொழிலியக்கம்

இனித் தொழிலியக்கம் சங்க அளவில் நிற்ற லாகாது. தொழிற்சங்க இயக்கம் தொழிலியக்கத்தின் ஒரு படி. தொழிலியக்கம் அப்படியிலேயே நின்று விட்டால் அதனால் ஒன்றும் செய்தல் இயலாது. தொழி லியக்கம் காங்கரஸ் இயக்கமாதல் வேண்டும்; நாட் டியக்கமாதல் வேண்டும்; ஆயின் பொருளாதார விடு தலை தானே உண்டாகும்.

நாட்டின் விடுதலைக்கென்று ஏற்பட்டது காங்கரஸ். காங்கரஸ் விடுதலைக்குப் பாடுபட்டது. நாடு அந்நிய ஆட்சியினின்றும் விடுதலை அடைந்தது. இது முழு விடுதலையாகுமா? அந்நிய ஆட்சியினின்றுமட்டும் விடுதலை அடைந்து, ஒரு சிறு கூட்டம் இன்புற, மற் றொரு பெருங்கூட்டத்தை வேலையின்றித் திண் டாடச் செய்து, பட்டினியாலும் பசியாலும் அதைத் துன்புறுத்துவது முழு விடுதலையாகாது. முழு விடுதலை யாவது, அந்நிய ஆட்சியினின்றும் விடுதலை அடைவ துடன் வேலையில்லாத் திண்டாட்டம் எப்பகுதி யிலும் தோன்றாமல் நாட்டாரனைவரும் ஏதோ ஒரு விதத தொழில் செய்து நல்வாழ்க்கை நடாத்தி இன் புறத் துணைபுரிவது. இதற்குச் செல்வம் ஒரு பக்கம் பெருகி மற்றொரு பக்கம் அருகாதவாறு காக்கவல்ல ஆட்சிமுறை தேவை. அதுவே சமதர்ம ஆட்சி என்பது.

முன்னே காங்கரஸ் ஆட்சி பல மாகாணங்களில் இரண்டரை ஆண்டு நடைபெற்றது. அக்காலத்தில் மந் திரிமார் சமதர்ம ஆட்சி கால்கொள்ளவாவது முயன் றனரா? சாம்ராஜ்ய ஆட்சிமுறையை ஓம்புவதிலேயே

அவர்தம் முயற்சி சென்றது. அவர்தம் ஆட்சியில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிற்று? அருகிற்று? நாடு பஞ்சலிறுப்பதாக. மீண்டும் காங்கரஸ், ஆட்சி ஏற்றது. என்ன செய்தது? பொதுஜனப் பாதுகாப்பென்று உரிமையைக் கல்லவல்ல ஒரு கொடுஞ் சட்டஞ் செய்தது. அதனால் சமதர்மத்தை நிறுவவல்ல தொழிலியக்கம் படும் பாட்டை நாடறியும்.

இப்பொழுது நாடு ஒருவித விடுதலையடைந்தது. அதை முழு விடுதலையாக்கும் முயற்சி நாட்டில் எழுதல் வேண்டும். முழு விடுதலைக்கு நாடு சமதர்மமய மாதல் வேண்டும். காங்கரஸும் தொழிலியக்கமும் ஒன்றினாலன்றி நாடு சமதர்ம மயமாகாது. ஆகவே, தொழிலாளர் இயக்கத்தைக் காங்கரஸில் ஒன்றச் செய்ய நாட்டவர் முயல்வாராக.

## சமதர்மம்

சமதர்மம் என்றதுஞ் சிலர் அஞ்சுகின்றனர்; சிலர் அதைப் புலி கரடி சிங்கமென்று கருதுகின்றனர். அது தவறு. சமதர்ம தத்துவத்தைப் பகுத்தறிவால் ஆராய்ந்து சிந்தித்து ஒரு முடிவுக்கு வருதலே அறிவுடைமை. சமதர்ம விரோதிகள் - சுயநலக்காரர்கள் - பிரசாரத்தை மட்டுங் கேட்டு அஞ்சுவது அறிவுடைமையாகாது.

சமதர்மத்தைப் பற்றி இதுகாறும் பலதிறக் கருத்துக்கள் வெளிவந்துள்ளன. அக்கருத்துக்களடங்கிய நூல்கள் பெரிதும் மேல் நாட்டவரால் இயற்றப்பட்டவை. இந்திய அறிஞர் சிலரும் சமதர்மத்தைப் பற்றிப் பேசியும் எழுதியும் வருகின்றனர். அப்பேச்சும்

எழுத்தும் பெரிதும் மேல்நாட்டு நூல்களின் எதிரொலி களாகவே இருக்கின்றன. வெறும் நூலுலகில் மட்டும் உலவி ஒரு நாட்டைத் திருத்த முயல்வதால் நலம் விளை யாது ; சில சமயம் தீமை விளையினும் விளையும்.

ஆன்றோரிடத்திருந்து காலத்துக்கேற்ற தத்துவம் பிறக்கும். அத்தத்துவத்தை யொட்டி அவ்வந்நாட்டு இயற்கைக்கு அரண் செய்யும் முறையில் திட்டங் கோலிச் சீர்திருத்தஞ் செய்வது அரசியல் ஞானமாகும். ஒரு நாட்டுமுறை மற்றொருநாட்டு இயற்கைக்குப் பொருந்தியுமிருக்கும் ; பொருந்தாமலுமிருக்கும் ; ஒரு புடைப் பொருந்தியும் மற்றொருபுடைப் பொருந்தா மலுமிருக்கும். ஒன்றை நாட்டிடை நுழைப்பதற்கு முன்னர், அது நாட்டின் இயற்கைக்குப் பொருந்தி வருமா வாராதா என்று ஆராய்ந்து தெளிந்த பின்னரே அதை நுழைக்க முயல்வது அறிவுக்கு அழகு.

பழம்பெருங் காலத்தில் உலகம் இயற்கையோ டியைந்து வாழ்ந்தமையால் அது சமதர்ம வழியில் இயங்கி வந்தது. பின்னை செயற்கை வாழ்க்கை முதிர முதிரச் சமதர்மம் சாய்ந்து சாம்ராஜ்யம் எழலாயிற்று. இக்கால உலகம் சாம்ராஜ்ய ஆட்சியால அலுத் துக் களைத்து நலிந்து மெலிந்து பிணிபட்டுத் துன்புறு கிறது. அதனல் உலகம்பழைய சமதர்மத்தை நாடா நிற்கிறது.

பழங்காலத்தில் நிலம் மக்களுக்குப் பொதுவாகவே பயன்பட்டு வந்தது. நாளடைவில் அதன் பொதுமை மாறி அது தனி மனிதர் உடைமையாயிற்று. பெரும் பான்மையோர்க்கு நில உரிமை அற்றுப்போய் விட்

டது. அரசர்களும், ஜமீன்தாரிகளும், மிராசுதாரர்களும், செல்வர்களும் நிலமுடையவர்களானார்கள். மற்றவர் அவர்களிடத்தில் வேலை செய்து கூலிபெற்றுப் பிழைப்பவராயினர்.

பண்டை நாளில் மக்கள் கைத்தொழில்கள் செய்து வாழ்ந்து வந்தார்கள். அந்நாளில் முதலாளி தொழிலாளி வேற்றுமை எழவில்லை. முதல் தொழில் அற்ற சமூகமே நிலவியது. பின்னே இயந்திர காலந் தோன்றிற்று. இயந்திரத்தால் உற்பத்தி அதிகம் என்று சொல்ல வேண்டுவதில்லை. முதலாளிகள் இயந்திரங்களைக் கொண்டு உற்பத்திகளைப் பெருக்கத் தங்கட்குத் தேவையான ஆட்களை அமர்த்திக் கூலிகொடுத்து வரலானார்கள். உற்பத்திச் சாதனங்களெல்லாம் முதலாளி வயப்பட்டுக் கிடத்தல் கண்கூடு.

## இனம்

இப்பொழுது உலகிலுள்ள மக்கள் இனத்தை இரு கூறாகப் பிரிக்கலாம். ஒன்று முதலாளி இனம்; மற்றொன்று தொழிலாளி இனம். இரண்டில் முதலாளி இனம் ஆள்வதாயும், தொழிலாளி இனம் ஆளப்படுவதாயும் இருக்கின்றன.

முதலாளி ஆட்சிக்கு முன்னே பிரபுக்கள் ஆட்சி நடைபெற்றது; பிரபுக்கள் ஆட்சிக்கு முன்னே மன்னராட்சி நடைபெற்றது. மன்னராட்சி எப்படிப் பிறந்தது?

ஒவ்வொரு குடும்பத்திலும் ஒவ்வொரு தலைவர் இருந்தனர். குடும்பங்கள் சேர்ந்த ஒன்று கிராமம்.

குடும்பத் தலைவரெல்லாஞ் சேர்ந்து கிராமத் தலைவரைத் தெரிந்தெடுத்தனர். கிராமங்களாலாயவை கோட்டம் முதலியன. கிராமத் தலைவர்கள் ஒன்றுபட்டுக் கோட்டம் முதலியவற்றுக்குத் தலைவர்களை ஏற்படுத்தினார்கள். இவர்கள்கூடித் தங்களுக்கு ஒரு தலைவரை நியமித்துக் கொண்டார்கள். அவரே மன்னராயினர்.

இத்தலைவர் பலரும், தொடக்கத்தில் கடவுளிடத்து உறுதியும் அன்பும் உடையவராய், ஜீவகாருண்ய முடையவராய், தமக்கென வாழாது மற்றவர்க்கென வாழ்வோராய், நில புலங்களைத் தர்மகர்த்தராக நின்று காப்பவராய், விளைவு எல்லார்க்கும் பயன்படத் துணை செய்வோராய்த் தொண்டாற்றி வந்தனர். நாளடைவில் தலைவர்கள் நிலைமை மாறிவிட்டது. அவர்கள் நிலபுலங்களை அதிகாரத்தால் தங்களுடைமைகளாக்கிக் கொண்டார்கள். நாளுக்குநாள் மன்னராட்சியில் கொடுங்கோல் புகுந்தது என்று சுருங்கச் சொல்லலாம். அவ்வாட்சி சாய்க்கப் பட்டது. எவரால்? பிரபுக்களால். பிரபுக்கள் ஆட்சி, முதலாளிகளால் கவிழ்க்கப்பட்டது. சில காலமாக முதலாளி ஆட்சி சாம்ராஜ்யமாய்த் தலைவிரித் தாடுகிறது.

சாம்ராஜ்யத்தை வீழ்த்துங் கிளர்ச்சியுந் தோன்றியுள்ளது. ஏன்? இயற்கையை நோக்கிக் கேட்டல் வேண்டும். சாம்ராஜ்யத்தால் உலகம் பெற்றுவரும் அநுபவம் என்ன? குழப்பம் என்று ஒரு சொல்லால் பதிலிறுக்கலாம்.

இயற்கைக் கூறுகளெல்லாம் பொதுமையில் மக்களுக்குப் பயன்பட்டு வருதல் கண்கூடு. பொதுமை,

மக்களுக்குள் குழப்பம் நிகழாதவாறு காத்து வருந் தன்மை வாய்ந்தது. ஆகவே, இயற்கைக் கூறுகளின் நோக்கத்துக்குத் துணைசெய்யவல்ல அற ஆட்சி நடை பெறுதல் வேண்டும். இல்லையேல், மறக்குழப்பம் நிகழ்ந்து கொண்டே இருக்கும். பொதுமை அறத்துக்கு மாறு பட்ட ஆட்சியால் விளைந்துவருந் தீங்குகளைப் பலபடக் கூறலாம். அவற்றுள் மூன்று சிறப்பாகக் குறிக்கத் தக்கன. ஒன்று வேலையில்லாத் திண்டாட்டம்; இன் னொன்று போராட்டம்; மற்றொன்று ஒழுக்கக்கேடு.

நில புலங்களும் தொழிற்சாலைகளும் மற்ற உற்பத்தி ஸ்தாபனங்களும் தனி மனிதர் உடைமையானபடியால், அவர் தம்தொழின் முறைகட்குத் தேவையான ஆட்களை மட்டும் வைத்து வேலை வாங்குவோராயினர். மற்றவர்க்கு வேலை கிடைப்பதில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்தால் பசி பட்டினி பஞ்சம் அகால மரணம் குழப்பம் முதலியன நிகழ்தல் இயல்பு. வேலையில்லாதார் கிளர்ச்சியை ஒடுக் குதற்கென்று முதலாட்சியின் சட்டங்களும், போலிஸும், இராணுவமும், பத்திரிகைகளும், இன்ன பிறவும காத் துக் கொண்டிருக்கின்றன.

நில புலங்களும் பிறவும் பொதுமை அற ஆட்சியின் உடைமையாயின், வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு இடம் உண்டாகுமோ? உண்டாகாது. உலகில் பிறந்த சிலரே வாழ்தல் வேண்டுமென்பதா இயற்கையின் நோக்கம்? எல்லாரும் நன்கு வாழ்தல் வேண்டுமென்பதே இயற்கையின் நோக்கம். அதற்குத் துணைபுரிதல் முதலாளி ஆட்சியால் இயலவில்லை யென்பது வெள்ளிடை மலையென விளங்கிவிட்டது. அத்தகைய ஆட்சிமுறை

மாறுதல் வேண்டுமா வேண்டாமா? மாறுதல் வேண்டும் என்று சொல்வோர் முதலாளி கூட்டத்தின் பகைவரல்லர்; எல்லாரும் இன்புற்று வாழ வேண்டுமென்னும் ஜீவ காருண்யமுடையவர். அவர் எவரிடத்தும் பகைமை கொள்ளாதவர். முதலாளி ஆட்சியில் சமதர்மம் நிலவ இடமின்மையால், அது மாறுவது நலம் என்று சொல்வது அறமேயாகும்.

இயந்திரங்கள், உற்பத்தியைப் பெருக்குவதால் முதலாளி இனத்தை ஆசைப்பேய் அலைக்கப் புகுகிறது. ஆசைப்பேயினின்றும் விடுதலையடைதல் அவ்வினத்தால் இயலவில்லை. ஆசைக்கோர் அளவும் உண்டோ? இயந்திர உற்பத்திகள் நாட்டின் தேவைக்குமேல் பெருகிக் குவிகின்றன. அதனால் பிறநாட்டு வாணிப நாட்டமும் உடன் பெருகுகிறது. இயந்திர உற்பத்தி ஓங்கியுள்ள ஒவ்வொரு நாட்டு முதலாளி வர்க்கத்துக்கும், இயந்திர வாசனை அறியா நாடுகளை - குடியேற்ற நாடுகளை - பற்ற வேண்டுமென்னும் ஆசை உண்டாகிறது. அவ்வாசை, வான் போர் - நிலப்போர் - நீர்ப்போராக மூள்கிறது. ஆசையே குண்டு பீரங்கியாய், நச்சுக்காற்றாய், பிறகொலைக் கருவிகளாய்ப் பரிணமிருக்கிறது. எந்நேரமும் சண்டை நிகழ்ந்த வண்ணமிருக்கிறது. எததனைச் சர்வதேச சங்கங்கள் தோன்றினும், அவை சண்டையை நிறுத் தும் வல்லமை பெறாமலே ஒழிகின்றன. அடிப்படை முதலாளி வர்க்கத்தின் ஆசை.

குடியேற்ற நாடுகள் இயந்திர முதலாளி வர்க் கத்துக்கு இரையானதும், அந்நாடுகளில் காலங் காலமாக வளர்ந்துவந்த கைத்தொழில்கள் நாசமாகின்றன. நாசமாகும் நிலைமை முதலாளி ஆசையால் ஏற்படுகிறது.

இயந்திரம் வேண்டாமென்பது எனது கருத்தன்று; இயந்திரம் பொதுமை ஆட்சியிலேயே மக்களனைவருக்கும் நலம் புரிவதாகுமென்பதும், சாம்ராஜ்ய ஆட்சியில் இயந்திரம் சிலர்க்கு நலனும் பலர்க்குக் கேடும் விளைக்குமென்பதும், பொதுமை ஆட்சியில் இயந்திரம் எல்லார்க்கும் நலம்புரிவதாகுமென்பதும் எனது கருத்து.

சாம்ராஜ்ய ஆட்சிமுறை வளர்ந்து வந்தால் உலகம் என்னாகும்? சிந்திக்க. சண்டை ஒழிதல் வேண்டுமா வேண்டாமா என்று ஆழ்ந்து சிந்திக்க. சண்டையொழிய வேண்டுமானால் சாம்ராஜ்ய ஆட்சிமுறை ஒழிதல் வேண்டுமன்றோ? சண்டை வேண்டாமென்று சொல்வது பாவமா?

முதலாளி ஆட்சியில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகுவதால் மன்பதைக்கண் ஒழுக்கம் கெடுகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் ஆணுலகை மட்டும் பீடிப்பதில்லை; பெண்ணுலகையும் பீடிக்கிறது. அதனால் தீயொழுக்கம் பரவுகிறது. இச்சைக்காக விபசாரம் செய்வோர் தொகை சிறியது; மிகச்சிறியது. வறுமையால் வயிற்றுக்காக விபசாரம் செய்வோர் தொகை பெரியதாகிறது; மிகப் பெரியதாகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் தீயொழுக்கத்தையும் வளர்க்கிறது. பணத்திமிரால் விளையும் தீயொழுக்கங்கள் கோடி கோடி. ஆதலின், ஒழுக்கத்தின் பொருட்டும் சாம்ராஜ்ய ஆட்சிமுறை ஒழிதல் வேண்டுமென்க.

### தக்க மருந்து

சாம்ராஜ்ய ஆட்சியை வைத்துக்கொண்டே வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிப்பதென்பதும், யுத்

தத்தை நிறுத்துவதென்பதும், ஒழுக்கத்தை ஓம்புவதென்பதும் ஏமாற்றமேயாகும். ஏமாற்றத்துக்கு உலகம் இரையாதல் கூடாது.

சாம்ராஜ்ய ஆட்சி முறையிலேயே வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கவும், போராட்டத்தை நிறுத்தவும், ஒழுக்கத்தை ஓம்பவும் பலப்பல முறைகள் அறிஞரால் கோலப்பட்டன. அவை சோதிக்கப்பட்டன. அவற்றால் எதிர்பார்த்த நலன் விளையவில்லை. ஆகவே, வேலையில்லாத் திண்டாட்டம் முதலிய நோய்களைப் போக்க ஏதேனும் தக்க மருந்து காணப்படுதல் வேண்டுமன்றோ? நெருக்கடி முதிர முதிர வழிதுறை விளங்கிக்கொண்டே போகும். பலப்பல காணப்பட்டு முடிவில் பழைய சமதர்மமே மருந்தென்று அறிஞரால் கொள்ளப்பட்டது. பழைய சமதர்மத்தை விஞ்ஞானத் துணைகொண்டு புதுக்க வேண்டுவது இக்கால அறிஞர் கடமை.

## பெயர் ?

ஆட்சிமுறைப் பெயரைப்பற்றிய கவலை வேண்டுவதில்லை. எப்பெயராயினுமாக ; எவ்வாட்சிமுறை ஆயினுமாக. அது, மக்கள் எல்லாரும் வேலைசெய்து பிழைக்கவும், தீங்கு விளைக்கும் போராட்டமின்றி வாழவும், ஒழுக்கத்தை ஓம்பவும் துணைசெய்யவல்லதா யிருத்தல் வேண்டும். அவ்வாட்சிமுறை சமதர்மம் என்று அழைக்கப்படுகிறது. அதை எப்பெயரால் அழைத்தாலென்ன ? தத்துவம் மட்டும் பிறழாதிருத்தல்வேண்டும்.

சமதர்மம் என்பது புதியதன்று. அது பண்டைக் காலத்தில் ஆட்சியிலிருந்ததே. அஃது ஒவ்வொரு

போது ஒவ்வொரு விதமாகக் கொள்ளப்பட்டு வந்தது. அத்தர்மம் இக்காலச் சாம்ராஜ்ய ஆட்சிமுறையால் மறைந்து போயிற்று. இப்பொழுது உலகம் சாம்ராஜ்யத்தால் விழுங்கப்பட்டுளது.

## மார்க்ஸ்

சாம்ராஜ்யத்தால் விழுங்கப்பட்ட உலகை, விடுதலை செய்து, சமதர்மத்தால் சீர்திருத்தி அமைக்கப் பின்னாளில் முயன்றவர் சிலர். அவருள் சிறந்தவர் காரல் மார்க்ஸ். சமதர்மத்தை விஞ்ஞான முறையால் ஒழுங்குபடுத்தி உலகுக்கீந்த பெருமை காரல் மார்க்ஸுக்கு உண்டு. மார்க்ஸ் போதனையைச் சாதனையாக்க முயன்றவர் லெனின் உள்ளிட்ட சிலர்.

மார்க்ஸியம் உலகெங்கும் இந்நாளில் ஆராயப்படுகிறது; சிந்திக்கப்படுகிறது. அஃது இன்னும் யாண்டும் முற்றும் நிலவிச் செய்கையில் நிகழவில்லை. ருஷ்யாவில் மட்டும் மார்க்ஸிய விதை விழுந்திருக்கிறது. அங்கே அத்தத்துவம் சோதனையிலிருந்து வருகிறது.

மார்க்ஸியத்தைப்பற்றி முன்னரும் என் கருத்தை வெளியிட்டுள்ளேன்; நமது இந்திய நாட்டில் மார்க்ஸியம் எம்முறையில் வளரும் என்பது பற்றியும் ஆங்கே குறிப்பிட்டுள்ளேன்; மேலும் அதுபற்றிக் கூறுவேன்.

## ஆதி மநுவும் திரிபும்

மார்க்ஸியம் தோன்றுதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நமது நாட்டில் ஆதிமநு (ஸ்மிருதிமநு அல்ல) என்பவர் தோன்றி மன்பதைக்குத் தருமநூல்

தந்தனர். அத்தரும நூலில் பின்னே, இடை இடை அவ்வக்காலத்துக் கேற்றவாறு, சிற்சில மாற்றங்கள் செய்யப்பட்டன. ஆதிமநுவால் தருமத்தின் கூறுபாடுக ளாகக் கோலப்பெற்ற தொழில் முறைகள் பின்னர்ப் பிறப்பு வழியில் நிகழுமாறு திரிக்கப்பட்டன. அத்திரி புடன் மேலும் மேலும் பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிக் கப்பட்டன. அத்திரிபும் இக்கற்பனையும் இந்தியாவை அடிமைப்படுத்தின. இக்குறைபாடுகளை நீக்கி, ஆதிமநு வின் தர்மத்தை நோக்கினால், அது மார்க்ஸியத்துக்குத் தாயகமாகவே விளங்குதல் காணலாம்.

காரல் மார்க்ஸ் ஜெர்மெனியில் பிறந்தவர் (1818—1883). அவர் பல கலை பயின்று ஒரு பெருங் கழகமாயினர். அவரது பரந்த கலைஞானம் அவர்க்கொரு புதுமை ஒளியை வழங்கியது. அது பொதுமை ஒளி. அவ்வொளியினின்றும் எழுந்த எண்ணமும், பேச்சும், எழுத்தும், முயற்சியும் அக்கால ஜெர்மென் அரசை நடுக்குறச் செய்தன. நடுக்கம் மார்க்ஸை நாட்டை விடுத் தோடுமாறு துரத்தியது. பெல்ஜியம், பிரான்ஸ் முதலிய நாடுகளும் அவரைத் தங்களிடம் தங்கவிட வில்லை. அவையும் அவரைக் கடிந்து முடுக்கின. இங்கி லாந்து மார்க்ஸ் வதிய இடந்தந்தது. அங்கே அவர் வறுமைக் கலையில் மூழ்கினர்; உலக வறுமைப் பிணியை யும், அதற்கு அடிப்படையாயுள்ள அறியாமை நோயை யும் போக்க முயன்றனர்; முயன்று தக்க மருந்து கண் டனர். பல மருத்துவக் கலைகள் அவர்பால் மலர்ந்தன. அவரால் உலகுக்குப் பொதுமை அறிவுறுத்தப்பட்டது. அதனுடன் நமது நாட்டுப் பண்டை அறமும் நுழைந்து

ஒன்றினால், உலகம் பொருளின்பத்துடன் அமைதி இன்பத்தையும் நுகர்வதாகும்.

## அமைதி

சாம்ராஜ்யங்களுக்குள் நிகழும் போராட்டம் பெருகப் பெருக மக்களுக்குள் தெளிவு ஏற்படும். அத் தெளிவுக்குத் துணைசெய்வது மார்க்ஸியம். மார்க்ஸியத்தால் எல்லாரும் பொருளின்பத்தை நுகரும் நிலைநேரினும், அமைதி இன்பத்தை நுகரும் நிலை நேராது. பொருளின்பத்தினூடே அறமும் கலந்து நிற்றல்வேண்டும். அறங் கலந்த பொருளின்பமே அமைதியை நிலைபெறுத்த வல்லது. அதற்குரிய துறைகள் இந்திய அறவோர் பலரால் நன்கு கோலப்பட்டுள்ளன. ஆகவே, உலகம் மார்க்ஸியத் தளவில் நின்றுவிடாது. அது மேலும் தருமத்தை அவாவியே சீர்படும்.

## முழு விடுதலை

தருமத்துக்கு இந்தியா வழி காட்டுதல் வேண்டும். இதற்கு இந்தியா இப்பொழுது பெற்றுள்ள விடுதலை போதாது. அது முழு விடுதலை பெறுதல் வேண்டும். முழு விடுதலைக்கு அடிப்படை எது? பொருளாதார விடுதலை. இதுவே சமதர்மமென்பது.

சமதர்மத்துக்குக் காங்கரஸ் இணங்குமா என்பது ஒரு பெருங்கேள்வி. காங்கரஸ் இப்போது முதலாளி வயப்பட் டிருக்கிறது. 'பொறுப்பாட்சி' 'பொறுப்பாட்சி' என்று எழுப்பப்பெற்ற முழக்க மெல்லாம் பணக்காரர்க்குச் சாதகமாயின; ஏழை மக்கட்குப் பாதகமாயின.

சாதக பாதகம் என்ன செய்கின்றன? முதல் - தொழில் போரைத் துவங்கச் செய்கின்றன. முன்னே இப்போர் வலுக்கவில்லை. காரணம், அந்நியம் ஆட்சியி லிருந்தமையே. அந்நாளில் அந்நிய ஆட்சியினின்றும் விடுதலை பெறுதற்கே காங்கரஸ் தொழிலாளி உதவியை நாடியது. தொழிலாளி காங்கரஸுக்குத் துணை போனான்; மனமாரத் துணைபோனான். அதனால் அந்நிய ஆட்சி தொலைந்தது. தொலைந்ததும், தனக்குரிய ஆட்சி இன்னும் வரவில்லையே என்று தொழிலாளி நினைக்குமாறு காங்கரஸ் ஆட்சி இதுபோது நடக்கிறது. காங்கரஸ் சுயஆட்சி தன்னைக் காய்வதையும், அடக்குவதையும், தன் உரிமையைக் கடியக் கொடுஞ்சட்டங்கள் நிறைவேற்றுவதையும், விசாரணையில்லாமல் தந் தலைவர்கள் சிறைக்கு அனுப்பப்படுவதையும், இன்னும் பிறவற்றையும தொழிலாளி உணர்கிறான்; சிந்தனையில் ஆழ்கிறான். அவன் உள்ளத்தில் என்னென்னவோ எழுகின்றன! இந்நிலையில் காங்கரஸ் என் செய்தல்வேண்டும்?

காங்கரஸ் அந்நிய ஆட்சியினின்றும் விடுதலை அடைந்தது. இனி அது மறைதல் வேண்டும்; அல்லது முழுவிடுதலைக்கு முயலுதல் வேண்டும். இரண்டிலொன்று காங்கரஸ் சார்பில் நிகழவேண்டுமென்று நாடு எதிர் பார்க்கிறது.

காங்கரஸ் தலைவர்களிற் சிலர் காங்கரஸ் மறைவை விரும்புகிறாரில்லை. அவர் மாறுதலில் நாட்டஞ் செலுத்துகிறார். மாற்றம் போற்றற்குரியதே. ஆனால், மாற்றம் எம்முறையில் நிகழ்வது நல்லது? சமதர்மமுறையில் மாற்றம் நிகழ்வதே நல்லது. காங்கரஸை இதுபோழ்து

தன்வயப் படுத்தியுள்ள முதலாளி இம்மாற்றத்துக்கு இணங்குவனோ? இதுபற்றிய கருத்து வேற்றுமை காங்கரஸ் தலைவர்களின் மூளையைக் கலக்கிக் கொண்டிருக்கிறது. இயற்கையின் நோக்குக்கும் போக்குக்கும் அரண் செய்யும் வழிநின்று காங்கரஸ் கடனாற்றுவதே அறம். மகாத்மா காந்தி இயற்கை வழிநின்று நல்வழி காட்டுவாரென்று நாடு நம்புகிறது. பண்டித ஜவஹர்லால் நேருவையும் நாடு நோக்குகிறது.

முதல் - தொழில் ஒருமைப்படக் காங்கரஸ் முயல்வது காலத்துக்குரிய தொண்டாகும். இனி, முதல் - தொழில் என்னும் ஈரினம் வாழ்வு பெறுதற்கு இடமில்லை என்று இயற்கை எச்சரிக்கை செய்த வண்ணமிருக்கிறது. ஆதலின், ஈரினத்தை ஓரினமாக்க முயல்வது இயற்கையின் நோக்குக்கும் போக்குக்கும் துணைசெய்வதாகும்.

ஆதிநாளில் முதல் - தொழில் என்ற ஈரினம் அற்ற சமூகமே திகழ்ந்தது. பின்னை அது திரிந்து திரிந்து இப்பொழுது முதல் - தொழில் என்னும் ஈரினமாகியது. ஈரினம பழையபடி ஓரினமானாலன்றி உலகில் அமைதி நிலவாது.

விதையினின்றும் முளை எழுகிறது. முளை செடியாகிறது; செடி மரமாகிறது. மரம் ஞாயிறாகிறதோ? திங்களாகிறதோ? இல்லை. பின்னை என்ன ஆகிறது? மரம் கனி விடுகிறது. கனியினின்றும் பழைய விதையே தோன்றுகிறது. அதேபோலச் சமூகம் ஈரினம் அற்ற ஒன்றினின்றும் தோன்றியது. அது மீண்டும் பழைய நிலையையே எய்தும்; எய்தியே தீரும். இஃது இயற்கை. இயற்கைக்குத் துணைபோவதே அறம் - அஹிம்ஸை.

ஈரினம் எளிதில் ஓரினமாகுமா? ஆயினல் நல்லதே. இல்லையேல் புரட்சி எழும். புரட்சி அறவழி நிகழ்தல் வேண்டும். எக்காரணம் பற்றியும் புரட்சி மறவழி நிகழ்தலாகாது. காந்தியம் நமக்கு நல்வழி காட்டியுள்ளது. அஃது அந்நிய ஆட்சியை எப்படித் தொலைத்தது? அஹிம்சையாலன்றோ தொலைத்தது? அந்த அஹிம்சையையே ஈரினத்தை ஓரினமாக்குவதற்குங் கோடல் பொருத்தம். அஹிம்சையே இந்தியத் தருமம். அதற்குக் கேடு சூழலாகாது.

ஈரினம் ஒழிந்த சமதருமத்தை இந்நாளில் விஞ்ஞான முறையில் அறிவுறுத்தியவர் காரல் மார்க்ஸ். அம்மார்க்ஸியமும் நம் காந்தியமும் ஒன்றிக் கடனாற்றினல் இந்தியத் தருமத்தைக் காத்தல் கூடும். இரண்டுங்கலந்த ஒன்றே நமது நாட்டுக்குத் தேவை என்று பல ஆண்டாக யான் வலியுறுத்தி வருவது நாட்டவர்க்குத் தெரியும்.

மார்க்ஸியமும் காந்தியமும் சேர்ந்த ஒன்றையே யான சன்மார்க்கம் என்று பேசியும் எழுதியும் வருகிறேன். சத்தெனுஞ் செம்பொருளை உணர்த்துவது காந்திய மென்றும், அதை அடையும் மார்க்கத்தைக் காட்டுவது மார்க்ஸியமென்றுங் கொள்க. முழு விடுதலைக்கு - பொருளாதார விடுதலைக்கு - சமதர்மத்துக்குச் செய்யப் படும் முயற்சியினடியில் அஹிம்சை வேர்கொண்டு நிற்றல் அவசியம் என்று அறைகூவுகிறேன்.

## திட்டம்

சமதர்மத்தைக் குறிக்கோளாக்கொண்டு காங்கரஸ் சில திட்டங்களைக் கோலும் முயற்சியில் தலைப்படுவது

சிறப்பு. நமது நாடு நீண்டகாலமாக அந்நிய ஆட்சிக்கு இரை யானமையால், அது நாட்டுக்குரிய கலைகளுடன் பெரிதுந் தொடர்பு கொள்ளாதொழிந்தது. நாட்டுக் கலைகள் நாட்டில் மீண்டும் உயிர்த்தெழுந்தால் சமதர்மம் மக்கட்குப் புதுமையாகத் தோன்றாது; அது பழமையாகவே தோன்றும். இந்தியக் கலைஞானம் இடையில் பிறழ்ந்துபட்டமையால் நாட்டில் சாதிமதப் பிணக்குகள் எழுந்து நாட்டைப் பலவழியிலும் அலைத்தன; அரித்தன; எரித்தன. அவ்வலைவு, அரிப்பு, எரிவு மாய்ந்துபோக உழைத்தல் வேண்டும். சாதிமதக் குறும்புகளைத் தொலைப்பதற்குப் பல வழி கூறலாம். அவற்றுள் ஒன்றைச் சிறப்பாக முன்னருங் கூறினேன்; ஈண்டுங் குறிக்கிறேன். அது கலப்பு மணம். கலப்பு மணத்தால் சாதிமதப் புன்மை பொன்றுவது திண்ணம்.

நாட்டு வளர்ச்சிக்குக் கருத்து வேற்றுமை இன்றியமையாதது. கருத்து வேற்றுமைக்கு இடந்தாராத நாடு வளர்ச்சியுறாது சிறைப்பட்டுச் சாம்பும். கருத்து வேற்றுமையைக் காயாது கடியாது அதற்கு இடந்தருவது வளர்ச்சியை நாடுவதாகும். நமது நாட்டில் முன்னாளில் நன்னெறிகள் பல வளர்ந்தே வந்தன. வளர்ச்சிக்குக் காரணம் அந்நாளில் கருத்து வேற்றுமைக்கு இடந்தந்தமையேயாகும். இவ்வறவொழுக்கம் இடைக்காலத்தில் வீழ்ந்தது. அதனால் நாடு காலத்துக்கேற்ற வளர்ச்சி பெறாமல் தேங்கியது. இடைக்காலத்தில் இறங்கிய நஞ்சு - இன்னும் இவ்விருபதாம் நூற்றாண்டிலும் - பல நாடுகளின் கூட்டுறவு பெற்ற இந்நாளிலும் — அந்நிய ஆட்சியால் கட்டுண்டு ஒருவித விடுதலை பெற்ற இவ்வேளையிலும் — ஒழியவில்லை

கருத்துவேற்றுமை காரணமாக ஒருவரை ஒருவர் பகைத்தல் அறியாமை ; இழிவு ; நீசம் ; சண்டாளம். கருத்து வேற்றுமைக்கு இடந்தருவது சமதர்ம வளர்ச்சிக்கு இடந்தருவதாகும். கருத்து வேற்றுமைக்கு இடந்தரும் அறிவுக்கலை வளர்தற்குத் தலைவர்கள் நடந்து நல்வழி காட்டி உழைக்க முற்படுவார்களாக.

ஜனநாயக ஆட்சி மக்களின் வாக்கினின்றும் எழுந்து அமைவது. ஆட்சிக்கு மூலமாயிருப்பது வாக்கு. அத்தகைய வாக்கு எத்தகைய பொறுப்புடையதா யிருத்தல் வேண்டும்? இதை மன்பதை உணர்ந்து நடக்குங்காலமே அறவளர்ச்சிக் குரியதாகும்.

வாக்கு, தூய உரிமையினின்றும் எழும் தெய்விக முடையது. அதைத் தெய்வக்கொடை என்றுங் கொள்ளலாம். அவ் வாக்கை நல்வழியில் செலுத்த வேண்டுவது மக்கள் கடமை. அது வேறு வழியில் செலுத்தப்படின், ஜனநாயகம் போலியாய், நஞ்சாய் நாட்டை எரிப்பதாகும்.

நமது இந்தியநாடு தொன்மை வாய்ந்தது ; சரித்திர காலத்துக்கு முன்னரே நாகரிகத்திற் பண்பட்டு விளங்கியது ; மலையின் மாண்பையும் கடலின் சிறப்பையும் உணர்ந்தது ; காவிய ஓவியங்களைக் கண்டது ; வாழ்க்கைத் தத்துவத்தில் தெளிவு பெற்றது. இப்பெற்றி வாய்ந்த நாடு இடைக்காலத்தில் சாதிமத வேற்றுமைகளால் பலதிறக் குழப்பங்கட்கு இரையாகியது. அதனால் அது நாளுக்குநாள் அடிமையாகி யாகி தனது நல்லியல்புகளையெல்லாம் இழந்தது.

ஏறக்குறைய இருநூறாண்டு நமது இந்தியநாடு பிரிட்டிஷாரால் ஆளப்பட்டது; அவர்தம் நாகரிக வழியே அரசியல் பயின்றது; ஜனநாயகத்தை வேட்டது. இதுபோழ்து ஜனநாயகத்துக்குரிய ஒருவித விடுதலையை யும் பெற்றது. இவ்விடுதலையை முழுமையதாக்கும் பொறுப்பு நாட்டின் முன்னே நிற்கிறது.

முழு விடுதலைக்குப் பலப்பல இயல்புகள் தேவை. அவற்றுள் ஒன்று வாக்குரிமையை நல்வழியிற் செலுத்து வது. இவ்வியல்பு நமது நாட்டில் எந்நிலையில் உள்ளது? இதற்கு விடை இறுக்கவல்லது 'அநுபவம்'. அநுபவம் இன்னதென்பதைச் சட்ட சபைகள் அறிவுறுத்தா நிற்கின்றன.

நமது நாட்டில் பெரிதும் சாதிமத வெறிகளும், பணம், தயை தாட்சண்யம் முதலிய மாயைகளும் வாக் காய்ப் பரிணமித்துச் சட்டசபைகளாதல் வெள்ளிடை மலை. போதிய கல்வியறிவு, அரசியல் ஞானம் முதலியன வாய்க்கப் பெறாத மக்கள் வாக்கு எங்ஙனம் உரிமை யுணர்வினின்றும் எழும்?

இந்நாளில் வயதுற்றவ ரெல்லாருக்கும் வாக்குரிமை கிடைத்துள்ளது. இது போற்றற்குரியதே. ஆனால், 'வாக்குரிமை நாட்டில் செந்நெறியில் செலுத்தப்படுமா' என்று அறிஞர் உலகம் ஐயுறுகிறது. சுருங்கிய முறை யில் முன்னே கிடைத்த வாக்குரிமை செந்நெறியில் செலுத்தப்படாமையே ஐயத்துக்குக் காரணமாய் நிற் கிறதுபோலும்!

வாக்காளர் சிந்தை அரசியற் பொதுமையிற் செல்லு மாறும், சாதி மதம் பணம் தயை தாட்சண்யம் முதலிய

மாயைகளில் செல்லாதவாறும் காக்க வல்ல கல்வியும், அரசியல் ஞானமும் அவர்க்குத் தேவை. இத்தேவையை நிறைவு செய்யக் காங்கரஸ் முயல்வது நல்லது. வாக்காளர் மனோநிலை சீர்படக் காங்கரஸ் பிரசாரஞ் செய்வதாக; ஆங்காங்கே அரசியற்பள்ளி அமைத்து மக்களுக்குப் போதனை செய்வதாக. காங்கரஸ் தன் கடனை இத்துறையில் ஆற்றாதொழியின், சட்டசபைகளில் தேள் பாம்பு கரடி புலி முதலியன உலவுதல் நேரும். ஆகவே, காங்கரஸ் தன்பொறுப்பை உணர்ந்து நடப்பதாக.

மக்களாட்சி வளர்தற்கு ஒரேவித அரசியல் கட்சி நிலவுதல் கூடாது. அது பாஸிஸமாய் நாட்டை இடர்ப்படுத்தும்; ஜனநாயகத்தைக் கொல்லும். ஆகவே, பலதிறக் கருத்துடைய அரசியல் கட்சிகள் அமைவதே சிறப்பு. சாதி மதங்களை அடிப்படையாக் கொண்ட கட்சிகளின் தோற்றம், சாதிமதங்கட்கென்று பீடங்களை ஒதுக்கல் முதலியன நாட்டைச் சிறுமைப் படுத்தும் ; சிறைப் படுத்தும். சாதிமதம் முதலிய சிறுமைகளற்ற கட்சிகளே நாட்டை வளர்க்கும். நாட்டின் வளர்ச்சிக்கு இதுகாறும் பாடுபட்டு ஒருவித விடுதலையை நாட்டுக்கு நல்கிய காங்கரஸ், இனி நல்ல அரசியல் கட்சிகள் அமையவும் துணை செய்வதாக ; காங்கரஸ் ஒரு கட்சியாக நின்று கடனாற்றாதிருப்பதாக.

இக்கால நாகரிகக் குழவிகள் சில. அவற்றுள் ஒன்று பத்திரிகை. இந்தியப் பத்திரிகையுலகம் இன்னும் நன்முறையில் பண்படவில்லை. இந்தியப் பத்திரிகை உலகம் பெரிதும் வகுப்புவாதத்துக்கு ஊற்றாக நிற்றல் வெள்ளிடைமலை. நாட்டில் விளைந்துவரும வகுப்புப்பூசல்-

பிணக்கு-போர்-கொலை-கொள்ளை முதலிய கொடுமைகட் கெல்லாம் மூல காரணங்களாக நிற்பனவற்றுள் பத்திரிகை உலகமே சிறந்து விளங்குகிறது. அந்நிய ஆட்சி விலகிய நாள்தொட்டு, நாட்டுப் பத்திரிகைகளிற் பெரும் பான்மையன, முதலாளியைப் போற்றியும் தொழிலாளியைத் தூற்றியும் எழுதத் தொடங்கின; காங்கரஸ் ஆட்சிச் சார்பில் நிகழுந் தவறுதல்களைக் கட்டுப்பாடாக மறைத்து வருகின்றன. தனித்தனி மனிதரைத் தாக்குதல், பொய்ம்மைகளைப் பரப்புதல், வசைமொழிகளைச் சொரிதல், வகுப்புப் போர்களைத் தூண்டல் முதலிய சிறுமைகள் மலிந்து மிடையும் பத்திரிகைப் பெருக்கலினால் நாடு நன்னிலை எய்துமா? இந்தியப் பத்திரிகையுலகம் சமதர்மத்தை ஆதரிக்க உறுதிகொள்ளுதல் வேண்டும்; கொண்டால் பல துறைகள் சீர்படும். பத்திரிகைச் சீர்திருத்தத்துக்கென்று ஒரு தனி இயக்கம் தோன்றி னும் அதை நாடு வரவேற்கும்.

காங்கரஸ் ஆட்சி பழைய அடக்குமுறைச் சட்டங்களை ஒழிக்க முயலாது, புதுப்புது அடக்குமுறைச் சட்டங் களை நிறுவ முயல்வது, முழு விடுதலையைக் குறிக் கொண்டு உழைப்பதாகாது. அடக்குமுறைச் சட்டங் கள் கொலை களவு பொய் முதலியவற்றை வளர்க்கும் மறக்கருவிகள். கொடுஞ் சட்டங்களால் நாட்டை அரிப் பது நாகரிகமாகாது. அச்சட்டங்கள் நாகரிக மக்களை யும் அநாகரிக மாக்களாக்கும். காங்கரஸ் ஆட்சி சட்டங் களைச் சுருக்கிச் சுருக்கி அறத்தைப் பெருக்க முனைவது சமதர்மத்துக்குக் கால் கொள்வதாகும்.

ரெயில், டிராம், பஸ், சினிமா, பாங்க், தொழிற் சாலைகள் முதலியன தனி மனிதர் வயப்படாமல், பொதுமை அரசின் வயப்படுமாறும், அவ்வாறே நிலபுலங் களும், பிறவும் பொதுமையாகுமாறும் காங்கரஸ் திட்டங் கோலிச் சமதர்மத்தை வளர்க்க எழுவதாக. எல்லாம் சமதர்ம மயமானால் போலிஸ், பட்டாளம், கொலைக் கருவிகள் முதலியன எற்றுக்கு ? முதலில் காங்கரஸ் சம தர்ம வழியில் மாற்றம் பெறத் தலைவர்கள் தொண்டாற்று வார்களாக. இந்தியாவில் சமதர்மம், மார்க்ஸிய - காந்திய வழியே எழுவதாக. எதற்கும் புரட்சி தேவை. புரட்சி அறவழி நிகழ்வதாக. மறப்புரட்சி வேண்டா ; வேண்டா ; எக்காரணம் பற்றியும் வேண்டா. காங்கரஸ் சமதர்மத்தைக் கடைப்பிடித்தொழுக ஆண்டவன் அருள் செய்வானாக. 'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப் பதுவே — அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே' என்பது தாயுமானார் திருவாக்கு.

## முடிவுரை

இந்நூலில் மூவகை இந்தியாவும் மூவகை ராஜ்யமும் பேசப்பட்டுள்ளன ; முற்கால இந்தியாவும் இடைக்கால இந்தியாவும், ஹிந்து ராஜ்யமும் முஸ்லிம் ராஜ்யமும் எப் படி வளர்ந்து தேய்ந்தன என்பதும், இக்கால இந்தியா எக் காட்சி வழங்குகிறது என்பதும், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி எவ்வாறு நுழைந்தது என்பதும் விரித்துரைக்கப் பட்டிருக்கின்றன. நாட்டை அடிமைப்படுத்தியவை இயற்கைக்கு மாறுபட்ட தனி வாழ்க்கை, பிறப்பில் உயர்வு தாழ்வு கருதல், மதவெறி, பெண்ணடிமை,

தீண்டாமை, கண்மூடி வழக்க ஒழுக்கச் சம்பிரதாயங்கள், சகோதர நேயமின்மை, காட்டிக் கொடுத்தல், ஹிந்து - முஸ்லிம் வேற்றுமை முதலியன என்றும், இக் குறைபாடுகள் அந்நிய ஆட்சியைக் கூவி அழைத்தன என்றும், இப்பொழுது கிடைத்துள்ள விடுதலை முழுமையதாகாது என்றும், இனிப் பொருளாதார விடுதலை முயற்சி விரைந்தெழல் வேண்டும் என்றும், அம்முயற்சியிலேயே பெருங்கவலை செலுத்தல் வேண்டும் என்றும், முதலில் காங்கரஸ் சமதர்ம மயமாதல் வேண்டும் என்றும் விளக்கப்பட்டுள்ளன.

முழு விடுதலை முயற்சி என்றதும் பிரஞ்சுப் புரட்சி ருஷ்யப்புரட்சி முதலிய மறப்புரட்சிகள்மீது சிலர் எண்ணஞ்செல்லும். மறப்புரட்சி போரை வளர்ப்பது ; தேய்ப்பதன்று. 'வெட்டுகிறவன் வெட்டப்படுவான்' என்பது கிறிஸ்து பெருமான் பெருமொழி. பின்னை எது நல்லது ? அறப்புரட்சியே நல்லது. இந்திய முனிவரால் அறிவுறுத்தப்பெற்றது அறப்புரட்சியே.

## எண்ணம்

அறப்புரட்சிக்குக் கொலைக் கருவிகள் தேவை இல்லை. அதற்கு நல்லியல்புகள் தேவை. நல்லியல்புகள் அமைதற்குப் பலப்பல முறைகள் அறவோரால் கோலப்பட்டன. அவற்றை அறநூல்களிற் பார்க்க. ஈண்டு ஒன்றைச் சிறப்பாக வலியுறுத்த விரும்புகிறேன்.

எம்முயற்சிக்கும் அடிப்படை எண்ணம். எண்ணம் பேச்சாகிறது ; செயலாகிறது. எண்ணம் இருவகையது. ஒருவகை, புறமனத்தினின்றும் பிறப்பது ; மற்றொரு

வகை, உள்மனத்தினின்றும் பிறப்பது. இரண்டுள் பின்னையதே சிறந்தது.

புற (மன) எண்ணமும், அதனின்றெழும் பேச்சும் செயலும் தன்னலத்தை வளர்ப்பனவாய், மூர்க்க சக்தியை எழுப்புவனவாய்ப் போராட்டத்தைப் பெருக்குவனவாம். உள் (மன) எண்ணம் பேச்சாகவும் செயலாகவுங்கூட எழ வேண்டுவதில்லை. அவ்வெண்ணமே ஆற்றல் வாய்ந்தது; அவ்வாற்றல் அளப்பரிது. அது தன்னலங் கடந்தது; ஆன்மசக்தி வாய்ந்தது. பீரங்கி குண்டுகளாலும் அச்சக்தியை அழித்தல் இயலாது.

## தவம்

உள் உணர்வால் ஒன்றை எண்ணி உன்னி முன்னுவது ஆழ்ந்த சிந்தனை அல்லது தவம் என்னப்படும். மனைவி மக்களை வலிந்து நீத்துக் காட்டுக்கோடி மூக்கைப் பிடித்து மூச்சை அடக்குவது தவமாகாது. தவமாவது, அகவுணர்வைப் பண்படுத்தி, அதில் ஒன்றி ஆழ்ந்த சிந்தனையில் அமர்வது. இது சிந்தனுகாரம். இப்பயிற்சியில் நம்முன்னோர் மிகத்தேர்ச்சி பெற்றவராயிருந்தனர். அதற்கென்றே அவர்தங் கல்வி, செல்வம், தொழில், உணவு, உடை, வாழ்க்கை, அரசு முதலியன பயன்பட்டு வந்தன. இந்நாளில் அகவுணர்வு நுட்பம் மேல்நாட்டில் அகத்திணையர் (Psychologists) சிலரிடம் விளங்கி வருகிறது. அது நாளடைவில் அங்கே ஆக்கம் பெறலாம்.

ஆழ்ந்த சிந்தனைக்குப் புற மன ஒடுக்கம் வேண்டும். அதற்குப் புலனடக்கம் இன்றியமையாதது. புலனடக்கத்

துக்கு நல்லொழுக்கம் தேவை. நல்லொழுக்கம் எளிய அற வாழ்க்கையில் அரும்பும்.

*புலனடக்கம் பின்னாளில் புலனழிவாகக் கொள்ளப் பட்டது. இது திரிபு. இதை, 'பெண்ணின் பெருமை', 'முருகன் அல்லது அழகு' முதலிய நூல்களில் விளக்கி யுள்ளேன்.

எளிய அற வாழ்க்கை விழுமிய நோக்கத்தை வளர்க்கவல்லது. எளிய வாழ்க்கையும் விழுமிய நோக்க மும் நமது நாட்டுச் செல்வம். அச்செல்வம் எங்கே? பேராசைப் பேய்வாழ்க்கையும் தன்னல நோக்கமு மல்லவோ இந்நாளில் நாட்டை அரிக்கின்றன ?

எளிய வாழ்க்கையால் பல நலன்கள் உண்டு. அவற் றுள் சிறந்தன சுதேசிய ஆக்கமும் அஹிம்சை நோக்கமு மாகும். இரண்டும் மெய்ம்மை விடுதலைக்கு இன்றியமை யாதன. அவற்றைக் கொண்டு, மகாத்மா காந்தி பெரிய சாம்ராஜ்யத்தை எதிர்த்து, அறப்போர் புரிந்து, ஒருவித விடுதலை பெற்றது உலகறிந்ததொன்று. அஹிம்சை அற்ற இடத்தில் மறப்போர் - மறப்புரட்சி - நிகழ்ந்து கொண்டே போகும்.

---

*அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதன மாமென்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே.

—திருமூலர்

இந்திய முழு விடுதலைக்கு - சமதர்ம ஆட்சிக்கு - அறப்புரட்சியே சாலச்சிறந்தது. அப்புரட்சியால் முற்கால இந்தியா தற்காலப் போர்வையுடன் உயிர்த்தெழும். அவ்விந்தியா, ஹிம்ஸை மயமாக உள்ள இக்கால உலக விடுதலைக்கும் வழி காட்டுவதாகும். ஆதலால், முதலில் வேண்டற்பாலது இந்திய முழு விடுதலை அதாவது சமதர்மம். அவ்விடுதலை வேட்கையை எழுப்புவது இந்நூல்.

திரு. வி. கலியாணசுந்தரன்



# திரு. வி. கலியாணசுந்தரனார்

# இயற்றிய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் ... | 12 | 8 |
| பெரியபுராணம் - அரும்பத விசேட ஆராய்ச்சிக்குறிப்புரையும் வசனமும் ... | (அச்சில்) | |
| தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு ... | (அச்சில்) | |
| திருக்குறள் விரிவுரை : (முதற்பகுதி – பாயிரம் நான்கதிகாரம்) | (அச்சில்) | |
| ,, (இரண்டாம்பகுதி அறத்துப்பால் - ஆறு அதிகாரம்) | 3 | 0 |
| மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் ... | 5 | 0 |
| பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை ... | 4 | 0 |
| இந்தியாவும் விடுதலையும் 5 0 உள்ளொளி ... | 3 | 0 |
| தமிழ்த் தென்றல் அல்லது தலைமைப் பொழிவு ... | 5 | 0 |
| நாயன்மார் வரலாறு ... | 4 | 0 |
| முருகன் அல்லது அழகு ... | 2 | 0 |
| சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து ... | 1 | 4 |
| இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் ... | 1 | 4 |
| முடியா ? காதலா ? சீர்திருத்தமா ? ... | 1 | 4 |
| என்கடன் பணிசெய்து கிடப்பதே ... | 1 | 0 |
| சைவத்தின் சமரசம் 0 12 சைவத் திறவு ... | 0 | 8 |
| சன்மார்க்க போதமும் திறவும் ... | 1 | 8 |
| சமரச சன்மார்க்கத் திறவு ... | 0 | 4 |
| தமிழ்நாடும் நம்மாழ்வாரும் ... | 0 | 12 |
| இமயமலை அல்லது தியானம் ... | 0 | 8 |
| காரைக்காலம்மையார் திருமுறை—அரும்பதக் குறிப்புரையுடன் (அச்சில்) ஆலமும் அமுதமும் ... | 0 | 8 |
| கடவுள் காட்சியும் தாயுமானாரும் 0 4 சித்தமார்க்கம் | 0 | 6 |
| தமிழ் நூல்களில் பௌத்தம் ... | 0 | 4 |
| உரிமை வேட்கை அல்லது நாட்டுப் பாடல் ... | 0 | 6 |
| சிவனருள் வேட்டல் ... | 0 | 8 |
| பொதுமை வேட்டல் 1 8 முருகன் அருள் வேட்டல் | 0 | 8 |
| திருமால் அருள் வேட்டல் ... | 0 | 4 |
| கிறிஸ்துவின் அருள் வேட்டல் 0 6 புதுமை வேட்டல் | 0 | 10 |
| நாயன்மார் திறம் 0 4 சமரச தீபம் ... | 0 | 6 |
| நினைப்பவர் மனம் 0 4 சைவ சமய சாரம் ... | 0 | 2 |

சாது அச்சுக்கூடம், (முருகவேள் புத்தகசாலை),
12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.